# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினான்காம் நூற்றாண்டு

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

தமிழ் இலக்கிய வரலாறு

பதினான்காம் நூற்றாண்டு

மு. அருணாசலம்



*முதற் பதிப்பு : மார்ச் 1969.*

*திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.*

*பக்கம் : xlviii + 376 = 424.*

*பதிப்பு :*

***தி பார்க்கர்***

*293, அகமது வணிக வளாகம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை,*

*இராயப்பேட்டை, சென்னை - 600 014.*

**விலை : 317. 00**

*வடிவமைப்பு :*

**வே. கருணாநிதி**

*அச்சிட்டோர்:*

***தி பார்க்கர்***

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.*

## முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கை யைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னை யில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர் களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர் பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன் றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதி கள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர் களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன் னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம்.
15. 11. 2004.

அ. சிதம்பரநாதன்

## நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படை யிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், இந்நூல் 14ஆம் நூற்றாண்டு வரலாறு.

1940ஆம் ஆண்டில் ஆசிரியர் சிந்தனையில் கருக்கொண்ட இவ்வரலாற்றுத் தொகுப்பு நூல் உருவாக்கச் சிந்தனை, 1969ஆம் ஆண்டில் இம்முதல் நூலை எமக்கு அளித்தது. தொடர்ந்து இவ் வரலாற்று நூல்களைப் பல தடைகளுக்கு மத்தியில் ஆசிரியர் எழுதி வெளியிட்டு வந்தார். 1977ஆம் ஆண்டில் 16ஆம் நூற் றாண்டின் முதல் பாகம் வெளியிட்டதோடு அவரது தமிழ் இலக் கிய வரலாற்று நூல்களின் வெளியீட்டுப்பணி நின்றுபோனது. அதுவரை பதினொரு தொகுதிகள் வெளியிடப்பட்டன.

மேற்படி தொகுதிகளில் 1969ஆம் ஆண்டில் 14ஆம் நூற் றாண்டு, 15ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதிகளும், 1970ஆம் ஆண்டில் 13ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1971ஆம் ஆண்டில் 11ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1972ஆம் ஆண்டில் 10ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1973ஆம் ஆண்டில் 12ஆம் நூற்றாண்டு பாகம்-1, பாகம்-2 ஆகிய வரலாற்றுத் தொகுதிகளும், 1975ஆம் ஆண்டில் 9ஆம் நூற்றாண்டு பாகம்-1, 16ஆம் நூற்றாண்டு பாகம்-2 ஆகிய வரலாற்றுத் தொகுதிகளும், 1976ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு பாகம்-3 வரலாற்றுத் தொகுதியும், 1977ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு பாகம்-1 வரலாற்றுத் தொகுதியும் காந்தி வித்தியாலயம் பதிப்பாக வெளி வந்தன.

1990ஆம் ஆண்டில் 'நம்மாழ்வார்' என்ற பெயரில் ஒரு நூலும் 'ஸ்ரீ குமர குருபர சுவாமிகள்' என்ற பெயரில் ஒரு நூலும் ஆசிரியரால் வெளியிடப்பட்டன. இவை இரண்டின் முன்னுரை யிலும் இவை முறையே 9ஆம் நூற்றாண்டு வரலாற்றின் இரண் டாம் பாகத்தின் ஒரு பகுதி என்றும் 17ஆம் நூற்றாண்டு வரலாற் றின் முதல் பாகத்தின் ஒரு பகுதி என்றும் ஆசிரியர் குறித்துள்ளார். இதன் அடிப்படையில் இவற்றை இத்திருத்தப்பட்ட வெளி

யீட்டுத் தொகுப்பில் 'நம்மாழ்வார்' 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகமாகவும் 'ஸ்ரீ குமர குருபரர்' 17ஆம் நூற்றாண்டின் முதல் பாகமாகவும் சேர்க்கப்பட்டுள்ளது.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளி வருகின்றன. ஆசிரியர் வெளியிட்டவை 11. நாம் புதிதாகச் சேர்த்தவை 3. இவற்றுள் 14வது தொகுதியானது மேற்படி நூல்களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

ஆசிரியர் இந்நூலின் முதல் பதிப்பில் விடுபட்ட சில செய்திகளைப் பிற்சேர்க்கையாக அச்சிட்டுள்ளார். இத்திருத்தப்பட்ட பதிப்பில் நாம் அவற்றை உரிய இடங்களில் சேர்த்து முறைப் படுத்தியுள்ளோம்.

அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத் தாள் இடையிட்டுக் கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்பு அவரது நூலகத்தில் காணப்பட்டது. இத்தொகுதிகளில் பல புதிய செய்திகளும் ஆங்காங்கே திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை ஒவ்வொரு தொகுதியிலும் சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம்.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்தியவர் அவர் மகனார்; உணவளித்து எம்மை உபசரித்தவர் அவர் மருமகளார்; இவர்கள் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செல விட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடு கொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக் குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படையில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

வே. கருணாநிதி

சென்னை
25. 12. 2005.

# முகவுரை

யாம் ஓதிய கல்வியும் எம்அறிவும்
தாமே பெற வேலவர் தந்ததனுல்
பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்;
நாம்ஏன்? நடவீர் நடவீர் இனியே.

—அருணகிரிநாதர்

வெள்ளைப் பரிமுகர் தேசிக ராய் விரகால் அடியோம்
உள்ளத் தெழுதியது ஓலையில் இட்டனம் யாம் இதற்கென்
கொள்ளத் துணியினும் கோதென் றிகழினும் கூர்மதியீர்
எள்ளத் தனையும்உக வாதிக ழாதெம் எழில்மதியே.

—வேதாந்த தேசிகர்

## வரலாறு விளங்காமை

கல்வியின் நோக்கம் என்னவென்பதை நன்னூலார் சுருக்கமாய்த் தெளிவு படுத்தி யிருக்கிருர். 'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே'-வீடு பேறே நூல் கற்பதன் முடிவான நோக்கம்; நூல் நுதலிய பொருளும் அதுவே. ஆன்மா பரம்பொருளை அடைவதற்கான வழியைச் சொல்ல வேண்டும், சொல்ப வனுகிய புலவன் தன்னைப் பற்றிச் சொல்ல வேண் டுவதில்லை என்பதே, சங்க காலத்தின் பின் தமிழ்ப் புலவர் அனைவரும் கொண்டிருந்த கருத்து. இக் காரணத்தால், ஒரு புலவரையோ அவர் செய்த நூலையோ நாம் ஆராயப் புகுந்தால், உண்மைச்

செய்திகள் கிடைப்பது மிகவும் அருமை. புலவர் தம்மைப் பற்றிச் சொல்லுவது, பெரும்பான்மையும் இல்லை; பின் வந்தோர் சொல்லும் கதைகளே நமக்குக் கிடைக்கின்றன. இவை, பெரும் பகுதி கற்பனை அல்லது உயர்வு நவிற்சி; வரலாற்றுணர்ச்சிக்குப் பொருத்தமான செய்திகள் கிடைப்பதில்லை.

சிறப்புப் பாயிரம் கூறுதல் என்ற ஒரு மரபு பண்டைக் காலத்தில் இருந்தது. அதற்கு இலக்கணமாவது, ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூற்பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன் ஆகிய எட்டுப் பொருளும், இவற்றுக்கும் மேலாக, காலம், களன், காரணம் என்பவற்றையும் கூட்டிச் சொல்லலாம் என்பது. எனவே, சிற்சில நூல்களையும் ஆசிரியரையும் பற்றிய செய்திகள் சிறப்புப் பாயிரத்தினுல் விளங்குகின்றன; பனம்பாரனுர் செய்த தொல்காப்பியப் பாயிரம் பிரசித்தி பெற்றது. இருப்பினும், காலம் பெரும்பான்மையும் விளங்குவதில்லை; பல நூல்களுக்கு ஆசிரியரே இன்னுரென்று விளங்காத போது, காலம் விளங்காமை பெரிதன்று. சில சமயங்களில் கோயில்களில் காணப்படும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கும் செய்திகளால் பல வரலாறுகள் விளக்கமுறுகின்றன.

இனி, புலவர் வரலாற்றிலும், சமயப் பெரியார் வரலாற்றிலும் மக்களியல்பைக் கடந்த செய்திகளும் கதைகளும் நிரம்ப வருகின்றன. உமாபதி சிவாசாரியர், வேதாந்த தேசிகர், அருணகிரிநாதர் போன்ருர் வரலாற்றில் இவற்றைக் காணலாம். நாம் இங்குக் கருதும் காலம், தெய்விக அற்புதங்களிலே மிக்க நம்பிக்கை நிலவியிருந்த காலம், அற்புதம் நிகழ்ந்தால் தான் எதையும் நிலைநாட்ட முடியும், நம்பமுடியும் என்று எல்லா மக்களும் நம்பியிருந்த காலம். ஆகவே, அற்புதச் செயல்களும் சம்பவங்களும் போல, பரம்பரையாக வருபவற்றைச் சொல்லியே ஆக வேண்டியிருக்கிறது; தவிர்க்க முடிவதில்லை.

கால ஆராய்ச்சிக்கு நூலாசிரியர் பெயர்களே மிக்க இடையூறுயிருக்கின்றன. ஒரே பெயரைத் தரித்தவர்கள் பலர். எடுத்துக்காட்டாக நன்கு தெரிந்த பெயர்கள் பல கூறலாம்; அவ்வையார், பட்டினத்தார் என்ற இருபெயர் களே இப்போதைக்கு அமையும். சங்ககால அவ்வையார் ஒருவர்; இடைக்கால அவ்வையார் ஒருவர்; நாம் கருதும் காலப் பகுதியில் வாழ்ந்தவர் மற்ெருருவர்; பின்னும் சிலரும் வாழ்ந்திருத்தல் கூடும். ஆனுல் அவ்வை வரலாறு களில், ஒரே அவ்வையார்-அவரே அதிகமானைப் பாடிய சங்க நூற்புலவர், அவரே சேரமான்பெருமாள் காலத் தில் இருந்தார், அவரே ஆத்திசூடி மூதுரை பாடினுர், அவரே விநாயகரகவலும் ஞானக்குறளும் பாடினுர்—என் பதே இதுவரை எழுதியுள்ள இலக்கிய வரலாற்று ஆசிரி யர்களின் கூற்று. இக்கூற்றுக்களை ஆய்ந்து, இன்ன இன்ன காலத்தில் இன்னவர் வாழ்ந்தார், அவரைக் குறித்த கதை இது, அவர் பாடிய பாடல் இது என்று பாகுபடுத்தி முடிவு காண்பது எளிதன்று. பட்டினத்தார் போன்ருருக்கும் இந்நிலைமை பொருந்துவதே.

இவ்வண்ணமே, சமயநூல் செய்த ஆசிரியர்களைப் பார்த்தால், சிவப்பிரகாசர், ஞானப்பிரகாசர், தத்துவப் பிரகாசர், மறைஞான சம்பந்தர், சிவவாக்கியர் போன்ற பெயருடையோர் மிகப்பலர். இவர்களிடையே பாகு பாடும் வேற்றுமையும் காண்பதும், நூல்களைப் பாகுபடுத் திக் காலத்தால் அடைவு செய்வதும், நெடுங்காலம் இத் துறையில் உழைத்தவர்களுக்கே இயல்வதொன்று. இந் நிலைமைகள் இத்தகைய வரலாற்று ஆராய்ச்சி நூல் எழுதுவதிலுள்ள இடர்ப்பாட்டை மிகுதிப்படுத்து கின்றன.

இந்த நிலையில், புலவர்களையும் நூல்களையும் காலத் தால் வரையறை செய்து முறைப்படுத்தி வரன் முறை யாக வரலாறு எழுதுதல் எளிதான காரியமன்று. எனினும், இந்நூலானது, 14–15 ஆகிய இரு நூற்ருண்டு களின் இலக்கிய சரித்திரத்தையும் புலவர் வரலாற்றை

யும், கிடைக்கிற இலக்கிய ஆதாரங்களையும், வழக்காறு களையும் சாசனக் குறிப்புக்களையும் கொண்டு, ஒழுங்கு படுத்துவதற்கான ஒரு முயற்சி ஆகும்.

## இந்நூலின் தோற்றுவாய்

இனி இந்தப் புத்தகத்திற்குத் தோற்றுவாய், 1940இல் யாம் செய்து வந்த சைவ சித்தாந்த நூல் ஆராய்ச்சி ஆகும். அச்சமயம் சைவ சித்தாந்த மகாசமாஜ வெளியீடாகச் சித்தாந்த சாத்திரவுரை இரண்டாம் பதிப்பு அச்சாகிக் கொண்டிருந்தது. சமாஜக் காரியதரிசியாய் இருந்த ம. பாலசுப்ரமணிய முதலியார் அவர்களிடம் சொல்லிச் சிவப்பிரகாசத்திற்கு மதுரைச் சிவப்பிரகாசர் எழுதிய உரையை வெளியிடும்படி செய்தோம். நூலைப் பரிசோதித்து, அச்சு வேலையை மேற்பார்க்கும் பொறுப்பு எமக்கு வந்தது. பரிசோதித்து வந்தபோது, மதுரைச் சிவப்பிரகாசர் உரை, மிக்க சிறப்புடைய உரை மட்டுமன்றி, அக்காலச் சமய இலக்கிய வரலாற்றை உணர்த்தும் ஒப்பற்ற ஓர் ஆதார நூலாக இருந்ததையும் யாம் கண்டோம். மேற்கோள் தரும் உரையாசிரியர் பலர் இன்ன நூல் என்று குறிப்பிடுவது இல்லை. இதற்கு மாருக, இச்சிவப்பிரகாசர் மிகப் பல நூல்களைப் பெயர் குறிப்பிட்டும் போற்றியும் சொல்லியிருக்கிருர். இவர் உரை செய்த காலம் கி.பி. 1488 என்று திட்டமாகச் சொல்லப்பட்டுள்ளமையால், அவ்வுரை, கால ஆராய்ச்சிக்குப் பேருதவியாய் இருந்தது. உமாபதி சிவாசாரியர் காலம் கி. பி. 1313 என்ற குறிப்பு அவர் நூலில் உள்ளது. ஆகவே சிவப்பிரகாசர் உரையின் துணையால், 1313 க்கும் 1488 க்கும் இடைப்பட்ட காலத்தில், அதாவது 14-15 ஆம் நூற்ருண்டுகளில், தோன்றிய சமய இலக்கியங்களை வரையறை செய்துகொள்ள முடிந்தது. இவற்றை நன்கு விளக்கி அவ்வுரைப் பதிப்பின் அனுபந்தமாக ஒரு சிறுகுறிப்பு எழுதியிருந்தோம். அச்சிறு குறிப்பு இந்நூலாக விரிந்தது என்ருல், ஓரளவு பொருந்தும்.

அப்போது தத்துவப் பிரகாசர் பற்றிய செய்திகள் அவ்வுரையால் விளக்கமானமையால், 'தத்துவப் பிரகாசர் காலம்' என்ற ஒரு கட்டுரை எழுதி மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிட்டோம்.

நெடுநாள் கழிந்த பின்னர் 13-15 நூற்றுண்டுகளின் தமிழ் இலக்கிய வரலாறு என்ற வெளியீடு ஒன்றைப் பார்க்க நேர்ந்தது. அதனுள், 'இந்த நூற்றுண்டுகளில் எந்த இலக்கிய வளர்ச்சியுமில்லை' என்ற கருத்துடைய குறிப்புக் காணப்பட்டது. இதைப் பார்த்தபோது, இது உண்மையன்று, ஆராய்ச்சிக் குறைவே இக் கூற்றுக்குக் காரணம், இன்னும் ஆராய்வதற்கு இடமுண்டு என்ற உணர்ச்சி தோன்றி, முன் எழுதிய சிறு குறிப்பை விரித்துரைப்பது பயனுடையதாகும் என்ற எண்ணமுண்டாயிற்று. அதன் மேல், 1961 இல் '14-15 ஆம் நூற்றுண்டுகளில் சைவ இலக்கியம்' என்ற தலைப்பில் இவ்வாராய்ச்சியைச் சிறிது விரித்து, பழனியில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகாசமாஜ ஆண்டு விழா மகாநாட்டில் பேசினேம். அடுத்த ஆண்டு அப்பேச்சின் சுருக்கம் சித்தாந்தம் பத்திரிகையில் வெளிவந்தது.

இக் கருத்துக்களையும் செய்திகளையும் கோவைப் படுத்தி இப்போது தனி நூலாகத் தொகுத்து விரித்தெழுதி வெளியிடுகிறேம். இங்கு, சைவ சமய இலக்கியங்கள் மட்டுமல்லாமல், இக் காலப் பகுதியில் தோன்றிய எல்லா நூல்களும், நன்கு ஆராய்ந்து கால நிர்ணயம் செய்யப் பெறுகின்றன.

## முந்திய வரலாற்று நூல்கள்

வரலாற்று முறையில் தமிழிலக்கிய சரித்திரத்தையும் புலவர் சரித்திரத்தையும் கூறப்புகுந்த சிறப்பான நூல்கள் இரண்டு. முதலாவது, முந்நீர்ப்பள்ளம் - பூர்ணலிங்கம் பிள்ளை எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு, 1929. இது ஆங்கிலத்தில் எழுதப்பெற்றது. மற்றது, தமிழ்; கா. சுப்பிரமணியப்பிள்ளை எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு,

1930. முந்திய நூல் எழுதிய காலத்தில், அவ்வாசிரியருக்கு வரலாற்றுக்கான சாதனங்கள் அமைந்தவை மிகவும் குறைவு. ஓரளவு அதிகமான நூல்களையும் ஆசிரியர்களையும் தொகுத்து அவர் அக்காலத்தில் சிறப்பான நல்ல நூல் செய்திருந்தார்; செய்த அளவு அவருடைய நூல் வெற்றிகரமானது, பாராட்டக்கூடியது. பிழைபட்ட கருத்துக்கள் பல இருந்த போதிலும் கூட, அக்காலத்தில் அவரது நூல் ஓர் அரிய சாதனை. முதலில் அவர் இலக்கிய வரலாற்றுப் பாலபாடம் போல ஒன்று (1904) எழுதி, பின்னர் அதை விரித்தெழுதினார் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

பிந்திய நூலோ, பெருஞ்சிறப்புடைய ஆசிரியர் செய்திருந்த போதிலும் கூட, கொஞ்சமும் சிறப்புடையதாயில்லை. இவர் எழுதிய காலத்தில் நாட்டு வரலாறும், புலவர் வரலாறும், ஓரளவு நன்கு விளக்கம் பெற்றிருந்தன. ஆனால் இவருடைய நூலோ, அவற்றைச் சிறிதும் பயன்படுத்தாததாய், விருப்பு வெறுப்புக்களுக்கே இடம் கொடுப்பதாய், பிழை கொண்டதாய்க் காணப்படுகிறது. நூலின் பாகங்களுக்கிடையில் ஒத்த அமைப்பு இல்லை. எடுத்துக்காட்டாகக் கூறுவோமானால், ஆறு அதிகாரம் கொண்ட புத்தகத்தில் சங்க இலக்கியம் முதல் 18 ஆம் நூற்றாண்டுவரை கூறும் ஒரே அதிகாரமாகிய நான்காம் அதிகாரம் மட்டும் 381 பக்கம்; நூல் முழுமையுமோ 550 பக்கம்; அன்றியும், காலம் குறித்த செய்திகள் முறைப்படி இதனுள் அமையவில்லை, திருத்தமாயும் அமையவில்லை.

விரிவான தமிழ் இலக்கிய வரலாறு எழுதும் வேலை அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆராய்ச்சிப் பிரிவினரால் 1950 ஆம் ஆண்டுக்குப் பின் அடுத்த சில ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்டது. இத்துறையில் ஆசிரியர் ஐவர் நூல் எழுதினர் போலும். சில பகுதிகளே வெளி வந்துள்ளன. தொல்காப்பியம், சைவ இலக்கியம், வைணவ இலக்கியம், சைன இலக்கியம், பௌத்த

இலக்கியம், கி.பி. 250-600, 13,14,15 நூற்றுண்டுகள் ஆகிய காலப்பகுதிக்குரிய வரலாறு—என்ற பகுதிகள்; இவை யாவும் ஒத்த முறையில் செய்த ஆராய்ச்சி வரலாறுகளாக அமையவில்லை. தொல்காப்பிய வரலாறு சிறப்புடைய நூலாயிருக்க, பிற இந்த அளவு அமையவில்லை. 14 ஆம் நூற்றுண்டு வரலாறு 41 பக்கங்களிலும், 15 ஆம் நூற்றுண்டு வரலாறு 20 பக்கங்களிலும் முடிந்து விடுகின்றன. பல்கலைக் கழக முத்திரையோடு வெளிவந்த இப்புத்தகங்கள், இலக்கிய வரலாற்றறிவுக்கு மேல் வரம்பாகவோ, ஆதாரமாகவோ அமைந்திருக்கவில்லை.

வையாபுரிப் பிள்ளையவர்கள் எழுதிய ஆங்கிலக் கட்டுரைகள் கொண்ட ஒரு புத்தகம் தமிழ் மொழி-இலக்கிய வரலாறு என்ற பெயரோடு 1956 இல் அவர்கள் இறந்த பின் வெளியாயிற்று. இது கி. பி. 1000 வரை மட்டுமே கூறுவது; இதன் கண் உள்ள பல கருத்துகளைப் பிறர் ஏற்பது எளிதன்று. தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் ஆங்கிலத்தில் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு என்ற நூல் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தால் 1965இல் வெளியிடப் பெற்றது. இது 212 பக்கம் கொண்டது. ஆதி காலந் தொடங்கி, இருபதாம் நூற்றுண்டு வரையுள்ள இலக்கியங்களை மட்டும் வரலாற்று முறையாக ஆராய்கிறது. இலக்கண நூல்களையோ, சமய நூல்களையோ, இவை போன்ற பிறதுறை நூல்களையோ இது குறிப்பிடவில்லை. எனினும், சுருங்கிய அளவில் புதுக் கருத்துக்களையும் கொண்டு இது நன்முறையில் இயன்றுள்ளது.

இனி, நாடு சுதந்திரம் அடைந்தபின் தமிழ்நாட்டில் பல்கலைக் கழகங்களில் தமிழ்மொழிப் பயிற்சிக்குப் புதிய ஊக்கம் ஏற்பட்டு, பி.ஏ., எம்.ஏ. வகுப்புக்களுக்குத் தமிழ்த் துறையில் சிறப்பான பாடத்திட்டங்கள் அமைக்கப்பெற்றன. அங்கு இலக்கிய வரலாற்றறிவு ஒருமுக்கிய பாடமாக இருந்தமையால், பல ஆசிரியர், பாடமாய்க் கொள்வதற்கான புத்தகங்கள் எழுதினுர்கள். சமீப காலத்தில் சுமார் பத்துக்கு அதிகமான புத்தகங்கள் இவ்

விதம் வெளியாகியுள்ளன. யாவும் ஆங்கிலப் பாடபுத்தகங்களுக்கு நெடுங்காலமாக ஏற்பட்டிருந்த குறிப்பேடுகள் (நோட்ஸ்) போல அமைந்தனவேயன்றி, ஒன்றேனும் புதிதாகச் செய்திகளை ஆராய்ந்து கோவைப்படுத்திச் செம்மையாக ஒழுங்கு செய்யப்பெற்றதாயில்லை.

நுனிப்புல் மேய்வது காலத்தின் போக்கு. ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் என்று பண்டைப் புலவர் பாடினர். அந்த நிலை பெற்ற சான்றோர் தோன்றும் காலமாக நாடு இல்லை; எதிர்காலமாவது இருக்கமுடியும் என்று எண்ணுவதற்கான அறிகுறிகள் காணப்பட்டில. ஆதலால், தமிழ் இலக்கிய வரலாற்றில் மட்டுமன்றி, இலக்கியக் கல்வியிலேயே, ஆழமும் அகற்சியும் குறைந்து போயினவே என்று எண்ணி, தொடித்தலை விழுத்தண்டினார்போல, 'இனி நினைந்து இரக்கமாகின்று, அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ?' என்ற இரக்கம் தோன்றினால், அக்குறைக்குக் காரணம் காலமே என்று உணர்தல் வேண்டும்.

### தேசிகர் நூல்கள்

இத்தகைய சூழ்நிலை இன்றும் நிலவி வரும்போது, முப்பது ஆண்டுகளுக்கும் முன்னதாக, காலப் பகுதிகள் தோறும் தோன்றிய புலவர் வரலாற்றையும் நூல்களையும் ஆராய்ந்து திருத்தமாக இலக்கியச் சரித்திரம் எழுத முதன்முதலில் தொடங்கியவர் இலக்கண விளக்க பரம்பரை திருவாரூர் ச. சோமசுந்தர தேசிகர் அவர்கள். நூற்றாண்டு முறையில் தமிழ் இலக்கிய வரலாற்றை முதன் முதலில் எழுதி வெளியிட்டவர் அவரே. 16ஆம் நூற்றாண்டுப் புலவர் வரலாற்றை 1936 இலும் 17 ஆம் நூற்றாண்டு வரலாற்றை 1937 இலும் அவர் வெளியிட்டார். பிந்தியது வெளிவருமுன் அவர் காலமாகி விட்டார். அவர் உயிரோடிருந்தால் பின்னும் பல பகுதிகள் அவரே வெளியிட்டிருத்தல் கூடும்.

எனினும், தேசிகர் எழுதிய வரலாறுகள் இரண்டிலும், காலமுறைப்படி புலவர் வரலாறுகளே சொல்லப்

பட்டன. அக்கால இலக்கியங்களைப் பாகுபாடு செய்யும் முயற்சியும், செய்து இலக்கிய வளர்ச்சியை அளவிடும் முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை.

18 ஆம் நூற்றுண்டுப் புலவர் வரலாற்றைத் தேசிகர் எழுத எண்ணியிருந்தாரென்பது தெரியும். ஆனல் அது உருவடையவில்லை.

பின்னர் சமீப காலத்தில் மயிலை சீனி. வேங்கட சாமியவர்கள் '18 ஆம் நூற்றுண்டில் தமிழ் இலக் கியம்' என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளி யிடுவதாக விளம்பரம் வந்தது; நூல் வரவில்லை. எனினும் அவரே 19 ஆம் நூற்றுண்டில் தமிழ் இலக்கியம் என்ற பெயரோடு பெரிய நூலொன்று எழுதி 1962 இல் வெளி யிட்டிருக்கிறர். இவ்வாசிரியர் பெரிதும் உழைத்துச் செய்திகளைச் சேகரிப்பதில் மிகவும் வல்லவர். அவ்வாறு முயன்று சேர்த்த அரிய செய்திகள் இதனுள் தொகுக்கப் பெற்றுள்ளன. இந் நூற்றுண்டில் தோன்றிய ஆசிரியர், செய்த நூல்கள், அச்சகங்கள், பத்திரிகைகள் முதலிய விவரங்கள் இதனுள் காணலாம். பிற இடங் களில் அதிகம் முயன்று காணமுடியாத செய்திகள் சுருங்கிய அளவில் இங்கு நன்கு தொகுக்கப் பெற்றுள்ளன. ஆயினும் இந்நூல், புலவர்கள் வாழ்க்கை வரலாறே நூலாராய்ச்சியோ கூறவில்லை.

19 ஆம் நூற்றுண்டில் உள்ள ஒரு பெரிய அனுகூலம் அச்சு; இந்நூற்றுண்டில் எல்லா நூல்களும் அச்சேறி விட்டன. ஆதலால், உழைத்தால் அச்சுப் புத்தகங்களைத் தேடிப் பெற்றுச் செய்திகளைத் தொகுக்க முடியும். சிறப் பாக 18 ஆம் நூற்றுண்டில்தான் அச்சு முறை தமிழ் நாட்டில் வளரலாயிற்று. 17 ஆம் நூற்றுண்டு வரை அச்சு இல்லை. ஆகவே அதற்கு முற்பட்ட கால இலக் கியங்களை ஆராய்ந்து கூறுவது மிகவும் கடினம்.

தமிழிலக்கிய வரலாற்றை நூற்றுண்டு முறையாக வரையறை செய்ய முடியும் என்று தேசிகர் எண்ணி

எழுதியதே அக்காலத்தில் மிகவும் துணிவான செயல். ஏனெனில், தமிழ்ப் புலவர் வரலாறு அவ்வளவு இருள டைந்திருந்த காலம் அது. அன்று இப்படியொரு வேலை யைச் செய்யலாம் என்று யாருமே எண்ணிப் பார்த்த தில்லை. வையாபுரிப் பிள்ளையவர்கள் வீட்டில் அவர் இது பற்றி ஆராய்ந்த போது பல சமயம் யாமும் உடனிருந் திருக்கிறோம். தேசிகர் தேனீ போல உழைப்பவர். அள வில்லாத சைவ சமயச் செய்திகள் அவருக்குப் பரம்பரை காரணமாக நன்கு தெரிந்திருந்தன. ஆயினும், அவர் பிற ருக்கு எதையும் அறிவிக்கமாட்டார். மற்றும் தாம் பிடித் ததைச் சாதிக்கும் சுபாவமுடையவர். எனினும், அவரு டைய முயற்சி சிறந்த முயற்சி; பிறருக்குச் சிறந்த வழி காட்டியாகவும் உதவுவது.

## பிறர் முயற்சி இன்மை

ஆனால் தேசிகருடைய உழைப்பும் அறிவும் சேகரிக் கும் ஊக்கமும் பின்வந்தோரிடையே காணப்படவில்லை. தாமாக உழைத்துச் செய்திகளைக் காண்பதும் தொகுப்ப தும் குறைந்துவிட்டது. முன்வந்தோர் செய்த வற்றையோ ஆராய்ந்து கண்டவற்றையோ மூலம் குறிப் பிடாமல் தாங்கள் கண்டது போல எடுத்தெழுதிக் கொள்ளும் வழக்கம் பிற்காலத்தில் அதிகமாகி விட்டது. நன்றியோடு குறிப்பிடுதல் என்ற பழக்கத்தை இக்காலத் தோர் வைத்துக் கொள்வதில்லை. அதிலும், குறிப்பிட்ட சில ஆராய்ச்சியாளருக்கு இவ் வழக்கம் அறவே இல்லை. அன்றியும் 'கட்டிச் சுருட்டிக் கக்கத்தில் வைக் கும்' வழக்கமும் இந்த இருபதாம் நூற்றாண்டில் மிகுந்து விட்டது. எடுத்துக்காட்டு ஒன்று கூறலாம்.

ஞான பூசாகரணம் முதலான ஐந்து சிறு நூல்களை முதன் முதலில் கொன்றை மாநகரம் சண்முக சுந்தர முதலியார் வெளியிட்டார். பின்னர் சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீடாகிய சித்தாந்தம் இதழில் (1931 இல்) இவை வெளியாயின. பின்னர் இவை

தருமபுரம் பதிப்பாக 1934 இல் வெளியாயின. ஆனால் அங்கு, இவ்வைந்து சிறு நூல்களைத் தருமபுரத்தாரில் ஒரு சாரார் இரகசியத்து வைத்திருத்தல் வேண்டும் என வற்புறுத்த, ஒருசாரார் பெருங்கருணை நோக்கத்தோடு வெளியிடலாம் என்கிற நிலைமையையும் காண்கிறோம்.

இதனோடு, காவை அம்பலநாத (வாண)த் தம்பிரான் பற்றிப் பலர் பல இடங்களில் எழுதியுள்ளதும் ஒப்பு நோக்கி அறியத்தக்கது. இப்பெரியார் 14 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; கி. பி 1488இல் மதுரைச் சிவப்பிரகாசரால் பெரிதும் போற்றப் பெறுகிறார். இவர் தருமையாதீனத்து வெள்ளியம்பலவாண முனிவருக்கு மாணாக்கர் என்றும், அவ்வாதீனத்து முனிபுங்கவருள் ஒருவர் என்றும், அவ்வாதீன நூல்கள் பலவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளார். இவ் வெள்ளியம்பலவாணர் காலம் கி. பி. 1700. இவர் மாணாக்கர் காலம் அடுத்த நூற்றாண்டின் தொடக்கமாதல் வேண்டும். கி. பி. 1400 இல் வாழ்ந்த காவைத் தம்பிரானை கி. பி. 1700க்குப் பின் வாழ்ந்தார் என்று கூறுவது, சிறிதும் பொருந்தாது என்று மட்டும் கூறி அமைகிறோம்.

இவற்றைப் பார்க்கும்போது, பண்டைய சமய நிறுவனங்களில் ஆராய்ச்சி செய்வோருக்கும், நூல் பரிசோதிப்போருக்கும், முந்தைய நூல் வரலாறும் மரபும் சிறிது கூடத் தெரியாதென்றோ, இவர்கள் அவற்றைச் சற்றும் பொருட்படுத்தவில்லையென்றோ முடிவு செய்ய வேண்டியிருக்கிறது.

இந்த இடத்தில் பின்வரும் வடமொழி உபநிடத மந்திரத்தையும் தமிழ்த் திருமந்திரத்தையும் மெய்யன்பர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும் :

> அவித்யாயம் அந்தரே வர்த்தமாநா :
> ஸ்வயம் தீரா : பண்டிதம் மந்யமாநா :|
> தந்த்ரம்ய மாணா : பரியந்தி மூடா :
> அந்தேநைவ நீயமாநா யதாந்தா :||

குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக்
குருடும் குருடும் குழிவீழு மாறே.

## பிழைகள் இயல்பு

இலக்கிய ஆராய்ச்சியும் வரலாற்றுராய்ச்சியும் தமிழிலக்கிய உலகில் மிகவும் புதியவை. ஆகவே, முன்வந்தோர் பிழைபட உணர்ந்து எழுதியிருத்தலும், பின்வருவோர் பிழைகளைக் களைந்து திருத்தமாய் எழுதுதலும், இயல்பு. புதிதாய் வெளிவரும் சாசன ஆராய்ச்சி, ஏட்டுப் பரிசோதனை, நூல் ஆராய்ச்சி, நூல் வெளியீடு ஆகியவற்றால் பழைய கருத்துக்களைத் தள்ளவும் மாற்றவும் நேரிடும். சில பழைய நூல்கள் புதிதாய் அச்சேறுகின்றன; புதிதாய்ச் சில சாசனங்கள் தெரிய வருகின்றன; சொல்லாராய்ச்சி கால ஆராய்ச்சி முதலியன பல புதுச் செய்திகளை உணர்த்துகின்றன. இவ்வகைக் காரணங்களால் முன் வந்தோர் எழுதியது தவறுகுமாயின், அது அவர்களுடைய புலமைக்கும் ஆராய்ச்சிக்கும் இழுக்கன்று. முந்தையோர் வழிவகுத்துக் கொடுத்தமையால் தான் பின் வந்தோர் அவ்வழியில் சென்று புது உண்மைகளைக் காணமுடிகிறது.

மற்றொரு காரணமும் கூறலாம். தமிழ் நாட்டில் அச்சான பழைய நூல்கள் ஆராய்ச்சிக்குக் கிடைப்பது அருமை. சிறப்பான நூல் நிலையங்கள் இப்போதுதான் ஏற்பட்டுள்ளன. இங்கும், ஆராய்ச்சிக்கான பண்டைய நூல் பதிப்புக்கள் குறைவு. அன்றி வழிகாட்டுவோரும் அரியர். பண்டைய புலவருட் பெரும்பாலார் தாங்கள் அறிந்தவற்றைச் சொல்லித் தரமாட்டார்கள். இவற்றோடு ஆராய்வோருடைய அசதியும் சிரத்தைக்குறைவும் திறனின்மையும் சேர்ந்து கொள்வதுண்டு.

சில உதாரணங்களைக் குறிப்பிடலாம். பல்கலைக் கழக ஆராய்ச்சி நூலொன்றில் (1955), திருவானைக் காவுலா இந்நாளில் கிடைக்காமையால் அதைப்பற்றி ஒன்றும் எழுத இயலவில்லை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலுக்கு ஏடு தஞ்சை சரசுவதி மகால்

நூல் நிலையத்தில் உள்ளது. மற்றும் இதன் முதற்பதிப்பு மூலம் பூவை. கலியாணசுந்தர முதலியார் அவர்களால் 1890 இல் வெளி வந்தது. பின்னர், தமிழ்ப் பத்திரிகை யொன்றில் ஒரு பதிப்பு வெளிவந்தது. மூன்றும் முறை எமது குறிப்புரை முன்னுரைகளோடு இது சென்னையில் 1940இல் அச்சிடப்பட்டது. ஆராய்ச்சியாளர் 1955 இல் 'நூல் இந்நாளில் கிடைக்கவில்லை' என்று எழுதினால், அது பற்றி நாம் என்ன சொல்ல முடியும்?

சிறப்புப் பெயரகராதி எழுதிய ஈக்காடு இரத்தின வேலு முதலியாரவர்கள் 'மறைஞான சம்பந்தர் சிற்றம் பலநாடி மாலை எழுதினர்' என்று குறிப்பிட்டார். ஆனால் இது பிழை என்று இப்போது நாம் சொல்வோம். சிற்றம் பலநாடி சாத்திரக் கொத்தில் காணப்படும் சிற்றம்பல நாடி வெண்பாவே மாலை என்று வழங்குவது; இது சிற் றம்பலநாடி மாணுக்கர் (சம்பந்த முனிவர்) பாடியது; மறைஞான சம்பந்தர் பாடியதன்று. இவ்வுண்மைகள் பின்வந்த ஆராய்ச்சியால் விளங்குகின்றன; பிழை, முத லியாருடையதன்று. அந்த அளவாவது அன்று (1908) செய்திகளைச் சேகரம் செய்து வெளியிட்ட அப்பெரி யாரை நாம் போற்றவேண்டும். கைந்நிலையே பதினெண் கீழ்க்கணக்கு நூலாயிருக்க, ஒரு பண்டிதர் கொடுத்த போலி நூலைக் கண்டு மெய்யென்று நம்பி, வ. உ. சிதம் பரம் பிள்ளையவர்கள் இன்னிலையே பதினெண் கீழ்க் கணக்கு நூல் என்று வெளியிட்டிருக்கும்போது, இது பெரும் பிழையாகாது.

தேவிகாலோத்தரம் என்பது தேவியின் தோத்திரம் என்று தேசிகர் எழுதினர். இது பிழை; இந்நூல் ஓர் உபாகமம். தேவிக்கு இறைவன் கூறிய உத்தரமே இந் நூலாகும். அன்றியும், இவர் தத்துவப்பிரகாசர் 16 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தார் என்று குறிப்பிட்டார்; உண்மை அதுவன்று. தத்துவப்பிரகாசம் செய்த தத்துவப் பிரகாசர் காலம் கி. பி. 1350-75; சிவபுரம் தத்துவப்பிர காசர் (நூல் செய்யவில்லை) 1400-1450; கிருஷ்ணதேவ

ராயர் காலத் தத்துவப்பிரகாசர் 1550-75. ஆனால் இவ் வுண்மைகள் பின் வந்த ஆராய்ச்சியால் விளங்கியவை.

இவை போல்வனவே இந்நூலுள் முடிவு செய்யப் பெற்றுள்ள ஆராய்ச்சிகள் பலவும். ஒருகால் எதிர் காலத் தில் ஏடுகள் கிடைத்து, புது நூல்கள் வெளியாகி, பின் ஏற்படும் ஆராய்ச்சியால் இங்குள்ள கால வரையறை களைச் சிலசமயம் மாற்றிக்கொள்ளவும் நேரலாம். அத் தகைய நிலைமை ஏற்படும் வரையில், இங்குச் சொல்லப் பெற்றுள்ளவை தொடர்பாகவும் ஆதார பூர்வமாகவும் சொல்லப் பெற்றுள்ளமையால், இவை முடிவானவை என்றே இப்போது கருதவேண்டும்.

## கட்டுரைகளின் அமைப்பு

சில பொது இயல்புகள் பற்றி, ஆசிரியர்களையும் நூல் களையும் இந்நூலில் வெவ்வேறு தலைப்புக்களில் தொகுத்துக் கூறுகிறோம். கால வரையறை செய்யும் ஆராய்ச்சி நூலாதலால், கால விளக்கம் சற்று அதிக மாகவே இருக்கும். இலக்கிய விமரிசனம் இந்நூலின் நோக்கமல்லவாயினும், சில இடங்களில் இதுவும் சற்று விரிவாகவே இருக்கலாம்.

பின்வரும் முறையில் இங்குக் கட்டுரைத் தலைப்புக் கள் அமைக்கப் பெற்றுள்ளன. பெரிதும் விளக்கமாய்த் தெரிந்த ஆசிரியரை அவர் பெயரையே தலைப்புக் கொடுத்துச் சொல்லுகிறோம்; உதாரணம்: வில்லிபுத்தூரர், கச்சியப்ப சிவாசாரியர். ஆசிரியரைவிட நூல் விளக்க மாயின், நூலின் பெயரிலேயே கட்டுரையை அமைத் திருக்கிறோம்: வருணகுலாதித்தன் மடல், நவநீதப் பாட் டியல். ஆசிரியர் பெயரே தெரியாதபோது, கட்டுரை நூற் பெயராலேயே அமைந்திருக்கும்: புறத்திரட்டு, பிரசாத தீபம்.

இனி, ஒவ்வொரு கட்டுரையிலும் பின்வரும் பகுதி கள் இயன்ற அளவு விரிவாகச் சொல்லப் பெற்றிருக்கும்

அ. ஆசிரியர் அல்லது நூல்பற்றிய கதைகள் வழக்காறு கள். ஆ. ஆசிரியர் வாழ்க்கைச் சரித்திரம். இ. நூலா ராய்ச்சி, ஆராய்ச்சிக் குறிப்புக்கள், விமரிசனம். ஈ. கால நிர்ணயம்.

மேலும், இக்கட்டுரைகள் நன்கு தெரிந்த ஆசிரியர் களையும் நூல்களையும் பற்றிய முக்கியமான குறிப்புக்களை மட்டும் கொண்டிருக்கும். நன்கு தெரியாத ஆசிரியர் களையும் நூல்களையும் பற்றிய வரலாறு, காலநிர்ணயம், விமரிசனம் முதலிய பகுதிகள் இயன்ற அளவு விரிவா கவே சொல்லப்பெற்றிருக்கும். இதற்குக் காரணம், முன் சொல்லியவை பற்றிய செய்திகள் வேறிடங்களில் தெரிந்துகொள்ள முடியும், ஆதலால் இங்குக் குறைவாக இருந்தால் பிழையில்லை; ஆனால் பின் சொல்லியவை பற்றிய செய்திகள் தெரிவதற்கு வேறு இடமில்லையாத தால், இங்கு விரித்துச் சொல்வது வரலாற்றுணர்ச்சிக்கும் இலக்கிய அறிவு வளர்ச்சிக்கும் உதவும் என்பதே.

நூலாராய்ச்சி இப்புத்தகத்தின் நோக்கமன்று. ஆயி னும் ஆங்காங்கு ஏற்றபெற்றி சுருக்கமாகவும் விரி வாகவும் நூலாராய்ச்சி செய்யப்பெற்றுள்ளது. காலம் வரலாறு சூழ்நிலை ஆகியவற்றுக்கு விளக்கம் தரவும், குறித்த ஆசிரியருக்கும் நூலுக்கும் இலக்கிய வரலாற்றில் உரிய இடத்தை நன்கு விளக்கிக் காட்டவுமே ஓரளவு நூலாராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது.

நூலாராய்ச்சி மேற்கொள்ளப்பட்ட இடத்து, கருத்து வளர்ச்சியையே முதன்மையாய்க் கருதி வரலாற்றுச் செய்திகளைக் கூறுகிறேம். இங்கு யாம் மொழிப் பிர சினையை ஆராயவில்லை. ஆராயப் பெறுகின்ற காலம் சமய மறுமலர்ச்சி ஓங்கி நின்ற காலம். அக்காலத்தே வட சொற்கள் தமிழில் நிரம்ப ஆட்சி பெற்றன; கருத்து விளக்கத்துக்காக முந்தையோர் எண்ணற்ற வட சொற் களைத் தமிழில் ஆளத் தலைப்பட்டனர். இவ்வாட்சி திருக் குறளிலும் தொல்காப்பியத்திலுமே காணப்படுகிறது.

வடசொல் மட்டுமன்றி, பிற சொற்களும் கலந்திருப்பதை, இந் நூலகத்துள்ள சில சொல்லாராய்ச்சிகளால் நன்கு அறியலாம். பழையன கழிதலும் புதியன புகுதலும், வளர்ந்துவரும் சமுதாயத்தின் இயல்பு. ஆகவே, யாம் மொழிக் காழ்ப்பின்றியே எவ்விடத்தும் குறிப்புக்களைத் தந்திருக்கிறோம்.

வைணவ இலக்கியம் என்ற பகுதியில் வடகலை தென்கலை என்ற இரு பிரிவின் ஆசாரியர் வரலாறுகள் சில சொல்லப்பட்டுள்ளன. பூசல்கள் மிகுந்திருந்த போதிலும், அவரவர் வரலாற்றையும் அந்தச் சார்பில் நின்று பக்தியோடு சொல்லவே முயன்றிருக்கிறோம். அவ்வரலாறுகளை விளக்கமாய்க் கூறியிருப்பதன் கருத்து, அவற்றிலுள்ள கதைச் சுவை, பண்பாடு, மாணுக்கரின் பக்குவம், நீதிகள் போன்ற அரும் பண்புகளை அனைவருக்கும் நன்கு உணர்த்துவதேயாகும்.

இந்நூலில் இதுவரை யாருமே கால வரையறை செய்யாத பல ஆசிரியர்கள் நூல்களின் காலம் இன்ன கால எல்லைக்குரியது என்று திட்டமாக வரையறை செய்யப் பெற்றுள்ளது. இங்குள்ள முடிபுகள் யாவும் முடிந்த முடிபுகள் என்று சொல்லவில்லை. கிடைக்கிற எல்லா வகையான ஆதாரங்களையும் சீர்தூக்கி இவை இவை இக்காலத்துக்குரியன என்று முடிவு செய்யப் பெற்றுள்ளன. குறைபாடுகள் இருந்தால் காலப் போக்கில் தாமே திருந்தும்.

## காலக் குறிப்பு

நூலின் அகத்திலும் அனுபந்தங்களிலும் பெரும்பான்மையான ஆசிரியர் காலம் ஆராய்ந்து திட்டமாகச் சொல்லப்பட்டுள்ளது. இக் காலத்தைக் கொள்ளும் போது, ஒரு கருத்து நன்ருய் நினைவிருக்க வேண்டும். காலம் குறிப்பிட்ட நூல்கள் சில. சங்கற்ப நிராகரணம் (உமாபதி) கி. பி. 1313: சிவப்பிரகாசர் உரை (மதுரைச் சிவப்பிரகாசர்) கி. பி. 1488: வேறு பல ஆசிரியர்கள்

காலம் முன்பின் தொடர்புகளால் உத்தேசமாய்க் குறிப்பிட்டுள்ளதாகும். உதாரணம்: சிற்றம்பல நாடி 1325-50, உதீசித் தேவர் 1450-75 என்ற குறிப்புக்கள் போல்வன. இவ்வாண்டுகள் குறித்த ஆசிரியருடைய பிறந்த ஆண்டு இறந்த ஆண்டுகள் அல்ல; அரசர்களுக்கு ஆட்சியாண்டு என்று சொல்வது போல, சம்பந்தப்பட்டோருக்கு இவை ஆசாரிய பதவிக்குரிய உத்தேச ஆண்டுகள் அல்லது அவர்கள் புலவராக விளக்கம் பெற்றிருந்த ஆண்டுகள் என்று மட்டுமே இவற்றைக் கொள்ளவேண்டும்.

14-15 ஆகிய இரு நூற்றுண்டுகளிலும் சமய மலர்ச்சி ஒரு சிறப்பான இயல்பாகத் தெரிகிறது. இதை இந் நூலிற் பலவிடத்தும் விளக்கமாய்க் காணலாம். இந்நூலின் அனுபந்தமாக மெய்கண்டார் பரம்பரையில் பின் வந்த தலைமுறையினரையும் அவர்கள் செய்த நூல்களையும் காலத்தையும் காட்டும் அட்டவணைகள் எட்டுச் சேர்க்கப்பட்டுள்ளன; இவ்வட்டவணை மெய்கண்ட பரம்பரையை விளக்கிக் காட்டுவதோடு, பரம்பரையினர் ஒவ்வொருவரின் காலத்தையும் ஆதீனங்களின் வரலாறுகளையும் உணரவும் துணை செய்யும். ஆறு சைவாதீன மரபுகள் இதனுள் விளக்கமாகின்றன.

காலத்தை வரையறை செய்வதென்பது எளிதான காரியமன்று. முன்வந்த ஆராய்ச்சியாளர் அனேகர் ஒரு விதமான ஆராய்ச்சியும் இல்லாமல், மனம்போனபடி குறிப்புக்களை எழுதி வைக்கின்றுர்கள். எடுத்துக்காட்டாகச் சில குறிப்புக்களை இங்குக் கொடுக்கலாம்: கடவுள் மாமுனிவர் 18ஆம் நூற்றுண்டு; சிவஞான வள்ளல் 18 ஆம் நூற்றுண்டு; கனுநூல் செய்த பொன்னவன் 14 ஆம் நூற்றுண்டு; நமசிவாயத் தம்பிரான் 15ஆம் நூற்றுண்டு என்பன சில உதாரணங்கள். இவை போன்றன எவற்றையும் முந்தையோர் செய்த ஆராய்ச்சி முடிவு என்று அப்படியே கொள்ளுவதற்கில்லை. 14-15 ஆகிய காலத்துக்கு உரியவர் என்று கொள்ளவும் நிரம்ப

ஆராயவேண்டி யிருக்கிறது; அப்படியே உரியர் அல்லாதவர் என்று தள்ளவும் நிரம்ப ஆராயவேண்டி யிருக்கிறது. கடவுள் மாமுனிவரும் சிவஞான வள்ளலும் 18 ஆம் நூற்றுண்டினர் அல்லர்; 15 ஆம் நூற்றுண்டுக்குரியவர் என்பது இப்புத்தகத்தில் செய்துள்ள ஆராய்ச்சிகளால் நன்கு விளங்கும். அப்படியே இப்பகுதிக்குரியவர்கள் என்று சொல்லப்பட்ட பொன்னவன் 13 ஆம் நூற்றுண்டுக்கு முந்தியிருந்தவர்; நமசிவாயத் தம்பிரான் 17 ஆம் நூற்றுண்டினர் என்பது நம் ஆராய்ச்சியில் கண்ட முடிவு; இவற்றை இங்கு விளக்கவில்லை.

இவ்வாறுள்ள பிழைபட்ட செய்திகளுள் புகுந்து உழலும்போதுதான், நூற்றுண்டு வரையறை ஏற்படுத்த முயன்ற சோமசுந்தர தேசிகருடைய சாதனை எவ்வளவு அரும்பாடு கொண்டது என்பது புலப்படும்.

இனி, இங்குக் காலம்பற்றிச் செய்யப்பெற்ற முடிவுகள் யாவும் ஒரே வகையான ஆதாரங்களின்மேல் எழுந்தனவாயிரா. இதற்குக் காரணம் வெளிப்படை. சரித்திரச் சான்றுகள், சாசனக் குறிப்புக்கள் முதலியன கிடைத்த இடங்களில், காலவரையறைக்கு இவை ஆதாரமாய் அமையும் பல இடங்களில் இவை கிடைப்பதில்லை. அப்போது வழக்காறுகள் கதைகள் முதலியன உதவுகின்றன. சில சமயம் அகச்சான்றுகள்; சில சமயம் சொல்லாராய்ச்சி போன்றன போதிய ஆதாரங்களாக எனச் சிலர் கருதக்கூடும். ஆனல் வேறெந்த ஆதாரத்தினலும் விளக்கம் கிடைக்காதபோது, சொற்களின் மூலமேனும் விளக்கம் கிடைப்பது பேருபகாரம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. மேலும், சொல்லாராய்ச்சி தக்கமுறையில் நடைபெறுமானல், அதுவே காலவரையறைக்கு, மற்றச் சாதனங்களிலும் சிறந்த சாதனமாகவும், திட்டமான பிறசாதனங்களுக்குத் துணைச் சாதனமாகவும் அமையும்.

## ஆதார நூல்கள்

இலக்கிய வரலாற்று ஆராய்ச்சிக்குத் துணையாகச் சொல்லத் தக்க நூல்கள் இரண்டு, ஒன்று பதினேழாம் நூற்றுண்டில் செய்யப் பெற்றதாகிய தமிழ் நாவலர் சரிதை. இதனுள் மிகப் பலவான பழஞ் செய்திகளும், புதுச் செய்திகளும், பின் வந்த ஒருவரால் தொகுக்கப் பெற்றுள்ளன. தொகுத்தவர், தம் காலம் வரையில் இருந்த புலவர் பற்றித் தாம் கேட்ட பாடல்களையும் வரலாறுகளையும் எழுதி வைத்தார். கால முறைப்படி இது அமையவில்லை. காலக் கண் கொண்டு நோக்கும் வழக்கம் அக்காலத்தில் இல்லை. ஒருவர் பாடலை மற்றொருவர் பாடலாகச் சொல்லிய முரண்களும் இதன் கண் உள்ளன. பிற சான்றுகளுக்குத் துணையாக இந்தச் சரிதையை நாம் கொள்ளலாமே அன்றி, இதையே முழுத்துணையாகவோ, முழு ஆதாரமாகவோ கொள்வது பொருந்தாது.

மற்றொரு நூல், தண்டபாணி சுவாமிகள் பாடிய புலவர் புராணம். இது முதலில் வி. கே. கிருஷ்ணமாச் சாரியராலும் பின்னர் சுவாமியின் புதல்வர் செந்தில் நாயகம் பிள்ளையாலும் (1908) இரு முறை அச்சிடப் பட்டுள்ளது. இதனுள் 75 புலவர் வரலாறுகள் 2991 பாடல்களால் சொல்லப்பட்டுள்ளன. சுவாமிகள் முருக பக்தர். பரம்பரையாக வந்த கதைகளையும் செவி வழியாகத் தாம் கேட்ட கதைகளையும் ஒன்று சேர்த்துப் புராணமாகப் பாடி வைத்தார். கதை என்ற அளவில் இதனிலுள்ள செய்திகள் பயன்படுமே அன்றி, கால ஆராய்ச்சிக்கு இவை பொருந்துவன ஆகா.

பின் வரும் இலக்கிய வரலாற்றில் இங்குக் குறித்த இரு நூல்களும் கூறும் செய்திகள் ஏற்ற பெற்றி பயன் படுத்தப் பெற்றிருக்கும்.

சமயநூல் வரலாற்றுராய்ச்சிக்குப் பெருந்துணையா யிருப்பவை, காலம் சென்ற ச. அனவரத விநாயகம்

பிள்ளையவர்கள் தங்கள் பதிப்புக்களில் முன்னுரையாக எழுதியுள்ள குறிப்புக்கள். இப்பெரியார் சைவச் சிறு நூல்கள் பல நன்கு ஆராய்ந்து பதிப்பித்தவர்கள். ஒவ்வொன்றிலும் நூல் வரலாறு, பதிப்பு வரலாறு, ஆசிரியர் வரலாறு என்பன தவருமல் எழுதியிருக்கிருர்கள். இது கால ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாயுள்ளது, டாக்டர் சாமிநாத ஐயரவர்களைப்போல் செய்திகளைத் தொகுத்துரைப்போர் தமிழ்நாட்டில் தோன்றவில்லை; அவர்களைப் போலவே, நூற்பதிப்பு வரலாற்றை ஆராய்ந்து கூறுபவர் அனவரத விநாயகம் பிள்ளையவர்கள்போல் வேறு எவருமிலர்.

இந்நூல் எழுதுவதில் அந்தந்த நூற் பதிப்பின் ஆசிரியர்கள் எழுதிய குறிப்புக்கள் பயன்பட்டிருக்கின்றன. சில பதிப்புக்களைப் பற்றிய குறிப்புக்கள் நூலகத்தே அவ்வவ்வத்தியாயத்தின் இறுதியின்கண் சொல்லப்பட்டுள்ளன. சிறப்பாக இங்குக் கூறத்தக்கவை, டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள் தம்முடைய பல நூல்களிலும் எழுதியுள்ள குறிப்புக்கள், ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் தம்முடைய பல நூல்களிலும் எழுதியுள்ள குறிப்புக்கள், மு. ராகவையங்காரவர்கள் தமது பெருந்தொகை, ஆராய்ச்சித் தொகுதி, சாசனத் தமிழ்க் கவி சரிதம் முதலான பல நூல்களிலும் எழுதியுள்ள குறிப்புக்கள் ஆகியவை. இவை நிரம்பப் பயன்பட்டிருக்கின்றன. இவர்களுக்கும் ஏனைய நூல்களின் பதிப்பாசிரியர்களுக்கும் எமது நன்றி உரியது. ஆதார நூல்களின் பட்டியல் பிற்சேர்க்கை—3 ஆக இணைத்திருக்கிறோம்.

ஆனல் பொதுவாக, இங்குச் சொல்லப்பட்டுள்ள கால நிர்ணயம் முழுமையும் அந்தந்த நூலின் அகச் சான்று கொண்டே யாமாகச் செய்தது. இதற்குத் தமிழில் முன் மாதிரியாக எவரும் வழிகாட்டியதில்லை. கச்சியப்ப சிவாசாரியர் கால ஆராய்ச்சியைப் பார்த்தால்

இது நன்கு விளங்கும். கால நிர்ணயத்தில் ஒருகால் பொருத்தமின்மையோ பிறழ்வோ இருத்தல் இயல்பே யாகும். இது இந்த ஆராய்ச்சிக்கு எந்த விதத்திலும் இழுக்காகாது. இந்தத் துறையில் முதன் முதல் ஏற்பட்ட ஆராய்ச்சி நூல் இதுவே. ஏனைய ஆராய்ச்சிக் கெல்லாம் வழிகாட்டியாக இதுவே அமையும். இந்த வழியில் மேலும் சென்று ஆராய்ந்து தக்க சான்று கொண்டு காணும் புது முடிவுகளை யாமே வரவேற்போம் என்பதில் தடை இல்லை.

இங்குச் சிறப்பாக ஆராய்ந்து கால வரையறை செய்யப் பெற்ற ஆசிரியர்கள் சிற்றம்பல நாடிகள், சம்பந்த முனிவர், தத்துவப் பிரகாசர், கண்ணுடைய வள்ளல், சிவஞான வள்ளல், சிவாலய முனிவர், தத்துவராயர், தேவேந்திர முனிவர், கச்சியப்ப சிவாசாரியர், கடவுள் மாமுனிவர், காங்கேயர், காலோத்தர ஆசிரியர், சித்தர்கள் ஆயினோர். மறைஞான சம்பந்தரும் அருள் நமசிவாயரும் நூல் செய்தார்கள் என்று இங்கு நிறுவியிருப்பதும் புதுச் செய்தி.

இலக்கிய வரலாற்று நூலில் இலக்கிய இலக்கண ஆராய்ச்சி மட்டுமே கொள்ள வேண்டும், சமய சாத்திரங்களை விலக்க வேண்டும் என்று கருதுவோரும் உளர். சுருங்கிய ஆராய்ச்சிக்கு இது ஒரு கால் பொருந்துவதாகும். விரிந்த நூற்பரப்பைக் கருதும் போது, எல்லா நூல்களையும் கொள்ளவே வேண்டியிருக்கின்றது. அன்றியும், தமிழ் இலக்கியத்திலும், இது போல் வடமொழி இலக்கியத்திலும், சமய நூல் இலக்கிய நூல் என்ற பாகுபாடு இருபதாம் நூற்றுண்டு வரை இல்லை; எல்லாமே இலக்கியமாய்க் கருதப் பெற்று வந்திருக்கின்றன. ஆதலால், இவ்வாராய்ச்சி நூலில் இயன்றவரை எல்லாமே கொள்ளப்பட்டுள்ளன.

## நன்றியுரை

18-19 நூற்றுண்டுகள் நமக்கு மிகவும் நெருங்கிய காலம். இக்காலத்தில் பேரிலக்கியங்கள் எழவில்லை; சிற்றிலக்கியங்களும் உரைநடை நூல்களும் அதிகமாய் எழுந்துள்ளன. இக்காலத்தையும், சோமசுந்தர தேசிகர் வரலாறு எழுதிய 16-17 ஆகிய இரு நூற்றுண்டுகளையும் இப்போதைக்கு நிறுத்தி வைத்து, இவற்றுக்கு முன்புள்ள நூற்றுண்டாகிய 15ஆம் நூற்றுண்டு முதல், காலத்தில் பின்னேக்கிச் சென்று, ஒவ்வொரு நூற்றுண்டாக இலக்கிய வரலாறு வெளியிட எண்ணினேம். இந்த முறையில் 14, 15 ஆகிய இரு நூற்றுண்டுகளின் தமிழ் இலக்கிய வரலாறுகள் இப்போது இரு புத்தகங்களாக வெளியிடுகிறேம். இவை இவ்வாண்டு (1969) மார்ச்சு மாதத்தில் அச்சு முடிந்திருப்பினும், சௌமிய ஆண்டுப் பிறப்பாகிய இத் தமிழ்த்திருநாளில் வெளி வருகின்றன. அடுத்து 11, 12, 13 நூற்றுண்டுகளின் இலக்கிய வரலாறுகள் வெளிவரும்.

இந்த நன்னளில், நன்முகத் தமிழ் படிக்க வேண்டும் என்று ஆசீர்வாதம் செய்து உழைப்பில் வழிகாட்டிய மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் அவர்கள் நினைவுக்கும், இலக்கியச் சுவை தேரும் உணர்வை ஊட்டிய டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் நினைவுக்கும், ஆராய்ச்சித் துறையில் எம்மை ஈடுபடுத்தி உண்மை காணும் நெறியில் செலுத்திய ச. வையாபுரிப்பிள்ளை அவர்கள் நினைவுக்கும் யாம் மிக்க நன்றியறிதலோடு மன மொழி மெய்களால் வணக்கம் செலுத்துகின்றேம்.

அச்சுத்தாள் திருத்துவதில் உதவி செய்த காந்தி வித்தியாலயத் தமிழாசிரியர் திரு. கு. கலியாணசுந்தரம் அவர்களுக்கு எமது நன்றி உரியது. மிகச் சுருங்கிய காலத்தில் விரைந்து நன்முறையில் இந்நூலை அச்சிட்டுதவிய மாணிக்கம் அச்சகத்தாருக்கு எமது நன்றியும் பாராட்டுதலும் உரியன.

சில ஆண்டுகளுக்கு முன்னே முடித்துவைத்த நூலாதலாலும், இப்போது விரைந்து அச்சிட நேர்ந்தது ஆதலாலும், இந்நூலில் சொற்பிழைகள் கருத்துப்பிழைகள் அயர்ச்சியினுல் ஏற்பட்டிருத்தல்கூடும்; அன்பர்கள் பொறுக்க.

இந்நூல் வெளியிடப் பொருளுதவி செய்த இந்திய அரசின் கல்வியமைச்சகத்துக்கு எம் நன்றி உரியது.

எம்மை இத்துறையில் ஈடுபடுத்தி நடத்தி வருகின்ற இறைவன் திருவடியை எந்த நேரமும் சிந்திக்கின்ருேம்.

**விடையான் விரும்பிஎன் னுள்ளத் திருந்தான் இனிநமக்கிங்கு**
**அடையா அவலம், அருவினை சாரா, நமனையஞ்சோம்;**
**புடையார் கமலத்து அயன்போல் பவர்பா திரிப்புலியூர்**
**உடையான் அடியார் அடிஅடி யோங்கட்கு அரியதுண்டே.**

*—அப்பர்.*

*திருச்சிற்றம்பலம்*
*13-4-1969*
*சௌமிய, சித்திரை 1*

மு. அருணசலம்

# பொருள் அடக்கம்

# முன்னுரை

## 1. அரசியல் நிலைமை

*14-15 நூற்றாண்டுகளின் இலக்கிய சரித்திரத்தை நன்குணர்வதற்கு அக்கால அரசியல் வரலாற்றை உணர்வதும் அவசியமாகும். இதன் பொருட்டு, அக்காலத்துக்கு முந்திய காலப் பகுதியிலிருந்து தொடர்பாகத் தமிழ் நாட்டின் நிலைமையை அறிய வேண்டும். விசயாலய சோழன் கி. பி. 846 இல் தோற்றுவித்த சோழப் பேரரசானது, நானூறு ஆண்டுகளுக்கும் அதிகமாக, தமிழகம் முழுமையையும் கடல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளையும் ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்து, சோழ மன்னர் பெருமையையும், சமயப் பற்றையும், நாகரிகத்தையும், இலக்கியத்தையும், கலைகளையும் - ஒரு வகையில் இன்றைய அரசியல் பரிபாஷையில் சொல்கிற சமதர்மத்தையும்-நிலைநாட்டியிருந்தது. சிறப்பாக 10-12 நூற்றாண்டுகளின் சரித்திரம், தமிழ்நாட்டின் பொற்காலம் என்று சொல்வார்கள். எனினும், நானூறு ஆண்டுகளாக மெல்ல வளர்ந்த இச்சோழப் பேரரசு, அடுத்த 13 ஆம் நூற்றாண்டில், ஐம்பது ஆண்டுகளில் திடீரென்று வீழ்ச்சியடைந்து அடியோடு அழிந்தது. 1216 இலிருந்து ஆட்சி புரிந்த மூன்றாம் இராசராச சோழனை, வட ஆர்க்காடு ஜில்லா சேந்தமங்கலத்தில் ஒரு படைத் தலைவனாகத் தோன்றிச் சிறிது காலம் வலிமை வாய்ந்திருந்த காடவர் தலைவனாகிய கோப்பெருஞ் சிங்கன் என்பவன் சிறை பிடித்து விட்டான். பின்னர், திரிசிராப்பள்ளியை யடுத்த கண்ணனூரில் அரசாண்ட போசள மன்னர், சோழ மன்னனைச் சிறை மீட்டு அரச பதவியில் இருத்தினார்கள். சோழர் வீழ்ச்சி இவனோடு தொடங்கி விட்டது. இவன்*

மகனுகிய மூன்றும் இராசேந்திரன் 1246 இலிருந்து 1279 வரை அரசாண்டான். இவன் தகப்பனை விடச் சிறப்பாக ஆட்சி புரிந்தான் எனினும், இவனுக்குப் புதல்வரில்லாமையால், இவன் இறந்தவுடனே சோழப் பேரரசு நிலைகுலைந்து இருந்த இடமே தெரியாதபடி அழிந்து விட்டது என்று சரித்திரம் கூறும்.

சோழர் பேரரசு வலிமை குன்றி அழிகிற காலத்தில், மதுரையில் பாண்டியர் ஆட்சி ஓங்கலாயிற்று. அப்போது ஆட்சி புரிந்தவர், சடாவர்மன் சுந்தர பாண்டியன் (1276), மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (1283) ஆகியோர். இவர்கள் காலத்தில் பாண்டியராட்சி பெரிதும் ஓங்கிற்று. சோழ நாட்டிலும் இவர்கள் ஆதிக்கம் சென்றது. குலசேகர பாண்டியனுடைய பிள்ளைகளான வீரபாண்டியனும் (1296) சுந்தர பாண்டியனும் (1303) முறையே அரசாண்ட போதிலும் கூட, இவர்கள் இருவரும் போட்டியிட்டு ஒருவர் மீது ஒருவர் போர் புரிந்து அரசைச் சீர்குலைத்தார்கள். இவர்களுள் அரசனுக வருவதற்குரிய முறையுடையவன் பட்டத்தரசியின் புதல்வனுன சுந்தரபாண்டியன்; வீரபாண்டியன், குலசேகரனுடைய காமக் கிழத்தியின் புதல்வன். உரிய காலத்தில் தனக்கு அரசுரிமை வழங்காமல் வீரபாண்டியனுக்கு அரசைத் தகப்பன் வழங்கினுன் என்ற காரணத்தால், சுந்தர பாண்டியன் தகப்பனைக் கொலை செய்து விட்டான் என்றும் சொல்வர். இருவருக்கும் நடந்த போரில் இவன் வீரபாண்டியனிடம் தோற்ருேடி, டில்லி சுல்தான் அலாவுதீனின் படைத்தலைவனுன மாலிக் காபூரிடம் அடைக்கலம் புகுந்தான். இவன் காரணமாக முகம்மதியப் படை பாண்டி நாட்டுக்குள் புகுந்து, நாட்டையும், மதுரையையும் அழித்துக் கொள்ளையடித்தது. மாலிக்காபூர் பாண்டியர் இருவரையுமே ஓட்டி விட்டுத் தானே மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான்; கோயில்களை இடித்தான்; செல்வத்தைச் சூறையிட்டான்; நாட்டில் ஏற்பட்ட நாசத்திற்கு

எல்லையில்லை. மதுரையில் நிகழ்ந்த நாச வேலை, அடுத்த நூற்றாண்டில் விசய நகரத்தை முகம்மதியர் அழித்ததனோடு ஒத்தது என்று சரித்திரம் வல்லோர் சொல்வர். இதனோடு மதுரையில் பாண்டியராட்சி முடிவுற்றது; தமிழ் நாட்டில் தமிழ் மன்னர் ஆட்சியும் இதனோடு முடிந்தது.

இவ்வாறு 13 ஆம் நூற்றாண்டிலும் 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் சோழப் பேரரசும் பாண்டிய அரசும் அடியோடு நிலைகுலைந்து ஒழியவே, ஆங்காங்கிருந்த படைத் தலைவர்கள் சிறு சிறு நிலப் பகுதிகளை வளைத்துக் கொண்டு குறுநில மன்னர்களாக ஆட்சி செய்யத் தலைப்பட்டார்கள். சம்புகுலக் காடவராயர், தென்காசிப் பாண்டியர் என்போர் இவ்வாறு குறுநில மன்னர் ஆனவர்கள். அழிந்த பேரரசு எதுவும் பிற்காலத்தில் தலை எடுக்கவே இல்லை. 15 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு சிற்றரசுகள் பல முளைத்தன. 16ஆம் நூற்றாண்டில் விசய நகர ராயருடைய ஆட்சியும், அவர்கள் பிரதிநிதிகளான நாயக்கருடைய ஆட்சியும், பின்னர் மராத்தியருடைய ஆட்சியும், ஆங்காங்கு சுமார் இருநூறு ஆண்டு காலம் நிலவியிருந்து, முடிவில் 18-19 நூற்றாண்டுகளில், இவை வலிமை குன்றி, ஐரோப்பிய ஆதிக்கம் வேர் கொண்டு வளர்ந்தோங்க இடம் கொடுத்தன.

இதுவே அரசியல் நிலை. நாம் கருதும் காலப்பகுதியில் எந்த நிலையான வலிமை பெற்ற அரசும் தமிழ் நாட்டில் ஆட்சி புரியவில்லை. எங்கும் குழப்பமும் போரும் நாசவேலையும் கொந்தளிப்பும் மலிந்திருந்தன. அது காரணமாகத்தான் போலும், இப்பகுதியில் இலக்கியத் துறையில் சமய நூல்களே அதிகமாக எழலாயின. உலகியல் துறையில் மக்கள் மனம் ஒடுங்கி யிருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டதால், ஆன்மார்த்தத் துறையில் அவர்கள் உள்ளம் விரிவு காண இயன்றது போலும். ஞான மார்க்கத்தில் இக்காலத்தில் நூல்கள் பெருகியது போல வேறெக் காலத்திலும் பெருக

வில்லை; பேரிலக்கியம் தோன்றவில்லை என்பது உண்மை யாயினும், பெரு ஞானிகள் பலர் தோன்றி, சமயத்துறையில் உள்ளத்தின் ஆழம் முழுமையும் கடைபோகக் காண முடிந் திருக்கிறது.

## 2. சமுதாய நிலை

நாம் ஆராய்ந்து வரும் காலம், சமுதாயத்திலும் பெரும் புரட்சி நடந்து வந்த காலமாக இருந்தது என்று அறி கிறோம். சமுதாயப் புரட்சிக்கு உரிய பல காரணங்களில் முக்கியமானது, பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்ட சோழப் பேரரசின் சீர்குலைவும், அதே காலத்தில் ஓங்கியிருந்து அடுத்த ஐம்பது ஆண்டுகளில் அழிந்து போன பாண்டிய அரசின் விழ்ச்சியுமாகும். மற்றொன்று, முகம் மதியர் வட இந்தியாவிலும் பின்னர் தமிழ் நாட்டிலும் வந்து, பாண்டியரை ஓட்டி மதுரையைக் கைப்பற்றியதனால் ஏற்பட்ட முகம்மதிய நாகரிகத்தின் மோதலுமாகும். இம் மோதலால் ஓரளவு மக்கள் மனத்தில் புரட்சி விளைந்தது. முன்னர் ஒரு காலத்திலும் கண்டிராதபடி அநாகரிகமுடைய மிலேச்சர்கள் எனக் கருதப்பட்டோர் தங்கள் நாட்டுக்குள் புகுந்து, மிகவும் புனிதம், நாகரிகம், தெய்விகம் என்று கருதியவற்றை யெல்லாம் நிர்மூலம் செய்தபோது, மக்கள் மனம் கொந்தளிக்காமல் இருக்க முடியாது. அக் கொந் தளிப்பின் விளைவு இருவகை. ஒன்று, மக்களிடத்தில் முன்னிலும் அதிகமான சமயப் பற்றும் தெய்வப் பக்தியும் குடி கொண்டு, சிறப்பான சமய இலக்கியங்கள் தோன்றச் செய்தது. மற்றொன்று, மக்கள் மனத்தில் இக் கொந்தளிப்பு அப்படியே நின்று எந்த விதமான முடிவும் காணமல் தத் தளிப்பே நிலவலாயிற்று. இதன் விளைவாக ஏற்பட்ட கதைகள் பல. இங்கெல்லாம் பழைய சமயக் கொள்கை களையும் சமுதாயக் கொள்கைகளையும் எதிர்க்கின்ற புரட்சி மனப்பான்மையை மட்டும் காண்கிறோம்.

ஒரு கதை ஆதிபகவன் என்போரைக் குறித்த கதை. இக்கதையில் திருவள்ளுவர், அவ்வை, கபிலர் ஆகியோர் சம்பந்தப்படுகிறார்கள். இக்கதை 14 ஆம் நூற்றாண்டில் தோன்றியது எனக் கருத நியாயம் உண்டு. இத் திருவள்ளுவர் இருந்தார் என்றால், இவர் திருக்குறள் செய்தவரல்லர்; பின் வந்து அதே பெயரைத் தரித்திருந்த ஒரு பெரியவர் என்பது பொருந்தும்; திருவள்ளுவர் ஞானம் என்ற பெயரால் பல நூல்கள் வழங்குகின்றன. இவற்றுள் ஒன்றையோ பலவற்றையோ செய்தவர் இத்திருவள்ளுவ ராயிருக்கலாம். அங்ஙனமே, அவ்வையார் பலர் இருந் தனர், கபிலர் பலர் இருந்தனர். அவ்வையார், கபிலர் ஒவ் வொருவர் இக்காலத்தில் வாழ்ந்து இக்கதையோடு சம்பந் தப்பட்டவர். இந்த அவ்வையார் விநாயகரகவலும், ஞானக் குறளும் செய்தார். இக்கபிலர் வருணாசிரமம் என்பதைப் பழித்து, பிறப்பினால் உயர்வில்லை, குணச்சிறப்பே உயர்வு என்று வலியுறுத்துகின்ற கபிலரகவலைப் பாடினார். இவர் வரலாறு ஓரளவுக்கு மணிமேகலை கூறுகின்ற ஆபுத்திரன் வரலாற்றைத் தழுவியதாகும் என்று மட்டும் இங்குக் கூறலாம்.

சாதி பேதங்களை விலக்குகின்ற கதைகள் வைணவ ஆசாரிய மரபில் மிகப்பல. இப்பகுதிக்குரிய விளாஞ் சோலைப் பிள்ளை வரலாறு முதலியன குறிப்பிடத் தக் கவை.

## 3. தமிழ் நாட்டுச் சமய நிலை

12ஆம் நூற்றாண்டில் பக்திப் பிரவாகப் பெருங் காப்பியமாகிய சேக்கிழாருடைய திருத்தொண்டர் புராணம் ஏற்பட்டது. சோழ மன்னர் அனைவரும் தமிழ் நாடெங்கும் பெருங் கற்கோயில்களைக் கட்டிவைத்திருந் தார்கள். அவற்றின் பயனைப் பாமர மக்களின் வாழ்க்கை யில் புதியதொரு பக்தி வெள்ளம் பொங்கித் ததும்ப

லாயிற்று. பக்தி கரை கடந்து பெருகவே, இதை நெறிப் படுத்தி வரம்பு கோலுகின்ற ஞான சாத்திரங்கள் தோன்றின எனக் கருதலாம். முதன் முதலாக 13-14 நூற்றாண்டுகளில் சைவ சித்தாந்த ஞான சாத்திரங்கள் தோன்றலாயின. வைணவ சித்தாந்த நூல்களும் இராமா னுசருக்குப் பின் பெரு வெள்ளமாக எழலாயின. 15ஆம் நூற்றாண்டில் வேதாந்த நூல்களும் மிகப் பலவாகத் தோன்றித் தமிழில் ஒரு புதுநெறி வகுத்தன. சைன சமயத்தில் சிறப்பான நூல்கள் தோன்றிய போதிலும், வளர்ச்சியைக் காண முடியவில்லை.

இனி இக்காலத்திலிருந்த சமய நிலையைச் சில சொற்க ளால் குறிப்பிடலாம். முந்திய நூற்றாண்டில் தோன்றிய மெய்கண்டார், அவர் மாணுக்கருள் சிறந்தவரான அரு ணந்தி சிவாசாரியர் ஆகியோரால் சைவ ஞான பரம்பரை மிக விரிந்த அளவில் வளர்ந்து, நாடெங்கும் ஞானுசாரிய பீடங்கள் தோன்றலாயின. பல துறைச் சைவ ஞான சாத்திர நூல்கள் வளம்பெறலாயின. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த உமாபதியார் தொடங்கி, புதிய ஞான மரபுகள் எழலாயின. சிற்றம்பல நாடிகள் வாயி லாக ஞானுசாரியர் பல பிரிவுகளாய் பிரிந்தார்கள். சீகாழிக் கண்ணுடைய வள்ளல் ஆதீனம் இக்காலத்தே தோன்றியது. திருவாவடுதுறை ஆதீனம், காஞ்சி ஞானப் பிரகாசர் ஆதீனம் என்பனவும், தருமபுரம் ஆதீனமும், துழாவூர் மடமும், செப்பறை மடமும் பின்னர்த் தோன்றுவதற்குக் காரணமாயிருந்த பெரியோர் இக்காலத்தே தோன்றி னார்கள்.

அன்றியும், 15ஆம் நூற்றாண்டின் மத்தியில் கஞ்ச னூரில் சுதர்சனர் என்ற திரு நாமத்தோடு பிறந்த வைணவக் குழந்தை, வளர்ந்து சிவபிரானே பரம்பொருள் எனத் துணிந்து, சிவபரத்துவத்தை அற்புதமான பல வழி

களில் நிலை நாட்டினுர்; ஹரனுக்காகத் தம்மைத் தத்தம் செய்து கொண்டமையால் ஹரதத்தர் என்று இவர் வழங்கப் பெற்ருர். சுருதி சூக்தி மாலை, சதுர் வேத தாற்பரிய சங்கிரகம், ஹரிஹர தாரதம்மியம், சுலோக பஞ்சகம் முதலான பல வடமொழி நூல்களை இவர் செய்தார். இவர் வரலாறும், நூல்களும், சைவ சமய வளர்ச்சிக்கு உதவின.

சமயத் துறையில் இக்காலத்தே எழுந்த இலக்கிய வளம் மிகப் பெரிது. உமாபதி சிவாசாரியர் தொடங்கி, அருள் நமச்சிவாயர், சிற்றம்பலநாடிகள், சம்பந்த முனிவர், தத்துவப் பிரகாசர், வள்ளல் மரபினர் முதலிய பலர் வாழ்ந்து நூல் செய்தார்கள். வைணவத்தில் வேதாந்த தேசிகர் உமாபதியாரோடு சம காலத்தவராய் விளங்கினுர்; பிள்ளை லோகாசாரியரும் அழகியமணவாளப் பெருமாள் நாயனுரும் இக்காலத் தொடக்கத்தில் வாழ்ந்து, வைணவ சமயத்துக்கு ஆதார ஞான சாத்திரம் செய்தார்கள்; பின்னர்த் தோன்றினுர் மணவாள மாமுனிகள்; இவர்களனைவரும், வைணவ சமய வானில் பெரு நட்சத்திரங்களாகப் பிரகாசித்தார்கள். இவர்கள் தமிழில் சிலவும் வடமொழியில் பலவுமாக நூல் செய்தார்கள். இவர்களுடைய மாணுக்கர் எத்தனையோ பேர். வேதாந்த மார்க்கத்தில் தத்துவராயர் இக்காலத்தே வாழ்ந்து கடற்பிரவாகம் போலக் கணக்கற்ற நூல்கள் செய்தார்; சிவஞான வள்ளலும் வேதாந்த சித்தாந்த சமரச நூல்கள் பல பாடினுர். சைனர் நூல்களும் பல. இன்று பிரசித்தமாய் வழங்குகிற பாடல்கள் பாடிய சித்தர் பலர் இக்காலத்தே வாழ்ந்தார்கள். சிவவாக்கியர் முதலான சித்தர் நூல்கள், பிற்காலப் பட்டினத்தார், பத்திரகிரியார் ஆகியோர் பாடல்கள் யாவும் இக்காலத்தே தோன்றிப் பாமர மக்களிடத்தே மிக்க பிரசார மெய்தின.

சமயத் தத்துவங்களைக் கூறும் நூல்களைச் சொல்லும் போது சைவம் வேதாந்தம் வைணவம் என்ற பிரிவுகளில், விளக்கம், சாரம், பிரகாசம், சித்தி என்பன போன்ற முடிவுகளைப் பெற்ற பெயருடைய சிறு நூல்கள் பல, போட்டி போட்டுக் கொண்டு தோன்றின. சைவத்திலும் வேதாந்தத்திலும் பல திருமுறைத் திரட்டுக்களும் சாத்திரத் திரட்டுக்களும் எழுந்தன. சைவ சித்தாந்த சாத்திரவுரைகள் எழுதப் பெற்றன. வடமொழியிலும் மணிப்பிரவாளத்திலும், கணக்கற்ற வைணவ வியாக்கியான நூல்களும் சில சைன நூல்களும் எழுந்தன.

புராணம் பாடினோரையும் இங்குக் குறிப்பிடலாம். கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியரும், உபதேச காண்டம் பாடிய அவர் மாணாக்கரான ஞானவரோதயரும் கோனேரியப்ப நாவலரும், திருவாதவூரர் புராணம் பாடிய கடவுள் மாமுனிவரும், இக்காலத்தே விளங்கினார்கள். சைன சமயத்தில் வாமன முனிவர் வாழ்ந்து மேரு மந்தர புராணம் பாடினார்; சைன புராணமாகிய ஸ்ரீ புராணம் என்ற மணிப்பிரவாள வசன புராணம் தோன்றிற்று. மிகச் சிறந்த முருக பக்தரான அருணகிரிநாதர் தோன்றிச் சந்தக்கவி மழை பொழிந்து, தமிழ் மக்கள் அனைவரையும் தம் திருப்புகழினால், முருக பக்தியில் திளைக்கும்படி செய்தார். தேவார திருவாசகங்கள் - ஆழ்வார் பிரபந்தங்களுக்குச் சமமாவதில், பின்தோன்றிய எந்தப் பக்திப் பாசுரமும், திருப்புகழுக்கு இணையாகாது.

நன்கு ஆராய்ந்து சொல்வதானால், இத்தகைய சமய காவிய வளம் பிற்காலத்தில் என்றுமே தோன்றியதில்லை என்று உறுதியாய்க் கூறலாம்.

## 4. வடநாட்டுச் சமயநிலை

இவ்விரு நூற்றுண்டுகளில் வடநாட்டில் சமயத் துறையில் மிகச் சிறந்த பக்தர்கள் தோன்றித் தங்கள் மொழியில் சமயத்தையும் சமய இலக்கியத்தையும் வளர்த்தார்கள் என்பதையும் நாம் இங்குக் குறிப்பிட வேண்டும். பன்னிரண்டாம் நூற்றுண்டில் கன்னட நாட்டில் பசவண்ணர் (1125—1165) தோன்றி வீர சைவ சமயத்தாபிதம் செய்து, மக்களை நல்வழிப் படுத்தியிருந்தார். மத்துவாசாரியர் (1238—1317) தோன்றித் துவைத மதத்தை நிறுவினுர்; மராத்தி நாட்டில் ஞானேசுவரர் (1271—1377) தோன்றிப் பக்திப் பிரவாகம் பெருக்கெடுக்கச் செய்தார்; அவர் கீதைக்கு ஞானேசுவரி என்ற பெருடைய சிறப்பான ஓர் விரிவுரை எழுதினுர். அதே நாட்டில் நாமதேவர் (1270—1350) தோன்றிப் பண்டரிபுரத்தில் விட்டல தேவர் புகழைப் பரப்பினுர். கன்னட தேசத்தில், வேதாந்த தேசிகரின் தோழராயிருந்த மாதவர் என்ற இயற்பெயருடைய வித்தியாரண்ணியர் மிகச் சிறப்பான அத்துவைத நூல்கள் பல செய்தார்; சிருங்கேரி மடத்தில் 12ஆம் பட்டம் சங்கராசாரியராகவும் இவர் விளங்கினுர்.

இக்காலப் பகுதியில் பெண்டிர் இருவர் மிகச் சிறந்த அடியவர்களாக விளங்கினுர்கள். மராத்தி நாட்டில் தோன்றிய சக்குபாய் (1400) மணமாகிக் கணவன் வீட்டில் பல துன்பங்கள் அனுபவித்து இறுதியில் பண்டரிபுரத்து எம்பெருமானுல் ஆட்கொள்ளப் பட்டாள். லல்லேசுவரி என்ற அம்மையார் (1400) காசுமீர நாட்டில் பிறந்து சைவ சமயத்தைப் பின்பற்றி ஒழுகிச் சிறந்த சிவானுபூதி பெற்றிருந்தார்; முகம்மதியர் குழப்பத்தினுல் காசுமீரத்தின் சைவப் பண்பாடு கெடாமல் இவர் பாதுகாத்தார். இவரும், மாமியார் கொடுமையினுல் துறவு பூண்டார். சிவபெருமானின் திருவிளையாடலை எளிய சொற்களால் பாடிச்

சிறந்த யோகியாக விளங்கினார்; இவர் பாடல்களை அந்நாட்டில் பாமர மக்களும் விரும்பிப் பயின்றார்கள். வடநாடு முழுமையிலும் வைணவத்துக்கே அதிகப் பிரசாரமிருக்க, இவர் ஒருவரே சைவபரமாக நூல் செய்தது இங்கு உணரத் தக்கது.

இராமானந்தர் என்ற வைணவ ஆசிரியர் (1400) பிரயாகையில் பிறந்தவர். வைணவ சமயத்தைப் பெரிதும் இவர் பரப்பினார். இவரிடம் கபீர்தாசர் முதலான பன்னிரு சீடர்கள் இருந்தனர். காசியிலிருந்த இராகவானந்தர் என்ற வைணவ ஆசிரியரிடம் இவர் உபதேசம் பெற்றார்.

14ஆம் நூற்றாண்டில் தோன்றிய வங்கக்கவி சண்டி தாஸ். இவர் வைணவத் தோத்திரம் பல பாடியவர். இவர் செய்த பதாவளி வங்க இலக்கியக் கருவூலம் என்பர். இவர் பாடல்களில் சைதன்னியருக்கு உயிராம்.

மீராபாயின் சரித்திரம் (1403—70) அனைவரும் அறிந்தது. இவருடைய வாழ்க்கை தமிழ் நாட்டில் மங்கையர்க்கரசியாரின் வாழ்க்கையையும், இவருடைய பாடல்கள் ஆண்டாளின் பாடலையும் ஒருவாறு ஒத்தவை. மீராபாய், சித்தூர் அரச குமாரனை மணந்து, சமய வேற்றுமை காரணமாக, கணவன் இல்லத்தில் பெரும் துன்பத்திற்கு உள்ளானாள். எந்நேரமும் கிரிதர கோபாலனையே பூசித்துக் கொண்டு, இந்தி மொழியில் இனிமையான, பொருள் செறிந்த, மக்கள் மனத்தை உருக்கவல்ல பாடல்கள் பல பாடிக் கோபாலன் திருவடியை அடைந்தாள்.[1]

குஜராத்தி மொழியில் நரசிம்ம மேதா (1419—81) என்ற பக்தர் தோன்றித் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கிடையே கிருஷ்ண பஜனை செய்து கண்ணனுடைய

[1] சில பாடல்களை மிக்க நயமாக தேசிக விநாயகம் பிள்ளை தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார்.

புகழைப் பரப்பினர். இவர் பாடிய "வைஷ்ணவ ஜனதோ" என்ற குஜராத்திப் பாடல் மகாத்மா காந்திக்கு மிகவும் விருப்பமான பிரார்த்தனைப் பாடல். சிறந்த சமரச ஞானியான கபீர்தாசர் (1440—1548) காசியில் பிறந்து இராமானந்தரைக் குருவாக அடைந்து, அரியும் அல்லாவும் ஒன்றென்ற சமரசஞானம் கைவந்தவராய், பக்திச் சுவையும் ஞான ஒளியும் கொண்ட பாடல்கள் பல பாடினர். (இவர் பாடல்களில் 100 பொறுக்கி எடுத்து, வங்கக் கவிஞரான ரவீந்திரநாததாகூர், இருபதாம் நூற்றுண்டில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறர்.) சீக்கிய மதத்தாபகரான குருநானக்(1469--1538) கபீர்தாசரின் சீடர் என்பர். இதே காலத்தின் இறுதியில் ஆந்திரப் பிராமணக் குடும்பத்தில் வல்லபாசாரியர் (1473—1531) தோன்றி, காசியில், கல்வி கற்று, விசயநகர அரசவையில் பெரும் சிறப்புப் பெற்றுப் பல சீடர்களுக்கு உபதேசம் செய்து, காசியிலும் பிரயாகையிலும் வாழ்ந்திருந்தார்; வேதம், பகவத் கீதை, பிரம சூத்திரம், பாகவதம் ஆகிய நான்கு பிரஸ்தானங்களை இவர் பிரமாணமாகக் கொண்டார்; இருவரும் வேதாந்தப் பிரசாரம் செய்தவர்; இவர் வாதம் மாயாவாதமன்று, சுத்தாத்துவிதம் என்பர்.

இவருடைய மாணுக்கர்களில் மிகவும் சிறப்பானவர் சூர்தாசர்; இரட்டையருள் ஒருவரும், அந்தகக்கவி வீரராகவரும் போல, இவர் குருடர். வல்லபருக்குப் பின் அவருடைய பக்தி மார்க்கத்தைப் பாடல்கள் மூலம் இவர் வளர்த்தார்; காலம் 15ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி. கிருஷ்ண லீலைகளை வருணிப்பதே இவர் பாடல்களின் இயல்பு. இவர் பாடியவற்றுள் சுமார் ஐயாயிரம் பதங்கள் இன்று கிடைக்கின்றன என்பர். பாடல்கள் மிகவும் உருக்கமானவை, அந்நாட்டு மக்களிடையே பிரபலமாக வழங்கி வருபவை. 15ஆம் நூற்றுண்டின் இறுதியிலேயே வங்காளத்தின்

சிறந்த ஞானசாரியரான கிருஷ்ண சைதன்ய மகாப் பிரபுவும் தோன்றினர். இவர் காலம் 1486—1536.

[பிரசித்தமான பக்தர்களான புரந்தரதாசர் (கன்னடம்), ஏகநாதர், துகாராம், ராமதாசர் (மராத்தி), துளசிதாசர் (இந்தி) முதலியோர் பிற்காலத்தில் தோன்றியவர்கள்.]

இந்த இரு நூற்றாண்டுகளில் இவ்வாறு சமயத்தைப் பரப்பியவர்களும் இலக்கியத்தை வளர்த்தவர்களும் எத்தனையோ அடியவர்கள். எனினும், பொதுவாக இவர்கள் அனைவரும் வைணவ சமயத்தைப் பின்பற்றியவர்கள். காசுமீரத்தில் லல்லேசுவரி அம்மையார் மட்டுமே சைவ சமயத்தினர். இச்செய்திகளை அறிந்தால் தமிழ்நாட்டில் மட்டுமன்றி இந்திய நாட்டின் பிறமொழிகளிலும் இவ்விரு நூற்றாண்டுகளில் சமய மறுமலர்ச்சி எவ்வளவு சிறப்பாக ஏற்பட்டிருந்தது என்பதை நாம் நன்கு உணரலாம்.

## 5. வடமொழித் தொடர்பு

வடமொழித் தொடர்பு தமிழில் ஏற்பட்டது, பொதுவாக, சமயத்துறையில்தான். இதன் விளக்கத்தை இரு பிரிவாகக் குறிப்பிடலாம். முழுமையும் வடமொழியிலேயே நூல் செய்தவர்கள் ; வடமொழியும் தென்மொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் நூல் செய்தவர்கள். இவர்களுள் 14-15 நூற்றாண்டுகளிலும் இதற்கு முன்னும் இராமானுசர் தொடங்கி நூல் செய்த வைணவ ஆசாரியர் பலர். இவர்களுள் மகா மேதாவிகளாக அனேகர் இருந்திருக்கிறார்கள். அவர்களில் இக்காலப் பகுதிக்குரியோரை உரிய அத்தியாயத்தில் விளங்கக் கண்போம். சைனர் சிலரும் நூல்செய்தார் உளர்.

இனி சைவபரமாக வடமொழியில் நூல் செய்தோர் சிவாசாரிய பரம்பரையினர். இராசராச சோழனுடைய குரு (11ஆம் நூற்றாண்டு) ஒரு சிவாசாரியர். சைவநூல் மரபில் சிவாசாரிய பரம்பரை, அருணந்தி சிவாசாரியரோடு தொடங்குகிறது. நாம் கருதும் நூற்றாண்டுக்குரியோர் ஏறக்குறைய இருபத்தைந்து நூலாசிரியர் இருக்கிறார்கள். இத் தமிழ் இலக்கிய வரலாற்றில் அவ் வடமொழி ஆசிரியர் வரலாற்றை விரித்துரைப்பது அவசியமில்லை. எனினும் சிலர் பெயரையும் அவர்கள் செய்த நூல்களையும் மட்டும் குறிப்பிடலாம். உமாபதியார் ஒருவரே வடமொழியிலும் தமிழிலும் நூல் செய்தார். ஆமர்த்தக மடத்து வியாபக சம்பு மரபில் வந்த திரிலோசன சம்பு சித்தாந்த சாராவளி என்ற சிறப்பான சைவசித்தாந்த சாத்திரம் (உரைகாரர் அனந்தசிவம்) செய்தார். சோம சம்பு சிறப்பான பத்ததி செய்தார். ஞானசம்பு, ஞானரத்னவளி சிவபூஜாஸ்தவம் என்ற நூல்கள் செய்தார். உக்கிர ஜோதியின் புதல்வரான சத்யோ ஜோதி உரையிட்ட ஆகமங்கள், எழுதிய நூல்கள், மிகப்பல. சித்தாந்த அஷ்டப் பிரகரணங்களுள் ஐந்து இவர் செய்தவை. சங்கர கண்டர், அவர் புதல்வர் வித்யா கண்டர், அவர் புதல்வர் நாராயண கண்டர், அவர்புதல்வர் பட்டராம கண்டர், அவர் புதல்வர் ஸ்ரீ கண்டர் ஆகியோர் மிக்க சிறப்போடு விளங்கி நூல் செய்தவர்கள். இராம கண்டர் அனேக நூல்களுக்கு உரையும் பல புது நூல்களும் செய்தார். உத்துங்க சிவம், அவர் மாணுக்கரான போசராச தேவர் ஆகியோரும் சிறப்புடன் விளங்கி நூல் செய்த வர்கள். போச தேவருடைய தத்துவப் பிரகாசிகை என்ற நூல் வேதாந்த தேசிகரின் உடன் காலத்தவரான வித்தி யாரண்ணியரால் பாராட்டப் பட்டுள்ளது. இவர்கள் அனை வரும் 14ஆம் நூற்றாண்டினர்.

இனி 15ஆம் நூற்றாண்டில் நூல்கள் செய்தோர் சூரிய பட்டர் (சைவசித்தாந்த பரிபாஷை), சர்வாத்ம சம்பு

(சித்தாந்தப் பிரகாசிகை), இவர் மாணாக்கரான அகோர சிவம் (பத்ததிகளும் மிகப் பல வியாக்கியானங்களும் செய்தவர்), ஸ்ரீ கண்டர் (ராமகண்டரின் புதல்வரும் மாணாக்கருமானவர், இரத்தினத்திரயம் செய்தவர்), சூரியனார் கோயில் சிவாக்கிர யோகிகளின் பூர்வாசாரியர்களுள் ஒருவராய், சிவஞானபோத வடமொழி வியாக்கியானம் எழுதிய சதா சிவாசாரியர் போன்றோர்.

இவர்களால் வடமொழி மூலமாக ஏற்பட்ட சைவ சித்தாந்தக் கருத்து வளர்ச்சி மிகவும் பெரிது. இவர்கள் அனைவரும் வடமொழியில் நூல் செய்தார்களேயன்றி தமிழில் எந்த நூலும் செய்யவில்லை.

மணிப்பிரவாள நடையில் உரை செய்தாரும் நூல் எழுதினோரும் ஆகிய வைணவ ஆசாரியர் மிகப்பலர். இவர்கள் இக்காலத்துக்கு முந்திய நூற்றாண்டுகளிலிருந்தே மணிப்பிரவாள நூல்கள் எழுதி வந்திருக்கிறார்கள். சைவ சமயத்தில் யாரும் மணிப்பிரவாள நூல் எழுதவில்லை. ஏற்பட்ட ஒரே நூல் அடுத்த நூற்றாண்டில் (16) சிவாக்கிரயோகி எழுதிய சிவஞான சித்தியார் உரையாகும்.

## 6. இலக்கிய நிலை

இனி இலக்கியத் துறையில் இக்கால நிலையைச் சிறிது கூறலாம். இவ்விரு நூற்றாண்டுகளிலும், இலக்கிய வானில் பேரொளியாகப் பிரகாசிப்போர் வில்லிப் புத்தூரரும், அருணகிரி நாதரும். பிற்காலத்தில் பெருங்காப்பியம் இல்லாத குறையை ஒருவாறு மாற்றுவது வில்லிபாரதம்; கந்தபுராணம் திருவாதவூரர் புராணம் என்ற இரண்டும் முன்னமே குறிப்பிட்டோம். இவற்றுள் கந்தபுராணம், புராணம் என்ற குறுகிய வரையறையைக் கடந்து, பெருங் காப்பியம் என்றே தமிழ் மக்கள் பயில்கின்ற சிறப்பான

நூல். திருவாதவூரர் புராணத்தை இன்றும்கூட யாழ்ப் பாணத்துத் தமிழ் மக்கள் ஒரு தமிழ் வேதமென்றே கருதிப் பயில்கிறார்கள் என்பதும் இங்கு அறியத்தக்கது. இப்புல வர்கள் அன்றி, இக்காலத்து வாழ்ந்த இரட்டைப் புலவரும் காளமேகப் புலவரும் தங்கள் நூல்கள் ஒருபுறமிக்க, தங்கள் தனிப் பாடல்களால் மக்கள் மனத்தைப் பெரிதும் கவர்ந்தவர்கள் ; இன்றுவரை கவர்ந்தும் வருகிறார்கள்.

இலக்கணங்கள், பிரபந்தங்கள், திரட்டு நூல்கள், உரைகள் என்ற பலவேறு பிரிவுகளில் இக்காலத்துத் தோன்றிய நூல்களும் மிகப் பல. கோயில்களில் அரசர்கள் பொறித்த கல்வெட்டுக்களில் பாடல் பாடிய சாசனப் புலவரும் பலர் வாழ்ந்தனர்.

இலக்கண நூல்கள் என்ற பிரிவில் நவநீதப் பாட்டியல் வரையறுத்த பாட்டியல் என இருபாட்டியல் இலக்கணங் களும், உரிச்சொல் நிகண்டு, கயாதர நிகண்டு என இரு நிகண்டுநூல்களும் குறிப்பிடத் தக்கவை. முழுமையும் கிடைக்காத களவியற்காரிகை என்ற அகப்பொருள் இலக் கண நூலும் அதன் உரையும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன.

பிரபந்தம் என்ற பிரிவில், இரட்டையரும் காளமேக மும் எல்லோர் நினைவிலும் எழுவார்கள். தொல்காப்பியத் தேவர் செய்த கலம்பகம், மதுரைக் கோவை, கப்பற் கோவை, திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், சைவ வைணவப் பிரபந்தங்கள், வேதாந்தப் பிரபந்தங்கள், சைனப் பிரபந் தங்களான திருநூற்றந்தாதி, திருக்கலம்பகம் என்பனவும் இங்குக் குறிப்பிடுவதற்குரியவை. பிரபந்தத்துறையில் வேதாந்தியான தத்துவராயர் செய்த பிரபந்தங்கள் அளப்பில.

பல நூல்களைச் சுருக்கித் தொகுத்து வைக்கும் முயற்சி இக்காலத்தில் பல பிரிவுகளிலும் நடந்திருக்கிறது.

உமாபதியார் திரட்டிய திருமுறைத் திரட்டு, சிவாலய முனிவருடைய அகத்தியர் தேவாரத் திரட்டு என்பன தோத்திர ரூபமானவை. புறத்திரட்டும், சீவக சிந்தாமணிச் சுருக்கமும், உதயண குமார காவியம் என்ற சிறு நூலும் தனி இலக்கியத் துறையில் ஏற்பட்டவை. பிந்தியது பெருங் காவியமாகிய பெருங்கதையின் சுருக்கமாகும். தத்துவராய ருடைய திரட்டுக்கள் வேதாந்த சமய மரபானவை.

தொல்காப்பிய உரைகாரர்களான கல்லாடரும் தெய் வச் சிலையாரும் இக்காலத்தே இருந்தவர்கள்; சொல்லதி காரத்தின் பழைய உரைகாரர் காலமும் இதுவே. உச்சி மேற் புலவர் கொள் நச்சினார்க்கினியரும் இக்காலத்தே தம் உரைகள் செய்தார். சைனர்கள் நன்னூல் உரையும் நேமி நாத உரையும் நீலகேசியுரையும், சைவர்கள் இருபா இருப துரையும் சிவப்பிரகாச உரைகளும் இக்காலத்தில் எழு தினார்கள். வைணவ மணிப்பிரவாள நடையில் உரை நூல் களும் மிகப்பல.

ஸ்ரீ புராணம் என்ற மணிப்பிரவாள உரைநடை நூல் சைன தீர்த்தங்கரர் சரித்திரங் கூறுவது; இக்கால உரை நடை நூல்களுள் மிகவும் பெரியது, சிறப்பமைந்தது. உரை நடையாகவே அமைந்த பண்டைய பெரு நூல் இது ஒன்றே யாகும்.

பெண்பாற் புலவர்களுள் சிறப்பானவர் பிற்கால அவ் வையார்; இவர் ஒரு பெண்பாற் சித்தராவார். இக் காலத் தில் வாழ்ந்து ஞானக்குறளும் விநாயகரகவலும் பாடினார். வருண குலாதித்தன் மடல்பாடிய காளிமுத்தம்மையாரும், உதயண குமார காவியம் பாடிய கந்தியாரும் இக்காலத்து வாழ்ந்தார்கள்.

சாசன வாயிலாக அறிகின்ற அறிஞர் சிலர்; புலவரா யிருந்த அரசரும் சிலர்.

இக்காலத்தில் வாழ்ந்த ஆடம்பரப் புலவர்களான சம்பந்தாண்டான் அதிமதுர கவிராயர் என்ற இருவர் வரலாற்றையும் ஒரு சிறிது அறிகிறோம்.

பொதுவாகத் தமிழில் உரைநடையில் நூல் எழுதுவது என்பது வழக்கத்துக்கு வந்தது, ஐரோப்பியர் தொடர்பு ஏற்பட்ட பின், 19 ஆம் நூற்றாண்டில் தான் என்பது அறிஞர் கருத்து. எனினும், முற்காலத்திலும் உரைநடை நூல்கள் சில அபூர்வமாக வழக்கத்தில் இருந்தன. 14ஆம் நூற்றாண்டின் உரைநடைக்கு எடுத்துக்காட்டாக, சிற்றம்பல நாடி கட்டளையும், தத்துவப் பிரகாசர், செய்த துகளறு போதக் கட்டளையும், 15 ஆம் நூற்றாண்டில் சிவஞான வள்ளல் செய்த சில சிறு வசன நூல்களும் உதவுகின்றன. உரைநடை வரலாற்று ஆராய்ச்சியில் இவற்றுக்கும் இடமுண்டு. முற்கூறிய இலக்கண இலக்கிய உரைப்பகுதிகளும் இவ்வாறு கருதத் தக்கவை.

இலக்கியத் துறையினின்றும் சற்று விலகிப் பார்த்தால், பல துறை நூல்கள் இக்காலத்தில் தோன்றியிருக்கக் கூடுமென்று நாம் காண்கிறோம். சித்தராரூடம் என்ற விஷ நூலை நச்சினார்க்கினியர் சிந்தாமணி யுரையுள் குறிப்பிடுகிறார்; இதையொத்தன பல. இக் காலத்திற்குரிய நூலென்று கணக்கதிகாரம் என்ற கணித நூலைக் குறிப்பிட்டிருக்கிறோம். இதன் உரையால், மிகப் பலவான கணித நூல்கள் முன்னமே இருந்தன என்றும் அறிகிறோம். சிறந்த புலவரான தேரையர் வைத்திய நூல்கள் இக் காலத்தன என்பது ஆன்றோர் கருத்து.

இங்ஙனம் இவ்விரு நூற்றாண்டுக் காலத்தை ஒரு தொகுப்பாக நாம் பார்க்கும் போது, சமய நூல்களின் பெருக்கத்தையே சிறப்பாகக் காண்கிறோம். வேறு எல்லா வகை இலக்கியத் துறையிலும் நூல்கள் எழுந்துள்ளன.

அரசியல் நிலைமை மிகவும் சீர் கெட்டிருந்த போதிலும் மொழித்துறையில் எவ்விதக் குறையுமின்றி, ஆங்காங்கு, பெரும்புலவர்களும் சாமானியக் கவிஞரும் வாழ்ந்து நூல் செய்தார்கள் என்பது நன்கு புலப்படுகின்றது.

## அத்தியாயம் 1

# இலக்கிய ஆசிரியர்

இந்த நூற்றுண்டின் பொதுவான இலக்கிய நிலை, முன்னுரையின் இறுதிப் பகுதியில் ஒருவாறு விளக்கப்பட்டது. பேரிலக்கியம் என்ற அளவில் இக்கால எல்லையில் எழுந்த நூல் வில்லிபுத்தூரர் பாடிய பாரதமாகும். பெருங்காப்பியம் பாடத்தக்க புலமை பெற்றிருந்த இவ் வாசிரியர் ஒரு வகையில் வடநூற் சரிதையைத் தமிழில் பாடியதோடு நின்று விட்டார். வேறு எந்த நூலும் இவர் பாடியதாகத் தெரியவில்லை. இவருக்கு முன் வடமொழி மகாபாரதத்தைத் தமிழில் பெயர்க்கும் முயற்சியைப் பலர் மேற் கொண்டிருந்தனர் என்பதை இலக்கிய வாயிலாகவும் கல்வெட்டுக்களின் வாயிலாகவும் இன்று அறிகிறோம். அம் முயற்சிகளுள் ஒன்றுகிய பாரத வெண்பாவில் சில பகுதிகள் கிடைக்கின்றனவேயன்றி, முழு நூலும் கிடைக்கவில்லை. ஏனைய நூல்களைக் குறித்து யாதும் தெரிந்திலது. இந்த நிலையில், வில்லிபுத்தூரர் பாரதம் மட்டும் முழுமையும் இன்று அனைவராலும் பயிலப்படுவது, அவருக்கும் நூலுக்கும் உரிய சிறப்பாகும்.

பெருங்காப்பியமென்று கற்றோர் அனைவரும் போற்றும் கந்த புராணம் இக்காலப் பகுதியில் தோன்றியதென்று யாம் கருதுகிறோம். இந்நூலை, அடுத்த தனி அத்தியாயத்தில் ஆராய்வோம்.

காப்பியப் புலவராயில்லாவிடினும், இக்காலத்து வாழ்ந்த பெரும்புலவர், இரட்டையர் என்போர். இவர்கள் பிரபந்தங்கள் மட்டுமே செய்திருப்பினும், தங்கள் தனிப்

பாடல்களால் தமிழ் மக்கள் - கற்றூர், கல்லாதவர் - அனைவர் உள்ளத்தையும் கொள்ளை கொண்டவர்கள்.

இவ்வத்தியாயத்துள், வில்லிபுத்தூரர் இரட்டையர் ஆகிய இலக்கிய ஆசிரியர்கள் வரலாற்றை மட்டும் விளங்கக் காண்போம். வில்லிபுத்தூரர் வரலாற்றில் அருணகிரிநாதர் வரலாறும், இரட்டையர் வரலாற்றில் காளமேகப் புலவர் வரலாறும் கலந்து பின்னியிருக்கக் காண்போம். எனினும், முந்தியவரின் முதுமையையும் பிந்தியவரின் இளமையையும், பிறசரித்திரச் சான்றுகளையும் கருதி, அருணகிரிநாதர், காளமேகம் ஆகியோர் வரலாறுகளை அடுத்ததாகிய 15 ஆம் நூற்றுண்டின் இலக்கிய வரலாற்றில் விளங்கக் கூறியிருக்கிறோம்.

## வில்லிபுத்தூரர்

### வரலாறு

தமிழில் வழங்கும் மகாபாரதம் பாடியவர் வில்லி புத்தூரர் என்ற பெரும் புலவர். வில்லிபுத்தூரர் தென் பெண்ணை பாய்கிற திருமுனைப்பாடி என மறுபெயர் பூண்ட நடு நாட்டில் சனியூரில் பிறந்தார். இவ்வூர் கோவல், வெண்ணெய் நல்லூர், அண்ணுமலை முதலிய தலங்களைச் சார்ந்துள்ளது. இவருடைய இயற்பெயரும் விளங்க வில்லை, வில்லிபுத்தூரர் என்ற பெயர் வந்த காரணமும் தெளிவாய்த் தெரியவில்லை. இவர் தந்தை வீரராகவாசாரி யர் என்ற வைணவ அந்தணர். இளமையில் இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களையும் வடமொழி நூல்களையும் சமய நூல்களையும் நன்கு கற்று, நால்வகைக் கவிகளும் பாடுவதில் வல்லவராகி விளங்கினர்.

இந்த வரலாறுகளை இவர் புதல்வர் வரந்தருவார் இவருடைய பாரதத்துக்கு எழுதிய சிறப்புப் பாயிரப் பாடல்களால் அறிகிறோம்:

அகத்தியன் பயந்த செஞ்சொல் ஆரணங் கம்புயாதன்
முகத்தினில் வாழும் அந்த மொய்குழல் அருளி ஞலே
பகைத்தெதிர் பொருத தெய்வப் பாரதக் கதைஇம் முந்நீர்ச்
செகத்தினில் விருத்த யாப்பால் செய்கெனச் செய்ததன்றே.

பண்ணை சூழ்ந்திலகுந் திருமுனைப் பாடிப்
பழைய நாடனைத்தையும் ஒருதன்
பெண்ணையே கொண்டுபோக முய்த்திடுமால்.

எண்ணுமா கடலேழு மன்று இருகடலாகப்
பெண்ணை மாநதி நறுநெய்பால் பெருகுமப்பழனப்
பண்ணை நீள்வளம் பல்குசீர்ப்பழைய நன்னாட்டில்
வண்ண நான்கினும் உயர்ந்துளோன் ஒருமுனிவந்தான்.

ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கதிபதியாய்
வந்து வட்டமா மணியினன் மணிமுடி புனைந்து
பைந்துழாய் முடிப் பரமனைப் பல கவித்துறையும்
சிந்தையான் மொழிந் தன்பர்தந் திருவுளம் பெற்றேன்.

தாரகாயண வண்டலை தண்டலைச் சனியூர்
வீரராகவனருள் பெறு வில்லி புத்தூரன்
ஊரராமுடிமண்மிசை உயர்புகழ் நிறுத்தித்
தீரகாகளம் பெறுதலின் யாரினுஞ் சிறந்தோன்.

*திருமுனைப்பாடி நாட்டில் வக்க பாகையில் அரசாண்டிருந்த தலைவனாகிய கொங்கர்கோன் வரபதி ஆட்கொண்டான் என்பவன், இவருடைய பெருமைகளை நன்குணர்ந்து இவருக்குப் பெரும் சிறப்புச்செய்து உபசரித்து, பாரதத்தைத் தமிழில் பாடித் தரும்படி வேண்டினன். அவ்வாறே இவரும் பாடினர். இதை வரந்தருவார் விரிவாகக் குறிப்பிடுகிறார்:*

கொங்கர் குல வரபதி யாட் கொண்டானென்
றொரு வண்மைக் குரிசில் தோன்றி
வெங்கலியின் மூழ்காமல் கருநடப்பேர்
வெள்ளத்து வீழாமல் நான்காம்
சங்கமென முச்சங்கத் தண்டமிழ் நூல்
கலங்காமல் தலை கண்டானே.

*கம்ப ராமாயணத்துள் சடையப்ப வள்ளலைக் கம்பர் போற்றியது போலவே, இவரும் தம் நூலில் சில இடங்களில் இவ்வாட்கொண்டானைக் குறிப்பிட்டுப் பாடி இருக்கிருர் :*

பெண்ணைவளம் சுரக்கும் நாடன் ;
மாகதக் கொங்கர் கோமான் ;
பாகை ஆட்கொண்டான் செங்கைப்
    பரிசு பெற்றவர் நெஞ்சு என்ன ;
கொடிமதிற் பாகை வேந்தன்
    கொங்கர்கோன் புரவிக்காலால்
வடதிசை யார்கள் தங்கள் மாமணி மகுடம்போல ;
கோவல் சூழ் பெண்ணை நாடன்
    கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான்
    பங்கயச் செய்கை என்ன.

சொன்மழை பொழிந்து நாள்தொறும் தனது
    தோள்வலி துதிக்கும் நாவலர்க்குப்
பொன்மழை பொழியும் கொங்கர் பூபதிதன்
    பொற்பதம் பொருந்தலர் போல.

*வடமொழி மகாபாரதம் 18 பருவங்களை உடையது. தமிழில் வில்லிபுத்தூரர் பாடியது 10 பருவங்கள் ; பாடல் தொகை பதிப்புக்கள் தோறும் வேறுபடுகிறது. சில 4330 பாடல் கொண்டவை. மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு 4339 ; கதிரை வேற்பிள்ளை பதிப்பு 4351. பெருங் காப்பியமாகிய இப்பாரத நூலில் இவர் நாட்டுப்படலம் நகரப் படலம் என்ற உறுப்புக்களைக் கூருமல், நேரே சரித்திரத்தைப் பாடிவருகிருர். பத்தாவது சௌப்திக பருவம் பதினெட்டாம் நாள் இரவில் நடந்த பாசறைப் போரோடு இவர் பாடிய பாரதம் முடிகிறது.*

*இவருக்குமுன் 9 ஆம் நூற்றுண்டில் பெருந்தேவஞர் பாடிய பாரத வெண்பா மிகவும் பிரசித்தமாயிருந்தது.*

அதுவன்றியும் வேறொரு பாரதம் இருந்ததாகவும் தெரி கிறது. ஆனால் அவை யாவும் இன்று பூர்த்தியாகக் கிடைக்கவில்லை.

அகத்தியப் பட்டரென்பவர் வடமொழியில் பால பாரதம் என்றொரு நூல் பாடினார்; அதுவே வில்லியின் நூலுக்கு முதல் நூல் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். எனினும், வியாச பாரதமே இவருக்கு மூலநூல் என்பது மரபு; பெருந்தேவனார் பாரதம் முதலிய தமிழ்ப் பாரதங் களும் உதவியுள்ளன.

பழம் பாடலொன்று வில்லிபுத்தூரர் ஆறாயிரம் பாடல் பாடினாரென்று கூறும்:

கலியுக வியாதன் சொல்லக் கணபதி யெழுது பாடல்
பொலிவுறு தமிழா லாறு யிரமென விருத்தம் போற்றிச்
சலிவறு வில்லிபுத்தூர் இறைவனும் சார்வ பௌமன்
ஒலிகெழு மறையோர் கோமான் உயர்ந்தவர் உவப்பச்
[சொன்னான்.

ஆனால் மிச்சமுள்ள 1649 பாடல்களும் கிடைத்த தில்லை. இக்கூற்றுக்கு வேறு ஆதரவும் கிடைக்கவில்லை. அன்றியும், இவற்றை வரந்தருவார் பாடி, தந்தை செய்த நூலைப் பூர்த்திசெய்தார் என்றும், இது வரந்தருவார் பாரதம் என்ற பெயருடையது என்றும், மற்றொரு வரலாறு கூறுவதுண்டு. ஆனால் இப்பகுதி எங்குமே கிடைக்க வில்லை.

பிற்காலத்தில் 18 ஆம் நூற்றாண்டில் அட்டாவதானம் அரங்கநாத கவிராயரென்பவர் 2477 செய்யுட்கள் பாடிச் சேர்த்து வில்லிபாரதக் கதையை முடித்திருக்கிறார். (இது 1902 இல் அச்சாயிற்று.) இதன் பாயிரப் பகுதியில் பின் வரும் செய்யுள் காணப்படுகிறது:

பைந்தமிழின் நலஞ்சிறந்த முனைப்பாடித் திருநாட்டிற்
 பாகை வேந்தன்
சுந்தரஞ் சேர் பாரதமாம் வடகலையைத் தென்கலையாற்
 சொல்க என்ன
சந்தனுவின் சரிதைமுதல் பதினெட்டாம் நாட்போரின்
 சரிதம் காறும்
புந்தி மகிழ் தரவில்லி புத்தூராழ் வான்முன்பு
 புகன்றிட் டானே.

*இக்கூற்று, இன்றுள்ள பாரத அளவுக்குப் பொருந்தவே உள்ளது.*

*அன்றியும், சென்ற நூற்றாண்டில் நல்லாப் பிள்ளை, முருகப்பிள்ளை என்ற இருவர், வில்லி பாடிய பாரதம் மிகவும் சுருக்கமாய் உள்ளதென்று எண்ணி, அவர் பாடிய பாடல்களை அப்படியே வைத்துக் கொண்டு, நாட்டுப் படலம், நகரப் படலம் என்ற பகுதிகளை அமைத்து, புதியனவாகப் பதினோராயிரம் பாடல்கள் பாடி, முதல், இடை, கடையில் சேர்த்து விரிவாக்கி யிருக்கிறார்கள்; நல்லாப் பிள்ளை பாரதம் என இது வழங்கும்.*

*வில்லிபுத்தூரர் பாரதம் பாட நேர்ந்தது பற்றியும் இவருடைய பிற்கால வாழ்க்கைபற்றியும் தமிழ் நாட்டில் கதைகள் பல வழங்குகின்றன. வில்லிபுத்தூரருக்கும் இவர் தம்பிக்கும் தாயபாகம்பற்றி வழக்குண்டாயிற்று. இருவரும் அரசனிடம் சிறப்புப்பெற்றிருந்த புலவர்கள். தம்பி அரசனிடம்போய் முறையிட்டார். அரசன் வில்லிபுத்தூரருடைய பெரும்புலமையை நன் குணர்ந்து இவரைப் போற்றி வருபவன். ஆகையால் இவரை அதிகம் கண்டிக்க முடியாமல் இருந்தான். இவருக்கு இத்துணைக் கல்விப்பெருமை இருந்தும் கூட நீதி அறிவு இல்லையே என அவன் கவலை கொண்டு, இவருக்கு நீதி புகட்டும் நோக்கத்தோடு இருவரையும் அழைத்து, "நீங்கள் இருவரும் மகாபாரதத்தைத்*

தமிழில் பாடித் தந்தால் உங்கள் வழக்கை நான் தீர்த்து வைக்கிறேன்" என்று சொன்னான். அவ்வாறே, இராமா யணத்தைக் கம்பர் பாடியதுபோல, வில்லியும் பாரதம் பாடத் தொடங்கினார். இப் பெருங்காப்பியம் பாடிமுடிக் கும் நிலையில் இவருக்கு, "தாயபாகச் சண்டையினாலன்றோ பாரதப் போர் தோன்றி இவ்வளவு அழிவு உண்டா யிற்று?" என்ற நல்லுணர்வு பிறந்து, தம்பியை அழைத்து அவருக்குரிய பாகத்தைக் கொடுத்துவிட்டார். முற் பகு தியை இவர் பாட பிற் பகுதியை இவர் தம்பி பாடி, இரு வருமாகப் பதினெட்டுப் பருவமும் பாடி முடித்தார்கள் என்பதும் பிறிதொரு வரலாறு.

புலவர் புராணமுடையார் வேறுவிதமாக இக்கதை யைச் சொல்லுவார். ஆண்டான் பிள்ளை என்ற பெய ருடைய இவ்வரசன் தமிழிலே பாரதம் வேண்டும் என்று ஆவல் கொண்டு, அது பாடத் தக்கார் வில்லிபுத்தூரரே என்று கண்டான். ஆனால் திருமால் அடியவரான இவர் தனக்கு இணங்கிப் பாரதம் பாடுவது அருமை என்றும் எண்ணினான். இதற்கிடையில் குடும்பத்தில் மிக்க ஒற்றுமை யோடு வாழ்ந்த வில்லியும் அவர் தம்பியும் பாண்டியனைப் பார்க்கும் பொருட்டு மதுரை சென்றிருந்தார்கள். அச் சமயம் அரசன் ஒரு பார்ப்பனக் கிழவியை அழைத்து வில்லி இல்லம் ஏகி இருவர் மனைவியர் நட்புறவை முறிக்கும்படி கட்டளையிட்டு நிரம்பப் பொன்கொடுத்து அனுப்பினான். அவளும் அவ்வாறேசெய்து திரும்பினாள். மதுரையிலிருந்து சகோதரர் இருவரும் இல்லம் திரும்பியதும் பெண் டிருக்குள் ஏற்பட்டிருந்த பூசலைப் புறக்கணிக்க முடிய வில்லை. பூசல்முற்றித் தாயபாக வழக்காக வளர்ந்து அரச னிடம் சென்றது. அரசன் தன் நோக்கம் நிறைவேறுவ தற்கு இத்தருணத்தை எதிர்பார்த்திருந்தவனாதலால் இரு வரையும் பாரதம் பாடிமுடித்தால் வழக்கை முடிப்பதாகச் சொன்னான். வில்லியும் பாரதக்கதை மானிடர் கதையே

ஆயினும், இடையில் கண்ணன் சரிதம் வருவதால் பாடத் துணிந்து அவ்வாறே பாடிமுடித்தார்.

முன்னு மாமறை முனிவரும் தேவரும் பிறரும்
பன்னு மாமொழி பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்
என்னும் ஆசையால் யானும் ஈதியம்புதற்கிசைந்தேன்.

இவ்வாறு வில்லிபுத்தூரர் பாடியபோது தம் புலமை மிகுதியால் நூலில் சந்தப் பாக்களை நிரம்பப் பெய்து பாடினர். இந்த நினைவினுலே இவர் சிறப்பாகப் பாரதம் பாடியதற்குக் கைம்மாருக அரசன் தம்மிடம் நன்றி பாராட்டிப் பரிசில் தர முற்பட்டபோது, "என்னிடம் சந்தப் பாடல் பாடுவதில் போட்டியிட்டுத் தோற்பவர் காதை அடியோடு அறுக்கும் அதிகாரமும், அதற்கு அடையாளமாக ஒரு வாளும்வேண்டும்" என்று இவர் கேட்டுப் பெற்றுக்கொண்டார்.

பின்னர் இவர் தம் விருதுகளோடு கூடத் தமிழ்நாடு முழுமையும் சுற்றி ஆங்காங்குப் புலவர் என்று சொல்லிக் கொண்டவர்களை எல்லாம் வென்று காதை அறுத்து வந்தார் என்பது கதை. இதுவே பின்னர் 'குடும்பி அளவாக் காதைக் குடைந்து தோண்டி, எட்டினமட்டு அறுப்பதற்கோ வில்லியில்லை' என்ற சொல் எழவும் காரணமாயிற்று.

ஒரு சமயம் அனந்தன் என்ற புலவன் இவரோடு போட்டியிட்டுத் தோற்றுன். வழக்கம்போல் இவர் அவன் காதை அறுக்க முற்பட்டார். அப்போது அப்புலவன் மிக்க சாதுரியமாக "பெரியாரே, அனந்தனுக்கு (அனந்தன்—ஆதிசேடன், பாம்பு) காதில்லை என்பது உமக்குத் தெரியாதா? நீர் காதையறுத்துவிட்டால் நான் உண்மையாகவே அனந்தனுகிவிடுவேன்" என்று பணிவோடு நயமாக விண்ணப்பித்துக் கொண்டான். நம் புலவர் செருக்குடையவராறைலும், புலவனுடைய சொல் சாதுரியத்தால் மனம் குழைந்து அவனை மட்டும் விட்டுவிட்டார்.

ஆயினும், இவர் வழக்கமாய்த் தமக்குரிய செருக்கோடு பல இடங்களும் சுற்றித் திருவண்ணமலை வந்தார். அங்கு அவர் ஓர் இல்லத்தில் தங்கி யிருந்தபோது வீதி வழியே அருணகிரிநாதர் மாணுக்கரான முருகனடியார் அவர் செய்த திருப்புகழ்ப் பாடல்களைப் பாடிப் பஜனை செய்துகொண்டு சென்றூர்கள். பார்த்த வில்லி, தம் புலமைச் செருக்கினல், "இக்குறத்திப் பாட்டை எங்குக் கற்றீர்கள் ?" என்று வினவினர். கேட்ட அடியார்கள் மிக்க மனம் நொந்தார்கள். ஆயினும் அவரிடம் "இப்பாடல்கள் அருணகிரிநாதர் என்ற முருகனடியார் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள்" என்று கூறினர்கள். இவரோ, "என்னிடம் அவரைச் சந்தப் பாடல் பாடும் போட்டியிட வரச் சொல்லுங்கள்" என்று அறைகூவி அழைத்தார். முருகனடியை மறவாத சிந்தையோடிருந்த அருணகிரிநாதர், வலிந்து வாதுக்குச் செல்ல விருப்பமில்லாது போயினும், அடியார் வேண்டுகோளுக்கிணங்கி அவ்வறைகூவலை ஏற்றுர். பின்னர் பொது அவையொன்று கூட்டி அதில் இருவரும் போட்டி செய்ய, அருணகிரிநாதர் வென்றுர், வில்லிபுத்தூரர் தோற்றுர் என்ற செய்தி அருணகிரிநாதர் சரித்திரத்தில் விளக்கமாய்ச் சொல்லப் பெற்றுள்ளது.

தோற்ற இவரை அருணகிரிநாதர் மன்னித்து, இவர் காதை அறுக்காமல் விட்டு, இவரிடமிருந்த தோட்டியை (வாளை) மட்டும் வாங்கிக்கொண்டார். இவரும் பின்னர் அவரோடு நட்புப்பூண்டு வாழ்ந்திருந்தார். அவர் முருகப் பெருமான்மீது பாடிய திருப்புகழ்போல, வில்லியார் தாமும் இராமகாதைத் திருப்புகழ் என ஒன்று பாடியதாகவும் உரைப்பர். அது இன்று இருப்பதாகத் தெரியவில்லை. இவர் செய்ததாக வழங்கும் நூல் பாரதம் ஒன்றே.

மற்றொரு வரலாறு வேறுவிதமாய்க் கூறும். அருணகிரிநாதரிடம் தோற்று இவர் தம் இடையிலிருந்த காதறுக்கும் குறட்டை எறிந்துவிட்டுப் போம் வழியில், திரு

அண்ணாமலைச் சிவாலயம் எதிர்ப்பட அது மறையும்படி தம்மைச் சுற்றித் தம் பரிவாரங்களால் திரையிடச் செய்தார். இச்சிவ நிந்தனைகேட்ட அருணகிரிநாதரின்சாபத்தால் கண்ணிழந்தார்; சிவபிரானைப் புகழ்ந்து ஒரு நூல் செய்யும்படி அவர்கூற, அதன் பின்னரே கண்ணன் புகழாகிய பாரதம் பாடி அதில் தம் மதாபிமானத்துக்குப் பங்கமில்லாது சிவபிரான் துதியும் விரவி வருமாறு பாடிக் கண் பெற்றார் என்று இவ்வரலாறு கூறுகிறது. இக் கதைகள் பிற்காலத்தன என்று தெரிவதால், இவற்றின் பொருத்த மின்மை இங்கு ஆராய வேண்டுவதில்லை.

## பாரதம்

இனி, இவர் பாடிய பாரதத்தைக் குறித்துச் சில சொற்கள் கூறலாம். இவர் காலம் வரையில் எந்தத் தமிழ்ப் பெரும் புலவரும் வட சொற்களை இவ்வளவு மிகுதியாகத் தமிழ்க் காப்பியத்தில் புகுத்தவில்லை, சந்தப் பாடல்களையும் இவ்வளவு மிகுதியாகப் பாடவில்லை. இவ்வியல்புகளும் இவர் காலந்தொடங்கியே வழக்கில் வந்தன. இரண்டிலும் அருணகிரிநாதர் இவரையும் விஞ்சிவிடுகிறார். வில்லிபுத்தூரர் வட சொற்களைத் தனி மொழியாகவும் தொடர் மொழியாகவும், மூலமே விளங்காதபடி திரித்தும், மொழி பெயர்த்து வைத்தும் பாடுகிறார். வடமொழியில் மிகவும் வல்லவரென்று சொல்லத் தேவையில்லை. வியாச பாரதத்துக்கும் இவர் நூலுக்கும் கதையமைதியில் வேறுபாடுண்டு.

இவரது சமயம் வைணவம் என்பது தெளிவு. நூல் தொடக்கத்திலும் சருக்கங்களின் தொடக்கத்திலும் இவர் அமைத்துள்ள திருமால் வணக்கப் பாடல்கள் இதை உணர்த்தும். இவர் திருமால் காப்புச்சாத்தும் வைணவர்.

ஓராறு பேத சமயங்களுக்கும்
உருவாகி நின்ற ஒருவன்
ஈராறு நாமம் உரை செய்து மண்கொடு
இடுவார்கள் காணும் இமையோர்.

என்பது காண்க (ஒன்பதாம் போர்ச்சருக்கம்). திரு மங்கை யாழ்வாரையும் நம்மாழ்வாரையும் போற்றுபவர்; "கலியனெங்கள் மங்கையாதி கண்டுகொண்ட நாமமே" (பத்தாம் போர்) "கொத்தவிழ்ந்த சோலை மன்னு குருகை யாதி நெஞ்சிலே-வைத்த முத்திநாதன்" (பதினேந்தாம் போர்).

இவர் சிறந்த வைணவர்; சமயப்பற்றினாலும் தமிழில் பாரதம் பாடிய பெருமையினாலும் பின் வந்த ஆன்றோர் இவரை **வில்லிபுத்தூராழ்வார்** என்றே வழங்குவர். எனினும் மதவெறியின்றி ஓரளவு கதைகளில் வழங்கும் செய்திகளுக்கேற்பச் சிவபெருமானைப் போற்றியும் இருக்கிறார். நூலின் தொடக்கத்தில் இரண்டு பாடல்களால் இவர் விநாயக வணக்கம் கூறுகிறார். காரணம், விநாயகர் விக்கினேசுவரர் என்ற முறையில் எல்லோருக்கும் பொது என்ற நியாயம் என்பர். அன்றி, வடமொழியில் வியாசருக்கு விநாயகரே முன் வந்து பாரதம் எழுதினார் என்ற கதையும் ஒரு காரணம். அருச்சுனன் தவநிலைச் சருக்கம், பதின் மூன்றாம் போர்ச்சருக்கம் போன்ற இடங்களில், சிவபிரானைப் பேசும் இடங்களில் அவர் பரம்பொருளே என்று பொருள்படப் பேசுகின்றார்.

அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கத்தில், காஞ்சி, திருவண்ணாமலை, திருவெண்ணெய் நல்லூர், திருவதிகை வீரட்டானம் ஆகிய தலங்களைச் சிறப்பித்துப் பாடி,

இன்னம் பல யோனியி லெய்தாநெறி பெறவே
முன்னம் பலர் அடிதேடவும் முடிதேடவும் எட்டா
அன்னம் பல பயில்வார் புனல் அணிதில்லையுளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு பணிந்தான்

*என்ற பாடலில் அருச்சுனன் சிதம்பரம் வணங்கியதையும் குறிப்பிட்டார். இப்பாடல் சிவபரத்துவம் கூறுவது வெளிப் படை. அருச்சுனனுக்கு அருள் செய்யும்பொருட்டுப் பன்றி வேட்டைக்காகச் சிவ பெருமான் எழுந்தருளுகிறுர் :*

ஓரேனந் தனைத் தேட ஒளித்தருளும்
　　இருபாதத் தொருவன் அந்தப்
போரேனந் தனைத் தேடிக் கணங்களுடன்
　　புறப்பட்டான் புனங்களெல்லாம்
சீரேனல் விளைகிரிக்குத் தேவதையாம்
　　குழவியையும் செங்கை ஏந்திப்
பாரேனை உலகனைத்தும் பணிவுடனே
　　புகழ்ந்திடத்தன் பதிப்பின் வந்தாள். (87)

*பெருமானை அருச்சுனன் வில்லாலடித்தபோது, பிர பஞ்சத்தில் நிகழ்ந்த செய்தி :*

விண்ணிலுறை வானவரில் யாரடி படாதவர்
　　விரிஞ்சன் அரியே முதலினோர்
மண்ணிலுறை மானவரில் யாரடி படாதவர்
　　மனுக்கள் முத லோர்கள் அதலக்
கண்ணிலுறை நாகர்களில் யாரடி படாதவர்
　　கட்செவி மகீபன் முதலோர்
எண்ணில் பல யோனியிலும் யாவடி படாதன
　　இருந்துழி யிருந்துழியரோ. (107)

வேதமடியுண்டன விரிந்த பல ஆகம
　　விதங்களடி யுண்டன ஓரைம்
பூதமடியுண்டன விநாழிகை முதற் புகல்செய்
　　பொழுதொடு சலிப்பில் பொருளின்
பேதமடியுண்டன பிறப்பிலி யிறப்பிலி
　　பிறங்கலரசன்தன் மகளார்
நாதனமலன் சமர வேட வடிவங் கொடு
　　நரன் கையடி யுண்ட பொழுதே. (108)

*இவ்வாறு, சிவபிரான் அருச்சுனனது வில்லால் அடி யுண்டபோது சராசரங்கள் யாவும் அடியுண்டன என்பதும்*

சிவபரம் பொருளே என்று சிவபரத்துவம் நிலை நாட்டியதாகும். இவ்வாறுள்ள இடங்களை நாம் ஆராயும்போது, வில்லிபுத்தூரர் வைணவராயினும் சமயக்காழ்ப்பில்லாமல், இளங்கோவடிகள் போல, பொது நோக்குடனேயே காப்பியம் பாடினார் என்று காண்கிறோம். சூரியன் அக்கினி முதலியோரை வருணிக்கும் இடங்களில் ஆங்காங்கு எல்லா விதப் பொருத்தங்களும் அமையுமாறு எழுதுகிறார். இவ்வாறு எல்லா வகையாலும் இவரது காப்பியத்தை விஞ்சுகிற காப்பியம் இதன் பின்னர்த் தோன்றவில்லை.

"நீடாழியுலகத்து மறை நாலொடைந்தென்று நிலை நிற்க"ச் செய்யப்பெற்ற பெருநூலாகிய பாரதம் மிகப் பெரிய கதையாதலால் அதை எவ்வாறு தமிழ்ப்படுத்த முடியும் என்று அஞ்சி இவர் தொடக்கத்தில் நூலை மிகவும் சுருக்கியே பாடிவந்தார். வேகமாகக் கதையை நடத்திக் கொண்டு பாடினமையால் முற்கூறியபடி நாட்டு நகரப் படலங்களோ பிற விரிவான வருணனைகளோ இந்நூல் தொடக்கத்தில் இல்லை. சில இடங்களில் முன்னமே கதைப் போக்கு அறியாதவர்களுக்குக் கதைப்போக்கு விளங்குவதும் அருமையாயிருக்கும். இவ்வாறு சுருக்கத்தில் தொடங்கிய காப்பியம், கொஞ்சம் போனதும் அழகும் சிறப்பும் உடையதாக வளர்கிறது என்பர்.

பண்டைய நூல்களாகிய குறள், சங்க நூல்கள், சிந்தாமணி, கம்ப ராமாயணம் ஆகியவற்றின் கருத்துக்களும் தொடர்களும் இந்நூலில் எங்கும் காணப்படுகின்றன.

நூலில் உவமை உருவகம் தற்குறிப்பேற்றம் முதலிய பொருளணிகள் மட்டுமன்றி, மடக்கு முதலான சொல்லணிகளும் ஆங்காங்கு சிறந்துள்ளன. முடுகு நடை, பல்வகைச் சந்தங்கள், வண்ணப்பாக்கள் நிரம்பியுள்ளன. சுருங்கச் சொல்லல் முதலான அழகுகள் நன்கு பொருந்தி, குன்றக் கூறல் முதலான குற்றங்கள் அகன்று விளங்குவது இந்

நூல் திவ்வியப் பிரபந்தத் தொடர்களும் ஆங்காங்கு அழகுறக் காணப்படுவதை நோக்கி, இவருக்கு ஆழ்வார் பாசுரங்களில் உள்ள ஈடுபாட்டை நன்கு காணலாம்.

ஆங்கில நூல் விமரிசன முறைப்படி பார்க்கும்போது, இந்நூலில் பாத்திரங்களின் குணவிசேடம் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது. கொஞ்சம் தமிழ் படித்தவர்களுக்கும் வில்லி சித்திரிக்கும் கர்ணனும் சகாதேவனும் நன்கு பழக்கமான பாத்திரங்கள். துரியோதனன் முதலிலிருந்து இறுதிவரை தற்பெருமைக்கும் இறுமாப்புக்கும் எடுத்துக் காட்டாகவே இருந்து வருகிறான். இவன் கர்ணனிடத்துக் கொண்ட நட்புத் தமிழிலக்கியத்தில் பிரசித்தமானது.

இனி நூலில் நகைச் சுவையும் தமிழ்ப்பற்றும் தொட்ட இடங்களெல்லாம் காணலாம். “இளவன் தமிழ் ஏடுமுன் எதிரேறிய துறை” “காவிரி என்னத் தப்பாக் கருணையான்” “தங்கள் மூவகைத் தமிழ்ப்போலச் சிந்தையிற் குறிக்குமாறு சிலீமுகம் மூன்று விட்டான்” என்பன சில எடுத்துக்காட்டுக்கள்.

## காலம்

இவருடைய காலமும் திட்டமாய்த் தெரியமுடிகிறது. வக்கபாகையில் தலைவனாயிருந்த கொங்கர்கோன் - வரபதி ஆட்கொண்டானை இவர் பாடி இருக்கிறார். இவனையே இரட்டைப் புலவரும் பாடியிருக்கிறார்கள். இரட்டையர் இராசநாராயணச் சம்புவராயன் என்ற காடவர் குலச் சம்புவராயனையும் பாடியிருத்தலால், அவர்கள் காலம் அவன் காலமாகிய கி. பி. 1331-83 என வரையறை செய்யப் பெறுகிறது. ஆதலால் வில்லிபுத்தூராழ்வார் காலமும் இதேகாலம் என்று கூறுதல் பொருந்தும். அதாவது 14 ஆம் நூற்றாண்டின் இறுதி. அருணகிரியார் காலம். அடுத்ததாகிய 15ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என வேறு வகையால் அறிகிறோம். வில்லிபுத்தூரரும் அவர் காலத்தில்

வாழ்ந்தவர் என்ற கதைக்கும் இது பொருந்துவதா யுள்ளது.

வில்லிபுத்தூரருடைய முதுமைப் பருவத்தில் அருண கிரிநாதர் இளமைப் பிராயத்தினரா யிருந்திருக்கலாம். பிந்தியவர் வரலாறு 15 ஆம் நூற்றாண்டு இலக்கிய வர லாற்றில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. இருவரையும் தொடர்பு படுத்திக் கூறும் கதைகள் மேற்காட்டியவாறு பல வழங்கி வந்த போதிலும், வேறு வகையில் இவற்றுக்கு எவ்வித ஆதாரமும் காணப்படவில்லை.

## வரந்தருவார்

வரந்தருவார், பாரதம் பாடிய வில்லிபுத்தூரரின் புதல்வர். பாரதத்துக்கு வில்லிபுத்தூரர் எந்தப் பாயிர மும் சொல்லாமையால், இவர், தாமே அதற்கு விரிவாக 23 செய்யுட்கள் பாயிரமாகச் செய்தமைத்தார். வேறு வகை யால் இவரது வரலாற்றில் சில பகுதிகள் தெரிய வரு கின்றன. இவர் தந்தையாரிடம் இளமையில் கல்வி கற்ற போதே கல்வியில் மேம்பட்டவராய் இருந்தார். சில சமயம் புதல்வன் – மாணாக்கன் என்ற நிலையை மறந்து தந்தையிடம் சொற் போரிட்டார். காதைக் குடைந்து தோண்டி எட்டின மட்டறுக்கும் வில்லி எனக் கதையில் இடம் பெற்ற இவரது தந்தை, ஒருசமயம் இவர் வாதத்தை ஏற்காது இல்லத்தி னின்று வெருட்டி விட்டார். இவர் வேறிடம் சென்று தம் கல் வியைப் பெருக்கிக் கொண்டு சிறந்த புலவரானார்.

இந் நிலையில், வரபதி ஆட்கொண்டான் விருப்பத்துக் கிணங்கி வில்லிபுத்தூரர் தமிழில் பாரதம் பாடி அரங் கேற்ற ஏற்பாடு செய்திருந்தார். அரங்கேற்றும் சபையில் புதல்வர் தம் உருவை மறைத்துக் கொண்டு புலவர் குழாத் துள் அமர்ந்திருந்தார்.

அரங்கேற்றம் தொடங்கியது. அப்போது முதற் பாட்டாக, தற்சிறப்புப் பாயிரமாகிய பின்வரும் பாட்டை வில்லிபுத்தூரர் சொன்னார்:

ஆக்கு மாறயனும் முதலாக்கிய வுலகம்
காக்குமாறு செங் கண்ணிறை கருணையங் கடலாம்
வீக்குமா றரனும் அவை வீந்த நாள் மீளப்
பூக்குமாமுதல் எவனவன் பொன்னடி போற்றி.

அப்போது, அரங்கேற்றத்திற்கு முற்காலத்தில் எங்கும் இடையூறு செய்வார் இருந்தமை போல, இங்கும் ஒருவர் எழுந்தார். "வியாச பகவான் ஐந்தாம் வேதமாகிய மகா பாரதத்தைச் சொல்ல, விநாயகப் பெருமான் தம் கொம்பே எழுத்தாணியாக மகாமேரு மலையே ஏடாக எழுதிய பெருமை பாரதத்துக்கு உண்டு. விநாயகர் வணக்கம் சொல்லாத இந்தப் பாரதத்தை நாங்கள் ஏற்கமாட்டோம்" என்றார். கேட்ட வில்லிபுத்தூரர் திகைப்படைந்தது இயல்பே. அடுத்த விநாடியே அங்கு அவையில் தம் உருவைக் கரந்திருந்த வரந்தருவார் எழுந்து, "எம் தந்தை விநாயக வணக்கம் செய்ததுண்டு. ஆனால் கிருஷ்ண பகவான் வரலாறு மலிந்த பாரதக் கதையைப் பாடிய இடத்தில் விநாயகருக்கு வணக்கம் வெளிப்படையாகச் சொல்ல வேண்டுவதில்லை. அப்பாடல் யாம் அறிவோம்" என்று அந்தக் கணத்தில் புனைந்துரையாகச் சில சொற்கள் கூறி, பின்வரும் பிரசித்தமான பாரதக் காப்புச் செய்யுளைப் பாடினார்.

நீடாழி உலகத்து மறைநாலொடைந் தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதம் சொன்னநாள்
ஏடாக மாமேரு வெற்பாக வங்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

கேட்ட சபையோர் மிகவும் மகிழ்ந்தனர். வில்லிபுத்தூரரும் தம் மகனென்றறிந்து "வரந்தருவானே" என்று கூறி தம் மகனைக் கட்டித் தழுவிக் கொண்டார். அரங்கேற்றம் முறைப்

படி நடைபெற்றது. அதுமுதல் மகனுடைய இயற்பெயர் மறைந்து, வரந்தருவார் என்ற பெயரே நிலைத்து விட்டது இவர் பாடியுள்ள பாயிரப் பாடல் ஒன்று பின்வருவது :

**பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்**
**திருப்பிலே யிருந்து வையை ஏட்டிலே தவழ்ந்த பேதை**
**நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரோன**
**மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்.**

தந்தையினுடைய திருமுனைப்பாடி நாடு, பெண்ணை நதி, அது பற்றிய அவ்வையார் பாடல், முதலாழ்வார் மூவர். மொழி விளக்கேற்றி முகுந்தனைத் தொழுதமை, சனியூர் வீர ராகவன் புதல்வராய்ப் பிறந்து வில்லிபுத்தூரர் இங்கு வக்க பாகை கொங்கர் பிரான் ஆட்கொண்டான் விருப்பப் படி பாரதமாம் பெருங்கதையைத் தமிழ் மொழியில் சுருக்கி விருத்தத்தால் செய்த வரலாறு, அவர் மைந்தர் வரந்தரு வார் ஆகிய தாம் இப்பதிகம் சொல்லியது-ஆகியவற்றைப் பாயிரப் பகுதியில் பாடி இருக்கிறார்.

வரந்தருவார், தந்தையார் பாடிய பாரதம் முதல் 10 பருவங்கள் போக எஞ்சிய எட்டுப் பருவங்களையும் விரித்துப் பாடினார் என்ற செய்தி வழங்குகிறது. அது இப்போது எங்கும்கிடைப்பதாகத்தெரியவில்லை.மேற்காட்டிய பாயிரப் பகுதியில் நடை, சொல்வளம், ஓசைநயம், கல்விப் பெருக்கு முதலியவற்றால் இவர் பெரும் புலவராய் இருந்து தந்தை குறையாக விட்டதைப் பூர்த்தி செய்தார் என்பது நம்பக் கூடியதே. ஆனால் இப்பகுதி கிடைக்கவில்லை; இவர் வேறு எந்த நூல் செய்ததாகவும் தெரியவில்லை.

## இரட்டைப்புலவர்

சோழ நாட்டில் ஆடுதுறைக்கு அருகிலுள்ள ஆலந்துறை என்ற ஊரில் செங்குந்த மரபில் அத்தை பிள்ளை அம்மான் பிள்ளையாக இரு பிள்ளைகள் பிறந்து வளர்ந்தனர்.

ஒரு பிள்ளை மருகர், கண்ணில்லாத குருடர்; இளஞ் சூரியர் என்று பெயர். மற்றவர் அம்மான், காலில்லாத முடவர், முது சூரியர் என்று பெயர். தெய்வாதீனமாக குழந்தைப் பருவத்திலிருந்தே இவ்விரு குழந்தைகளும் இணைபிரியாமல் விளையாடி வந்தார்கள்; இப்படியே கல்வி அறிவிலும் ஒன்ருக வளர்ந்தார்கள். ஒருவர் பார்த்துப் படிக்க, மற்றவர் கேட்டுக் கற்பார். குருடர் முடவரைத் தோளில் தூக்கிக் கொள்ள, முடவர் தோளிலிருந்து கொண்டு கல்வி முதல் பிற உலக விவகாரங்கள் அனைத் திலும் ஈடுபட்டு வளர்ந்தபோது, குருடரையும் வளர்த்தார். ஈருடலும் ஓர் உயிரும் என்னும்படி இருந்தது இவர்கள் வாழ்க்கை.

இருவரிடத்திலும் கல்வித் தேர்ச்சி நிரம்பி, அருட் செல்வம் சிறந்து விளங்கிற்று. இருவரும் சேர்ந்து ஒரே உள்ளத்தோடு செந்தமிழ்ப் பாக்கள் பாடும் தகுதி பெற்றிருந்தார்கள். இருவரும் சேர்ந்த வாழ்க்கையே இருந் தமையால், இவர்களுடைய இளமைப் பெயர் மறைந்து, இரட்டைப் புலவர் என்றே இவர்களுக்குப் பெயர் நிலைத் தது. தெய்வப் புலவர் என்றும் இவர்களை மக்கள் சிறப் பித்துச் சொன்ஞர்கள். இருவரும் சைவ சமயத்திலே பற்றுடையவர்களாய், சிவ தலங்கள் தோறும் சென்று இறைவனை வழிபட்டு வந்தார்கள்.

பாடல் பாடும் போது, முடவராய்த் தோளிலிருப்பவர் தம் கண்ணுல் பார்த்து, பார்த்த கருத்தமைய ஒரு பாட்டின் முதல் இரண்டு அடிகளைப் பாடி நிறுத்துவார். குருடரான மற்றவர், இதைக் கேட்ட மாத்திரத்திலே தம் இதயத்தில் விளங்கிய அருள் ஒளியினுலே மேல் சொல்ல வேண்டியதை அழகாக நிதானித்துச் சொல்லிப் பாடலை முடிப்பார். சில சமயங்களில் முன்னவர் கேட்கப் பின்னவர் விடை கூறுவது போலவும் பாடல் அமைந்திருக்கும். இவ்வாறு இவர்கள்

இருவரும் உடல் ஊனம் உற்றிருந்தாலும் கூட, உணர்ச்சி ஒற்றுமையாலும், ஒருவரால்தான் மற்றவருக்கு வாழ்வு என்ற நிலையினாலும், கலைமகள் அருளாலும், இருவரும் ஒருவரே என்று சொல்லும்படியாகப் பாடலும் நூலும் செய்தார்கள். இவர்கள் பல அற்புதங்கள் நிகழ்த்தியதாகக் கதைகள் உள்ளன. சென்ற இடங்களில் இவர்கள் தங்களை மதித்த செல்வரைப் போற்றி வாழ்த்தினர். மதியாதோரை இகழ்ந்ததும் உண்டு. இவர்களுடைய பாடல்களில் சொற்சுவை, பொருட்சுவை, கற்பனைத் திறன், அணிகள், வரலாற்றுச் செய்திகள் நிரம்ப அமைந்தன. நகைச் சுவையும் ஏளனமும் அமையவும் இவர்கள் பாடுவார்கள்.

தமிழ் நாவலர் சரிதையும் தனிப் பாடல் திரட்டும் இவர்கள் பாடிய நூல்களுமே இவர்கள் சரித்திரத்தை அறிவதற்கு ஆதாரங்கள். புலவர் புராணமுடையார் இவ்விருவரும் சகோதரர் என்றே கூறுவார்; அச்சுவினி தேவதைகள் என்றும் சொல்லுவார். இவர் பாடிய புராணம் இன்று வழங்கும் வரலாற்றுக்குச் சிறிது மாருக இருக்கும். இவர் பாடிய இரட்டைப் புலவர் புராணம் 56 பாடல் உடையது.

முதலில் இவர்கள் திரு ஆமாத்தூர் சென்று வழிபட்ட போது அங்குள்ள பெரியோர் இவர்களைத் திரு ஆமாத்தூர் எம்பெருமான் மீது ஒரு கலம்பகம் பாடும்படி வேண்டிக் கொண்டார்கள். இவர்கள், "கலம்பகம் பாடும் பெரும் தகுதி பெற்றவர் தொல்காப்பியத் தேவர் என்ற அக்காலத்துப் பெரியார்; அவர் பாதிரிப் புலியூர்க் கலம்பகம் பாடிய பிறகு, நாங்கள் பாடினல் பெருமானுக்கு ஏற்காது" என்று சொல்லி, "தொல்காப்பியத் தேவர் சொன்ன தமிழ்ப் பாடல்" என்ற பாடலையும் பாடி முதலில் மறுத்தார்கள். பிறகு ஒருவாறு இசைந்து கலம்பகம் பாடினார்கள். தொல்காப்பியத் தேவர் வரலாற்றில் இதைக் காண்போம்.

இவ்வாமாத்தூர்க் கலம்பகம் சம்பந்தமாக ஒரு வரலாறு சொல்வதுண்டு. கலம்பக அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்தது. 6ஆம் பாடல் வந்தது :

ஆற்குழையோ அரவோ ஆயர்பாடி அருமனையோ
பாற்கடலோ திங்களோ தங்குமாவம் பலபலவாம்
மார்க்கமும் ஆகிநின்றுர் மாதை நாதர் வலங்கொள்பம்மை
மேற்கரை கோயில் கண்டார் புரஞ்சீறிய வெங்கணைக்கே.

(பலவாகிய சமயங்களாய் நின்ற திருவாமாத்தூர் நாதரை வலங்கொள்கின்ற பம்பையாற்றின் மேற்கரையில் கோயில் கொண்ட சிவபிரான் திரிபுரத்தின்மீது தொடுத்த திருமாலாகிய அம்புக்குக் கூடானது ஆல்குழையோ திங்களோ யாது?-என்பது இதன் பொருள்.)

இப்பாடலைப் பாடி அரங்கேற்றப் புகுந்தபோது அவையிலிருந்தாரொருவர்,"பம்பையின் கீழ்க்கரையிலல்லவா கோயில் இருக்கிறது? குருடருக்குத்தான் கண்ணில்லை. முடவருக்குமா கண்கெட்டது?" என்று ஏளனமாகக்கூறிப் பழித்தார். கோயில் அப்போது ஆற்றின் மேல் கரையி லிருந்தது. கேட்டிருந்த புலவர்கள், "இன்று அரங்கேற் றத்தை நிறுத்திவிட்டு நாளை மீண்டும் தொடங்குவோம்" என்றுர்கள். அன்றிரவே பெருமழை பொழிந்து, பம்பா நதிகரை புரண்டு பெரு வெள்ளமாக ஓடி கோயிலுக்குக் கீழ்புறம் வளைந்தோடிப் பின் மேற்கில் திரும்பி மறுபடியும் தன் போக்குக்கு மீண்டு வந்தது. விடிந்து பார்த்தால் எங்கும் வெள்ளமாகி ஆறு வேறு கதியில், பாட்டில் உள்ள படி கோயிலுக்குக் கிழக்காக, மாறிச் சென்றது. ஊரார் இரட்டையர் வாக்கினுல் இவ்வாறு நிகழ்ந்ததென்று உணர்ந்து, அவர்களுக்கும் இச்செய்தி தெரிவித்து அவர் களை அழைத்து வந்து அரங்கேற்றத்தை முற்றுவித்தார்கள். அவர்களுடைய சொல் எப்படிப் பலித்தது என்பதை எண்ணி எல்லோரும் பெருவியப்படைந்தார்கள். தெய் வப்புலவர் என்ற பெயரும் அவர்களுக்கு வந்தது.

*நானூறு ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்த காஞ்சி சிதம்பர முனிவர் என்பவர் தாம் பாடிய க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ் என்ற நூலில் இச் செய்தியை அமைத்துப் பாடி யிருக்கிறார். ஏகாம்பரநாதப் பெருமானே தம்மைப் பாடும்படி இரட்டையருக்குச் சொன்னாரென்றும் அவர் கூறுகிறார் :*

எம்பால் வந்தீர் இரட்டையர் நீர்
எம்மைப் பாடுவீர் என்றே
எம்மான் அருளத் திருமுன்னே
இருந்ததே கலம்ப கம்பாடச்
செம்பா கஞ்சேர் கலம்பகத்திற்
சிறந்த கங்கை மேற்கரையில்
திகழ்ஆ லயங் கொண் டாரென்று
செப்பப் புலவர் அதேது என்ன
நம்பா நாங்கள் உரைத்தபடி
நதியைக் கீழ்பால் திருப்பு என்ன
நாதன் அருளால் வடக்கு விட்டு
நண்ணுங் கீழ்பாற் பெருகிவரும்
பம்பா நதிசூழ் ஆமாத்தூர்ப்
பாலா சிற்றில் சிதையேலே
பச்சை மயில்வா கனனுன்னைப்
பணிவோம் சிற்றில் சிதையேலே.

*சிலநாள் சென்றபின் இவர்கள் சிதம்பரம் வந்தார்கள். அங்கு இறைவனை வழிபட்டுக் கொண்டிருந்தபோது ஒரு செல்வன் மிக்க ஆடம்பரத்தோடு வந்து வழிபட்டான். அவனுடைய சன்மானம் பெற எண்ணி இவர்கள் அவனைப் புகழ்ந்து பாடினார்கள். அவன் கல்வி அறிவு இல்லாதவனா கையால், அவன் செவியில் இவர்கள் பாட்டு நுழைய வில்லை. கல்வி இல்லாதவனை இவ்வாறு புகழ்ந்தோமே என்று எண்ணி மிகவும் மனம் நொந்து முடவர் ஒரு பாட்டைத் தொடங்க, குருடர் வழக்கம்போல் அதைப் பூர்த்தி செய்தார் :*

மூடர் முன்னே பாடல் மொழிந்தால் அறிவாரோ
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா—ஆடகப்பூஞ்
செந்திருவைப் போல்அணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னால் ?

இவ்வாறு இவர்கள் பாடியதன் அருமையை உணர்ந்த அயலார் அச்செல்வனுக்கு இவர்கள் சிறப்பை உணர்த்தி அவனை இவர்களிடத்தில் வந்து வணங்கி மரியாதை புரியும்படி செய்தனர். பின்னர், இப்புலவர்களுடைய கல்விச் சிறப்பை உணர்ந்து, அங்கிருந்த பக்திமான்கள் திரண்டு வந்து, தில்லை நடராசப் பெருமானுக்கு ஒரு கலம்பகம் பாடித் தருமாறு வேண்டினார்கள். அவ்வாறே இரட்டையரும் அங்குத் தில்லைக் கலம்பகம் பாடினார்கள்.

பின்னர் இவர்கள் பல இடங்கள் வழிபட்டுக் களைத்து ஆங்கூர் என்ற ஊர் சென்றார்கள். அங்குள்ள கோயில் அருச்சகன், சுவாமி சந்நிதியில் அடிசில் வடித்துக் கொண்டு வந்து நைவேத்தியம் செய்யாமல், சூடேற்றிய கல்லைக் கொண்டு வந்து நீர் தெளித்து அதில் ஆவிபறக்கச் செய்து, 'அன்னம்' என்று பிறரை ஏமாற்றி வந்தான். இவர்கள் ஒரு பாடலைச்சொல்லி அதில் பின் இரு அடிகளும் சிவபெருமான் கூற்றாக வைத்துக் காட்டி அர்ச்சகன் செயலை வெளிப் படுத்தினார்கள் :

தேங்குபுகழ் ஆங்கூர்ச் சிவனேயல் லாளியப்பா
நாங்கள் பசித்திருக்க ஞாயமோ ?—போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை அல்லாமற்
சோறுகண்ட மூளியார் சொல்.

இதன் பயனாக அவ்வர்ச்சகனுடைய வஞ்சகம் வெளியாயிற்று. பின்னர் இவர்கள் காஞ்சிபுரம் சென்றார்கள். அங்கு ஏகாம்பரநாதர் கோயிலில் திருவிழா நடந்துகொண்டிருந்தது. திருவிழாச் சிறப்பிலும் பெருமானுடைய வீதியுலாச்சிறப்பிலும் ஈடுபட்டவர்களாய் ஏகாம்பரநாதர்மீது

அருமையாக ஓர் உலாப்பிரபந்தம் பாடினர்கள். இவர்கள் தொண்டை நாட்டினராய் இல்லாமல் சோழநாட்டினராய் இருந்தமையால், கேள்வியினலேயே காஞ்சியின் பெருமையை உணர்ந்து பாடி யிருந்தார்கள். விகடசக்கர விநாயகர் காப்பாக முதல் பாட்டு அமைந்திருந்தது :

**சாற்றரிய ஆயிரக்கால் மண்டபத்தின் சார்வாக**
**ஏற்ற முடனே இனிதிருந்து—போற்றும்**
**விறல்விகட சக்ர விநாயகனை ஏத்தும்**
**திறல்விகட சக்ரா யுதம்.**

இப்பாடலில் கூறப்பட்ட ஆயிரக்கால் மண்டபமும் விகட சக்கர விநாயகர் கோயிலும் அன்று காணுமாறு இல்லை. காரணம் இவை மாண் மூடிப் போயிருந்தன. இது ஒருவருக்கும் தெரியாது. ஆகவே, கேள்வி வாயிலாக அறிந்த செய்திகளை வைத்துக்கொண்டு இவர்கள் பாடின பாடலை அரங்கேற்றத் தொடங்கிய சமயம், அவையிலிருந்த ஒருவர் 'இச்செய்திகள் சரியில்லை' என்று ஆட்சேபித்தார். விஷயத்தைஉணர்ந்த புலவர்கள் தாங்கள் திருவருட்குறிப்பினல் பாடியுள்ளமையால் திருவருளே துணைசெய்யும் என்ற நம்பிக்கையோடு, "பின்னெரு சமயம் அரங்கேற்றுவோம்" என்று சொல்லி நிறுத்திக் கொண்டார்கள். பிறகு இவர்கள் வேறு இடம் சென்று யாத்திரை செய்து வந்தார்கள். இதற்கிடையில், காஞ்சியை ஆண்ட காடவமன்னன் கோயிலில் இருந்த மணல் மேட்டை அகற்றி வேள்வி செய்ய வேள்விச்சாலை அமைக்க முற்பட்டபோது, ஆயிரக் கால் மண்டபமும் விகடசக்கர விநாயகர் ஆலயமும் வெளிவந்தன. எல்லோரும் வியப்புற்றனர். தடைபட்டிருந்த அரங்கேற்ற நிகழ்ச்சியை அறிந்திருந்த நகர நன்மக்கள், இரட்டையர் இருந்த ஊருக்கு விரைந்து சென்று இங்கு நிகழ்ந்தவற்றைக்கூறி, காஞ்சிக்கு மீண்டு வந்து அரங்கேற்றத்தை நிறைவேற்றும்படி வேண்டினர். அவர்களும் அவ்வாறே வந்து அரங்கேற்றத்தை முடித்துக் காடவராயனல் பெரும்

சிறப்புப் பெற்றார்கள். அது முதல் இந்த உலா "தெய்வீக உலா" என்ற பெயர் பெற்றது.

தமிழில் இவ்வாறு சிறப்புப் பெற்ற உலாக்கள் இரண்டு: ஒன்று சேரமான் பெருமாள் நாயனார் பாடிய ஞான உலா என்னும் ஆதிஉலா. மற்றது இவர்கள் பாடிய தெய்வீக உலா என்னும் ஏகாம்பரநாதர் உலா.

பின்னர், இவர்கள் காவித்தண்டலம் என்ற ஊரில் வாழ்ந்த ஓமளநாதனைப் பாடிப் பரிசில் கேட்ட போது அவன் இவர்களை மதியாது வசை கூறி அனுப்பினான். அவனும் அவனுக்குத் துணையாயிருந்த பக்கத்து வீட்டுக் காரனும் தீயால் எரிக என்று சாபமிட்டு இவர்கள் அப் பாற் சென்றனர். அங்ஙனமே நிகழ்ந்தது.

திருவண்ணாமலைக்கு இறை வழிபாடு செய்ய எண்ணிச் சென்றபோது அங்கு சம்பந்தாண்டான் என்பவனைக் கண் டார்கள். அந்த நேரம் நாவிதன் அவனுக்கு மயிர்நீக்கும் வினை செய்துகொண்டிருந்தான். சம்பந்தாண்டான் புல வரைத் தரம் அறிந்து போற்றும் இயல்புடையவன் அல்லன். இவர்கள் வரக்கண்டு அவன், தற்பெருமையோடு, 'என் மீது மன் என்றெடுத்து மலுக்கு என்று முடியும்படி விரைந்து ஒரு பாடல் பாடுங்கள் பார்க்கலாம்' என்றான். உடனே முடவர், மயிர் நீக்கும் வினையையே பாட்டில் அமைத்து,

> மன்னுதிரு அண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குப்
> பன்னு தலைச் சவரம் பண்ணுவதேன்?—

என்று வழக்கம் போல் வினவாகத் தொடங்கினார். அடுத்த கணமே குருடர் பாட்டை முடித்தார்:

> —மின்னின்
> இளைத்த மடவார் இவன்குடுமி பற்றி
> வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு

கேட்ட சம்பந்தாண்டான் வெட்கித் தலைகுனிய வேண்

டியது ஆயிற்று. இவனே பின்னர் அருணகிரிநாதரிடம் பொருமை கொண்டிருந்தவனுமாவான்.

பின்னர் மற்ருேரிடத்திற் சென்ற பொழுது திருவேங்கடேசன்-இனியான் என்ற இரு சகோதரரைக் கண்டு பாடினர். முன்னவன் ஈகைக் குணமுடையவன். பின்னவன் அதற்கு மாறு. இதை இவர்கள் நேரில் கண்ட போது பாட்டில் இத்தன்மையைப் பாடிஞர்கள் :

தேன்பொழியும் வாயான் திருவேங்க டேசனுடன்
ஏன்பிறந்தான் இந்த இனியன்காண்?
—யான்சொல்க்கேள்
சீதேவியார் பிறந்த செய்ய திருப் பாற்கடலுள்
மூதேவி ஏன்பிறந்தாள் முன் ?

அப்பால் இவர்கள் திருநெல்வேலி, செங்குன்றூர் முதலிய பல இடங்களுக்கும் சென்று அங்கு பல்வேறு சமயங்களில் சிலேடையாகவும் இகழ்ச்சியாகவும் துதியாகவும் பல பாடல்கள் பாடியிருக்கிருர்கள். எங்கும் இவர்கள் வறுமையில் ஆழ்ந்து துன்புற்றிருந்தார்கள். அதைத் தாங்களே எண்ணி ஒரு பாட்டில் கூறியும் இருக்கிருர்கள்.

குன்றும் வனமுங் குறுகி வழிநடந்து
சென்று திரிவதென்றுந் தீராதோ—ஒன்றும்
கொடாதவரைச் சங்கென்றும் கோவென்றும் சொன்ஞல்
இடாதோ அதுவே இது?

அரச பதவியில் இருந்தோருள், சம்பு குலக்காடவராயருள் ஒருவஞன இராஜ நாராயணச் சம்புவராயன் என்பவன் இவர்களுக்கு ஓரளவு ஆதரவு அளித்திருக்கின்ருன். அவனே ஏகாம்பர நாதருலாவில் சிறப்பித்துப் பாடியிருக்கிருர்கள். அவன் விகட சமுத்தி பாடச் சொன்ன போது புலவர்கள் பாடிய பாடல் :

எறிக்கும் புகழ்க்கச்சி ஏகாம் பரன்சம்பன் எண்திசைக்கும்
பொறிக்கும் புலிக்கொடி யான்புயம் வேட்டபின்
[பூவையன்ளுள்
வெறிக்குங் குமக்கொங்கை மீதே விழிசொரி
[வெள்ளந்துள்ளித்
தெறிக்குந் துவலை அழிக்கும்சிந் தூரத் திலகத்தையே.

*இப்பாடலையும், 'சம்பராசனது படைவீடு முற்றியிருந்த பாண்டியனுக்குப் பாடியது' என்று பின்வரும் பாடலையும், தமிழ் நாவலர் சரிதை கூறுகிறது:*

காற்ருல் அலைப்புண்டும் கண்ணன்கடல் கடைந்தும்
ஏற்ருன் எடுத்துவளைத் தெய்திளைத்தும்–ஆற்ருதே
செம்பொன் மலையன்று சேலுக் கிடங்கொடுக்கச்
சம்பன் மலைகை தவா.

*சோழர் ஆட்சி நிலைகுலைந்து அழிவெய்திய பின் தலை தூக்கியிருந்த சம்புவராயருக்கும் பாண்டியருக்கும் ஏற் பட்ட போர்களில் ஒரு நிலையை இப்பாடல் சுட்டுகிறது எனக் கருத இடமுண்டு.*

*பெண்ணை நதி சூழ்ந்த திருகோவலூர் நாட்டில் வக்க பாகையில் அரசாண்ட வரபதி யாட்கொண்டான் என்ப வன் இவர்களுக்கு ஆதரவு தந்திருக்கிருன். இவனுடைய வேண்டுகோளின்படியே வில்லிபுத்தூரர் பாரதம் பாடினர். இவ்வள்ளலையும் நம் புலவர்கள் சிறப்பித்துப் பாடினர்:*

சாணர்க்கு முன்னிற்கும் ஆட்கொண்ட நாயன்
தமிழ்க் கொங்கர் கோன்
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி
பக்கத்திலே
ஊனுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி
உயர்வானிலே
வீணுக்கு நின்ருகம் மெலிகின்ற திவ்வாறு
வெண்திங்களே.

*இப்பாடல், 'இரட்டையர் திருவக்கைக் கொங்கராயன்*

அசனமிடுவித்தபோது பாடிய கவி' என்று தமிழ் நாவலர் சரிதை கூறும்.

இவர்களுடைய முதுமையில் காளமேகம் இளம் புலவ ராய்ப் பிரசித்தி பெற்று வந்தார். இவர்களோடு நட்புப் பூண்டிருந்தார். இவர்களுடன் திருவாரூர் சென்று சுவாமி தரிசனம் செய்தபோது இவர்கள் வழக்கம் போல் பாடத் தொடங்கினர்கள். ஆனல் பாட எடுத்த 'நாணென்ருல் நஞ் சிருக்கும் நற்சாபம் கற்சாபம்—பாணந்தான்' என்ற அள வோடு பாடல் தடைபட்டு நிற்க, அருகில் இருந்த காள மேகம் 'மண் தின்ற பாணமே' என்று தொடர்ந்து பாடினர். இதைக் கேட்ட இரட்டையர் அப்பாடலைப் பூர்த்தி செய்து விட்டு, மிகவும் பாராட்டி உடனே ஒரு பாடலால் காள மேகத்தைச் சிறப்பித்துப் பாடினர்கள்:

> விண்தின்ற கீர்த்தி விளைகாள மேகமே
> மண்தின்ற பாணமென்ற வாயினிக்கக்-கண்டொன்று
> பாகொடுதேன் சீனியிடும் பாக்கியம் பெற்ருேமிலையே
> ஆகெடுவோ முக்கிங் கென்னும்.

பலநாள் கழித்து இவர்கள் திருவானைக்கா வழிபடச் சென் ருர்கள். அது காளமேகத்தின் ஊராதலால், அவரைப் பார்க்க எண்ணி அவர் இல்லம் அடைந்த போது அவர் அன்று இறந்து போனதாயும் அவர் உடலை அந்நேரம் மயானம் கொண்டு சென்றிருப்பதாயும் அறிந்தார்கள். அவர் இவர்களிலும் பார்க்க இளைஞர். செய்தி கேட்டு இவர்கள் மனம் மிகவும் வருந்தி 'மண் தின்ற பாணம்' என முன்பு பாடிய கவிதைத் திறனை எண்ணி மனமுருகி, வேகின்ற உடலைக் கண்டு ஒருபாடல் பாடினர்கள் என்பர்.

> ஆசு கவியால் அகில உலகெங்கும்
> வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
> விண்தின்ற செந்தழலில் வேவதே ஐயகோ!
> மண்தின்ற பாணமென்ற வாய்.

பிறகு நீண்ட ஆயுளோடு விளங்கியிருந்த இப் புலவர்கள் உரிய காலத்தில் தாங்களும் சிவகதி யடைந்தார்கள்.

இவர்கள் பாடிய நூல்கள் திரு ஆமாத்தூர்க்கலம் பகம், தில்லைக் கலம்பகம், காஞ்சி ஏகாம்பர நாதர் உலா, ஏகாம்பர நாதர் வண்ணம் என்பன. மூவர் அம்மானைப் பாடல்கள் தியாகேசர் பஞ்சரத்தினம் என்பனவும் இவர் கள் பாடியவை என்ற வரலாறுண்டு. கச்சிக் கலம்பகமும் வேறு பல பிரபந்தங்களும் இவர்கள் பாடினார்கள் என்று புலவர் புராணமுடையார் கூறுவார்.

## இரட்டையர் நூல்கள்

### திரு ஆமாத்தூர்க் கலம்பகம்

'கண்பாவு கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்று சிறப்பிக்கப் பெற்ற இவர்கள் பாடியவை இக்கலம்பகமும் தில்லைக் கலம்பகமும். இவற்றுள் இவர்கள் கலம்பக உறுப்புக்களாகிய பதினெட்டுடன், மேலும் பலவற்றைச் சேர்த்துப் பாடியிருக்கிறார்கள். உதாரணம்-இடைச்சியார் குறத்தியார் கொற்றியார் பிச்சியார் யோகினியார் வலைச்சி யார் என்பன. இவர்கள் காலத்துக்கு முன்பு தோன்றிய கலம்பகங்கள் நந்தி, ஆளுடைய பிள்ளையார், திருப்பாதிரிப் புலியூர் என்பன. கலம்பகத்துள்ளும் அதன் உறுப்புக்களுக் குள்ளும் சொற்பொருள் நயங்களும் மடக்கும் கற்பனையும் இவர்கள் போலப் பிறர் சுவைபடச் செய்யாமையால், இவர்களே கலம்பகத்தாற் பெருமை பெற்றார்கள் போலும். இவர்கள் ஆமாத்தூரில் கலம்பகம் பாடிய வரலாறும், அங்கு பம்பையாறு கோயிலுக்கு மேற்புறமிருந்து கீழ்ப்புற மாக மாறியோடிய வரலாறும், முன்பு கூறப்பட்டன.

இந்நூல் 101 பாடல்களும் காப்பு விருத்தம் ஒன்றும் உடையது. இந்நூலுள் அகத்துறைப் பாடல்களும் காப்பு

விருத்தம் ஒன்றும் உள்ளன; அகத்துறைப் பாடல்களும் சந்தப் பாடல்களும் அதிகம் உள்ளன.

### தில்லைக் கலம்பகம்

இவர்கள் பாடிய இரண்டாவது கலம்பகம் இந்நூல். காப்பு வெண்பாவும் 100 பாடல்களும் உடையது. சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள நடராசப் பெருமான் மீது பாடப் பெற்றது. காப்பு, கற்பக விநாயகரைத் துதிக்கிறது. பெருமான் சிறப்பு, பிற செய்திகள், வழிபட்டோர், பிற தலங்கள், பஞ்ச பூதத் தலங்கள் சபைகள் முதலியன விரிவாயுள்ளன. காலங் கண்டிரங்கும் முகமாக, பன்னிரு மாதங்களையும் ஆறு பாடல்களில் நயமாக உரைக்கிறார். 'ஆ சேது ஹிமாசலம்' என்று வடமொழி வாணர் கூறும் கருத்தை இவர் நயமாகக் 'காசிக்கும் சேதுவிற்கும் தலைவர்' (46) என்று கூறுகிறார்.

மற்றெல்லாத் தலங்களுக்கும் பூசாபத்ததிக்குரிய ஆகமம் பொதுவாக காமிகாகமம்; சிதம்பரத்துக்குரியது மகுடாகமம். இதையும் இத்தல புராணத்தையும் 68 ஆம் பாடலில் குறிப்பிடுகிறார். இப்புராணம் உமாபதி சிவாசாரியர் செய்ததென வழங்கும் கோயிற் புராணம் போலும். 96 ஆம் பாடலில் நான்கு கோபுரங்களையும் குறிப்பிடுகிறார். நான்கும் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு தலைவர்கள் கட்டியன; ஆசிரியர் காலத்தில் நான்கும் கட்டப்பட்டு முடிந்தன போலும்.

ஆராய்ச்சிக்கான இரு குறிப்புக்கள் இந்நூலில் காணப் படுகின்றன. ஒன்று சில புதிய சொற்களின் ஆட்சி; மற்றது, இவர்களுக்கு முந்தி வாழ்ந்த ஒரு ஞானாசிரியர் பற்றிய குறிப்பு.

சொல்லாட்சி என்ற இடத்தில் குறிப்பிடத்தக்க சொற்கள்-துரை, பயல், கப்பல் என்ற மூன்று. இவற்றுள்

துரை என்ற சொல்லை அருணகிரிநாதர் உபயோகிக்கிறார். 'கொஞ்சும் துரையே அருள்' என்பது திருப்புகழ். பிற்காலத்தில் எல்லாப் புலவர்களுமே இச் சொல்லை உபயோகிக்கிறார்கள்; துரைமகள், துரைப்பெண் என்று மீனாட்சியம்மையைக் குமரகுருபரர் குறிப்பிடுகிறார். இவையனைத்துக்கும் மூலமாயுள்ளது, அருணகிரிநாதர் வாக்கேயாகும். ஆனால் அவரை விட மூத்தோராயுள்ள இரட்டைப் புலவர் இச்சொல்லை இரண்டிடங்களில் சொல்கிறார்கள். தில்லையைக் குறிப்பிடும் போது,

> விரிஞ்சற்குத் துயில்கூர் முகுந்தற்குத் துரையாம்
> விடங்கற்குப் பதியாமால் (11)
> உதித்த மாமதி தழலல வோபினை
> எனக்கு நீரொரு துரை யலவோ இனி
> உமக்கு நானொரு பயல் அலவோதய
> —விலையோதான் (53)

என வரும் இரண்டிடங்களையும் காண்க. இரட்டையருக்கு முன் இச் சொல்லுக்குத் தமிழில் ஆட்சி இல்லை. இரட்டையரே இச் சொல்லை முதன் முதலாக ஆளுகிறார்கள் என்று கருதத் தோன்றுகிறது.

தமிழ் நாட்டில் முகம்மதியர் படையெடுத்து மதுரையை அழித்து நாட்டில் பெரும் பகுதியைக் கைப்பற்றிய காலம் 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் முற்பாதியுமாகும். அக் காலத்தில் தமிழில் வந்து புகுந்த அன்னிய மொழிச் சொற்கள் பல. அவற்றுள் சீமான் என்று பொருள்படுகின்ற இச் சொல்லும் ஒன்று என்று தெரிகிறது.

பயல் என்ற சொல் முற்காட்டிய 'உதித்தமாமதி' என்ற பாடற் பகுதியில் வந்துள்ளது (58). பையல் என்ற ஆட்சியே பழமையானது. பயல் என்பது, அடிமை, கீழானவன், தொண்டன் என்ற பொருளில் இங்கு வருகிறது. இதே வடிவத்தில் 10 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது எனக் கருதப் பெறும் பிங்கல நிகண்டிலும் இச் சொல் வருகிறது.

ஒட்டக் கூத்தர்-புகழேந்தி பூசல்களைக் கூறும் கதைகளில் வரும் அங்குசப் பையல் யான் என்ற சொல் தொடரிலும், பையல் என்ற வடிவமே பயில்கிறது. பயல்கள்-கீழானவர் என்ற பொருளில் மிகவும் பிற்காலத்ததாகிய நாமதீப நிகண்டு குறிப்பிடுகிறது. இச் சொல்லுக்கு இக் கலம்பகமே முதலில் இலக்கிய ஆட்சி தருகிறது என்று கருத வேண்டும்.

அடுத்தது, கப்பல் என்ற சொல். மரக்கலம் என்ற பொருளுடையது இச் சொல் என நாம் அறிவோம். இச் சொல் லுக்குப் பழமையான இலக்கிய ஆட்சி இல்லை. 'கப்பல் பிழைத்துக் கரை காணுமா போல்' என்று ஒழிவிலொடுக்கம் கூறுகிறது ((85). இதன் ஆசிரியரான கண்ணுடைய வள்ளல் காலம் 1375-1425 என வரையறை செய்யப் பெற்றுள்ளது. இக்கலம்பகத்தில் இச் சொல் வருகிறது. முன் குறிப்பிட்ட விரிஞ்சற்கு என்ற வரியின் அடுத்த வரிகளில் இச்சொல் வருகிறது.

> மருங்குற்றுக் கயல்சேல் கரும்புக்குட் புகவே
> வரும் பெற்றிச் சினவாளை
> பெருங் கப்பற் கடல்மீ னுடன் தத்திக் கரைசேர்
> பெரும் பற்றப் புலியூரே.

இதனுல் இச் சொல்லை முதல்முதல் இரட்டையரே எடுத்தாளுகின்றூர்கள் என்று நாம் கருதுதல் கூடும்.

கப்பலூர் என்ற ஊர் தமிழ் நாட்டில் புதுக்கோட்டைப் பகுதியில் துவரங்குறிச்சிப் பக்கம் உள்ளதென்று தெரிகிறது. இங்கு பாண்டிய மன்னன் படைத்தலைவனை கருமாணிக்கன் என்பவன் வீரமும் கொடையும் பொருந்திய வள்ளலாக வாழ்ந்திருந்தான். இவன் காலமும் இதே நூற்றூண்டின் இடைப் பகுதி. இவற்றால் தெரிவது, இரட்டையர்க்குரிய தென்று நாம் கருதும் காலத்திலேயே கப்பல் என்ற பெயரால் அமைந்த கப்பலூர் என்ற ஓர் ஊர் அமைக்கப் பெற்றிருந்தது என்ற செய்தியாகும்.

அடுத்த குறிப்பு சீகாழிச் சிற்றம்பல நாடிகளைப் பற்றியது. சோழ நாட்டில் சீகாழிப் பதியில் மிகச் சிறந்த ஞானாசாரியராக விளங்கினார், திருச்சிற்றம்பல நாடிகள் என்ற பெரியார். எண்ணற்ற சீடர்கள் இவரிடம் உபதேசம் பெற்றுத் தமிழ் நாடெங்கும் சிவஞானப் பயிர் வளர்த்தார் கள். இவர் காலம் 1325-50.

இவர் பழுதை கட்டிச் சிற்றம்பல நாடிகள் எனவும் வழங்கப் பெற்றார். உலகப் பற்றனைத்தும் துறந்து எவ்வித விருப்பும் வெறுப்பும் அற்று, 'சேய்போல் இருப்பர் கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே' என்ற பட்டினத்தார் வாக்குக்கிணங்க இவர் வாழ்ந்தவர். இவர் மாணாக்கருள் முதல்வரான சம்பந்த முனிவரும் இவ்விதமே வாழ்ந்து பழுதை கட்டிச் சம்பந்த பண்டாரம் என வழங்கப் பெற்றார். இவர்கள் வரலாற்றைப் பின்வரும் அத்தியாயத்திற் காண் போம். உலகத்திலே பற்றற்றுத் தாம் திரியும் போது எந்த இடத்தில் மரணம் வந்தாலும் அதை ஏற்கச் சித்த மாயிருந்தார் நாடிகள். உலகத்தவர் தம் உடலை இடவும் வேண்டாம், சுடவும் வேண்டாம்; எந்த கிரியையும் உடலுக் குச் செய்ய வேண்டாம்; காலைப் பிடித்துக் கரகர வென்று இழுத்து ஆற்றிலெறிந்து விட்டால் போதும்; சோழநாட்டில் ஆற்று நீருக்குப் பஞ்சமில்லை. பழுதை கட்டி என்பதற்குக் கருத்து இதுவே.

இவ்வாறு சிறப்புற்றிருந்த ஆசாரியரை இரட்டையர் நன்கு அறிந்திருக்கிறார்கள். நேரில் கண்டும் உறவாடியும் இருந்திருக்கிறார்கள். சிற்றம்பல நாடிகள் வயதில் முதிர்ந் தவராய் ஞானியாக விளங்கியிருக்க, இவர்கள் அவரிடம் உபதேசம் பெற்றுச் சில காலம் உடன் இருந்திருக்கவும் கூடும். தில்லைக்கு வந்து கலம்பகம் பாடிய புலவர்கள் சீகாழியில் வாழ்ந்த இச் சிவஞானியிடம் பக்தி பூண்டது வியப்பன்று. இவர்கள் ஆண்டில் இளைஞராய் இருந்திருப் பார்கள். சிற்றம்பல நாடிகளையும் அவர் மாணாக்கர்களையும்

நன்கறிந்த பிறகே தில்லைக் கலம்பகம் பாடினார்கள். கலம்பகம் 18 ஆம் பாடலில் காணப்படும் ஒரு குறிப்பு இதை நன்கு உணர்த்துகிறது. யார் எவ்விதம் இறந்தாலும், புரியைக் கட்டி இழுத்து எறிந்தாலும் கூட, சிதம்பரத்தில் சென்று இறத்தல் நன்று எனக் கூறுகிறார்கள்:

பழுத்துச் செத்தாலும் பிறந்து செத்தாலுமிப் பாழுடலம்
கொழுத்துச் செத்தாலும் மெலிந்து செத்தாலும் [கொலைப்படினும்
புழுத்துச் செத்தாலும் புதைத்தாலும் காலில் [புரியைக்கட்டி
இழுத்துச் செத்தாலும் சிதம்பரத் தேசென் றிறத்தல் [நன்றே

புரி என்பது பழுதை; வைக்கோல் தாளை முறுக்கிச் செய்த கயிறு. கிறித்துவப் பாதிரிகள் சிவப்பு அல்லது கறுப்புப் பட்டையை இடுப்பில் கட்டியிருப்பதை இக்காலத்தில் நாம் காண்கிறோம். இதே விதமாக அக்காலத்தில் நாடிகளும் அவர் மாணாக்கர் சிலரும் கட்டியிருந்தார்கள். தங்களுடைய விரக்தி நிறைந்த எளிய வாழ்க்கைக்கு ஏற்ப இப் பெரியோர் வைக்கோற் புரியைக் கட்டிக் கொண்டார்கள் என்று நாம் கருதுதல் பொருந்தும்.

சிற்றம்பல நாடிகள் காலம் 1325-50 ஆகலாம் என்று பின்னர் குறிப்பிடுவோம். சம்புவராயன் காலம் 1331-83. இக்காலம் இரட்டையருக்குப் பொருந்துவது. நாடிகளை இவர்கள் போற்றினார்கள் என்று கூறுவதும் ஏற்புடையதே.

தில்லைக் கலம்பகம் 58ஆம் பாடல்- 'துதிக்கை வீசிய மற மத வாரணம்' சந்தத்தையும் ஆமாத்தூர்க் கலம்பகம் முதற்பாடலில் வரும் 'திருப்புகழ் பாடிக் கூடினும்' எனவரும் தொடரையும் காணும்போது, அருணகிரிநாதர் தில்லைக் கலம்பகத்தைக் கேட்டிருப்பார் என்ற ஐயம் எழுகின்றது.

**ஏகாம்பரநாதர் உலா**

இவ்வுலா பாடப்பெற்ற வரலாறும் தெய்விக உலா என இது பெயர் பெற்ற செய்தியும் முன்னர்க் கூறப்பட்டன. இது 556 கண்ணிகளையுடையது. தலப்பெருமை இங்குச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. கயிலாயத்தில் உமாதேவியார் சிவபிரான் திருக்கண் புதைக்க உலகம் இருள் மூடிற்று. பெருமான், உலகத்தைத் துன்பத்தில் ஆழ்த்திய பாவம் தீருவதற்காகக் காஞ்சியில் சென்று தம்மை பூசிக்கும்படி பிராட்டிக்கு உத்தரவிட்டார். அம்மையார் காஞ்சியின் சிறப்புக்களையெல்லாம் பார்த்துக்கொண்டு வரும் செய்தி உலாவில் விளக்கமாக உள்ளது. பின்னர் அம்மையார் பூசித்தல், கம்பை நதியில் வெள்ளம் கண்டு பெருமான் திருவுருவை அணைக்க இறைவன் வெளிப்படுதல், பங்குனி விழா, அலங்காரச் சிறப்பு, உலாவருதல், பின்னர் ஏழு பருவப் பெண்களும் கண்டு விரும்புதல், தசாங்கம் என்ற செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

பேரிளம்பெண் என்ற பருவத்தைக் கூறும்போது சிவபரம்பொருளின் இயல்பை மிகவும் நன்றாக விளக்கி யிருக்கிறார்கள். காலத்தால் ஓரளவு முற்பட்டதாகிய இந்நூல் பின்வந்த புலவர்களுக்குச் சிறந்த வழிகாட்டியா யிருந்து வருகிறது.

சம்புவராயன் மல்லிநாதன் என்ற காடவர் தலைவனைப்பற்றி இந்நூலில் ஆசிரியர் கூறும் குறிப்புக்கள் இவர்கள் காலத்தை அறுதியிட உதவுகின்றன.

**ஏகாம்பர நாதர் வண்ணம்**

இப்புலவர்கள் காஞ்சி ஏகாம்பர நாதர்மீது பாடிய பாடல்களில் இவ்வண்ணமும் ஒன்று. இது உடன்போக்கு-முக்கோற் பகவரை வினதல் என்ற துறையில் அமைந்தது.

மறுத்தோன்ற வெளுத்த பிறை
படப்பாந்த ளிடைச் செருகி

வளர்த்தோங்கி முடித்தசடையார் —காஞ்சன மனையார்
மலர்க்காந்தன் முறுக்கவிழ
இதழ்த்தேன்கள் குறித்தொழுகி
மடைத்தேங்கி யடைத்து வரு நீர் —போம்சுழிவழியே
சிறுத் தூண்டின் முளித்தசுற
வரக் காம்பல் உழக்கி யொரு
சிறுச் சேம்பை ஒடித்து வெடிபோய் —வீழ்ந்தயலருகே
திடப்பாங்கர் முடக்க முகின்
மடற்கீன்று களித்து வரு
திருக் காஞ்சிபுரத்திறைவர் —ஏகாம்பரரடியே
குறித்தோர்ந்து தடிக்குளுடல்
வளைத்தாம்பி முளைத்தனைய
குடைக்காம்பு பிடித்துவரும்வே —தாந்தவிரதியீர்
குலக் காந்த ஞெருத்தஞெடு
குலக் காந்தை யொருத்தியிரு
குடித்தீங்கு வளைத்து மிகுமால் —பூங்கொடியனையாள்
உறச் சேர்ந்து மடித்தலையில்
வளர்த் தேங்கள் தமக்கு மவள்
உயிர்ப்பாங்கி தமக்குமவள் —பாதாம்புய மலரே
உலைப் போன்ற பரற்பொதிய
னடித்தீய்ந்து விரற்கருதி
உலக்கான்ற சுரத்தில் வருவீர் —சேர்ந்துழி தெரிவிரே.

## மூவர் அம்மானை

*காளமேகப் புலவர் பாடல் சிலேடை நயம் பொருந்தியிருப்பதுபோல, மூவர் அம்மானைப் பாடல்களும் சிலேடை நயம் பெரிதும் உள்ளவை. பாட்டு ஒவ்வொன்றும் ஐந்தடி; இடைமடக்காய் ஈற்றடி மிக்குவந்த கலித்தாழிசை. முதலில் ஒருவர் விடுகவி போன்ற ஒரு கேள்வியை முன்னிரு வரிகளில் கேட்டதாயும், அதையே மடக்கிக் கூறிப் பின்னவர் அதிலுள்ள முரணை எடுத்துக் காட்டுவதாயும், மீண்டும் முதலாமவர் சிலேடையாகவே விடை கூறி முரணை ஒற்றுமைப் படுத்துவது போலவும், இந்நூற்பாடல் ஒவ்வொன்றிலும்*

மூன்று கூற்றுக்கள் அமைந்துள்ளமையால் இது மூவர் அம்மானை எனப் பெயர்பெற்றது. ஒவ்வொருவர் கூற்றும் அம்மானை என்று முடியும். பொதுவாக இவ்வாறு கேள்வியும் விடையுமாக அமைந்துள்ள பாடல்களை இரட்டையரே அதிகம் பாடியுள்ளமையால், இப்பாடல்களும் அவர்களே பாடியவை என்ற கருத்து வழங்குகிறது. இது இப்போது திட்டமாக முடிவு செய்வதற்கில்லை. வினா விடைக்கு உதாரணமாகப் பின்வரும் பாடலைக் கூறலாம்.

**ஈசன் பசுவாகி ஏமன் இளங் கன்றாகி**
**வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் அம்மானை!**
**வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் ஆமாகில்**
**காசளவு பால்தான் கறக்குமோ அம்மானை?**
**கன்றை உதைகாலி கறவாதே அம்மானை.**

இவ்வகைப் பாடல்கள் 108க்குமேல் இந்நூலுள் காணப்படுகின்றன. இப்பாடல் ஆரூரைக் குறிப்பிடுவது போலவே சுமார் 25 தலங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. தலங்களைக் குறிப்பிடும் பாடல்களுள் சில, பின்வந்த கலம்பகப் பாடல்களில் பயிலும் அம்மானை என்ற உறுப்புக்குரிய பாடலை எடுத்துச் சேர்க்கப்பட்டவையாகும். உதாரணம்: திருவரங்கம், மதுரை, காசி, அருணை, வெங்கை ஆகிய தலங்கள். இப்பாடல்கள் பழைய மூவரம்மானைப் பதிப்பில் காணப்படவில்லை என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. தலக்குறிப்பே இல்லாமல் இறை குரு சாத்திரம் மெய்ஞ்ஞானம் இவற்றைக் குறிப்பிடும் பாடல்கள் அனேகம். திருமுறைக் கருத்துக்களையும் தொடர்களையும் அமைத்த பாடல்களும் பல. திருமால்பற்றிய பாடல்களும் உள்ளன; இரட்டையர் பொதுவாகச் சிவபரமாகவே பாடுவார்கள்; இப்பாடல்கள் பிற்சேர்க்கையாகலாம்.

இரட்டையர் பாடிய தில்லைக் கலம்பக அம்மானைப் பாடலும் இதனுள் சேர்க்கப்பட்டுள்ளது. மேலும்,

"நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்" என்ற பாடலை இவர்கள் திருவாரூரில் பாடத் தொடங்கித் தடைபட்டபோது உடன் இருந்த காளமேகம் தொடர் எடுத்துக் கொடுத்தார் என்று நாம் பார்த்தோம். ஓர் அம்மானைப் பாடல் இவ்வரிகளைக் கொண்டுள்ளது:

**நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்**
**பாணந்தான் மண்தின்ற பாணங்காண் அம்மானை!**
**பாணந்தான் மண்தின்ற பாணமே ஆமாயின்**
**சேணூர் புரமெரித்த சேவகமே தம்மானை?**
**சேவகத்தைச் சொல்லச் சிரிப்பலவோ அம்மானை.**

இப் பாடல்களின் சிலேடை நயத்தில் ஈடுபட்டு, இவற்றை விடுகவி போலவும் பொழுது போக்காகவும், படிப்பில்லாத தமிழ் மக்களும் கூட, சென்ற தலைமுறை வரையில் பாடிக் கொண்டிருந்திருக்கிறார்கள். மூவரம்மானை என்ற நூல் முழுவதும் இரட்டையரே பாடியதென்று கருதாவிட்டாலும், அதிலுள்ள பாடல்களில் பெரும்பகுதி இவர்கள் பாடியிருக்கக்கூடும்.

**கச்சிக் கலம்பகம்**

இந்நூல் இரட்டையர் பாடியதாகப் புலவர்புராணமுடையார் கூறுவார். நூல் இல்லாமையால் இதுபற்றித் திட்டமாக எதுவும் கூற முடியாது. எனினும், இவர்கள் பாடிய தில்லைக் கலம்பக அம்மானைப்பாடல் ஒன்று மூவரம்மானையுள் காணப்படுவது போலவே கச்சித் தலத்துக்குரிய அம்மானைப் பாடலொன்றும் காணப்படுவதால், இப்பாடல் இவர்களே பாடிய கச்சிக் கலம்பகத்துக்குரியதாகும் என்று கருத இடமிருக்கிறது:

**எண்ணரிய காஞ்சியில் வாழ் ஏகாம்பர நாதர்**
**அண்ணல் திருமேனி எங்கும் ஆகாசம் அம்மானை!**

**அண்ணல் திருமேனி எங்கும் ஆகாசம் ஆமாயின்**
**வண்ணமுலை மார்பின் வடுப்படுமோ அம்மானை?**
மாவடியில் வாழ்பவர்க்கு வடுவரிதோ அம்மானை.

[*சென்ற நூற்றுண்டின் இறுதியில் பூண்டி-அரங்கநாத முதலியார் ஒரு கச்சிக் கலம்பகம் பாடினுர்.*]

**கச்சி யுலா**

*இவர்கள் கச்சியுலா பாடினுர்கள் என்னும் வரலாற்றைச் சோழ மண்டல சதகம் 58 ஆம் செய்யுள் தெரிவிக்கும்:*

யோகாம் பெரிய சோழியர்வாழ்-
வுடையார் ஈகை யுடையாராய்ப்
பாகாம் பழைய கல்வியினும்
பயின்றோர் என்னும் பரிசறிந்தோம்
ஏகாம் பரனூர் கச்சியுலா
இசைக்கும் புலவர் இரட்டையர்கள்
வாகாம் பதியாம் இலந்துறையால்
வழங்கும் சோழ மண்டலமே.

*கச்சிக் கலம்பகமும் கச்சியுலாவும் இன்று இருப்பதாகத் தெரியவில்லை; இக்கச்சியுலா ஏகாம்பரநாதர் உலாவே போலும்.*

**திருவொற்றியூர்த் தியாகேசர் பஞ்சரத்தினம்,**
**வடிவுடையம்மை பஞ்சரத்தினம்**

*ஐந்து ஆசிரிய விருத்தங்கள் கொண்ட இவ்விரு நூல்களும் தெய்விக இரட்டைப் புலவர் பாடியவை என்று இந் நூற்றுண்டின் தொடக்கத்தில் இவற்றை அச்சிட்டோர் குறிப்பிட்டிருக்கிறுர்கள். இது பொருந்தாது;*

ஏனெனில், வடிவுடையம்மை பஞ்சரத்தினம் 19ஆம் நூற்றாண்டில் எழுந்த அபிராமி அந்தாதியைக் குறிப்பிடுவதால் இந்நூல்கள் அக்காலத்துப் பகுதிக்குரியன; இரட்டையர் செய்தன அல்ல.

**தனிப் பாடல்கள்**

*இரட்டையர் பாடிய தனிப்பாடல்கள் எண்ணிறந்தனவாய் வழங்குகின்றன. பல, பாட நேர்ந்த சந்தர்ப்பம் வரலாறு முதலியன மேலே விளக்கப்பட்டன. தனிச்செய்யுட் சிந்தாமணி, பெருந் தொகை முதலியன வேறும் பல பாடல்களைக் குறிப்பிடும். அவற்றுட் சுவையுடைய சில பாடல்கள் பின்வருவன. பாடல்கள் யாவுமே வெண்பாக்கள்.*

*ஔளநாதனைச் சபித்துப் பாடியது:*

ஒருகாவித் தண்டலம்வாழ் ஔளநா தன்வீடு
இருகாலும் பற்றி எரிக—அருகாரும்
கம்பத்தான் வீடுங் கலந்தெரிக மற்றிவர்கள்
சம்பத்தெல் லாமொழிக தான்.

*திருநெல்வேலி சென்றபோது பாடியது:*

வேயீன்ற முத்தர்தமை வெட்டிஞன் ஓரிடையன்
தாயீன்ற மேனி தயங்கவே—பேயாகேள்
எத்தனைநா ளென்றே இடறுவான் பாற்குடத்தை
அத்தனையும் வேண்டு மவர்க்கு.

*மதுரையில் பொய்கையில் ஆடை துவைக்கும்போது, அது விலகி நீரில் நழுவிவிட, அப்போது பாடியது:*

அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினல் நம்மையது தப்பாதோ—இப் புவியில்
இக்கலிங்கம் போனலென் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை.

*கூவராயன் பெருமையை வீரசம்புறன் அப்புலவர்கள் கூறியவை.*

கூவரா யன் தியாகங் கொள்வோம் வலக்கைமுடி
யாவர் தரினுமிடக் கைகொள்வோம்—பூவுலகில்
மின்பணிமின் ஞர்மதனு வீரசம்ப ராயா நாம்
இன்பமும் நேரோ மினி.

மாதா பிதாவுமவன் மன்னுகுரு தெய்வமவன்
தாதா அவனே தருங்கீர்த்திக்—காதாரன்
தியாக சமுத்திரன் தண்கூவ ராயன்தன்
ஈகைதனைச் சொல்ல வெளிதே.

*வறுமை நீங்கத் தெய்வங்களை வேண்டியும் அவர் அருளாமையாற் பாடியது:*

கேட்ட வரமளிக்குங் கீர்த்தியுள்ள தெய்வங்காள்
கூட்டோடு மெங்கே குடிபோனீர்—பாட்டாய்கேள்
செல்கால மெல்லாஞ் செலுத்தினோம் அல்காலங்
கல்லாேனம் செம்பானும் காண்.

*பாண்டியன் அவையில் பரிசு கொடுத்ததைத் தடுத்த ஒருவனைக் குரங்கென இகழ்ந்துரைத்தது:*

புராதன மான தமிழ்ப்புல வீரிந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென் னேவகை கேட்டிலையோ
தராதலம் வென்ற தமிழ்மா றனையுந்தன் தம்பியையும்
இராகவ னென்றும் இலக்குவ னென்றும் இருந்ததுவே.

## இரட்டையர் காலம்

*இரட்டையர் அருணகிரிநாதர் வில்லிபுத்தூரர் காள* மேகம் ஆகிய புலவர்கள் ஏறக்குறைய ஒரே காலத்தில்

வாழ்ந்தார்கள். அக்காலம் கி பி. 1350-1450 ஆகிய கால மாகும் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. இந் நால்வர் வயதிலும் வேறுபாடிருக்கலாம்; சிலர் முதியவரான போது, மற்றவர் இளைஞரா யிருந்திருப்பார். இதே காலத் தில் காளமேகத்தின் குருவும் அருணகிரிநாதரின் மாணாக் கருமாகிய ஞானவரோதயரும் வாழ்ந்தார். இச்செய்திகள் அவ்வவ்வாசிரியர் வரலாற்றில் தெளிவாக்கப்பெறும். இவர் களுள் இரட்டையர் காலம் அறிவதற்கான சான்றுகளை மட்டும் இங்கு ஆராய்வோம்.

இவர்கள் பாடிய ஏகாம்பரநாதர் உலாவில் ஐந்து இடங்களில் தங்களை ஆதரித்த அரசனைக் குறிப்பிடுகின் றார்கள்.

சம்புகுலத் தொருவன் சாத்துலகக் காம் என்றளித்த
செம்பொன் மணிமகுடம் சேர்வித்து. 61

வடித்தசுடர் வேற்சம்பன் வாழ்மல்லி நாதன்
கொடுத்த திருத்தேர்மேற் கொண்டு. 102

செம் பதுமை கேள்வன் திரு மல்லிநாதன் உயர்
சம்பு பதி நல்கும் தடந்தேர் போல். 146

தத்துபரி நல்லவன் சம்புகுலப் பெருமான்
வைத்த துலாபார மண்டபத்தும். 151

—திங்கள்

முடித்த முடிக்கு முடி கொடுத்த சம்பன்
படைத்த துலாபார மண்டபமும். 320-1

இங்கு, சம்புகுலக் காடவராயனை திருமல்லிநாதன் ஏகாம்பரநாதருக்கு மணிமகுடம் திருத்தேர் துலாபார மண்டபம் முதலியன செய்தமைத்தான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. சம்பன் சம்புபதி சம்புகுலப் பெருமான் என்ற பெயர்கள் கல்வெட்டிற் காணப்படும் சம்புவராயர்

என வழங்கும் தலைவர்களைக் குறிப்பனவாகும். 13 ஆம் நூற்றாண்டில் சோழராட்சி வீழ்ந்தது. அப்போது ஆங்காங்கிருந்த படைத்தலைவர்கள் தங்கள் பகுதியில் தாங்களே ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள். காஞ்சிபுரம் பகுதியில் இச்சம்புகுலக்காடவராயர் தாமே அரசராயினர். இவர்களுள் இராச நாராயணச் சம்புவராயன் என்பவன் கி. பி. 1331-1383 ஆண்டுகளுக்கிடையில் ஆட்சிபுரிந்தான். இவனுடைய கல்வெட்டுக்கள் தொண்டை மண்டலத்தில் பலகோயில்களில் காணப்படுகின்றன-கழுக்குன்று கச்சூர் குடிமல்லூர் காடவம் முதலிய தலங்கள். இக் கல்வெட்டுக்களில் இந்த இராச நாராயணனே மல்லிநாதன் என்று சிறப்பிக்கப் பெறுகிறான். ஆதலால் இவன் காலமாகிய 14 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் இரட்டைப் புலவர் வாழ்ந்தனர் என்று ஏற்படுகிறது.

அன்றியும், இவர்கள் வக்கபாகை நகரதிபதி கொங்கர் கோன் ஆட்கொண்டராயன் என்பவனைப் பாடிய பாடல் முன்னமே காட்டப்பட்டது. இவன் வரபதி ஆட்கொண்டான் என்றும் இவனே வில்லிபுத்தூரரைப் பாரதம் பாடச் செய்தான் என்றும் அறிகிறோம்.

# இலக்கிய ஆசிரியர்-2

## முன்னுரை - புராண இலக்கியம்

புராணம் என்ற பெயரால் தமிழில் காவிய அமைப்புள்ள இலக்கியங்கள் பழமையாகவே ஏற்பட்டு வழங்கியிருக்கின்றன. 12ஆம் நூற்றுண்டில் சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணம் பிரசித்தமாய்த் தெரிந்தது. காலமுறைப்படி பார்த்தால் பின்னும் பல புராணங்கள் இருந்தமை தெரிகிறது. சைன தீர்த்தங்கரருள் ஒருவரான சாந்தி தேவர் சரித்திரம் கூறுகின்ற சாந்திபுராணம் என்ற ஒரு சைனநூல் இருந்ததென்றும், பிற்காலத்தில் இது மறைந்து போயிற்றென்றும், புறத்திரட்டில் பயிலும் ஒன்பது மேற்கோட் செய்யுட்களால் அறிகிறோம். நாரத சரிதை என்பதும் இவ்விதமே தெரிய வருகிறது ; இது நாரதன் என்ற முனிவன் சரிதம் கூறும் சைனநூல் போலும். தலபுராணங்களாக அட்டாதச புராணம், கன்னிவன புராணம் என்று இரண்டு புராணங்கள் 12 ஆம் நூற்றுண்டில் ஏற்பட்டன என்று சாசன வாயிலாக அறிகிறோம். இப் பண்டைப் புராணங்களுள் ஒன்றும் இன்று கிடைக்கவில்லை. கிடைக்கின்ற புராணங்களில் பழமையானது, சேக்கிழார் பாடிய பெரியபுராணமே. பெரும் பற்றப்புலியூர் நம்பி பாடிய பழைய திருவிளையாடற்புராணம் 13ஆம் நூற்றுண்டில் எழுந்ததாகும்.

அடுத்து, நாம் ஆராயும் காலப்பகுதிக்கு வரும்போது, சிறப்பான புராணங்கள் சில பாடப் பெற்றிருப்பதை அறிகிறோம். சைனத்திலும், சைவத்திலும் புராணம் பாடும் மரபு ஏற்பட்டிருந்தபடியால், இக்காலத்தில் இவ்விரு சமயங்களிலும் புராணங்கள் ஏற்பட்டன. வாமனமுனிவர்

மேரு மந்தர புராணம் என்ற சைன சமயப் பெருநூல் பாடினார்; மணிப்பிரவாள நடையில் ஸ்ரீ புராணம் என்ற வசனநூல் சைன சமயத்தில் எழுந்தது; இவ்விரு நூல்களையும் 15 ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில், சைன இலக்கியம் என்ற அத்தியாயத்தில் பார்க்கலாம்.

கந்தபுராணம் என்ற பெருங்காவியம் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களால் முருகப் பெருமானுடைய சரித்திரத்தை விரித்துரைக்கிறது. இப்புராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர் காலம் திட்டமாய் வரையறை செய்யாமல் பலர் பலவிதமாய்க் கூறியிருக்கிறார்கள். பல வகையான சான்றுகளையும் கொண்டு இவர் காலம் இன்னது தான் என்று இங்கு தெளிவுபடுத்தியிருக்கிறோம். கச்சியப்பருடைய மாணாக்கர் இருவர். இரு வேறு உபதேச காண்டங்கள் தமிழில் பாடினார்கள் என்பது வரலாறு; இதையும் 15 ஆம் நூற்றாண்டு வரலாறு, புராண இலக்கியப் பகுதியில் விளங்கக் காணலாம்.

கடவுள் மாமுனிவர் என்ற துறவி இக்காலத்தே வாழ்ந்து, மாணிக்க வாசகர் சரித்திரத்தை, திருவாதவூரடிகள் புராணம் என்ற பெயரால், ஒரு சிறப்பான சிறு பக்தி நூலாக இக்காலத்தே பாடினார். இவரைப்பற்றிய கதைகள் அபூர்வமாய்ச் சொல்லப்படுகின்றனவேயன்றி, இவர் காலம் வரையறை செய்யப் பெறவில்லை; 15 ஆம் நூற்றாண்டு வரலாறு காண்க.

இக்காலப் பகுதியில் இவ்வாறு பல புராணங்கள் தோன்றி இருப்பினும், தலபுராணங்கள் தோன்றவில்லை.

# கச்சியப்ப சிவாசாரியர்

பிற்காலத் தமிழ் இலக்கியங்களுள் மிகச் சிறப்பான இடம் பெறுகின்ற தமிழ் நூல்கள் சில. அவற்றுள் கச்சியப்ப சிவாசாரியர் பாடிய கந்தபுராணமும் ஒன்று. தொடை நயத்தாலும், சொல் நயத்தாலும், பொருள் நயத்தாலும், சமயக்கருத்து விசேடத்தாலும் ஆன்றோர் ஒன்பது புராணங்களைச் சிறப்பாகக் கருதி வந்திருக்கிறார்கள். அவை முறையே பெரிய புராணம், கோயிற்புராணம், கந்த புராணம், சேது புராணம், சீகாளத்திப் புராணம், காஞ்சிப் புராணம், தணிகைப் புராணம், திருவிளையாடற் புராணம், குற்றாலப் புராணம் என்பவையாகும். "புராண நன்னயக மாக் கொள்க இஞ்ஞாலமெல்லாம்" என்று கந்த புராணத்தை ஆசிரியரே கூறுகிறார். பெரிய புராணத்தைச் சேக்கிழார் "மாக்கதை" என்று தொடக்கத்தில் குறிப்பிட்டமைபோல, இவரும் தம் புராணத்தை "அறுமுகமுடைய தோர் அமலன் மாக்கதை" எனச் சிறப்பித்தார்.

## கச்சியப்ப சிவாசாரியர் வரலாறு

இத்தகைய சிறப்பமைந்த கந்தபுராணத்தைப் பாடிய கச்சியப்ப சிவாசாரியருடைய சரித்திரம், சென்ற நூற்றாண்டின் இறுதியில் சிதம்பரம் கண்கட்டி மடம் மறைஞான தேசிகர் மரபில் வந்த வாமதேவ முருக பட்டாரகர் என்பவரால் 173 செய்யுட்கள் கொண்ட புராணமாகப் பாடப்பட்டுள்ளது; 1917 இல் அச்சாயிற்று. அதிலுள்ள சரித்திரம் பின் வருமாறு:

காஞ்சிபுரம் குமரக் கோட்டத்தில் சிவபக்தி மிக்க காளத்தியப்ப சிவாசாரியர் என்பவர் அர்ச்சகராக இருந்தார். முருகன் திருவருளால் கச்சியப்பர் அவர் புதல்வராய்ப் பிறந்தார். முறையே கல்வியறிவும், சமய அறிவும் நிரம்பப்பெற்று வளர்ந்து, இவர் பக்குவ மெய்திய காலத்

தில், ஒருநாள் இவருடைய கனவில் முருகப் பெருமான் தோன்றி, "அன்பனே, நீ வடமொழிக் காந்தபுராணத்தில் உள்ள ஆறு சங்கிதைகளுள் சங்கர சங்கிதையின் முதற் காண்டமாகிய சிவரகசிய காண்டத்தில் உள்ள நமது சரித்திரத்தைக் கந்தபுராணம் என்ற பெயரிலே தமிழில் விரித்துப் பாடுவாயாக" என்று கட்டளையிட்டு, திகைத்த கச்சியப்பருக்கு "திகடசக் கரச் செம்முகம் ஐந்துளான்" என்ற முதல் அடியும் எடுத்துக்கொடுத்து மறைந்தார்.

விழித்தெழுந்த கச்சியப்பர், முருகன் திருவருள் இருந்தமையை எண்ணி வியந்து, மகிழ்ந்து ஆனந்தக் கூத்தாடினார். மறுநாள் காலையில் குமரக் கோட்டத்தில் முருகன் பூசையை முடித்துக்கொண்டு அவன் சந்நிதியிலேயே "திகடசக் கரச் செம்முகம் ஐந்துளான்" என்ற அவ்வடியையே தொடக்கமாக வைத்துப் புராணம் பாடத் தொடங்கினார். தினமும் நூறுபாடல் பாடி, பாடல் எழுதிய ஏட்டை முருகப் பெருமான் திருவடியில் வைத்துவிட்டுக் கோயிலைப் பூட்டிக்கொண்டு சென்றுவிடுவார். மறுநாள் காலையில் வந்து ஏட்டை எடுத்து மேலும் எழுத முற்படும்போது, இவர் முன்பு எழுதியிருந்த இடங்களில் சில திருத்தங்கள் பெருமான் திருக்கரத்தால் செய்திருக்கவும் காண்பார்.

மிகுந்த மகிழ்ச்சியடைந்து, பணிவு நிரம்பிய உள்ளத்தராய், மேலும் எழுதிக்கொண்டு போவார். இங்ஙனமாக இவர் கந்தபுராணம் முழுமையும் விரிவாக ஆறு காண்டங்களாகவும், பத்தாயிரத்து முன்னூற்று நாற்பத்து ஐந்து பாடல்களாகவும் பாடிமுடித்தார்.

உரிய காலத்தில் ஒருநாள் நல்ல நேரத்தில் குமாரப் பெருமான் சந்நிதியில் அரங்கேற்றம் தொடங்கிற்று. "திகடசக் கரச் செம்முகம் ஐந்துளான்" என்ற முதற் செய்யுளை வாசித்து, "விளங்கா நின்ற பத்துத் திருக்

கைகளும் செவ்விய ஐந்து திருமுகங்களும் உடைய சிவபெரு மான்" என்று பொருள் உரைத்தார். அப்போது சபை யில் இருந்த பொறுமைக் குணம் உடைய ஒரு புலவர், "ஐயா, திகழ் தசம், திகடசம் எனப் புணர்வதற்கு விதி தொல்காப்பியம் முதலிய எந்த இலக்கண நூலிலும் இல் லையே!" என ஆட்சேபித்தார். அதற்கு ஆசிரியர், "ஒக்கும். ஆனல் இது என் வாக்கன்று, இது குமரக்கடவுள் அடி யெடுத்துக் கொடுத்த வாக்காகும்" என்றார். ஆனல் புலவர் அதை ஒப்புக்கொள்ளவில்லை. "நீர் கூறியதை நாம் ஏற்க முடியாது. குமரக் கடவுளே இங்கே வந்து சொல்ல வேண்டும். அல்லது வேறு இலக்கண நூலில் இதற்கு விதி காட்டவேண்டும். இல்லையேல் அரங்கேற்றம் நடைபெறலாகாது" என்று தடுத்தார். கச்சியப்பர் அதற்கு மேல் ஒன்றும் சொல்லத் தோன்ருதவராய், "நாளை இவ் வாறு செய்விப்போம்" என்றுகூறி, வருத்தத்தோடு அரங் கேற்றத்தை அன்று நிறுத்திக்கொண்டார்.

அவர் கனவில் அன்று முருகப்பெருமான் தோன்றி, "அன்பனே, சோழநாட்டில் வழக்கில் உள்ள வீரசோழியம் என்ற இலக்கண நூலில் இதற்கு விதியுள்ளது. நாளை சோழ தேசப் புலவன் ஒருவன் அதை இங்குக் கொணர்ந்து காட்டுவான்" என்று கூறி மறைந்தார்.

அவ்வாறே மறுநாள் அரங்கேற்றத்துக்காகச் சபை கூடியபோது, கச்சியப்பர் தம் கனவில் நிகழ்ந்ததைச் சபை யில் கூறினர். அச்சமயம் புதிய புலவனொருவன் அங்கு வந்தான். "நீர் யாவர்? உமது கையிலுள்ள நூல் யாது?" என்று சபையோர் கேட்க அப்புலவன், "யாம் சோழ நாட்டிலிருந்து வந்தோம். இது வீரசோழியம் என்ற இலக் கண நூல்" என்று கூறினன். உடனே முந்தைய நாள் ஆட்சேபித்த புலவர் எழுந்து சென்று அதை வாங்கிப் பார்க்க, அதில் சந்திப்படலம் 18 ஆம் பாடலில் "திகடசம்"

என்று புணர்வதற்கான விதி இருக்கக் கண்டார். சபை யோரும் இதைப் பார்த்தறிந்து மிகுந்த மகிழ்ச்சியடைந் தார்கள். அந்நேரம், வந்த புலவர் மறையவே, புலவராக வந்தவர் முருகக் கடவுளே என்று எல்லோரும் உணர்ந்து, கச்சியப்ப சிவாசாரியரைப் போற்றி வணங்கினார்கள். பின்னர் உரிய காலத்தில் அரங்கேற்றம் நிறைவேறி ஆசிரி யருக்கு எல்லோரும் பெருஞ்சிறப்புச் செய்தார்கள்.

புலவர் புராணமுடையார் பெரும்பாலும் இந்த வரலாற்றை ஒட்டியே பாடி இருக்கிறார். கச்சியப்பர் குமரக் கடவுளின் ஆறெழுத்தை உருவேற்றி உபாசிக்க, அவரது நிட்டையில் முருகன் தோன்றி, "வாக்குத் தந்தோம் நீ பாடு" என்று சொல்ல, அவ்விதமே இவர் பாடி வந்தார். தினமும் முருகன் ஏட்டில் பல இடங் களில் சொற்களையும் கதைப் போக்கையும் மாற்றி அமைத் தார். பின்னர் அரங்கேற்றத்தின்போது, "சிறப்பு முகரம் தகரம் சேர்ந்து டகரமான புணர்ப்பு முதற்சீர் இடமே வந் தது கொடுமை. இப் புண்ணிய காவியத்தை நீ கெடுத்தாய். புகன்றதுவும் கேட்டதுவும் போதும், அகன்று போதி" என்று ஒரு புலவன் கொடுஞ்சொல் சொன்னான். அக்கணம் தெக்கண திசைப் புலவன் திருவுருக்கொண்டு இலக்கண நூலோடு வேலோன் வந்தனன். இலக்கணம் கண்டு நூல் அங்கீகரிக்கப்பட்டது—என்பது இவர் கூறும் வரலாறு.

**கந்தபுராணக் கதை**

கந்த புராணம் ஆறு காண்டங்களை உடையது. முறையே உற்பத்தி, அசுர, மகேந்திர, யுத்த, தேவ, தக்ஷ காண்டங்கள். இதனுள் முருகப்பெருமானது தோற்றமும் வீரமும், சூரபதுமனாதியர் கொடுமையும், அவர்கள் வதமும், முருகப்பெருமான் அருளும், பிறவும் விரித்துரைக்கப்படு கின்றன.

## உற்பத்திக் காண்டம்

தேவர்கள் தக்கன் வேள்வியிற்பெற்ற சாபத்தால் சூர பதுமன் முதலிய அசுரர்களால் துன்புற்ருர்கள். சிவபிரானிடம் அவர்கள் விண்ணப்பிக்க அவர்களுக்கு அருள்செய்த பெருமான், ஆறுமுகங்களிலிருந்தும் ஆறு பொறிகளைத் தந்தார். ஆறும் சரவணப்பொய்கையில் ஆறு குழந்தைகளாய் விளையாட, உமாதேவியார் கையால் எடுத்தணைத்த போது ஒன்ருகிக் கந்தன் என்ற குமாரக் கடவுள் ஆயின. வீரபாகு முதலான வீரர் துணையாகத் தோன்றினர்கள். நாரதர் வேள்வியில் தோன்றிய ஆட்டினைக் கந்தர் அடக்கி அதன்மீது அமர்ந்தார். பிரணவப் பொருள் அறியாத பிரமனைக் குட்டிச் சிறைசெய்து பின்னர் விடுவித்து, தம் தந்தைக்குப் பிரணவப் பொருள் உணர்த்தினர். பின்னர் சூரன் தம்பியாகிய தாரகனோடு போரிட்டு அவனையும் அவனது கிரவுஞ்ச மலையையும் வீழ்த்தினர். செந்தில் அடைந்து தங்கியிருந்தார்.

## அசுர காண்டம்

பிரமன் புதல்வனை தக்கன் தவஞ்செய்து உமையை மகளாகப்பெற்றுச் சிவபெருமானையே மருமகனுகவும் பெற்ருன். ஆனல் பின்னர் பெருமானை மதியாது வேள்விசெய்த போது அவ்வேள்வி நந்திதேவரால் அழிந்தது. "சூரபதுமனல் தேவர் துன்புறுக" என்று அவர் சாபமிட்டார். மற்ருெரு முறை, அவன் யாகம் செய்தபோது முன்போலவே பெருமானை மதியாத குற்றத்தால் வீரபத்திரரால் வதைக்கப் பெற்ருன். பிரமன் மகனை காசிபனுக்கும், திதிக்கும் மக்களாக சூரபதுமன், சிங்கமுகன் முதலியோர் பிறந்திருந்தனர். தென்திசைக் கடலில் வீரமகேந்திரம் என்ற நகரை வகுத்து அங்கிருந்து சூரன் அரசுபுரிந்தான். இந்திரன் மனைவியாகிய இந்திராணியை, சூரன் தங்கையாகிய அசமுகி என்பவள் தன் தமையனிடம் சேர்க்க முயன்று

தண்டனை பெற்றாள். சூரன் தேவர்கள் அனைவரையும் சிறைப்படுத்தினான். இது அசுரகாண்டத்தின் பொருள்.

**மகேந்திர காண்டம்**

செந்தில் நகரில் இருந்த குமரவேள், இந்திரனை விடுவிக்க எண்ணி, வீரவாகு தேவரைத் தூதனுப்பியும் பயனில்லை.

**யுத்த காண்டம்**

பின்னர் போர் தொடங்கிற்று. சூரன் புதல்வர் மடிந்தார்கள். பானுகோபன் சிறந்த புதல்வன்; இந்திரஜித்துப் போன்றவன்; அவனும் மடிந்தான். சூரனுடைய மாயைகள் எல்லாம் குமரவேளிடத்தில் பயனற்றுப் போயின. இடையே, குமரவேள் சூரபதுமனுக்குத் தமது உண்மை வடிவைக் காட்டினபோது, சூரன் நல்லுணர்வு பெற்று உண்மையறிந்தான். அந்த நிலையிலும், மானங்காப்பது காரணமாகப் போர்புரிந்து உயிர் விடுவதே மேல் என்று துணிந்தான்.

போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன புவன மெங்கும்
போயின பொருள்கள் முற்றும் வெளிப்படுகின்றவிண்ணோர்
நாயகன் வடிவம் கண்டேன் நற்றவப் பயன் ஈதன்றோ.

சூழுதல் வேண்டுந் தாள்கள் தொழுதிடல் வேண்டு மங்கை
தாழுதல் வேண்டுஞ்சென்னி துதித்திடல்வேண்டுந் தாளும்
ஆழுதல் வேண்டுந் தீமை அகன்றுநான் இவற்கா ளாகி
வாழுதல் வேண்டும், நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.

என்பதாகச் சூரபதுமன் துதிக்கும் இரு பாடல்களையும் காண்க. பின்னர் சூரன் பல மாயங்கள் செய்து முடிவில்

கடல் நடுவுள் மாமரமாக நின்றான். அப்போது குமரப் பெருமான் உடம்பிடி என்ற ஆயுதத்தை அவன்மீது ஏவி, அம்மரத்தை இரு கூறாக்கி வீழ்த்தினார். இரு கூறுகளும் மயிலாகவும் சேவலாகவும் தோன்றவும், பெருமான் மயிலை ஊர்தியாகவும், சேவலைக் கொடியாகவும் ஏந்தி, வெற்றி யோடு செந்திலுக்கு மீண்டு, திருப்பரங் குன்றத்தில் சென்று தங்கினார்.

### தேவ காண்டம்

பின்னர் திருப்பரங் குன்றத்தில் அவர் இந்திரன் வளர்த்த தெய்வயானை அம்மையைத் திருமணம் செய்து கொண்டார். இது தேவகாண்டம்.

### தக்ஷ காண்டம்

தக்கயாக சங்காரம் முதலிய பல கதைகள் சொல்லப் பட்டுள்ளன. முடிவில் முருகன் தணிகை மலையில் இருந்த காலத்து, அங்கு வெள்ளி மலைச்சாரலில் குறவரால் வளர்க் கப்பெற்றுத் தினைப்புனங் காத்திருந்த வள்ளியம்மையை மணம் செய்தார். பின்னர் கந்த வெற்படைந்து இரு தேவியரோடும் உறைந்து அன்பர்களுக்கு அருள்செய்து வருகின்றார்.

இராமாயணம் ஆறு காண்டம் ஆனதுபோலவே, கந்த புராணமும் ஆறு காண்டமாய் இயன்றுள்ளது. அதிலுள்ள சொற்களும் தொடரும் உரைகளும் அணிகளும் வருணனை களும் கருத்துக்களும் அப்படியே இதில் அமைக்கப் பெற் றுள்ளன. அன்றியும், பாத்திரங்களும், கட்டங்களும், கதைப் போக்கும், அதை ஒட்டியே இதனுள் அமைந்துள்ளன. இலக்கியச் சுவை யுணர்ச்சி மிக்க ஆராய்ச்சியாளர் கம்ப இராமாயணத்தைப் பார்த்து எழுதியதே கந்தபுராணம் என்று கூறுவர். இக் கூற்று மெய்யன்று என முழுமை யும் ஒதுக்கிவிடத் தக்க தன்று.

## நூற் சிறப்பு

கந்த புராணத்தின் இலக்கியச் சுவை பற்றிப் பலர் பலவேறு கருத்துக் கொண்டிருக்கிறுர்கள். இது இயல்பே. பெருங்காப்பியமானது, யார் எந்தக் கண் கொண்டு நோக்குகிறுர்களோ அந்தவிதமாக வெல்லாம் காட்சி தரும், சுவை தரும், கருத்து வேற்றுமை இருப்பது இயல்பே என் பது உண்மை.

சிலர் கந்தபுராணம் கவிதைச் சுவையுடையதன்று எனச் சொல்வார்கள். ஆனுல் இலக்கியம் என்று ஆராயும் போது ஒவ்வொரு நூலும் ஒரு காலத்தில் தோன்றி சில குறிக்கோளை நிறைவேற்றிக் காட்டி இருப்பதைக் காண லாம். கந்தபுராணம் ஒரு பெருநூல். இதைப் பொது வாக மற்றப் பெருநூல்களோடு ஒப்பிடுவது முறையாகாது. இது வந்த நோக்கம் வேறு. முருகப் பெருமானுடைய கதையை விரித்துக் கூறுவதே இதன் நோக்கம். இந் நோக்கம் நன்கு கைகூடி மக்களிடையே இந்நூல் மிக்க பிரசாரம் பெற்றுவிட்டது. சென்ற தலைமுறை வரையிலும் சோழநாட்டிலும் ஈழ நாட்டிலும் சைவ இல்லங்கள் அனைத் திலும் இந்நூல் பூசிக்கப்பட்டு வந்தது. வீடுகள் தோறும் நூலைப் படித்தார்கள். ஊர்கள் தோறும் கந்தபுராணப் பிரசங்கங்கள் நடைபெற்றன. மக்கள் சமய உணர்வு நிரம்பப் பெற்றவர்களாக வாழ்ந்தார்கள். நூலின் சிறப்புக்கு இதனினும் வேறு சான்றுகள் வேண்டுவதில்லை.

மேலும், இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் அரசாங் கத்தில் உத்தியோகம் வகித்திருந்த கோடீசுவர ஐயர் என்பவர், கந்தபுராணக் கீர்த்தனை என்ற பெயரால் இந் நூல் முழுமையும் இசைத் தமிழாகப் பாடி, பல இடங்களில் இப் பாடல்களைப் பாடிச் கச்சேரி செய்துவந்தார்.

இவை யாவும், இந்த நூலுக்கு நாட்டில் இருந்த செல் வாக்கை நன்கு எடுத்துக் காட்டுகின்றன. கந்தபுராணத்தில்

சொல்லப்படாத பொருள் எதுவும் இல்லை என்று ஒரு பழமொழி நாட்டில் வழங்குகிறது; "கந்தபுராணம் நம் சொந்தப்புராணம்;" "கந்தபுராணத்தில் இல்லாதது எந்தப் புராணத்தும் இல்லை."

> புதுமயில் ஊர்பரன் புராணத் துற்றிடாக்
> கதையிலை அன்னது கணிதம் அன்றரோ.

ஆராய்ந்து பார்த்தால், வைணவர்களுக்குக் கண்ணன் சரித்திரம் உரைக்கும் பாகவதமானது எப்படி ஒரு பேரிதிகாசமோ அப்படியே சைவர்களுக்குக் கந்தபுராணமானது ஒரு சைவப் பேரிதிகாசமாகும். இவ்விதிகாச சிருஷ்டியில் கச்சியப்பர் பெரும் வெற்றி பெற்றிருக்கிறார். கிருஷ்ணனுடைய பாலலீலைகள் ஒப்பக் குமாரப் பெருமானுடைய பாலலீலைகள், பாகவதத்திலுள்ள கதைகள் போலக் கந்தபுராணத்திலுள்ள எண்ணற்ற சிவபராக்கிரமக் கிளைக் கதைகள். இராமாயணக் கதைக்கு எல்லா விதத்திலும் ஒத்தே முருகப்பெருமானுடைய வரலாறும் சூரபதுமன் வதமும் நடைபெறுகின்றன. இராமாயண—பாகவதங்களில் காணப் பெறும் வைணவசமயத் தத்துவங்களை யொப்பவே சைவ சித்தாந்த சமயத் தத்துவங்கள் கந்தபுராணத்தில் மிக்க விளக்கமாய்ச் சொல்லப்பட்டுள்ளன. சமயத் தத்துவம் கூறும் சைவப் புராணங்களுள் இதுவே முதலாவது, இதுவே சிறந்தது.

கச்சியப்பரைச் சிறப்பித்துப் பாடியோருள் மூவர் குறிப்பிடத்தக்கவர். இவர்கள் அந்தகக் கவி வீரராகவ முதலியார், சம்பந்த சரணாலய முனிவர், படிக்காசுப் புலவர் ஆகியோர். மூவரும் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தோர்.

வீரராகவர் தமது சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில் அம்புலிப் பருவம் 10ஆம் பாடலில், "அம்புலியே, இங்கு நீ வந்தாயானால் கந்தபுராணக் கடலைக் காணலாம்" என்பர்.

பொருஞ் சூரனைப் பெருங்கதை முதற் கந்தப்
புராணக் கடற் காணலாம்
அயில்வனச் செய்கையின் மயில் வனக் கந்தனுடன்
அம்புலி ஆட வாவே.

இதே நூற்றாண்டில் தருமபுரத்திலிருந்து மைசூர் சென்ற தம்பிரானாகிய சம்பந்த சரணாலய முனிவரென்பவர் அங்கு உள்ள அரசன் வேண்டுகோளுக் கிணங்கி கந்தபுராணம் ஆறு காண்டங்களையும் சுருக்கி அதே ஆறு காண்டங்களில் 1048 பாடல்களாகப் பாடினார். இது **கந்தபுராணச் சுருக்கம்** என்ற பெயருடையது. இதனுள் தமக்கு மூலநூலாகிய கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியரை இவர் பின் வருமாறு துதிக்கிறார்.

போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன் கட் பொருள தான
மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்ய துயர்ப் பிறவியெனும் வெம்மைதீரத்
தாதவிழ் பூம் பொழிற்காஞ்சிக் குவட்டில் ஏறிச்
சலதிஅமு தினைநிகர் செந்தமிழ தான
காதல் மழை பொழிந்த அருட் கொண்டலான
கச்சியப்பன் இருபாதம் உச்சி வைப்பாம்.

இக் கந்தபுராணச் சுருக்கமானது தோன்றிய நாள் முதல் இன்றுவரை பொருள் சிறப்பாலும், தொடைச் சிறப்பாலும், தமிழ்ச் சிறப்பாலும், தமிழ் நாடெங்கும் மக்கள் விரும்பிப் பயிலும் சிறந்த காவியமாக இருந்து வருகிறது. சிறந்த சொல்லழகு அமைந்த நூல்.

தொண்டை மண்டல சதகம் பாடியவர் பாடிக்காசுப் புலவர். இவர் தாம் பாடிய இந்நூலுள் ஒரு பாடலில் கச்சியப்பர் வரலாற்றைக் கூறுகின்றார். கந்தபுராணம் பதினாறு

ஆயிரம் பாடிய கச்சியப்பரைக் காஞ்சியிலிருந்த 24 கோட்டத்தாரும் தந்தப் பல்லக்குச் சிவிகையில் சுமந்து குமரவேள் சந்நிதிக்குக் கொண்டுவந்து அரங்கேற்றச் செய்தனர் என்கிறார்:

**அந்தப் புரமும் அறு நான்கு கோட்டத்தாரு மொன்ருய்க்**
**கந்த புராணம் பதின யிரஞ் சொன்ன கச்சியப்பர்**
**தந்தப் பல்லக்குச் சிவிகையும் தாங்கியச் சந்நிதிக்கே**
**வந்தப்புராணம் அரங்கேற்றினர் தொண்டை மண்டலமே.**

**நூலின் காலம் :**

தமிழாராய்ச்சி எவ்வளவோ வளர்ச்சி பெற்றிருப்பினும், அடிப்படையான சில ஆராய்ச்சிகளின் முடிவுகள் இன்னும் நிலைபெற்றபாடில்லை. தொல்காப்பியர் காலம், திருவள்ளுவர் காலம், மாணிக்கவாசகர் காலம் போன்றன இன்னும் ஆட்சேபத்துக்கிடமின்றி வரையறை செய்தாக வில்லை. கம்பர் காலமும் இருவேறு கருத்துடையவர்களின் சொற்போர்களில் சிக்கி அல்லலுறுகின்றது. இவ்வாறு தோன்றியுள்ள இவ்வல்லல்களுக்குக் காரணம் ஆராய்ச்சியாளருடைய சொந்த விருப்பு வெறுப்புக்கள் மேலோங்கித் தாம் கொண்ட கருத்தை நிலைநாட்ட முயல்வதும், பிறர் கூறும் கருத்தைச் செவ்வனே ஆராய்ந்து உண்மை காணும்போது அதை ஒப்புக்கொள்ள மறுப்பதும் ஆகும்.

இவ்வாறு தெளிவில்லாத அல்லலுக்குட்பட்ட காலங்களில் கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர் காலமும் ஒன்ருக இதுவரை இருந்து வருகிறது.

கச்சியப்ப சிவாசாரியருடைய வரலாறு ஒரே விதமாக இருந்தபோதிலும், அவர் காலம் பலரால் பலவேறு விதமாகச் சொல்லப்பட்டுள்ளது. 7ஆம் நூற்ருண்டு முதல் 17ஆம் நூற்ருண்டு வரையில் அவருடைய வரலாற்றைப்

பலர் பல விதமாகக் கூறியிருக்கிறார்கள். இவ்வரலாறுகள் அனைத்தையும் ஆராய்ந்து, இவர் காலம் இன்னதுதான் என்று வரையறை செய்வது எளிதன்று.

கந்தபுராணக் கால ஆராய்ச்சி என்று கூறும்போது, நான்கு நூல்களை ஒன்றாய்ச் சேர்த்துப் பெருங்குழப்பம் உண்டுபண்ணுகிற நிலையை நாம் காண்கிறோம். இவை சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், பெரியபுராணம், கந்த புராணம் என்பன. நான்குமே பேரிலக்கியங்கள், பெருங் காப்பியங்கள். இவற்றுள் நான் முந்தி, நீ முந்தி என்றுள்ள போட்டியைச் சிக்கறுப்பது மிகவும் கடினமாயிருக்கிறது. நான்கையும் பற்றி வழங்கும் சில வரலாறுகளை இங்குக் குறிப்பிட்டு மேல் கால ஆராய்ச்சிக்குச் செல்வோம். பின் வரும் இரு பாடல்களும் அபியுக்தர் வாக்கு என்ற தலைப் போடு சிறப்புப் பாயிரமாகக் கந்த புராணத்தில் சேர்க்கப் பட்டுள்ளன:

உச்சிதமாம் சிவ வேதியன் காளத்தி ஓங்கு மைந்தன்
கச்சி யப்பன் செய்த கந்தபுராணக் கலைக்கடலின்
மெச்சிய கல்வி மதியும் வெண்தாமரை மேவு மின்னும்
இச்செவி நாவினுக் கின்பாம் அமுதும் எழுந்தனவே.

வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்த சிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதநிறை சிவ மறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவனானேன்
வாதமுறு புலவர்குழாம் மகிழ்ந்து போற்ற
மதிமலி மாடம் புடைசூழ் குமர கோட்டத்து
ஏதமறு சகாத்தம் எழு நூற்றின் மேலாய்
இலகு கந்த புராணம் அரங் கேற்றி னானே.

முதல் பாடலானது நூற் பெயர், ஆசிரியர் பெயர், அவர் குலம், தந்தை பெயர் ஆகியன கூறுகின்றது. மற்றது

அரங்கேற்றிய இடம் காலம் கூறுகின்றது. இரண்டாம் பாடலில் கந்தபுராணம் அரங்கேற்றிய காலம் "சகாத்தம் எழு நூற்றின் மேல்" என்று சொல்லப்பட்டுள்ளது. சகாப்தம் எழுநூறு என்பது கி. பி. 778 ஆகும். சுந்தரமூர்த்தி சுவாமிகளின் காலம் ஏழாம் நூற்றாண்டின் இறுதியும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கமும் என்று கூறுகின்றார்கள். கச்சியப்பர் கந்தபுராணத்தில் சுந்தரமூர்த்திக்கு வணக்கம் சொல்லியிருப்பதால் அவருக்குப் பிற்பட்டவர் என்று கருத வேண்டும். ஆகவே, கி. பி. 778 இதற்குப் பிற்பட்ட காலமாதலால், இந்த அளவோடு மட்டும் ஆராய்ச்சியை நிறுத்தினால், இப்பாடலில் கூறிய காலத்தை நாம் ஒப்புக்கொள்ள முடியும். ஆனால் மேலும் நாம் அறிகின்ற பல செய்திகளால் இது பொருந்தாது. ஒன்று மாணிக்கவாசகரை ஆசிரியர் துதித்திருக்கிறார். இவர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டாகும் என்பது இன்று ஆராய்ச்சியாளர் காண்கிற முடிவு. இம் முடிவின்படி பார்த்தால் கந்தபுராணத்தின் காலம் கி. பி. 778 ஆக இருத்தல் இயலாது. எப்படியும், சகாத்தம் எழுநூறு என்பது பிழையே யாகும்.

கம்பர் இராமாயணம் அரங்கேற்றிய காலம் "எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின் மேல்" (சகம் 807 = கி. பி. 885)[1] என்று நேரே பொருள்படும்படி உடன் காலத்ததான ஒரு சிறப்புப் பாயிரம் கூறியுள்ளபடியால், சைவப் பற்றுதலுடைய ஒரு மெய்யன்பர் கந்தபுராணம், கம்பராமாயணத்துக்கு முந்தியதாக இருக்கட்டுமே என்ற பழமையில் எழுந்த பற்றுதலால், கந்தபுராணம் சகம் எழுநூற்றின் மேலாய் (கி. பி. 778க்கு மேல்) அரங்கேற்றப்பட்டது எனப் பொருள் தருமாறு பிற்காலத்தில் இச் செய்யுளைச் செய்து

---

1. கச்சியப்பரைக் காலத்தால் முன்னே கொண்டுபோகும் முயற்சி போலக் கம்பரை பின்னே தள்ளும் முயற்சியும் நடந்திருக்கிறது.

வைத்தார் என்றும் அறிஞர் கருதுவர்; இப் பாட்டின் நடையும் இக் கருத்துக்குத் துணை செய்கிறது.

சிந்தாமணியின் கால வரையறை செய்ய முயன்றவர்கள் பொதுவாகக் காலத்தைக் குறிப்பிடுவதில்லை. பழைய நூல் என்ருல் அதற்குப் பெருமை அதிகம் என்ற தவருன உணர்வே சில உண்மையான முடிவுகளை ஒப்புக்கொள்ள அஞ்சுவதற்குக் காரணம். மேற்குறிப்பிட்ட நான்கு நூல்களுள், திருத்தக்கதேவர் செய்த சீவகசிந்தாமணி சைன நூல். ஆதலால் அது பற்றிப் பூசல் அதிகம் இல்லை. அந்நூல் செய்யப் பெற்ற காலம் 10ஆம் நூற்ருண்டின் தொடக்கம் என்று வையாபுரிப் பிள்ளையவர்கள் செய்த முடிவு, சிந்தாமணி சைவசித்தாந்த மகாசமாஜம் மூலப் பதிப்பில் தெளிவாக்கப்பட்டுள்ளது.

ஏற்பட்ட பூசல்கள் எல்லாம் மற்றைய நூல்களைப் பற்றித்தான். கம்பராமாயணம் வைணவ நூல்; பெரிய புராணமும் கந்தபுராணமும் சைவ நூல்கள். ஆகவே இப்போட்டியில் ஈடுபட்டவர்கள் பல காரணங்களைக் கொண்டு ஒருவரை ஒருவர் முந்தவும் பின் தள்ளவும் பார்த்தார்கள். முதலாவது கம்ப ராமாயண-சிந்தாமணிப் போட்டி. இப்போட்டியும் பிறபோட்டிகளும் இங்கு நாம் செய்யும் ஆராய்ச்சிக்குப் பொருத்தம் அன்று. ஆனுலும், இவற்றை ஓரளவு சுட்டிச் சென்ருல்தான் மேல் கருத்துக்கள் விளக்கமுறும். கம்பர் சிந்தாமணியிலிருந்து ஓர் அகப்பை அள்ளிக்கொண்டார் என்று முதன் முதலாக, கம்பரிடத்தில் மிகுந்த பக்தி பூண்டவரும் வைணவத்தில் மிகுந்த பற்றுக் கொண்டவரும் ஆகிய பேராசிரியர் திருமணம்-செல்வ கேசவராய முதலியார் எழுதினர். இதிலிருந்து விளைந்தது அனர்த்தம். "எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழு" என்ற கம்பராமாயணச் சிறப்புப் பாயிரத்துள், சகாப்தம் எண்ணூற்றேழு —ஆயிரத்து நூற்று ஏழு ஆயிற்று. கி. பி. 885 என்பது கி. பி. 1185 ஆயிற்று. மற்ெருரு சிறந்த வைணவர்

இதற்குத் துணைவந்தார். பாஷா கவிசேகர மகாவித்து வான் ரா. ராகவையங்கார் அவர்கள் மூவலூர்க் கோயிலில் எழுதப்பட்டுள்ள வேறு கதை குறித்த வெண்பாப் பாட்டு ஒன்றைக் கம்ப ராமாயணத்துக்கு உரியதாகத் தவருகப் புரிந்துகொண்டு, கம்ப ராமாயணத்தின் காலம் 12 ஆம் நூற்ருண்டின் இறுதி என்று முடிவு செய்தார்; வையா புரிப் பிள்ளை போன்ருேரும் இதையே சொல்வர். (இதை சோமசுந்தர தேசிகரும், டி. கே. சிதம்பரநாத முதலியாரும் திட்டமாக மறுத்திருக்கிருர்கள்.) பெரிய புராணத்தின் காலம், இரண்டாம் குலோத்துங்கனின் காலமாகிய 12ஆம் நூற்ருண்டின் முற்பகுதி என்று பலராலும் ஒப்புக்கொள் ளப்பெற்றுள்ளது. இதிலும் அபிமானம்பற்றி வேற்றுமை எழுந்துள்ளது. 13 ஆம் நூற்ருண்டில் ஆண்ட மூன்ரும் குலோத்துங்க சோழன்காலம் என்று சதாசிவ பண்டாரத் தார் எழுதியிருக்கிருர்! சைவ ஆராய்ச்சியாளருக்கு, கம்பர் தங்கள் காவியமாகிய பெரிய புராண காலத்துக்கு முந்தியவர் என்று ஒப்புக்கொள்ள மனமில்லை; ஆகவே அவரைக் காலத்தில் முன்னூறு ஆண்டு பின் தள்ளியதில் அவர்களுக்கு ஒரு திருப்தி.

இந்த நிலையில், கந்தபுராணத்தின் காலம் கம்பர் காலத்துக்கு முன் இருக்க வேண்டும் என்பது கந்தபுராண பக்தர்களுடைய கருத்து. காரணம் செவி வரலாருக ஒரு கதை கேட்கப் படுகின்றது என்று சொல்லுவார்கள். கம்பர் சிறந்த சைவர்; அவர், முருகன் கதைப்பெருமையை ஒட்டித் தாமே கந்தபுராணம் பாட எண்ணியிருந்தார். அப் போது, கச்சியப்ப சிவாசாரியர் முன்னமே கந்தபுராணம் பாடிவிட்டார் எனக்கேட்டு, "கச்சியப்பர் என்னும் சுருவா கந்தபுராணக் கடலைக் கலக்கிற்று?" என்று கேள்வி கேட்டுவிட்டுப் பின்னரே இராமாயணம் பாடத்தொடங் கிஞராம். இக் கதையைச் சொல்லி இது காரணமாக, கம்ப ராமாயணம் 12 ஆம் நூற்ருண்டின் இறுதியில் பாடப்

பட்டது; ஆகவே கந்தபுராணம் 12 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாடியிருக்க வேண்டும் என்று முடிவு செய்வார்கள். இக்கதையும் முடிவுகளும் ஆராய்ச்சிக்குப் பொருந்துவன இல்லை.

கந்தபுராணம்பற்றி, செங்குந்தர் பிரபந்தத் திரட்டுப் பதிப்பாசிரியர் இரண்டு குறிப்புக்கள் தந்திருக்கிறார். ஒன்று, "திருச்சேய்ஞலூர் நாவினால் மழுவெடுத்த ஞானப் பிரகாச தேசிகர் சிவரகசிய காண்டத்தை மொழி பெயர்த்து, ஸ்ரீ கந்தபுராணம் என்னும் பெயரில் கலியுகாதி 4286இல் (கி. பி. 1185) பாடி இருக்கிறார். இது பால காண்டம், யுத்த காண்டம், தேவகாண்டம் என்னும் முப் பகுதியையுடையது...... இது திருவேரகமலைச் சுவாமி நாதன் கட்டளைப்படி தேசிகர் பாடியதாகப் புராணத்துள் காணப்படுகிறது. இது பாடிய நீண்ட நாட்களுக்குப் பின் கச்சியப்பர் தாம் எந்தக் காரணத்தைக்கொண்டு கந்த புராணத்தைப் பாடினார் என்பதை ஆராயவேண்டும்."

இதற்கு ஆட்சேபங்கள் பல. இத்தேசிகர் கந்தபுரா ணம் பாடினார் என்ற செய்தி யாரும் கேள்விப்படாதது. அப்படி ஒரு நூலோ ஏடோ யாரும் பார்த்ததில்லை. அப் படியே சுவாமிநாதன் கட்டளையுமிருந்து அப்படி ஒரு புராணமுமிருந்து, அதில் இங்குக் குறித்த மூன்று காண் டங்கள் மட்டும் இருக்குமானால், அது வட மொழிக்கு நேரான மொழிபெயர்ப்பு ஆகாது எனத் திட்டமாகச் சொல்லலாம்.

இனி இரண்டாவது குறிப்பு "ஒட்டக் கூத்தர் கி. பி. 1070 இல் அரசாண்டிருந்த முதலாம் குலோத் துங்க சோழன் காலத்தவர். கச்சியப்ப சிவாசாரியர் கி. பி. 16 ஆம் நூற்றாண்டின் நடுப் பகுதியில் இருந்த அந்தகக் கவி வீரராகவ முதலியார் காலத்தவர்; அது 'தமிழ் நாவலர் சரிதை' என்னும் நூலுள், கவி வீர

ராகவன் காஞ்சிபுரத்திலே படித்தபோது கந்தபுராணம் கச்சியப்பர் பாடியது என்னும் தலைப்பின்கீழ்,

பொங்குதமிழ் அயோத்தியில் வாழ் தசரதனென்—
போனிடத்தும் பூதூர் வேந்தன்
துங்கவடு கன்னிடத்தும் வீரரா—
கவரிருவர் தோன்றி ஞரால்
அங் கொருவன் பல கலைமான் எய்திடப் போய்
வசை பெற்ருன் அவனி பாலன்
இங்கொருவன் பல கலைமான் எய்திடப் போய்க்
கவியினுல் இசை பெற்ருனே.

என்று வரும் விருத்தம் ஒன்றினுல் அறியலாகும்.'' இதில் காணப்படும் எல்லாக் கருத்துக்களும் பிழையானவை. ஒட்டக்கூத்தர் வாழ்ந்தது முதற் குலோத்துங்கன் காலமன்று; விக்கிரமன் (1118-1133); இரண்டாம் குலோத்துங்கன் (1133-1150); இரண்டாம் ராசராசன் (1146-1163) ஆகிய மன்னர் காலங்களில் இருந்தவர். அந்தகக் கவி வீரராகவ முதலியார் இருந்தது 17ஆம் நூற்ருண்டு. கந்தபுராணம் கச்சியப்பர் என்பவர் நம் கச்சியப்ப சிவாசாரியர் செய்த கந்தபுராணத்தைப் பிரசங்கம் செய்வதில் வல்லவராயிருந்த ஒரு பௌராணிகரே அன்றி, கந்தபுராண நூலாசிரியரான கச்சியப்ப சிவாசாரியர் அல்லர்.

இங்ஙனமாக இவ்விரண்டு குறிப்புக்களும் பொருந்தாதவை.

இனி, கந்தபுராணத்தின் காலத்தை அறிவதற்கான சான்றுகளைச் சிறிது ஆராய்வோம். முதலாவது, அருணகிரிநாதர் பாடல்கள் கச்சியப்பர் காலத்துக்குப் பின் எல்லையாக அமைகின்றன. திகடசக்கரம் என்ற சந்திக்கு இலக்கணமாகச் சொல்லப்பட்ட வீரசோழியத்தைக் கச்சியப்பர்

தம் பாடல்களில் குறிப்பிடாவிட்டாலுங்கூட, அருணகிரி நாதர் குறிப்பிடுகிறார்.

மருவு புலவனார் கவிக்குளேசிறு
  வழுவ தறைமகா சபைக்குளேகியெ
  வகைய பெயரதா இலக்கணவிதி – மொழிவோனே. 525

முற்பட்ட இலக்கண நூலிடை
  தப்புற்ற கவிக் கெனவே அவை
  முற்பட்டு புதுத்துறை மாறிய – புலவோனே. 793

என்ற இரண்டு திருப்புகழ்ப் பாடல்களிலும் புலவனுடைய கவியில் ஆட்சேபம் கூறிய சபைக்குள்ளே முருகப் பெருமான் புலவராக வந்து இலக்கணவிதி மொழிந்தான் என்று அருணகிரிநாதர் கூறுகின்றார். அருணகிரிநாதர் காலம் கி. பி. 1400க்கு சற்றுப் பின்னாகலாம். ஆகவே கச்சியப்பர், அருணகிரி நாதருக்குச் சம காலத்தவர் அல்லா விட்டாலும், சற்றுமுன் வாழ்ந்தவர் ஆவார்.

வீரசோழிய காலம் ஆகிய 1070 க்கும் அருணகிரி நாதர் காலமாகிய 1400க்கும் இடையில் வாழ்ந்தவர் கச்சியப்பர் என்று நாம் முடிவு செய்யலாம்.

கந்தபுராணம், பெரிய புராணத்துக்குப் பிற்பட்டதென்பதில் கருத்து வேற்றுமை இருக்கமுடியாது. சமயாசாரியர் நால்வருக்கும் வணக்கம் கூறியபின் கச்சியப்பர் திருத்தொண்டர் வணக்கம் கூறுகிறார் (1-2-24):

அண்டரும் நான்முகத் தயனும் யாவரும்
கண்டிட அரியதோர் காட்சிக் கண்ணவாய்
எண்தரு சிவனடி எய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

திருத்தொண்டர் என்ற கருத்து சேக்கிழாருடன் தொடங்குகின்றது. ஆதலால், திருத்தொண்டர் பதமலர்

*தொழுகின்ற இவ்வாசிரியர் சேக்கிழாருக்குப் பிற்பட்டவ ரென்பதில் ஐயமில்லை.*

*சுந்தரமூர்த்தி பாடிய திருத்தொண்டத் தொகை, நம்பி யாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி, சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணம் ஆகிய மூன் றும் முறையே தொகை வகை விரி எனக் கருதுவது சைவ மரபு. கச்சியப்பர் தொகை வகை விரி என்ற சொற்களை உபயோகிப்பதும் இங்குக் கருதத் தக்கது:*

> ஆனதன் னியற்கைகள் அனைத்தும் கண்ணுதல்
> வானவன் ஆகம மறையின் வாய்மையான்
> மேனிகழ் தொகைவகை விரிய தாகவே
> தானருள் புரிந்துளன் தலைவி கேட்கவே.

*இனி, சைவசமயக் கருத்துக்கள் கந்தபுராணத்துள் கூறப்பட்டுள்ள முறையை ஆராய்வது, கால நிர்ணயத்துக் குப் பின்னும் உதவியாயிருக்கும்.*

*இன்று சைவ சமயம் என்று நாம் பேசுவது, சமயா சாரியர்களான அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாச கர் ஆகிய நால்வரும் பாடிய அருட்பாசுரங்கள் உருவாக்கிக் கொடுத்துள்ள தத்துவமும் வாழ்க்கை நெறியும். இந் நால் வருக்கு முன்பும் சைவ தத்துவங்களைப் பாடினோர் இருந்த னர்; உதாரணம் திருமூலரும் காரைக்கால் அம்மையாரும். எனினும், நால்வர் நெறியே உலகில் போற்றப்பெற்று வளர்ந்தது; இவர்கள் கொண்டிருந்த கடவுட் கொள் கையே பின்னர் மெய்கண்ட சாத்திரங்களாகப் பரிணமித் தது என்று நாம் எண்ணுகிறோம்.*

*கடவுள் உயிர் உலகு ஆகிய முப்பொருள்கள், இவற் றின் தன்மைகள், இவற்றுக்கிடையுள்ள தொடர்பு, உயிரா னது எத் தொடர்பைப் பெருக்க வேண்டும், எதை விட வேண்டும், ஏன், இதற்கு வழி யாது, எவர் மூலமாக இந்த வழியை அறிந்து ஒழுகலாம்—என்பன ஆதியான*

கருத்துக்களை முறைப்படுத்தி உரைப்பதே சைவ சித்தாந்த சாத்திரம். தேவார திருவாசகங்களான அருட்பாசுரங் களில் இக் கருத்துக்கள் உள்ளன; ஆனால் முறைப்படுத்திக் கூறப்படவில்லை. அனுபவத்தின் விளைவாக மட்டும் ஆங் காங்கு சுட்டப்படுகின்றன; ஆனால் சாத்திரங்களே சோபான முறைப்படுத்திக் கூறுகின்றன.

கந்தபுராணம் போல் அவ்வளவு சிறப்பாகப் பிறி தொரு புராணம் சைவசித்தாந்தம் கூறுவதில்லை என்று ஆன்றோர் கூறுவார்கள். இப்புராணம், முறைப்படுத்தப் பட்டுள்ள சைவசித்தாந்தக் கருத்துக்களை ஆங்காங்கு கூறு கிறது. திருமந்திரத்திலிருந்து கச்சியப்பர் பல கருத்துக் களை எடுத்துக் கூறுகிறார். எனினும், பொதுவாக இவர் மெய்கண்ட சாத்திரம் கூறும் விளக்கங்களையே கூறுகிறார். சில கருத்துக்களை இங்குக் குறிப்பிடுவோம்.

ஆய்ந்திடத்தக்க பொருள்கள், தொல்பதி ஆருயிர்த் தொகை வான் திகழ் தளை என்ற மூன்று (2.4.3); பதி அரன், பாசந்தன்னில் பட்டுழல் பசு நாம் (6.2.31); ஈசனையே நினைத்து மூவகைப் பாசமது அகல் நெறிபடரச் சிந்தியீர் (6.3.9); பாசத்தளையிற்படுவார் அது நீங்கி மாசற்ற நல் லுணர்வு வந்தெய்த உய்ந்தனர் (4.12.369); உயிர்கள் மூவகை-விஞ்ஞானகலர் பிரளயாகலர், சகலர் (6.23.64); இறைவன் உயிர்களுக்குத் தனு கரண புவன போகங்களை அளிக்கிறான்; உயிர்கள் தோற்றியவாறு ஒடுங்கச் செய் கிறான் (6.1.9); ஈசனுக்கு, உயிர்க்கெலாம் வீடு தந்திடும் கருணையே கருமம் (1.11.34); கருணையால் ஐந்தொழில் செய்கிறான் (6.5.6); இறைவன் உயிர்களுக்குத் தரும் வருத்தமும் அருளேயாகும்: பெற்றோர் தம் பிள்ளைகள்பால் நோயொன்று உற்றிடில் பிறரைக் கொண்டும் உறுதுயர் செய்தும் தீர்ப்பார், மற்று அவர் தம்பால் அன்போ வன் கணோ? அதுபோல, பவங்கள் தீர்க்கவே பரமனும் அலக் கண் செய்கிறான் (1.33.44-5); சாதாக்கிய உரு ஐந்து

*(6.24.230); சத்தி ஐந்து, மகேசுவரபேதம் இருபத்தைந்து (6.5.4.5); நவசத்திகள் (1.128); சோமாஸ்கந்தர் வடிவம்; பிராசாத மந்திரங்கள் (6.52); பிரணவமாகிய மூலமந்திரம் (4.12.376);*

> **ஆங்காகு மெல்லே அருமறையின் தேற்றிய**
> **ஓங்கார மூலத்து உணர்வாய் உறைபவன்.**

*மகாசிவராத்திரி விரதம் (6.5.32); சூரிய நமஸ்காரம் செங்கதிரோன் தனை நோக்கி ஆற்றுகடன் (6.14.71); இறைவன் அருவும் ஆகுவன், உருவும் ஆகுவன், உருவும் இல்லதோர் தன்மையுமாகுவன்; வேதக் காட்சிக்கும் உபநிடத்துச்சியில் விரிந்த போதக் காட்சிக்கும் காணலன் (3.21.126: 127);*

> **தன்னை நேரிலாப் பரம்பொருள் தனியுருக் கொண்டது**
> **என்னை காரணம் என்றியேல் ஐந்தொழில் இயற்றி**
> **முன்னை ஆருயிர்ப் பாசங்கள் முழுவதும் அகற்றிப்**
> **பின்னை வீடுபே றருளுவான் நினைத்த பேரருளே.**

*(3.21.109); நம என்று சொல்லிப் போற்றும் வழிபாடு (1.14.82);*

> **கந்தநம ஐந்துமுகர் தந்தமுருகேசநம கங்கையுமைதன்**
> **மைந்தநம பன்னிரு புயத்தநம நீபமலர் மாலே புனையும்**
> **தந்தைநம ஆறுமுக ஆதிநம சோதிநம தற்பரமதாம் [தார்.**
> **எந்தைநம என்றும் இளையோய் நம குமாரநம என்று தொழு**

*இவ்வாறு கந்தபுராணத்துள் காணப்படும் செய்திகள் எண்ணிறந்தன. பார்த்த மாத்திரத்திலேயே இவை சித்தாந்த சாத்திரங்களின் சாரம் என்பது விளங்கும். பின்னும் சில உதாரணங்களேயும் காணலாம்.*

*சிவஞான சித்தியார் அவையடக்கப் பாடல் (8):*

> **மறையினுல் அயனுல்மாலால்மனத்தினுல் வாக்கால்மற்றும்**
> **குறைவிலா அளவி னுலும் கூறெளுெ தாகி நின்ற**
> **இறைவனர் கமல பாதம்.**

*இதைக் கந்தபுராணம் அப்படியே கூறுகிறது (1.11.96):*

**மறைகளின் முடிவால் வாக்கால் மனத்திஞல் அளக்கொ [ணுமல்**
**நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமலமூர்த்தி.**

*சித்தியார் (323) "ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கன் பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில் லார்" என்ற விடத்துள்ள முதல் மூன்று நிலைகளையும் அப் படியே கந்தபுராணம் முறையாகக் கூறுகிறது.*

**ஈசன் அன்பிலார் பெருந்தகை முனிவரை இகழ்பவர் உயிர்**
**நேசம் என்பன இல்லவர். [மீது**

*"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகஞர் தாம் வருவர்" என்பது சித்தியார் 115; கந்தபுராணப் பாடல் பின்வருவது (6.1.17) :*

**யாதொரு பொருளை யாவர் இறைஞ்சினும் அது போய்**
**ஆதியை அடையும் அம்மா. [முக்கண்**

*ஈசுவரன் எல்லாத் தேவர்களையும் உயிர்களையும் இறு திக்காலத்தில் அழித்துப் படைக்கின்ருன். தான் ஒருவ ஞகவே உயிர்கள் அனைத்தையும் அவை முன்பு தோன்றிய வாறே ஒடுங்கச் செய்து மீளவும் அவனே அவை உயிர் பெறச்செய்து அன்னையும் அப்பனுமாக இருந்து அத னதன் வினைக்கு ஏற்பத் தனுகரணபுவன போகங்களைத் தந்து காத்து வருகின்ருன் என்பது சாத்திரங்களின் சுருக் கமான கருத்து. இதைப் பின்வரும் பாடல் அப்படியே தெரிவிக்கிறது (6.1.9) :*

**அந்தநாள் ஒருவ ஞகி**
**ஆருயிர்த் தொகையைத் தொன்ஞள்**
**வந்தவா ெருடுங்கச் செய்து**
**மன்னியே மீட்டும் அன்னை**
**தந்தையாய் உயிர்கட் கேற்ற**
**தனுமுதல் அளிக்கும் முக்கண்**

எந்தை தன் செய்கை முற்றும்
இனையதென் றிசைக்கற் பாற்றே.

*இனி, தக்ஷகாண்டம் உமை கயிலை நீங்கு படலத்தில் சிவபெருமான் தமது தன்மையை வேத சிவாகமங்களில் சொல்லப்பட்டுள்ளபடி தொகை வகை விரியாக உமாதேவி யாருக்கு உபதேசம் செய்தமை கூறப்பட்டுள்ளது. "சிவ பெருமான் உருவமும், குணமும், செயலுமின்றி நிர்மலமாய் எங்கும் நிறைந்து நிற்பவர். அவர் உயிர்த் தொகைகளின் பாசங்களைப் போக்கத் திருவருட் சத்தியால் திருவுளங் கொண்டார். பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி, ஞானசத்தி என்ற ஐவகைச் சத்திகளைத் தோற்று வித்தார். பின்னர் அருவுருவாகிய நிஷ்கள சகள வடிவ மென்னும் சதாசிவ மூர்த்தி வழியாக ஐந்து சத்திகளி லிருந்து சிவசாதாக்கியம் முதலான பஞ்ச சாதாக்கிய வடிவம் கொண்டார். பிறகு சுத்த மாயையில் நவபேதங் களாகி மூன்று மாயைகளிலிருந்தும் 36 தத்துவங்களைத் தோன்றச் செய்து தோற்றல், அளித்தல், அழித் தல், மறைத்தல், அருளல் என்ற ஐந் தொழில்களையும் மூவகை ஆன்மாக்களுக்காகப் புரிந்து, தத்துவ கணங்களைத் தோன்றிய முறையே ஒடுங்கச்செய்து, தாம் என்றும் ஒரே தன்மையாய் விளங்கி நிற்கின்றார் என்பது மேற்குறித்த சித்தாந்த சாத்திரக்கருத்தின் சுருக்கமாகும். இது பின் வரும் ஆறு பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது (6.5. 3-8):*

உருவொடு குணஞ்செயல் ஒன்றும் இன்றியே
நிருமல மாய்சிவன் நிறைந்து நின்றதும்
பரவிய உயிர்த் தொகைப் பந்தம் நீக்குவான்
ஒருதனிச் சத்தியால் உன்னல் உற்றதும்.

ஐந்தியற் சக்திகள் ஆயி னோர்தமைத்
தந்ததும் அருவுருத் தாங்கி அவ்வழிச்
சிந்தனை அருச்சனைச் செய்தி யாவரும்
உய்ந்திடச் சதாசிவ உருஐந் துற்றதும்.

இருபதின் மேலும்ஐந் தீசன் கேவல
உருவம தாகியே உறைந்த பெற்றியும்
விரவிய குடிலையின் விளைவு செய்துபின்
அருள்புரி மூர்த்திக ளாய பேதமும்.

முந்திய மாயைகள் மூல மாகவே
அந்தமில் தத்துவம் ஆறொ டாறுமுன்
வந்திட அளித்ததும் மரபின் ஐந்தொழில்
சிந்தைகொள் கருணையான் நடாத்துஞ் செய்கையும்.

விதித்திடு மூவகை வியனுயிர்த் தொகை
கதித்திடு தத்துவக் கணங்கள் அங்குளார்
உதித்திடு முறைமையின் ஒடுங்கச் செய்துதான்
மதித்தொரு தன்மையாய் மன்னி நிற்பதும்.

ஆனதன் னியற்கைகள் அனைத்துங் கண்ணுதல்
வானவன் ஆகம மறையின் வாய்மையான்
மேனிகழ் தொகைவகை விரிய தாகவே
தானருள் புரிந்தனன் தலைவி கேட்கவே.

*மேலும், ததீசிப் படலத்தில் ததீசிமுனிவர் "தெய்வங்கள் எல்லாம் பசுக்களே. சிவபெருமான் ஒருவரே பதி. அவரே ஐந்தொழில் புரிபவர். உருத்திரர் போன்றோர் அனைவரையும் உண்டாக்கியவர். பஞ்ச கிருத்திய கர்த்தாக்களை நியமித்து, ஆக்கல் காத்தல் முதலான தொழில்களையும் கற்பித்தவர். உயிர்களிடத்து வைத்த அன்பு காரணமாக ஐந்தொழில் செய்பவர். அநாதியானவர், அருவுருவானவர், என்றும் உள்ளவர், யாவர்க்கும் ஈசர், அவரே பரம்பொருள்" என்று உபதேசிக்கிறார். இங்கு விபூதி, பஞ்சாக்கரம் இவற்றையும் உபதேசிக்கிறார்.*

*இவற்றையும் இங்குக் குறிப்பிடாத இன்னும் பல வேறு சாத்திரக் குறிப்புகளையும் சம்பிரதாயமாகக் கச்சியப்பர் சொல்லியிருப்பதை நாம் கூர்ந்து நோக்கும்போது, இவற்றை அவர் ஆகம வாயிலாக மட்டும் எடுத்துச்சொல்லவில்லை, மெய்கண்ட சாத்திரமென்னும் தமிழிலுள்ள நூல்*

வாயிலாகவே எடுத்துச் சொல்லுகிருர் என்பது தெளிவா கின்றது. ஆகவே, இவர் மெய்கண்ட சாத்திரங்களுக்குப் பின்னர் தோன்றியவர் என்று கருதுதல் வேண்டும். மெய் கண்ட சாத்திரங்கள் என்று நாம் எல்லாவற்றையும் கருதா விட்டாலும் கூட, சிவஞான போதம், சிவஞான சித்தியார் என்ற இரண்டையும் திட்டமாய்க் குறித்ததாகக் கொள்ள வேண்டும். ஞானபோதம் என்ற தொடர் மட்டும் உற்பத்தி காண்டம் மேருப் படலத்தில் ஒரே சந்தர்ப்பத்தில் ஐந்து இடங்களில் வருகிறது. (10, 13, 16, 15, 18 பாடல்கள்.) இதைக் காணும்போது, ஆசிரியர் நினைவில் சிவஞான போதம் இருந்தது என்று எண்ணுதல் பிழை யாகாது. இவற்றின் காலம் 13 ஆம் நூற்ருண்டின் இடைப்பகுதியும், பிற்பகுதியும் ஆகும். எனவே, கச்சியப்ப சிவாசாரியர் காலம் 13 ஆம் நூற்ருண்டிற்கு பிற்பட்டது என்பது உறுதி.

மேலும், கச்சியப்பர் மாணக்கர் இருவர். ஒருவர் கோனேரியப்ப நாவலர்; மற்றவர் ஞானவரோதயர் என்று நாம் அறிகிருேம். இவர்களுடைய வரலாற்றையும் தனியே (15 நூ.) காணலாம். கோனேரியப்பர் கச்சியப்ப ரைப் பாடவில்லை. ஆனல் ஞானவரோதயர் கச்சியப்பரைப் பாடி இருக்கிருர். இவர் துறவியாய் இருந்தவர். கச்சியப்ப ரிடம் கல்விகற்று அருணகிரிநாதரிடம் உபதேசம் பெற்ருர் என்றும் அறிகிருேம்; "வடமொழி சங்கர சங்கிதையில் 13000 கிரந்தம் ஏழு காண்டமாக, கச்சியப்பர் ஆறு காண் டம் 10500 பாடலும், ஞானவரோதயர் ஏழாவது காண்ட மாகிய உபதேச காண்டம் 2500 பாடலும் ஆக மொத்தம் பாடல் 13221" என்ற ஒரு குறிப்பும் ஏடுகளில் கிடைக் கிறது. இருவரும் சேர்ந்து ஏழு காண்டம் பூர்த்தி செய் தமை ராமாயணம் ஏழு காண்டத்தை ஒத்தது. இருவரும் குருவும் சீடருமாக வாழ்ந்தனர் என்ற கருத்தும் இதனல் வலியுறுகிறது.

ஞானவரோதயர் தம் குருவைக் "கருதரிய காஞ்சி வளர் கச்சியப்ப கற்பகத் தாரு" என்று குறிப்பிடுகின்றார். வளர் என்று சொன்னமையால் ஞானவரோதயர் நூல் செய்த காலத்தில் கச்சியப்பர் வாழ்ந்திருந்தார் என்று நாம் கொள்ளலாம். ஞானவரோதயர் அருணகிரிநாதரைப் போற்றுகிறார். ஞானவரோதயரைக் காளமேகப் புலவர் போற்றுகிறார் என்ற வரலாறும் உண்டு. இவர்கள் அனைவருடைய காலமும் 15 ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் சற்று முன் பின்னாக இருக்கலாம். ஆகவே, கச்சியப்ப சிவாசாரியரின் காலம் இக்காலத்துக்குச் சற்றுமுன், அதாவது கி. பி. 1400க்குச் சற்று முன்னாக இருத்தல் கூடும்.

[கச்சியப்ப சிவாசாரியர் பாடிய கந்தபுராண அரங்கேற்றத்தில், முருகப்பெருமான் அடியெடுத்துக் கொடுத்த தொடராகிய 'திகடசக்கரச் செம்முகம் ஐந்துளான்' என்பதன் முதல் தொடரில், திகடசக்கரம் என்ற புணர்ச்சிக்கு இலக்கணம், வீரசோழியத்தைக் கொண்டுவந்து காட்டி நிலைநாட்ட வேண்டியிருந்தது என்பது கச்சியப்பர் வரலாற்றிலேயே முக்கியமான பகுதி. ஆனால் சம்பந்தர் தேவாரத்துள் (ஏழாம் நூற்றாண்டு) திகழ்+தரு = திகடரு, முகிழ்+தரு = முகிடரு எனப் புணர்ச்சி வந்திருக்கின்றமை இங்குக் கருதத்தக்கது :

> முகிடரும் இளமதி அரவொடும் அழகுற முதுநதி
> திகடரு சடைமுடி அடிகள்தம் வளநகர் சேறையே

என்பது (3732) திருச்சேறைப் பதிகத்தின் 10 ஆம் பாடல். இதில் நிலைமொழியும் வருமொழியும் தமிழ். ஆனால் 'திகழ்தசம்' என்ற கந்தபுராணத் தொடரில் நிலைமொழி தமிழ், வருமொழி வடமொழி.]

அத்தியாயம் 13

# இலக்கண ஆசிரியர்

## முன்னுரை

தமிழ் நூற் பரப்பில் மிகவும் சிறப்பான இலக்கண நூல்கள் தொல்காப்பியமும் நன்னூலும். இன்று கிடைக்கிற இலக்கண நூல்களுள் தொல்காப்பியம் பழமையானது. பின் வந்த நன்னூலானது மிகவும் செப்பம் செய்யப்பெற்ற ஒரு பேழை போன்றது. எழுத்து சொல் என்ற இரு பகுதிகளே உடையதாயினும், இது தொல்காப்பியர் தம் முடிபுக்கு ஒத்து, கால மாறுதலுக்கு ஏற்ற விகற்பங்களை யெல்லாம் தன்னகத்தே கொண்டு, செய்து இன்று ஏழு நூற்றாண்டுகள் ஆயினும் கூட, இன்னும் ஒரு செம்மையான இலக்கண நூலாகத் திகழ்வது. இதற்குப் பின் எந்த இலக்கண நூலும் எழுத்து சொல் என்ற பகுதிகளில் இவ்வளவு சிறப்புடையதாக எழுதப் பெறவில்லை.

நாம் இங்குக் கருதுகின்ற காலப்பகுதியில் சிறப்புடைய எந்த இலக்கண நூலும் எழவில்லை என்றால் பொருந்தும். அகப்பொருள் இலக்கணத்தைக் கட்டளைக் கலித்துறையால் கூறும் ஒரு நூல் இக்காலத்தே செய்யப் பெற்றிருக்கிறது; இதன் பெயர் தானும் அறிய வியலாதபடி நூல் சிதைந்து போயிருக்கிறது. **களவியற்காரிகை** என்று வையாபுரிப் பிள்ளை இதற்கு இட்ட பெயரால் இதையும் நாம் இங்குக் கருதுவோம். பாட்டியல் என்ற பகுதியில் (யாப்பில் ஒரு பிரிவு) நவநீதப் பாட்டியல் தோன்றியது. பாட்டியலில் மிகச் சிறு பகுதி யொன்றை மட்டும் வரையறுத்த பாட்டியல் கூறுகின்றது. இவை போக இரண்டு நிகண்டு நூல்கள் இக்காலத்தில் இயற்றப் பெற்றிருந்தன. முந்தியது வெண்பாவாலான உரிச் சொல்

நிகண்டு; காலம் 14ஆம் நூற்றாண்டு. மற்றது கலித்துறையா லான கயாதர நிகண்டு(15 நூ.).

இக்காலத்து எழுதப்பெற்ற இலக்கண உரை நூல் களை உரையாசிரியர்கள் என்ற அத்தியாயத்தில் காண் போம்.

## களவியற் காரிகை

களவியல் என்பது இறையனார் களவியல் என்று வழங்குகின்ற இறையனார் அகப்பொருள் நூல். அகப் பொருள் இலக்கணம் இல்லையே என்று கவலையுற்ற பாண் டிய மன்னனுக்காக மதுரை சோமசுந்தரக் கடவுள் அறுபது அகப்பொருள் சூத்திரங்களைச் செப்பிதழில் எழுதி அளித் தார் என்பது அந்நூல் உரையும் திருவிளையாடல் புராண மும் கூறும் வரலாறு. ஆலவாய்ப் பெருமான் இறையனார் என்ற பெயரைத் தாங்கி மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவருள் தாமும் ஒருவராய் வீற்றிருந்து இந்நூல் செய்தமையால், இது **இறையனார் களவியல்** என்று பெயர் பெற்றது. இதன் உரை நக்கீரர் செய்தார் என்பதும் புராண வர லாறே யாகும்.

எனினும், இச் செய்திகள் கதையளவில் சுவையுடை யனவேயன்றி, வரலாற்று உணர்ச்சிக்குப் பொருந்த மாட்டா. களவியலுரையில் மிக்க அதிகமாய்க் காட்டப் பெற்ற கோவை மேற்கோள் பாடல்கள் **பாண்டிக்கோவை** என்ற ஒரு பழைய கோவைக்குரியனவென்று இப்போது அறிகிறோம். இக்கோவை மதுரையில் அரசாண்டிருந்த பாண்டியன் அரிகேசரி நெல்வேலி வென்றசீர் நெடுமாறனைப் புகழ்வது. இவன் திரு ஞானசம்பந்தர் காலத்தவன். இவ னுடைய காலம் ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி என் பது இப்போது திட்டமாகத் தெரிகின்றது. எனவே, சங்க காலத்தில் (கி. பி. இரண்டாம் நூற்றாண்டுவரை) இருந்த புலவர் பெருமான் நக்கீரர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த

பாண்டியனைப் போற்றுகின்ற பிரபந்தத்தை எடுத்து மேற் கோள் காட்டுதல் இயலாது. களவியல் உரை பத்தாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற தென்பது இன்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகின்ற கருத்து. இவ்வுரையாசிரியர் சங்க நக்கீரர் அல்லர் ; பிற்காலத்தவர். ஒரு வேளை இவ ருக்கும் நக்கீரரென்றே பெயர் அமைந்திருக்கலாம்.

இக்களவியல், நூற்பாவாலான 60 சூத்திரங்கள் கொண்டது. இவ்வறுபது சூத்திரங்களுக்கு நேராக அறு பது கட்டளைக் கலித்துறைகளால் அக்களவியலைத் தழுவி மற்றோர் அகப்பொருள் இலக்கண நூல் எழுதப்பட்டிருக் கிறது. இதற்குச் சிறப்பான உரையும் உண்டு. இந்நூலா சிரியர் பெயரும் தெரியவில்லை, நூற்பெயருங்கூடத் தெரிய வில்லை. அரசாங்கத் தொல்நூல் நிலையத்திற்கு ஏட்டுச் சுவடிகள் சேகரித்த காலத்தில் இந்நூல் பிரதியொன்று ஆழ்வார் திருநகரி மலையப்பப்பிள்ளை என்ற கவிராயரிட மிருந்து பெற்று நாதமுனிப் பிள்ளை யென்பாரால் 1920 இல் காகிதப் பிரதியாக எழுதி வைக்கப் பட்டுள்ளது. நூலின் பெயரே தெரியாமல் இறையனார் அகப்பொருள் விளக்கம் என்று அவர் பெயர் எழுதிவைத்தார். கிடைத்த பகுதியில், முதல் பத்து சூத்திரங்களும், இடையில் சில சூத்திரங்களும், இறுதியில் ஆறு சூத்திரங்களும், இவற்றின் உரைகளும் இறந்துபோயின. கிடைத்த பகுதிகளை மட்டும், காலஞ் சென்ற வையாபுரிப் பிள்ளையவர்கள் செப்பம் செய்து ஒரு நூலாக ஆக்கியிருக்கிறார்கள். உள்ள பகுதி சூத்திரம் 11 முதல் 54 முடிய; இவை கட்டளைக் கலித்துறையில் அந்தாதி யாக வருகின்றன. கிடைத்த துணுக்குக்களை ஒன்று சேர்த்து நல்லநூலாக ஆக்கியிருக்கின்ற பிள்ளையவர்களின் திறனையும் முயற்சியையும் மிகவும் பாராட்டவேண்டும்.

இந்நூலுக்குக் களவியல் காரிகையென்று அவர்களே மரபினை யொட்டிப் பெயர் வைத்திருக்கிறார்கள். யாப்பருங் கலம் என்ற யாப்பிலக்கண நூல் நூற்பாவால் அமைந்து

அதன் பின் அதைத் தழுவிக் கட்டளைக் கலித்துறையில் செய்யப் பெற்றிருந்த நூலுக்கு யாப்பருங்கலக்காரிகை என்று பெயர் அமைந்திருப்பதுபோல, நூற்பாவால் அமைந்த களவியலைத் தழுவிக் கலித்துறையால் இயன்ற நூலுக்குக் களவியல் காரிகை என்று பெயர் அமைத்தது மிகவும் பொருத்தமே.

இப்படி ஒரு நூல் இருப்பது பலருக்கும் தெரியாது. நூலினும் பார்க்க அதன் உரை தமிழ் இலக்கிய உலகத்தில் மிகவும் சிறப்பான இடம் பெறுவதற்குரியது. உரையாசிரியர் மிகவும் விரிவாக மேற்கோள்களைத் தந்திருக்கிருர். மேற்கோள் நூல்கள் 35; பெரும்பாலன இன்று கிடைக்காதவை. அவற்றின் பெயர்கூட வேறுவகையில் இன்று அறிதற்கு இயலாதனவாய் உள்ளன. இப் பெயர்களால் தமிழ்நூற் பரப்பு எத்துணைப் பெரியதாய் இருந்தது, எத்தனை நூல்கள் இறந்துபோயின என்பது நன்கு விளங்கும்.

மேற்கோள் நூல்களில் தெரிந்தவை பின்வருவன: களவியல், ஐங்குறுநூறு, கலித்தொகை, குறள், யாப்பருங்கலக்காரிகை, குறுந்தொகை, தமிழ்நெறி விளக்கம், திருக்கோவையார், திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திவாகரம், நந்திக்கலம்பகம், நற்றிணை, நெடுந்தொகை, புறப்பொருள் வெண்பாமாலை, தொல்காப்பியம் என்பன. இப் பண்டைய நூல்களில் காலத்தால் பிந்தியது புறப்பொருள் வெண்பாமாலை ஒன்றே. இதன் காலம் 10-11 ஆம் நூற்றுண்டாகும். தமிழ்நெறி விளக்கத்தையும் அதன் பகுதியான பொருளியலையும் இக்காரிகையுரையாசிரியர் பெயர் சுட்டி எடுத்துக் கூறுகிருர். இவரது குறிப்பால் அந்நூல் ஒரு பிரமாண இலக்கண நூலாகுமென்று தெரிகிறது. அன்றியும் அவ்விளக்கமும் அதன் மேற்கோளாய் வந்துள்ள பொருளியல் என்ற பெயரமைந்த பாடலும் ஒரே ஆசிரியர் செய்தன என்றெண்ணுமாறும் உள்ளன. இது பிற்கால நூல் என்பது தெளிவு. காலம் 11 ஆம் நூற்றுண்டின்

தொடக்கமாயிருக்கலாம் ; நூல் முழுதும் கிடைக்கவில்லை. கிடைத்த பகுதியை டாக்டர் சாமிநாதையரவர்கள் அச்சிட்டிருக்கிறார்கள்.

மேற்கோள் நூல்களில் அறியப்பெறுதன பின்வருவன: அகத்திணை, அரையர் கோவை, இன்னிசை மாலை, ஐந்திணை, கண்டனலங்காரம், கிளவித் தெளிவு, கிளவிமாலை, கிளவி விளக்கம், கோயிலந்தாதி, சிற்றட்டகம், திணைமொழி, தில்லையந்தாதி, நறையூரந்தாதி, பல்சந்தமாலை, பொருளியல், மழவை எழுபது, வங்கர் கோவை என்பன. பழம்பாட்டு என்பன 33 பாடல்கள் இங்குள்ளன. இவற்றுள் பல, வேறு வகையால் அறிதற்கு இயலாதன. இங்குக் கூறியுள்ள எல்லாப் பாடல்களும் அகத்திணைப் பாடல்களே.

இறையனார் களவியலில் வரும் மேற்கோள் பாடல்கள் பாண்டிக்கோவை என்ற பெயருடைய ஒரு கோவைக் குரியன வென்று இக்காரிகை உரையினால்தான் திட்டமாய்த் தெரியவந்தது. இவ்வுரையில் மிகப் பலவான-சுமார் 30 -புதிய பாடல்கள் அக்கோவைக்குரியனவாக இருந்தன. இவை யாவும் இப்போது தனி நூலாக மிக்க நன்முறையில் வே. துரைசாமி ஐயரால் அச்சிடப்பெற்றுள்ளன. (இப்பதிப்பில் சேர்க்க வேண்டிய வேறு சில பாடல்களும் உள்ளன.)

மேலே குறித்த புதிய நூல்கள்பற்றிச் சில சொற்கள் கூறலாம். இவற்றுள் சிற்றட்டகம் பொருளியல் என்ற இரண்டும் நூற்பாவாலான இலக்கணங்கள். சிற்றட்டகம் கிடைக்கவில்லை. பொருளியல் தமிழ்நெறி விளக்கத்தின் பகுதியே. தில்லையந்தாதி நறையூரந்தாதி இரண்டும் சிவபரமானவை. கோயிலந்தாதி திருவரங்கத்திருமாலைப் போற்றுவது. அரையர் கோவை ஒரு வள்ளலைத் தயாபரன் தஞ்சை என்று குறிப்பிடுகின்றது. இத்தஞ்சை, தஞ்சை வாணன் கோவை கூறும் தஞ்சையன்று. மூன்று பாடல்கள் வங்கர்

கோவை என்ற பெயரால் குடந்தையில் வாழ்ந்த வங்கர் குலோத்தமனைப் புகழ்கின்றன. மழவை எழுபது, திரு மழ பாடிச் சிவபெருமானைத் துதிப்பது. இவை யாவும் கலித் துறை.

பிற நூல்கள் யாவும் வெண்பா நூல்கள். இவற்றுள் கிளவி என்ற பெயரால் வந்த மூன்றும் அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாக எழுந்தனவோ என்று எண்ணத் தோன்றுகின்றது. கிளவி விளக்கம் வன்னுடன் என்ற தலைவனையும், கிளவித் தெளிவு தில்லை நகரையும், வடகொங்கில் திங்களூரையும் குறிப்பிடுகின்றன. குடந்தை யைக் குறிப்பிடும் இரண்டு பாடல்கள் தெரிகின்றன. நூல் பெயர் தெரியவில்லை. குடந்தையந்தாதி என்ற ஒரு நூல் இருந்து இறந்துபோயிற்று என்று வெள்ளியம்பலவாணத் தம்பிரான் கூறுகிறார்; அந்நூலாயிருக்கலாம். கண்டனலங் காரம் என்ற நூல் பொன்னி நாட்டு மன்னன் கண்டன் பூபால தீபன் என்று புகழும்; இரண்டாம் இராசராசனுக் குக் கண்டன் என்ற பெயர் உண்டு என்பது கருதத்தக்கது. இவன் காலம் 1146-63.

பிற தனிப்பாடல்களில் வரகுணனது நாங்கை அதிகன் சீவலவன் என்ற பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

களவியற்காரிகை காட்டும் பல்சந்த மாலையைப் பிர பந்த இலக்கியம் என்ற அத்தியாயத்தில் விரிவாக ஆராய் வோம். அதன் காலம் 1325-50 ஆதல் பொருந்தும் என்று குறிப்பிட்டிருக்கிறோம்.

இப் பல்சந்த மாலையைக் காரிகை உரையாசிரியர் எட்டிடங்களில் திருக்கோவை பாண்டிக் கோவையோடு ஒருங்கு வைத்து மேற்கோள் காட்டுகிறார். இதை மிக்க சிறப்பாக அவர் கருதினார் என்பது தெளிவு. எனவே, காரிகை உரையாசிரியர் சுமார் 50 ஆண்டுகளேனும் கழித்து வாழ்ந்தார் என்று நாம் கருதுவது பொருந்தும். அதாவது இவர் காலம் 1375-1400 ஆகும்.

இந்நூல் ஆசிரியரே உரை செய்திருக்கலாம் என்று எண்ணவும் இடமுண்டு. ஆனால் இதுபற்றி முடிவு செய்வதற்குச் சான்றுகள் இல்லை. எங்ஙனமாயினும் உரை தோன்றுவதற்குக் குறைந்தது 25 ஆண்டுகளேனும் சென்றிருக்கலாம். இது பொருந்துமாயின் காரிகையின் காலம் 1350-75 ஆகும்.

இங்குக் கருதுகின்ற 14-15 ஆகிய இரு நூற்றாண்டுகளில் பாட்டியல் இலக்கணங்களும் நிகண்டுகளும் தோன்றியிருக்கின்றன. 12 ஆம் நூற்றாண்டில் நாற் கவிராச நம்பி அகப்பொருள் விளக்கம் செய்தார். இறையனார் களவியலுக்குப் பின் தோன்றி அதற்கு முன்னிருந்த தொல்காப்பியம் பன்னிரு படலம் ஆகிய அகத்திணை இலக்கணங்களைத் தழுவி, இந் நம்பியார், இவ்விலக்கணங்கள் நூற்பாவால் இயன்றிருக்க, தாம் கட்டளைக் கலித் துறையால் அகப்பொருள் விளக்கம் செய்தார். இது நம்பியகப் பொருள் என்றே வழங்குகிறது. இது தோன்றிய நாளாக இதைக் கல்வியாளர் அதிகம் பயிலுகின்றார்கள். இவரை யடுத்துப் பின் வந்த நம் காரிகையாசிரியர் தாமும் இறையனார் களவியலுக்குப் பின்னூலாக, கட்டளைக் கலித்துறையால் ஓர் இலக்கண நூல் செய்தார் என்றும், அதன் காலம் முற் குறித்தவாறு 1350-75 ஆகலாமென்றும் நாம் இப்போது அறிகிறோம்.

உரை சிறப்பான உரை என்று முன்னமே குறிப்பிட்டோம். உரையின் முகப்பிலுள்ள ஆசிரிய விருத்தம் நெல்வேலி வேய் முத்தரை வணங்குவதால், இவர் திருநெல்வேலியினர், சிவ பக்தர் என்று அறிகிறோம். தொடக்கத்தில், காட்சி என்ற துறையை அறிமுகப் படுத்துமிடத்தில், இவர் பல வரிகள் களவியலுரையிலிருந்து அப்படியே எடுத்தமைத்துக் கொண்டிருக்கிறார். இது இயல்பே. இவர் உரையில் விளக்கம் எழுதும் வாய்ப்புக்கள் மிகவும்

குறைவு. ஆகவே இவரைப் பற்றி நாம் அறியவும் வாய்ப்பு இல்லை. எனினும் இவருடைய இயல்புகளை ஒரு தன்மை நன்றாய் எடுத்துக் காட்டுகிறது. துறையைக் குறிப்பிட்டு அத் துறைக்கு மேற்கோள் செய்யுள் தருமிடத்தில் முதலாவதாகத் திருக்கோவையார், இதன் பின் இரண்டாவதாக, தெய்வத்தைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட செய்யுள் கிடைக்குமானால் அது; உதாரணம் திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, தில்லையந்தாதி, கோயிலந்தாதி இவை 6 பாடல்கள்; பின்னர் பாண்டிக் கோவை; பல்சந்த மாலை; பின் பிற கோவைகள்; அகவற்பாக்கள் இருப்பின் அவை; கடைசியில் வெண்பாப் பாடல்கள். இந்த முறைப்படி தவறாது இவர் மேற்கோள் அமைக்கிறார். நடராசப் பெருமானைத் தலைவராகக் கொண்ட கோவையாருக்குப் பின் தெய்வத்தைப் போற்றும் அகப் பொருட் பாடலையே முடிந்தவரை இவர் கூறுகின்றமையால் தெய்வபக்தி மிக்கவர் என்று இவரைக் கருதுகிறோம். கோயிலந்தாதி திருவரங்கத்துத் திருமாலைப் போற்றுவது; இவர் சிவபக்தராயினும் சமரச நோக்குடையவர் என்று அறிகிறோம். பரந்த கல்வி கேள்வியுடையவர் என்பது மட்டுமே இவரைக் குறித்துச் சொல்லத் தக்கது.

[பதிப்பு: களவியற்காரிகை என்ற பெயர் சூட்டி வையாபுரிப்பிள்ளையவர்கள் பதிப்பித்தது, 1931.]

## நவநீதப் பாட்டியல்

13-16 நூற்றாண்டுகளிடையே பல பாட்டியல் நூல்கள் தோன்றின. அவற்றுள் இதுவும் ஒன்று. நூல் முழுமையும் இன்று அச்சில் உள்ளது. விரிவான நூல். பல உரைகளோடு கூடியது; ஆகவே முக்கியமானது என்று ஆன்றோர் கருதியமை தெளிவு.

பாட்டியல் என்பது, பாட்டினாலான நூல்களுக்கு அமைய வேண்டிய இலக்கணங்களைத் தொகுத்துக் கூறுவது.

இது பொதுவாகப் பிரபந்தங்களைக் கூறும் பிரபந்த வகைகள், அவற்றின் இலக்கணம், பாடுவதற்கான முறை, பொருத்தங்கள், கேட்டற்குரியார், அவையின் இயல்பு முதலியவற்றை முறையாகக் கூறும். அகத்தியர் பாட்டியல், பருணர் (வாருணர்) பாட்டியல் என்ற பெயருடைய பழமையான பாட்டியல் இலக்கணங் கூறும் நூல்கள் போன்றவை பல முன்னம் இருந்தன என்று அறிகிறோம். ஆனால் இப்போது கிடைக்கவில்லை. பன்னிரு பாட்டியல் என்ற பழைய நூலில் சில பகுதிகளே இன்று கிடைக்கின்றன. இவை யாவும் நூற்பாவால் ஆனவை.

அடுத்து வந்தது வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல். இது வெண்பாவினால் ஆனது. இதன் பின்னர்த் தோன்றியதே நாம் இங்குக் கருதும் நவநீதப் பாட்டியலாகும். இது கலித்துறையால் ஆனமை பற்றிக் கலித்துறைப் பாட்டியல் என்றும் பெயர் சொல்லப்படும். இது பொருத்தவியல் (முதன் மொழி இயல்), செய்யுள் மொழி இயல், பொது மொழி இயல் என்ற மூன்று பிரிவுகளை உடையது. பாடல் தொகை, பிரதிக்குப் பிரதி வேறுபடுகிறது.

இந்நூல் பாடியவர் நவநீதநடர் என்பவர் என்று இதன் பாயிரம் கூறும். பழைய உரைகளுள் ஒன்று இவர் நவநீத நாட்டு அரிபத்தனை சிறப்புப் பெயரையுடைய ஆசீர்வாத முள்ளான் என்று கூறுகிறது. இவர் திருமாலடியவர் என்று இவர் பெயராலும் நூற் பெயராலும் அறிகிறோம். (நவநீதம்—வெண்ணெய்; நவநீத நடன்-கண்ணபிரான்.) 'நாட்டிய வேதத்தவன் நவநீத நடன்' என்று பாயிரம் கூறுகின்றமையால், இவர் நடனத் தொழில் பயிற்றுகின்ற நட்டுவர் குலத்தவர் எனக் கருதலாம். இதுவும் பொருத்தமே: நாட்டியத் தொழிலில் பாட்டின் பொருத்த இலக்கணம் முதலாயின தேவைப்படுதலால்.

இப்பாட்டியலையும் இதற்கு முன் தோன்றிய பாட்டியல்களையும் உரைகளையும் பின் வந்த சிறப்பான நூலாகிய சிதம்பரப் பாட்டியலையும் (இது 16 நூ; விருத்தப்பாவால் பரஞ்சோதி என்பவர் பாடியது) ஒரு சேர வைத்து நோக்கும் போது, பாட்டியல் மரபு இருவகையாக இருந்தது என்றும் ஒன்று அகத்தியர் வழி, மற்றது இந்திரகாளிய வழி என்றும் அறிகிறோம். வச்சணந்தி மாலை இந்திரகாளிய வழி நூல் என்றும், நவநீதப்பாட்டியலும் சிதம்பரப் பாட்டியலும் அகத்தியர் பாட்டியலின் வழிநூல் என்றும் புலப்படுகின்றன. பழைய உரைகள் குறிப்பிடும் பல்வேறு பாட்டியற் சூத்திர மேற் கோள்களால் பாட்டியற் பயிற்சி என்பது பண்டைக் காலத்தில் தமிழ்ப் புலவரின் கல்வியில் முக்கியமான அங்கமாயிருந்த தென்றும் நாம் உணர்கிறோம்.

நவநீதப் பாட்டியல் 108 கலித்துறைகளை உடையது. இதனுள் சொல்லப்பட்ட பிரபந்தங்களின் தொகை 63. பிற்காலத்தில் இந்நூலில் 27 பாடல்கள் இடைச் செருகலாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

கி. பி. 1635 இல் பாடப்பெற்ற சிவந்தெழுந்த பல்லவராயன் உலா என்ற பிரபந்தம், 'தொண்ணூற்றாறு கோலப் பிரபந்தங்கள் கொண்ட பிரான்' என்று தலைவனைக் கூறுகிறது. இதனால் அக்காலத்தில் 96 பிரபந்தம் என்ற வரையறை ஏற்பட்டு விட்டதெனத் தெரிகிறது. இதற்கு முன் 13 ஆம் நூற்றாண்டில் பாடப்பட்ட வச்சணந்தி மாலை 96 என்று தொகுத்துக் கூறவில்லை. ஆகவே நவநீதப் பாட்டியலானது 16 ஆம் நூற்றாண்டுக்கு முன்னும் வச்சணந்தி மாலையின் காலமாகிய 13 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னும் தோன்றியது என்று நாம் முடிவு செய்யலாம்.

இதற்கு வேறு ஒரு வகையிலும் ஆதரவு கூற முடியும். பாட்டியல் இலக்கண நூல் பாடியவர்களுள் கால முறைப்படி முதலில் நூற்பா, பின்னர் கிரமமாக வெண்பா,

கலித்துறை, விருத்தப்பா என்ற நியதிப்படி நூல் செய்தார்கள் என்று தெரிகிறது. பன்னிரு பாட்டியலும் அதற்கு முந்தித் தோன்றியவையும் நூற்பாவினால் ஆனவை. வச்சணந்தி மாலை (13 நூ.) வெண்பா, இறுதியில் வந்த சிதம்பரப் பாட்டியல் (16 நூ.) விருத்தப்பா; ஆகவே இடையிலுள்ள காலத்தில் கலித்துறையினால் ஆன நவநீதப் பாட்டில் செய்யப்பட்டது என்று நாம் கருதுவது பொருத்தமாகும். எனவே, நவநீதப் பாட்டியலின் காலம் இடைப்பட்ட காலப் பகுதியாகிய 14 ஆம் நூற்றாண்டு என்று ஏற்படுகிறது.

முதல் இயல் மட்டும் வெளியிட்ட 1908 ஆம் ஆண்டுப் பதிப்பில் 'அந்தணர்க்கு நாலாறு' என்று ஒரு வெண்பா பாடல்களின் இடையில் காணப்படுகிறது; இது இடைச் செருகல் போலும்.

நவநீதப் பாட்டியலுக்கு இரு பழைய உரைகள் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. இரண்டின் உரையாசிரியர் பெயரும் தெரியவில்லை. இவற்றுள் முதல் உரை மிகவும் பழமையானது. இவ்வுரைகளில் பல பாட்டியல் நூற்பாடல்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. அவை பின்வருவன: அவிநயனார் கலாவியல், அணியியல், இந்திர காளியம் (இந்திர காளியார்), கல்லாடம் (கல்லாடனார் கலாவியல், கல்லாடனார் வெண்பா), செய்யுள் வகைமை, திருப்பிரவாசிரியர் தூக்கியல், பருணர் பாட்டியல், பொய்கையார் கலாவியல் (பாட்டியல்), மாமூலம், முள்ளியார் கவித் தொகை என்பன. இவற்றுள் பல, நவநீதர் காலத்துக்கு முற்பட்ட நூல்கள் என்றும், சில அவருக்குச் சமகால நூல்கள் என்றும் நாம் கருத இடமுண்டு. இந்த நூல்களில் எதுவுமே இப்போது கிடைக்கவில்லை. சில நூல்களைக் குறித்து வேறிடங்களில் அறியவும் வழியில்லை. மேற்குறித்தவற்றுள் பருணர் பொய்கையார் முள்ளியார் பாடல்கள் அதிகமாக ஆளப்பட்டுள்ளன.

பாட்டியல் என்பது கலாவியல் என்று வழங்கப்பட்ட தென்றும் தெரிகிறது. இப்பெயர்களுள் சில பன்னிரு பாட்டியலிலும் வந்துள்ளன. பாட்டியல் செய்த கல்லாடனார் யார் என்பதும் தெரியவில்லை. அப்படியே பருணர் பரணரா, இவர் யார் என்பதும் விளங்கவில்லை. எனினும், அக்காலத்து அதாவது 10-14 ஆகிய நூற்றாண்டுகளில், கவி பாடுவோருக்குத் திட்டமான இலக்கண வரையறை ஏற் படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு பல ஆசிரியர் பாட்டியல் நூல்கள் செய்தார்கள் என்பது மட்டும் நன்கு விளங்குகின்றது.

## வரையறுத்த பாட்டியல்

மூன்று பாடல்கள் பாயிரமும் ஏழு பாடல்கள் நூலாக வும் கொண்ட 10 பாடல்களோடு அமைந்த ஒரு சிறு பாட் டியல் நூற்பகுதியாகும். இது வச்சணந்தி மாலையோடு சேர்த்துப் பதிக்கப் பெற்றிருப்பதை நோக்க, இதுவும் ஒரு முழு நூலின் சிறு பகுதியோ என்று கருதத் தோன்று கிறது. பத்துப் பாடல்களும் அந்தாதித் தொடை. ஆனால் மண்டலித்து வரவில்லை. இந்நூல் கட்டளைக் கலித்துறையா லானது. இதற்குப் பழைய உரையும் உண்டு. இப்பகுதி ஒரு விரிந்த பாட்டியல் நூலில் ஓர் இயலே என்றும் அந் நூல் முழுமையும் கிடைக்கவில்லை என்றும் கருதத் தோன்றுகிறது.

இந்த நூலானது சீர் எழுத்து பொன் பூ திரு திங்கள் மணி நீர் சொல் கங்கை வாரணம் குஞ்சரம் உலகு பார் தேர் என்ற 15 மங்கலச் சொற்களையும் அவற்றின் பரியாயச் சொற்களையும் எந்த எந்த முதல் எழுத்தைப் பெயராக உடையாருக்கு அமைத்துப் பாட வேண்டுமென்று வரை யறை செய்து உணர்த்துவதால் இப்பெயர் பெற்றது.

இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை ஆனால் தாம் எடுத்த முதல் பாட்டிலேயே குரு வணக்கம் கூறு கின்றார்:

**பார் கொண்ட சோதியன் சம்பந்த மாமுனி பாதமலர்**
**நேர் கொண்டிறைஞ்சி நிகழ்த்துகின் றேன்நெடுநூல்சுருக்கி**
**ஏர் கொண்ட சொற்புலவோர் செய்த பாட்டியல் கற்கமிக்க**
**சீர் கொண்ட மாமதி யில்லா தவர்க்குத் தெரிவுறவே.**

*இப்பாடலால் இவர் சம்பந்த மாமுனிவர் மாணுக்கர் என்பது விளங்குகிறது. இச் சம்பந்த முனிவர் சிற்றம்பல நாடிகள் மாணுக்கராய் பழுதை கட்டிச் சம்பந்த பண்டாரம் என்ற பெயரோடு சீகாழியில் ஞானசிரியராய் 14ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவர்; சிவானந்த மாலை என்ற நூலின் ஆசிரியர். எனவே, இதே காலத்தில் உத்தேசம் 1375-1400 க்குள் நூல் செய்யப் பெற்றிருத்தல் கூடும். ஆசிரியர் பெயரால் இப் பாட்டியல் சம்பந்தப் பாட்டியல் என்றும் வழங்குவதுண்டு.*

*சம்பந்த மாமுனிவர் மாணுக்கர் பலர்; ஒருவர் சம்பந்த சரணலயர், தத்துவ விளக்கம்செய்தவர். மற்றொருவர் தருமபுரம் குருஞான சம்பந்தருக்கு நான்கு தலை முறை முந்திய ஆசாரியரான சிவபுரம் ஞானப் பிரகாசர்; இவர்களைப் போன்ற மற்றொரு சிறந்த மாணுக்கர் வரையறுத்த பாட்டியலாசிரியர் என்று நாம் கருதலாம்.*

*மற்றொரு மரபும் இக்கால அமைதிக்குப் பொருந்தியதாயுள்ளது. இலக்கண நூல்கள் பலகாலத்தில் பலரால் செய்யப்படினும் அவற்றுள் ஒரு நியதி புலப்படும். முதலில் தோன்றியவை நூற்பா யாப்பு. பின்னர் வெண்பா. பின் கலித்துறை. இறுதியில் விருத்தம். இவ்வமைதி, சொற்செட்டு பொருட் சுருக்கம் நினைவாட்சி ஆகியவற்றைக்கருதி எழுந்தது. பாட்டியல் நூல்களில் முதலில் தோன்றிய பன்னிரு பாட்டியலாதியன-நூற்பா. பின்னர் வச்சணந்தி மாலை-வெண்பா (13நூ.) பின்னர் நவநீதப் பாட்டியல் வரையறுத்த பாட்டியல் (14 நூ.) கட்டளைக் கலித்துறை. கடைசியாக, சிதம்பரபாட்டியல் (16 நூ.) விருத்தம். இவ்வடைவில்*

கட்டளைக் கலித்துறையாலான இப்பாட்டியல் 14ஆம் நூற்றாண்டு என்று பிறவகையால் காணும் முடிவு பொருத்தமானது.

[பதிப்புக்கள் : வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியலும் வரையறுத்த பாட்டியலும் விசாகப் பெருமாளையர் முன்னிலையில் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் பரிசோதித்தது. வாணிநிகேதன அச்சுக்கூடம், துந்துபி ஆவணி 1860. பாட்டியற் கொத்து: வெண்பாப் பாட்டியல் வரையறுத்த பாட்டியல் சிதம்பரப் பாட்டியலின் பொருத்தவியல் மரபியல் நவநீதப் பாட்டியற் பகுதி ஆகியவை. சென்ன கேசவலு நாயுடு பரிசோதித்தது, 1908, கொ. இராமலிங்கத் தம்பிரான் பதிப்பு, கழகம் 1936. நவநீதப் பாட்டியல், வையாபுரிப்பிள்ளை பதிப்பு, புதிய உரையுடன். சாமிநாதையர் நூல்நிலையப் பதிப்பு, இரு உரைகளுடன்.]

## உரிச்சொல் நிகண்டு

தமிழில் தோன்றிய ஆதி நிகண்டுகள் திவாகரமும் பிங்கலந்தையும். சோழநாட்டில் உள்ள அம்பரில் வாழ்ந்த அருவந்தை என்பவர் புதல்வரான சேந்தன் என்ற வள்ளலால் ஆதரிக்கப்பெற்ற திவாகர முனிவர் திவாகரம் பாடினார். இதை அக்காலத்து உபசார வழக்குப்படி, சேந்தன் செய்த திவாகரம் என்றே அவர் குறிப்பிட்டார். திவாகரருடைய புதல்வர் பிங்கல முனிவர் என்றும் இவர் செய்த நூல் பிங்கலந்தை என்றும் பிங்கலத்தின் சிறப்புப் பாயிரத்தால் அறிகிறோம். இவ்விரு ஆசிரியர்களின் காலமும் இன்று திட்டமாகச் சொல்ல முடியவில்லை. ஆயினும் இருவரும் 10ஆம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்தவர் என்று மட்டும் சொல்லமுடியும்.

பின்னால் வந்த நிகண்டு நூல்கள் மிகப் பல. இவற்றுள் காங்கேயர் செய்த உரிச்சொல் நிகண்டு, கயாதரர் செய்த கயாதரம், மண்டல புருடர் செய்த நிகண்டு சூடாமணி என்பன காலத்தால் பழமையானவை, சிறப்பானவை.

இவற்றுள், உரிச்சொல் நிகண்டின் காலம் இதுவரை இன்னதென்று திட்டமாகச் சொல்லமுடியவில்லை. அதை வரையறை செய்வதற்கு இப்போது பல குறிப்புக்கள் நமக்குக் கிடைக்கின்றன. ஒன்று சிவப்பிரகாசர் குறிப்பு. கி. பி. 1488 இல் மதுரைச் சிவப்பிரகாசர் என்ற சிறந்த உரையாசிரியர் சிவப்பிரகாசத்துக்குப் பேருரை எழுதினர். உரையின் காலம் சகம் 1410—கி. பி. 1488.

சிவப்பிரகாசர் சிவப்பிரகாசம் 38 ஆம் பாடலில் உரையில், 'உயிர் வாயு என்றும் சொல்லப்படும் என்பதற்குப் பிரமாணம் 'உயிர் ஒலி வங்கூழ் சலனம் வாதம் வளி மாருதம்' என்றும் இலக்கணங்களிலும் கண்டு கொள்க' என்று எழுதுகிறுர். இலக்கணம் என்று இவர் கூறுவது உரிச்சொல் நிகண்டு. இவர் கூறிய மேற்கோள் இதன் முதல் தொகுதி 35 ஆம் பாடலில் காணப்படுகிறது:

கனல் அழல் தீத்தழல் பாவகன் வன்னி
அனல்சிகி அங்கி எரியாம்—அனிலங்கால்
ஊதை பவனன் உயிர்ப்பொலிவங் கூழ்சலனன்
வாதம்வளி மாருதம்.

(உயிர்-உயிர்ப்பு, பாடபேதம்.) இதனல் உரிச்சொல் நிகண்டானது இச்சிவப்பிரகாசர் காலமாகிய 1488க்கு முந்தியது என்று அறிகிறோம். மேற்கோளாக இந் நிகண்டைக் காட்டுமாறு தகுந்த விளக்கம் இந்நூலுக்கு ஏற்பட ஏறக்குறைய ஒரு நூற்றுண்டாவது சென்றிருக்குமென்று நாம் கருதலாம். எனவே, இந்நிகண்டின் காலம் ஏறக்குறைய கி. பி. 1400க்குச் சற்று முன்னக இருக்கும் என்று முடிவு செய்வது பொருந்தும்.

இம் முடிவுக்கு வேறு சில செய்திகளும் துணைசெய்கின்றன. முதலாவது உரிச்சொல் நிகண்டு என்ற நூலின் பெயர். நூலைச் செய்தார் காங்கேயர். இவர் நூல் செய்த காலத்தில் நிகண்டு என்ற சொல் இன்று நாம் அறிகிற பொருளில் தமிழ் மொழியில் ஆட்சிக்கு வரவில்லை. 'இடு

குறியாற் பெயர் பெற்றன நிகண்டு கலைக் கோட்டுத்தண்டு' முதலியன என்று இறையனர் களவியல் உரை போன்ற உரைகள் சில குறிப்பிடுகின்றன.

ஆனல், முன் தோன்றிய நிகண்டு நூல்களாகிய திவாகரம் பிங்கலந்தை உரிச்சொல் கயாதரம் என்ற நான்கும் தம்மை நிகண்டு என்று சொல்லிக்கொள்ளவில்லை. திவாகரர் தம் நூலைத் திவாகரம் சேந்தன் திவாகரம் என்று மட்டுமே கூறினர். இது என்ன பொருள் பற்றியது என்பதைப் புலப்படுத்துவதற்கு இதன் பெயரில் எந்தக் குறிப்பும் இல்லை.

அடுத்துத் தோன்றியது பிங்கலந்தை. இதைச் செய்த பிங்கல முனிவர் திவாகரருடைய புதல்வர் என்பது தெரிகிறது:

செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
பிங்கல முனிவன் எனத் தன் பெயர் நிறீஇ
உரிச் சொற் கிளவி விரிக்குங்காலை.

என்பது பிங்கலத்தின் சிறப்புப்பாயிரம், தம் நூலை இவர் **உரிச் சொற் கிளவி** என்று கூறுகிருர். கிளவி, இங்கு நூல். பின்னர் வந்த பவணந்தி முனிவர் நன்னூல் 462 ஆம் சூத்திரத்தில் பிங்கலந்தையை உரிச்சொல் என்றே குறிப்பிடுகிருர்:

—பிங்கலம் முதலா
நல்லோர் உரிச்சொலுள் நயந்தனர் கொளலே.

என்பது சூத்திரம். இதற்கு மயிலைநாதர், "பிங்கலர் முதலான புலவர்களால் சொல்லப்பட்ட உரிச்சொற் பனுவல்கள்" என்று உரை எழுதுகிருர். இங்கு இவர் குறிப்பிடுவது, பிங்கலம் என்னும் உரிச் சொற்பனுவல் ஒன்றே. (17 ஆம் நூற்றுண்டில் நன்னூல், உரைசெய்த சங்கர நமச்சிவாயப் புலவர், 'ஏனைய புலவரால் கூறப்பட்ட பிங்கலம் திவாகரம் சூடாமணி முதலிய நூல்களுள் வகுக்கும் உரிச் சொற்றொகுதிகளுள் விரும்பிக் காண்க' என்று

நன்னூலுக்குப் பின்வந்த சூடாமணி நிகண்டையும் சேர்த்து உரையெழுதிவிட்டார்.)

மிகவும் பிற்காலத்தில் ஆசிரிய நிகண்டு பாடிய ஆண்டியப்பப் புலவர் தமக்குமுன் உள்ள பல நிகண்டுகளை வரிசைப்படுத்திச் சொல்லும்போது, 'முன்னுள்ள திவாகரம் பிங்கல நிகண்டு சீர்முந்து காங்கேயன் உரிச்சொல்' என்ற தொடரால் காங்கேயன் உரிச்சொல் என்ற நூலைக் குறிப்பிடுகிறார்.

இங்கு நாம் கவனிக்க வேண்டுவது, திவாகரம் பிங்கலம் காங்கேயர் என்ற வரிசை முறையும் காங்கேயன் உரிச்சொல் என்ற நூற்பெயரும் ஆகும். இவர் கருத்தின்படி காங்கேயர் நிகண்டினுடைய பெயர் காங்கேயன் உரிச்சொல். இது வரிசை முறையில் பிங்கலத்துக்கு அடுத்ததாகும்.

இனி, நிகண்டு என்ற வட சொல், முதன் முதலில் வடமொழி வேதத்துக்கு அங்கமாய், அதில் பயின்ற சொற்பொருள்கூறும் கருவி நூலுக்கு உரிய சிறப்புப் பெயராய் இருந்தது. பின்னர் சொற்பொருள் உரைக்கும் தமிழ் நூல்கள் அனைத்துக்குமே பொருந்துகிற பொதுப் பெயராக இது கொள்ளப்பட்டது. இவ்வாறு கொண்ட முதல் நூல் மண்டல புருடர் செய்த சூடாமணி நிகண்டு. இவர் தம் நிகண்டின் பாயிரம் முதற் செய்யுளிலேயே நூற்பெயர் நிகண்டு சூடாமணி என்று கூறுகிறார்.

மன்னிய நிகண்டுசூடா மணிஎன ஒன்று சொல்வேன்
இந்நிலந் தன்னின் மிக்கோர் யாவரும் இனிது
கேண்மின்

என்றுரைக்கிறார். மண்டல புருடர் விஜயநகரத்தரசராகிய கிருஷ்ண தேவராயர் காலத்தில் வாழ்ந்தவர். ராயர் காலம் கி. பி. 1509-1531. எனவே இவர் நூல் செய்த காலம் பதினாறும் நூற்றாண்டின் தொடக்கம்.

**பலகலைதேர் காங்கேயன் பட்டமுடையான்**
**உலகறியச் சொன்ன உரிச்சொல்.**

என்ற பாடலால் இவர் நூல் உரிச்சொல் என்றே நாம் அறிகிறோம். இந்நூலானது இவ்வகை நூலுக்கு நிகண்டு என்ற பெயர் அமைவதற்கு முந்திய காலத்தில் எழுதப்பட்டது என்பது இதனால் புலனாகும்.

இவ்வாறு எழுதப்பெற்ற மற்றொரு நூல் கயாதரம் ஆகும். இந்நூல் செய்த கயாதரர், "தேவைக் கயாதரன் தொல் வேதியன் சொற்ற உரிச்சொல்பனுவல்" என்று கூறுவதும் இங்கு அறியத்தக்கது.

இதுகாறும் நாம் கூறியது, 16 ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் நிகண்டு என்ன பெயர் புதிதாகத் தமிழில் கொள்ளப்பட்டது, அந்தப் பெயரால் இப்பொழுது வழங்கும் நூல்கள் அனைத்தையும் அக்காலத்துக்கு முன் உரிச்சொல் என்றே வழங்கி வந்தார்கள், அவ்வாறு வழங்கப் பெற்ற நூல்களில் காங்கேயன் உரிச்சொல்லும் ஒன்று என்பதாகும்.

இனி, இந்நிகண்டு நூல்களை நாம் ஆராயும்போது பண்டை நூலாசிரியர் கொண்ட ஒரு நூல் மரபு புலனாகின்றது. நிகண்டு செய்தோர் பாட்டியல் செய்தோர் முதலிய பண்டைத் தமிழ்ப் புலவர்கள் முதல் வழி சார்பு எனத் தங்களுக்குள் ஒரு யாப்பு நியதியை வகுத்துக்கொண்டு அதன்படி நூல்செய்து வந்திருக்கிறார்கள். ஆதி நூல் செய்தோர் அனைவரும் நூற்பாவினால் செய்தனர். அடுத்துத் தோன்றின வெண்பா நூல்கள். மூன்றாவதாக வந்தவை கலித்துறையில் செய்யப்பெற்றிருந்தன. கடைசியாக வந்தவை விருத்தப்பாவினால் செய்யப்பெற்றன. பாட்டியல் பற்றி ஆராய்ந்த இடத்து, நூல்கள் இந்த முறையில் அமைந்திருந்தமை கண்டோம். நிகண்டு நூல்களிலும் இப்படியே காலமுறைப்படி முதலில் திவாகரம் பிங்கலந்தை-நூற்பா ; பின்னர் உரிச்சொல்-வெண்பா ; அடுத்துக்

கயாதரம்-கட்டளைக் கலித்துறை; பின்னர் சூடாமணி நிகண்டு-விருத்தம். இந்த முறையினால் உரிச்சொல் நிகண்டுக்குரிய காலமும் வரையறுக்கப்படுகிறது. அதாவது கி.பி. 1400-1450 ஆகிய கால எல்லைக்குள் தோன்றிய கயாதரத்துக்குக் காலத்தால் முந்தியதாகக் காங்கேயன் நூலை நாம் கருதவேண்டும்.

இக் கருத்துக்களுக்கு அரண்செய்யும் வகையில் மற்றொரு சான்றும் கிடைக்கிறது. செயல்பற்றிய பெயர்த் தொகுதி இரண்டாம் வெண்பாவில் வணங்கல் என்ற பொருளில் காங்கேயர் சலாம் செய்தலைக் கூறுகிறார்:

> **வந்தனை காணல் வணங்கல் பணிதலே**
> **தந்தலை தாழ்தல் சலாம் செய்தல்—முந்தித்**
> **தொழுதலே தண்டன் தொடர்ந்து முயங்கல்**
> **தழுவலே விள்ளல் எனச்சாற்று.**

என்பது காண்க. சலாம் என்ற சொல், தமிழ் நாடானது முகம்மதியப் படையெடுப்பாளர் வசமாகிய காலத்தில் தமிழ் மொழியில் முதல் முதலாக வழங்கத் தொடங்கி அருணகிரி நாதரால் பிரசித்தியடைந்தது. "சலா மிடற்கு ஏக்கறு பெருமாளே" என்று அவர் பாடுகிறார்.

"சுராதிபதி மாலயனும் மாலொடு சலாமிடு சுவாமிமலை வாழும் பெருமாளே" என்பது திருப்புகழ் 89. 17 ஆம் நூற்றாண்டில் வடநாடு சென்ற அருட்புலவராகிய குமர குருபர சுவாமிகளே பிற்காலத்தில் அதிகமாகச் சலாம் என்ற சொல்லை எடுத்தாளுகிறார். வேறு இலக்கிய ஆட்சி இச் சொல்லுக்கு ஏற்படவில்லை.

அருணகிரிநாதர் காலம் 15ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் இடைப்பகுதியும் ஆகும். உரிச்சொல்காரர் இச் சொல்லைப் பிரயோகிக்கிறார். ஆதலால் இவர் காலம் இதற்குச் சற்று முந்தியது என்றால் பிழையாகாது. அதாவது சுமார் கி. பி. 1400.

எனவே, மதுரைச் சிவப்பிரகாசர் குறிப்பினால் கி. பி. 1400 என்று முடிவுசெய்கின்ற உரிச்சொற் பனுவலின் காலமானது, வேறு வகையாக நிகண்டு என்ற நூற்பெயர் வரலாற்றாலும், சலாம் என்ற சொல் வரலாற்றின் துணையாலும், வெண்பா நூல் என்ற யாப்பு நியதியாலும், வலியுறுத்தப் பெறுகின்றது.

இவ்வுரிச்சொல் நிகண்டு செய்தார் காங்கேயர் என்பவர். இவரைக் குறித்த வரலாறுகள் திட்டமாகத் தெரியவில்லை. கொங்கு மண்டல சதகம் இவர் பேரூரினர் என்று கூறுகிறது:

**அலைகடல் சூழும் அவனியிற் செந்தமிழ் ஆய்பவர்கள்**
**நலனுறத் தக்க வகையாக உள்ளம் நனி மகிழ்ந்தே**
**இலகும் உரிச்சொல் நிகண்டு வெண்பாவின் இசைத்தகலை**
**வலஎழில் காங்கேயன் வாழும்மோரூர் கொங்குமண்டலமே**

என்பது 91ஆம் பாடல். 'பெருத்த நூல் பலவும் சுருக்கித் தமிழில் உரிச்சொல் நிகண்டென-உரைத்த காங்கேயன்' என்று பாம்பண்ண கவுண்டன் குறவஞ்சி கூறுகின்றது. இக்கூற்றுக்களால் இவ்வாசிரியர் கொங்குநாட்டினர் என்பது அந்நாட்டார் கருத்து எனத் தெரிகிறது.

காங்கேயர் செங்கற்பட்டு ஜில்லாவில் வாழ்ந்த ஒரு முனிவர், மரபினால் வேளாளர் என்பது சிலர் கருத்து. கொங்குநாட்டு மோரூரில் இம்முடிக் காங்கேயர் என்ற பட்டமுடையவர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். மூன்றாம் குலோத்துங்க சோழன் காலந் தொடங்கிச் செல்வாக்கு மிகுந்த நாட்டுத்தலைவராக இருந்திருக்கிறார்கள். இம்முடிச்சோழன் என்ற பட்டத்தையே தாங்களும் தரித்துக் கொண்டார்கள். இந்நூலாசிரியர் அக் காங்கேயருள் ஒருவரா என்பது தெளிய முடியாமலிருக்கிறது.

காங்கேயன் நாலாயிரக் கோவை என்ற ஒரு நூல் ஒட்டக்கூத்தரால் பாடப்பெற்றது என்பது ஒரு வரலாறு. பொப்பண்ண காங்கேயன் என்பவன் சிலப்பதிகார உரை

யாசிரியராகிய அடியார்க்கு நல்லாருக்கு ஆதரவளித்து உரை செய்வித்தான் என்பது மற்றொரு வரலாறு. இவர்கள் வேறு, உரிச்சொல் நிகண்டு நூலாசிரியர் வேறு, காலமும் வேறு.

இந்நிகண்டு ஆசிரியர் சிறந்த சைவர். தில்லை நடராசப் பெருமானிடத்து ஈடுபட்டுச் சிவ வணக்கம் பாடி இருப்பது இங்கே குறிப்பிடத்தகும்.

திருமாலும் செங்கமல மேயானும் காணுப்
பெருமான் பிறைசூடும் பெம்மான்-அருள்மூர்த்தி
நன்னெஞ்சின் நான்மறையோன் தில்லை நடம்புரி
என்னெஞ்சின் மேய இறை. [வோன்

இந்நூலின் முகப்பில் விநாயக வணக்கமாக 'மதிபாய் சடைமுடித்து' என்ற பிரசித்தமான விநாயக வணக்கப் பாடல் காணப்படுகிறது.

மதி பாய்சடை முடித்து மாசுணப் பைம்பூட்டுச்
சதியாய் குறுந்தாட்டுத் தான—நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்து[1] என்னுள்ளம்
உருகவிட்டு நின்ற ஒளி.

இப்பாடல் இந்நூலின் முகப்பில் மட்டுமன்றி, தமிழ் நாவலர் சரிதை என்ற பழைய தொகுப்பு நூலின் தொடக்கத்திலும், தொல்காப்பியவுரை தண்டியலங்கார ஏடுகள்-பலவற்றிலும் பெய்யப் பெற்றுள்ளது. இது முத்தொள்ளாயிரப் பாடல் என்ற கருத்தும் உண்டு. இது காங்கேயர் பாடலா என்பது நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை; பழங்காலத் தனிப்பாடல் போலும்.

உரிச்சொல் நிகண்டு இன்று பன்னிரண்டு தொகுதிகளாய் அச்சிடப்பட்டுள்ளது. முதலில் வெளிவந்த

---

[1]குறிப்பு: நால்வாய்த்து என்பது இருகவுட்டு முக்கட்டு என்ற தொடர்கள் போல எண்ணுல் பொருள்பட வேண்டுமேயன்றி வேறு பொருள் பயந்து தொனியால் மட்டும் எண்ணுப்பெயர் தோற்ற இருப்பது இலக்கியச் சுவைக்கு இழுக்கு; நால்வாய்த்து என்பது நாற்றேட்டு என்றிருப்பது சிறப்பு என்ற கருத்துடையவர் டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள். நாற்றேட்டு-நாலு தோள்களையுடையது.

பதிப்புக்களாகிய 1840 புதுச்சேரிப்பதிப்பு, 1858 யாழ்ப்பாணம் சதாசிவப் பிள்ளை பதிப்பு ஆகிய இரண்டிலும் 10, 12 ஆகிய இரு தொகுதிகள் இல்லை. 1890 இல் பிங்கலந்தை அச்சிட்ட சிவன் பிள்ளை அதே ஆண்டில் உரிச்சொல் நிகண்டை அச்சிட்டு, இதில் 10, 12 ஆகிய இரு தொகுதிகளும் வழங்கா தொழிந்தன என்று குறிப்பிட்டிருக்கிறுர். ஏனைய தொகுதிகளில் 24 வெண்பாக்களும் 3200 சொற்களும் உள்ளன. பின்னல் 1905 இல் சுன்னுகம் குமாரசுவாமிப்புலவர் பன்னிரு தொகுதிகளையும் சேர்த்து அச்சிட்டார்.

ஏட்டுப்பிரதி ஒன்றில், நூல் இறுதியில் காணப்படும் ஒரு கலித்துறைப் பாடலானது, திருக்கானை வாழும் வணிகன் பராக்கிரம பாண்டிய தேவன் என்ற பெயரினன், காங்கேயன் சொன்ன உரிச்சொல்லைப் பத்துப் பகுதியில் சேர்த்தான் என்று குறிப்பிடுகிறது.

**உத்தம சீலத்துக் காங்கேயன் சொன்ன உரிச்சொல்**
**தன்னை**
**வைத்து மனத்துத் திருக்கானைவாழும் வணிகன் கற்றேர்**
**சித்தம் மகிழப் பராக்கிரம பாண்டிய தேவன்கண்டீர்**
**பத்துத் தொகுதியிற் சேர்த்தான் எவரும் படித்திடவே.**

## அத்தியாயம் 14

# உரையாசிரியர்

## முன்னுரை

இறையனார் களவியலுரையே தமிழில் முதன் முதலாகத் தோன்றிய உரையாகும். இதன்பின் 13ஆம் நூற்றாண்டு வரையில் பல உரைகள் எழுந்துள்ளன. சிலப்பதிகாரம், திருக்குறள் போன்ற இலக்கிய உரைகள் பல. தொல்காப்பியம், யாப்பருங்கலம் முதலான இலக்கண உரைகளும் பல. இவ்வுரைகளின் மரபில் 14, 15 ஆம் நூற்றாண்டுகளிலும் பல இலக்கிய இலக்கண உரைகள் எழுந்தன.

காலமுறைப்படி சொல்வதானால், இக்காலப் பகுதியில் முதலில் வாழ்ந்து உரை செய்தவர் சைனராகிய மயிலைநாதர்; நன்னூல் விருத்தியுரை எழுதினார். பின்னர் பரிதியார் திருக்குறள் உரை செய்திருக்கக் கூடும். இவர்களின் பின்னர் தொல்காப்பிய உரைகளுள் முன்தோன்றிய இளம்பூரணம் பேராசிரியம் சேனாவரையம் போன்றன போக, கல்லாடர் உரையும், பழைய உரையும், நச்சினார்க்கினியர் பேருரையும் எழுந்தன. உச்சிமேற்புலவர் கொள்ளும் நச்சினார்க்கினியர் மிகப் பலவான இலக்கியங்களுக்கு அரிய உரைகள் எழுதிய பேருபகாரி. தெய்வச்சிலையார் சொல்லதிகார உரையும், நேமிநாத உரையும் இக்காலத்தே எழுந்தன என்று அறிகிறோம். சாமுண்டி தெய்வ நாயகர் புறப்பொருள் வெண்பா மாலைக்கு உரை செய்தார். மிகச் சிறந்த இலக்கிய வுரையாகிய தக்கயாகப் பரணியுரையும் இக்காலத்தே எழுதப்பெற்றது என்று அறிகிறோம்.

இவர்களேயன்றி சைவ வைணவ சமயசாத்திர வுரைகள் செய்த பெரும் புலவர்கள் தொகை எண்ணில் அடங்காது. இவ்வுரைகளை அவ்வத்தலைப்புக்களில் நாம் பின்னர்

காண்போம். ஏனைய இலக்கண இலக்கிய உரைகளை மட்டுமே இப்பகுதியில் நாம் ஆராய்வோம்.

## மயிலைநாதர்

இவர் நன்னூலின் பழைய உரையாசிரியர். சங்கர நமச்சிவாயர் விருத்தியுரையே பெருவழக்கா யிருந்தபோதிலும்கூட, மயிலைநாதர் உரையே காலத்தால் முற்பட்டது. அவர் மறுக்கும் பகுதிகளெல்லாம் மயிலைநாதர் கூறுவன. இவருக்கு முன்னும் உரைகள் இருந்தனவென்று இவருரை தெரிவிக்கிறது; அவ்வுரைகள் எங்கும் வழங்கவில்லை. ஒருகால் வாய்மொழியாக ஆசிரியர் மாணுக்கருக்குச் சொல்லி வந்த உரையாக இருக்கவும் கூடும். மயிலை நாதர் என்ற பெயர்தானும் டாக்டர் சாமிநாதையர் அவர்களால் அருமையாகத் தேடிக் கண்டு பிடிக்கப்பட்டது. இப்படி ஓர் உரை உண்டென்று சொன்னுர் இலர்; சைனர் உரையொன்று உண்டென்றும் அது பயனற்றது என்றும் மட்டுமே ஒரு கர்ணபரம்பரைச் செய்தி வழங்கிற்று என்று அவர்கூறுவர்.

இவர் மதத்தால் சைனர். மயிலாப்பூரில் அக்காலத்தில் சினுலய மொன்றிருந்து பின்னர் கடலால் அழிந்து போயிற்று; அங்கு எழுந்தருளியிருந்த 22 ஆம் தீர்த்தங்கரராகிய நேமிநாதருடைய பெயர்களுள் ஒன்ருகிய மயிலைநாதர் என்ற பெயரே இவருக்கு இடப்பெற்றிருந்தது. இவரைக் குறித்து வேறு எந்த வரலாறும் தெரிந்திலது. 13ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் தோன்றியது நன்னூல். அதை ஆக்குவித்தவன் சீயகங்கன். அவன் வாழ்ந்தது கொங்குநாடு. சீயகங்கனை இவ்வுரைகாரர் மிகவும் பாராட்டி இருத்தலாலும், கங்கனைக் குறித்த ஒரு வெண்பாவை இவர் எடுத்துக் காட்டுதலாலும், குடிப்பெயருக்கு எடுத்துக் காட்டாக இவர் கங்கன் என்ற பெயரைக் கூறுதலாலும், கங்க மரபினரால் இவர் ஆதரிக்கப் பெற்றவராகலாம் என்று ஐயரவர்கள் கருதுகிருர்.

மயிலைநாதர், தொல்காப்பிய இளம்பூரணர் உரை, அவிநய உரை, யாப்பருங்கலக்காரிகை என்பவற்றை எடுத்துக் காட்டி இருப்பதால், இவ்வாசிரியர்கள் காலத்துக்குப் பிற்பட்டவர் என்பது தெளிவு. இளம் பூரணர் உரையைத் தழுவியே பவணந்தி முனிவர் நன்னூல் செய்தார் என்பது நூல் வல்லார் முடிவு. பவணந்தியின் காலமாகிய 13 ஆம் நூற்றாண்டுக்குப் பின் இவர் வாழ்ந்தார். நூலுக்கு உரை தேவைப்படும் அளவு பிரசித்தியடைய, குறைந்தது ஒரு நூறு வருஷம் செல்லுமென்று கொண்டாலும், இவர் காலம் 14 ஆம் நூற்றாண்டுத் தொடக்கமாகலாம்.

மயிலைநாதர் மிகவும் சுவைபட எழுதும் உரையாசிரியர். எதுகை, மோனைத் தொடை நயம்பட எழுதுவார். பண்டைய ஆசிரியர்களை நயம்படப் போற்றிக் கூறுவார்: மிகத் தெளி கேள்வி அகத்தியனார், ஒல்காப் பெருமைத் தொல்காப்பியனார், அளவறு புலமை அவிநயனார் என்பார். ஒல்காப்புலமைத் தொல்காப்பியர் என்ற தொடர் இன்று வரை பிறராலும் ஆளப்பெற்று இலக்கிய மரபில் நிலைத்த இடம் பெற்றுவிட்டது. சைனப் புலவர்களை இன்னும் பாராட்டிக் கூறுகின்றார்: 'உளங்கூர் கேள்வி இளம் பூரணர் எனும் ஏதமின் மாதவர்', 'தண்டலங் கிழவன் தகைபெறு நேமி - எண்டிசை நிறை பெயர் இராசபவித்திரப் பல்லவ தரையன்' (அவிநய உரையாசிரியர்) என்றமை காண்க. சீயகங்கனைக் கூறும்போது 'தங்கலர் குலமாம் வெங்கயம் அனுங்கும்-சிங்கமாகிய கங்கன் என்பான்' என்பர்.

இவர் உரையானது உரை இலக்கணம் முழுமையும் பொருந்தியது. சுருங்க வேண்டிய இடத்துச் சுருக்கியும், விரிய வேண்டிய இடத்து விரித்தும், தனியாகவும் பிண்டமாகவும் எழுதப்பெற்றிருக்கும். நன்னூல் பாயிரச் சூத்திரங்கள் 52: இவை பவணந்தி செய்தனவல்ல என்று இவர் உரையால் நாம் அறிகிறோம். 51, 52 ஆம் சூத்திரங்கள்

பனம்பாரம் என்று இவர் எழுதுகிறார். பவணந்தி ஊரான சனகை சனநாதபுரம் என்று இவர் உரையால் விளங்குகிறது. பண்டைய நூல்கள், இலக்கணங்கள் முதலிய யாவுமே இவர் தம் உரையில் எடுத்துக் காட்டுகிறார்.

உரை நயத்துக்கு ஓரிடம் மட்டும் எடுத்துக் காட்டுவோம். அகர முதலாக எழுத்துக்கள் அமைந்துள்ள முறையைக் கூறும் 72 ஆம் சூத்திரவுரையில் பின் வருமாறு எழுதுகிறார்: "அகரம் தானே நடந்தும் நடவா உடம்பை நண்ணியும் நடத்தலானும், அரன் அரி அயன் அருகனென்னும் பரமன் திருநாமத்திற்கு ஒரு முதலாயும் அறம் பொருள் இன்ப மென்னும் முப் பொருளின் முதற்பொருட்கும் முதலாயும் வருதலானும், முன் வைக்கப்பட்டது. இடம் முயற்சி பொருள் வடிவுகள் ஒரு புடையொப்புமையின் அகரத்தின் பின் ஆகாரம் வைக்கப்பட்டது. இடம் முயற்சி பொருள்கள் ஒருபுடை யொப்புமையின் இகரத்தின் பின் ஈகாரம் வைக்கப்பட்டது. இவ்வாறே ஒழிந்த எழுத்துக்கள் தம் கிடக்கை முறைக் காரணம் அறிந்து கொள்க."

387 ஆம் சூத்திரவுரையில் மரபு என்பதை விளக்கப் புகுந்து, சுருக்கமான ஒரு நிகண்டையே இவர் கூறியிருப்பது அறிந்து மகிழத்தக்கது. மரபுப்பெயர்கள் வழுவாமல் காணுமிடங்கள் என இவர் "ஐம்பெருங் காப்பியம், எண் பெருந் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் இலக்கியங்களுள்ளும் விரிந்த உரிச்சொற் பனுவல்களுள்ளும் உரைத்தவாறு அறிந்து வழங்குக" என்று கூறுமிடத்து, ஐம்பெருங்காப்பியம் என்று காப்பியங்களை எண்ணிட்டுத் தொகையாக்கி இவரே முதன் முதலாக வழங்கத் தொடங்கினார் என்று தெரிகிறது.

# நச்சிஞர்க்கினியர்

பச்சைமால் அனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
எச்சிஞற்றிசையும் உண்ணு மமிழ்தென வெழுநாவெச்சில்
மெச்சிநாள் நாளும் விண்ணேர் மிசைகுவர் வேத போதன்
நச்சிஞர்க்கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.

*உச்சிமேற் புலவர் கொள் நச்சிஞர்க்கினியர் என்ற பெரும் பாராட்டைப் பெற்றவர் இவ்வுரையாசிரியர்; இவர் மதுரையாசிரியர் என்னும் பெயர் உடையவர். வடமொழிப் பேருரையாசிரியராகிய மல்லிநாத சூரியை ஒப்ப, இவர் பண்டைத் தமிழ்நூல்கள் பலவற்றுக்குப் பேருரை எழுதிய புகழ் உடையவர். தமிழுக்குப் பெரும் புகலிடமாகிய மது ரையில் இவர் பிறந்திருந்தும், இவருடைய வரலாறு முழு மையும் விளக்கமாகத் தெரியவில்லை.*

*நச்சிஞர்க்கினியர் என்பது சிவபெருமான் பெயராகும். "நச்சுவார்க்கினியர் போலும் நாக ஈச்சரவனுரே (4. 66.1) என்ற அப்பர் திருநேரிசையாலும், "நச்சிஞர்க்கினியாய் போற்றி" (சத்த தானப் படலம்) என்ற காஞ்சிப்புராணப் பாடலாலும் இச்செய்தி விளங்கும்.*

தண்தமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
எண்திசை விளங்க வந்த ஆசான்
பயின்ற கேள்விப் பாரத்து வாசன்;

கரைபெற்றதோர் பஞ்ச லட்சணமான தொல்காப்பியமும்
தரைமுற்றும் போற்றிய சிந்தாமணியும் தமிழ்ச்சங்கத்தில்
நிரைபெற்றுயர் பத்துப்பாட்டும் விளங்க நிசவுரையை
வரை நச்சிஞர்க்கினியன் ஐயன் பாண்டி மண்டலமே.

*இப் பாடல்களால் இவர் மதுரையில் பாரத்துவாச கோத்திரத்தில் பிறந்த அந்தணர் என்பது தெளிவாகும். பத்துப் பாட்டுள் மதுரைக் காஞ்சி வரி 365, 522 போன்ற இடங்களில் இவர் எழுதிய உரை நுட்பங்கள் இவர் மது ரைக்குரியவர் என்பதை வலியுறுத்தும்.*

இவர் மிகவும் கடினமான பண்டைய நூல்கள் பலவற்றுக்குப் பேருரை எழுதியிருக்கிறார். தொல்காப்பியம் முழுமைக்கும் உரை எழுதியவர்கள் இவரும் இளம்பூரணருமே. இவர் செய்த தொல்காப்பியப் பொருள் அதிகார உவம இயல், மெய்ப்பாட்டியல், மரபியல் உரைப்பகுதிகள் இப்போது கிடைக்கவில்லை. இவரது தொல்காப்பிய உரை இல்லாவிட்டால் தொல்காப்பியக் கடலின் கரை காணுதல் இக்காலத்தோருக்கு அரிது. சங்கநூல்கள் அனைத்திலிருந்தும் இவர் மேற்கோள் காட்டுகிறார். வடமொழி வழக்கு உலக வழக்கு சாதி சமய வழக்கு ஆகியன இவர் உரையில் நிரம்பியுள்ளன. இலக்கண இலக்கியக் களஞ்சியம் என்று இவரைக் கூறுவது பொருந்தும். வேறு யாரும் உரை எழுதமுற்படாத பத்துப்பாட்டு முழுமைக்கும் இவர் உரை எழுதியுள்ளார். அங்ஙனமே சீவக சிந்தாமணிக்கும், எட்டுத் தொகையுள் கலித் தொகை முழுமைக்கும், பேராசிரியர் உரை எழுதாதுவிட்ட குறுந்தொகைப் பாடல்கள் இருபதுக்கும் இவர் உரை எழுதினார். இவற்றுள் குறுந்தொகைக்கு எவர் உரையுமே இன்று கிடைத்திலது. திருக்குறள் உரை ஆசிரியராகிய நச்சர் என்பவர் நச்சினார்க்கினியர் என்று சிலர் கருதுவது பொருந்துவதாக இல்லை.

இவர் உரையினுடைய சிறப்பை நோக்கி, பெயர் புலப்படாத பல தமிழுரைகளை இவரே செய்தார் என்று சிலர் கருதுவார்கள். இக்கருத்துக்களை விலக்க வேண்டியே இவர் எழுதிய உரைகள் இன்னவை என்று வரையறை செய்கின்ற ஒரு பாடல் பழமையாக எழுந்திருக்கிறது போலும் :

> பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
> ஆரக் குறுந்தொகையுள் ஐஞ்ஞான்கும்—சாரத்
> திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
> விருத்திநச்சி னார்க்கினிய மே.

இவர் செய்த நூலுரைகளின் சிறப்பை நுணுகிக் காணும்போது, இந்த வெண்பாவில் கூறப்பட்ட முறையே உரைகள் எழுந்தனவென்றும் கொள்ள இடமுண்டு.

பத்துப் பாட்டுக்கு இவர் எழுதிய உரையின் சிறப்புப் பாயிரம் 57 வரிகள் கொண்ட ஆசிரியப்பா. இப்பாடலானது நச்சினார்க்கினியர் உரைகளின் சிறப்பைத் தெளிவுபட எடுத்துக் காட்டுகிறது. பத்துப்பாட்டு உரைச்சிறப்பு:

ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற் றெரிந்து
சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டும் உணர்பவர்க் கெல்லாம்
உரையற முழுதும் புரைபட உரைத்தும்.

கலித்தொகை உரைச் சிறப்பு:

ஒலித்திரை யகத்துள் உணர்ந்தோர் உரைக்கும்
கலித் தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்கு
உள்ளுறை உவமமும் ஏனை உவமமும்
தெள்ளிதின் தெரிந்து திணைப் பொருட்கேற்ப
உள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
இறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பொருள் பேரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள் பெற விளம்பியும்.

இவர் உரையின் இனிமையைக் கலித்தொகை பயிலும் போது நன்கு உணர முடியும்.

*சிந்தாமணி உரைச் சிறப்பு:*

**திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்**
**பருப்பொருள் கடிந்து பொருட்டொடர் படுத்தும்**
**விளையொடு முடியப் புனையுரை உரைத்தும்**

என்ற வரிகளால் நன்கு விளங்கும். மேலும், கரும்பே தேனே (பா. 2453) என்னும் செய்யுளுரையில், "கணவற்கு மெய்முழுதும் இனிதாயிருத்தலிற் கரும்பு ; நல்லார் உறுப் பெல்லாங் கொண்டு இயற்றலின் தேன் ; இவ்வுலகிலில் லாத மிக்க சுவையும் உறுதியுங் கொடுத்தலின் அமிழ்து ; காமவேட்கையை விளைவித்து இனிய பண்தோற்றலின் மழலையை யுடையதோர் யாழ் ; கணவற்குச் செல்வத்தைக் கொடுத்தலின் திரு ; நடையால் அன்னம் ; சாயலான் மயில் ; காலமின்றியும் கேட்டோர்க்கு இன்பஞ்செய்தலின் குயில் ; மன்னன் மகளேயென்றல் புகழுண்மையின் மன்னன் பாவாயென்றது அவன் கண்மணிப் பாவையென்ப துணர்த் திற்று. இனி இவள் கொல்லிப் பாவையன்று ; மன்னன் பாவையென்று மாம். சேடியர் கற்பித்த கட்டளை தப்பாமற் கூறலிற் பூவை ; நோக்கத்தான் மான்" என்று எழுதியுள்ள நயங்களைக் காண்க. பதப்பொருள் விளக்கம் செய்வதிலும் இவர் தமக்கு இணை இல்லாதவர்.

சிந்தாமணி மூலத்தையும் நச்சினார்க்கினியர் உரையை யும் ஒருங்கு வைத்து எழுத்து எழுத்தாக ஒப்பு நோக்கு பவர்களுக்கு, உரை காண்பதற்கு இவர் எவ்வளவு அரும் பாடு பட்டிருக்கிறார் என்பது விளங்கும். சிந்தாமணியானது நேராக செம்மையான பொருள் கொள்ளுமாறு எங்குமே இல்லை. நூலாசிரியரின் சமயத்தையும் தமிழ் மரபையும் ஆசிரியர் கருத்தையும் முயன்று உணர்ந்து, இவர் சிறந்த உரை எழுதியுள்ளார். சிந்தாமணிச் செய்யுட்கள் ஆற் றொழுக்கான பொருள் கொள்வன அல்ல ; அவற்றைப் பொருள் காண இவர் படும் சிரமம் மிகவும் பாராட்டுதற்கு

உரியது; பல இடங்களில் நூலைவிட உரையையே நாம் பாராட்டத் தயாராயிருக்கிறோம். நேராகப் பொருள் விளங்கும் இடங்களை இவர் பொருள் வெளிப்படை என்றே எழுதிச் செல்வார்.

"இவர் சீவக சிந்தாமணிக்கு முதன் முறை ஒருரை எழுதி அக்காலத்திற் புகழ் பெற்றிருந்த சைன வித்துவான்கள் சிலருக்குக் காட்ட, மற்றைப் பகுதிகள்போலத் தங்கள் சமயக் கொள்கைகள் முறையே அறிந்து எழுதப்படவில்லையென்று கூறி அவர்கள் அவ்வுரையை அங்கீகரிக்கவில்லையென்றும், அப்பால் இவர் ஆருகத நூல்கள் பலவற்றையும் அறிந்தோரிடம் முறையே கேட்டறிந்து நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை உரையெழுதி அவர்களுக்குக் காட்ட அவர்கள் உற்று நோக்கி மகிழ்ந்து பாராட்டி அதனை அங்கீகரித்தார்களென்றும், சைனர்களுள்ளும் ஏனையோருள்ளும் கன்ன பரம்பரையில் ஒரு வரலாறு வழங்குகின்றது" என்று டாக்டர் சாமிநாதையரவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

மேற்கோள் நூல்களின் பெயரையோ ஆசிரியரின் பெயரையோ இவர் குறிப்பிடுவது இல்லை. பழைய செய்யுட்களையேனும் அவற்றின் தொடர்களையேனும் கருத்தையேனும் இவர் உரை நடையாகவே எழுதிக்கொண்டு போவார்.

இவர் பெயராலும் கொள்கையாலும் சைவமதத்தினர். மொழி உதாரணம் காட்டிய இடங்களில், திருச்சிற்றம்பலம் பெரும்பற்றப் புலியூர் என்ற பெயர்களை ஆறெழுத்தொரு மொழிக்கும் ஏழெழுத்தொரு மொழிக்கும் உதாரணங்கூறுகின்றார். திருமுருகாற்றுப்படை உரையில் பல இடங்களில் கோவையார் திரு உலாப் புறம் முதலிய நூல்களிலிருந்து இலக்கண இலக்கியப் பொருள்களுக்கும் தத்துவப் பொருளுக்கும் மேற்கோள்கள் எடுத்துக் காட்டி இருக்கிறார். இவரை,

தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாளன்

என்று சிறப்புப் பாயிரம் பாராட்டி யிருப்பதாலும், இவருடைய சமயக் கொள்கை சைவம் என்பது தெளிவு. எனினும், சிந்தாமணி உரையில் சைனசமயக் கொள்கைகளை அம்மரபை யொட்டி விளக்கி இருப்பதனுலும், எழுத்துக்களில் அகரமாகின்றேன் யான் என்று கண்ணன் கீதையில் கூறிய கருத்தை இவர் எடுத்து விளக்கியிருப்பதனுலும், இவருடைய சமரச மனப்பான்மையை நாம் உணரலாம்.

வடமொழி நூல்கள் பல கூறுகின்றுர். சந்திராபரணம், சினேந்திரமாலை ஆகிய சோதிட நூல்கள், விஷசாகசம் சித்தராருடம், பரத சாத்திரம், கஜ சாத்திரம், மூலிகை சாத்திரம் முதலியவற்றையும் இவர் நன்கு உணர்ந்தவர் என்றும் அறிகிறோம்.

இளம்பூரணர், களவியலுரை யாசிரியர், பரிமேலழகர், நன்னூலாசிரியர் ஆகியோர் கருத்துக்களை இவர் மறுத்து எழுதுகிருர். மேலும் பேராசிரியர் சேனுவரையர் ஆளவந்த பிள்ளை ஆசிரியர் ஆகிய உரையாசிரியர்களை இவர் குறிப்பிடுகிருர். எனவே, இவர் இவர்களுக்கெல்லாம் பின் வந்தவராகிருர்.

ஏறக்குறைய 90 நூல்களை நச்சினுர்க்கினியர் எடுத்தாளுகிருர். யாவரும் பெயர்கூடக் கேட்டிராத கடகண்டு பல்காயம் மோதிரப் பாட்டு வசைக் கடகம் பொருளியல் என்பன இவற்றுள் சில. இப்பொருளியல் என்பது, தமிழ் நெறி விளக்கப் பொருளியல் போலும்.

தம் வாழ்நாள் முழுமையும் தமிழ் வளர்ச்சிக்காக உழைத்த அறிஞர் பெருமானுகிய இவரை, அமுதவாயர் என்றும், "நச்சினுர்க்கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்" என்றும் ஆன்றோர் புகழ்ந்து கூறுவது முழுமையும் பொருந்தும்.

**காலம்**

*அநபாயன் என்ற இரண்டாம் குலோத்துங்க சோழன் பெயரை இவர் குறிப்பிடுகின்ற பெயரால் (எழுத்து 482) அச்சோழன் காலமாகிய 12ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிக்கு இவர் பிற்பட்டவராகிறுர். பின்னுள்ளோர் என்று நன்னூலாசிரியரைக் கூறுகின்றமையால் அவர் காலமாகிய 13ஆம் நூற்றுண்டுக்கும் பிற்பட்டவராகிறுர். இனி இவர் சிந்தாமணி உரையில் (2463) கபர்த்தி காரிகைச் சுலோகத்தை எடுத்துக்காட்டுகிறுர். கபர்த்தியின் குமாரர் மல்லிநாதசூரி. இவர் காலம் 13 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி. நன்னூற் சூத்திரக் கருத்தைக் கூறும் பேராசிரியரை இவர் குறிப்பிடுகின்றமையாலும், மேற்காட்டியவற்றுலும், நச்சினர்க்கினியர் காலம் 14ஆம் நூற்றுண்டாகும் என்பது முடிவு.*

*இவர் புகழைக் கூறிப்போற்றும் டாக்டர் சாமிநாதையரவர்களின் பாடலோடு இப்பகுதியை முடிப்போம்:*

எவன் ஆலவாயிடை வந்து அமுதவாயுடையனென
இயம்பப் பெற்றேன்
எவன் பண்டைப் பனுவல் பல இறவாது நிலவஉரை
எழுதி ஈந்தோன்
எவன் பரம உபகாரி எவன் நச்சினர்க்கினியன்
எனும் பேராளன்
அவன் பாத இருபோதும் எப்போதும் மலர்க என
தகத்து மன்னே.

அத்தியாயம் 5.

# சைவ இலக்கியம்-1

# மெய்கண்ட பரம்பரை

## முன்னுரை

14-15 ஆம் நூற்றாண்டுகளின் தமிழ் இலக்கிய சரித்தி ரத்தைக் கூறப் புகுவோர் யாவரும், இக்காலத்துக்குத் தொடக்க எல்லையாகவும் இறுதி எல்லையாகவும் இரு சைவப் பேராசிரியர்களின் காலம் அமைந்திருப்பதை அறி வார்கள். சைவசித்தாந்த சந்தான குரவருள் நான்காமவ ராகிய உமாபதி சிவாசாரியர் கி. பி. 1313 இல் சங்கற்ப நிராகரணம் பாடினார். இவர் செய்த சாத்திர நூல்களில் மிகவும் சிறப்புடையதாகிய சிவப்பிரகாசத்துக்கு, கி. பி. 1488 இல் மதுரைச் சிவப்பிரகாசர் பேருரை எழுதினார். இவ்விரு கால எல்லைகளும் திட்டமாய்த் தெரிகின்றன. இக்கால அளவு 175 ஆண்டுகள்; 14-15 ஆகிய இரு நூற் றாண்டுகளும் இவ்வெல்லையோடு பொருந்துகின்றன. ஆக இக்காலத்தின் சைவ இலக்கியத்தை ஆராய்வது இவ்விரு நூற்றாண்டு ஆராய்ச்சிக்குப் பொருத்தமாகும்.

சைவ இலக்கியம் என்பது, மெய்கண்ட பரம்பரையில் தோன்றிய இலக்கியமே யாகும். இக்காலப் பகுதிக்கு முன் தோன்றிய சைவ இலக்கியம், பன்னிரு திருமுறைகளும், ஞானாமிர்தமும், பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாட லும் போன்ற சிலவேயாகும். அடுத்து எழுந்தவை சித் தாந்த சாத்திரங்கள். இவற்றுள், உந்தி களிறு என்ற இரண்டும் 12 ஆம் நூற்றாண்டில் செய்யப்பெற்றவை. பின் மெய்கண்டார் 13 ஆம் நூற்றாண்டில் தோன்றினார் என்பர்.

அவரோடு மெய்கண்ட பரம்பரையும் சைவ சாத்திரங்களும் தொடங்குகின்றன.

இந்த அத்தியாயத்தில் சிற்றம்பல நாடிகள்வரையுள்ள மெய்கண்ட பரம்பரையை நாம் காண்போம். இப்பரம் பரையில் சிறப்பான மூன்று ஆதீனங்கள் தோன்றி வளர்ந்த வரலாறு புலப்படுகிறது. இவற்றுள் தருமபுரமும் காஞ்சி ஞானப் பிரகாசராதீனமும் 16 ஆம் நூற்றுண்டு முதல் வளர்ச்சிபெற்ற வரலாறு தெளிவாகத் தெரிகிறது. மற்றொன் றுன திருவாவடுதுறை யாதீனம் இன்னும் பழமையானது; 15 ஆம் நூற்றுண்டிலேயே தோன்றிவிட்டது என்பதை அவ்வாதீன பரம்பரை வரலாறு கொண்டே நாம் நம்ப வேண்டி யிருக்கிறது. இது எவ்வாறு என்பதையும் இவ் வத்தியாயத்துள் காண்போம். இவையன்றி, 14 ஆம் நூற் றுண்டில் தோன்றி இன்று அழிந்துபோன வள்ளலார் ஆதீனம், துழாவூர் ஆதீனம், செப்பறை மடம் என்பனவும் மெய்கண்ட சந்தானத்தில் வந்தவையே.

## மெய்கண்ட பரம்பரை

பதின்மூன்றும் நூற்றுண்டின் முற்பாதியில் மெய்கண் டார் வாழ்ந்து சிவஞானபோதம் பாடி, நாற்பத்தொன்பது மாணக்கருக்கு ஞானேபதேசம் செய்தார் என்பது வரலாறு. அவர் மாணக்கருள் இருவரே இன்று நமக்குத்தெரிந்தோர். ஒருவர் அருணந்தி சிவாசாரியர்; சிவஞான சித்தியார் என்ற பெருநூலும் இருபா இருபதும் பாடியவர். மற்றவர், உண்மை விளக்கம் என்ற சிறு நூல் பாடிய திருவதிகை மனவாசகங் கடந்தார்; இவர் வாழ்க்கைபற்றிய குறிப்பு எதுவும் கிடைத்திலது.

அருணந்தி சிவாசாரியார்மூலம் மெய்கண்ட ஞான பரம்பரை வளர்ந்தது. அவருடைய மாணக்கர் பலருள், மறைஞான சம்பந்தர் ஒருவரே நமக்குத் தெரிந்தவர். இவர்

சதமணிக் கோவை பாடினார். இவருடைய மாணாக்கர் பலருள் இருவர் குறிப்பிடத்தக்கவர்கள். ஒருவர் உமாபதி சிவாசாரியர்; மற்றவர் மச்சுச் செட்டியார் என்ற அருள் நமச்சிவாயர்; இம் மச்சுச் செட்டியார், தம் ஆசாரியர் முத்தி யடைந்தபின், உமாபதியாரிடமும் மாணாக்கரா யிருந்து, அவர் முத்தியடைந்த பின், தாமே ஆசாரியராக விளங்கி வந்தார்; இச் செய்தி ஆதீன சம்பிரதாய நூல்களில் சொல்லப்பட்டுள்ளது.

உமாபதி சிவாசாரியர் சங்கற்ப நிராகரணம் பாடிய காலம் கி. பி 1313. இதனாலேயே பல நூல்களின் காலம் விளக்கம் பெறுகிறது. இவர் பாடிய சிறப்பான நூல் சிவப் பிரகாசம்; மற்றவை திருவருட் பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, சங் கற்ப நிராகரணம் என்பன.

இவருக்குப் பின் இப்பரம்பரையில் தலைவரா யிருந்த வர் அருள் நமச்சிவாயர் இவரே ஞானபூசைத் திருவிருத் தம் முதலான ஐந்து சிறு பிரமாண நூல்களைப் பாடினார். இவர் காலத்தில் இந்தப் பரம்பரை விரிவு பெறுவதற்கான தோற்றுவாய் ஏற்பட்டது. இவருடைய மாணாக்கர் பலருள் இருவர் சிறப்பானவர். ஒருவர் சித்தர் சிவப்பிரகாசர் என் பவர். அவர் மாணாக்கர் மூவலூர் நமசிவாயமூர்த்தி. இவரே திருவாவடுதுறை யாதீன மரபைத் தோற்றுவித்தவர். இவ் வாதீனம் அன்று முதல் இன்றுவரை இடையறாது வளர்ந்து வந்திருக்கிறது. சிறந்த ஞானாசாரியர்கள் தோன் றிப் பண்டார சாத்திரம் என்ற 14 நூல் செய்தார்கள்; 18 ஆம் நூற்றாண்டில் சிவஞானசுவாமிகள் தோன்றி இம்மடத் தின் அடியவராய், சிவஞான போதமாபாடியம் எழுதினார்.

மற்றவர் காழிக் கங்கை மெய்கண்டார் என்பவர்; இவர் பரம்பரை மேலும் வளர்ந்து கொண்டு போயிற்று.

கங்கை மெய்கண்டாருடைய மாணக்கர் சீகாழிச் சிற்றம்பல நாடிகள். இவர் துகளறு போதம் முதலிய பல சாத்திர நூல்கள் செய்தார். இந்நூலானது மெய்கண்ட சாத்திரங்களில் பதினன்காவதாகப் பல ஏடுகளில் காணப் படுகிறது. இவருடைய மாணக்கரில் குறிப்பிடத் தக்கவர் நால்வர்.

சீகாழித் தத்துவ நாதர் என்பவர் இவருடைய மாணக் கராயிருந்து **உண்மை நெறி விளக்கம்** என்ற ஒரு சிறு நூல் செய்தார். (இந்நூல் உமாபதி செய்ததென்றும், 14 சாத்திரங்களுள் ஒன்றென்றும் ஒரு கருத்து வழங்கி வரு கிறது.) இதுவன்றி, இவர் **இருபா இருபதுக்கு** உரை எழுதியிருக்கிருர். (இதுவே முதன் முதலாக எழுந்த சித்தாந்த சாத்திர உரை.)

மற்ெருரு சீடரான தத்துவப் பிரகாசர் என்பவர் தத்துவப் பிரகாசம் என்ற மிக்க சிறப்பான விரிந்த சாத் திர நூல் பாடினர். அன்றி, **துகளறு போதக் கட்டளை** என்ற ஒரு சிறு வசனநூலும் இவர் செய்தார். இவர் மாணக்கரான பரம முனிவர் என்பவர், தம் குரு செய்த தத்துவப் பிரகாசத்துக்கு ஒரு விரிவுரையும், **சித்தாந்த சாரம்** என்ற சிறு நூலும் எழுதினர்.

மற்ெருரு சீடர் காஞ்சி ஞானப்பிரகாசர். இவரும் இவர் சீடரான கண்ணப்பரும், சித்தர்காட்டில் சிற்றம்பல நாடிகள் சமாதிகொண்ட காலத்தில், உடன் சமாதி கொண் டவர்கள். இவ்விருவருக்கும் அடுத்துவந்த ஞானப்பிரகாசர் பெயராலேயே இன்று காஞ்சி ஞானப்பிரகாசர் மடம் வழங்கி வருகிறது.

மற்ெருரு சீடர் பழுதை கட்டிச் சம்பந்த முனிவர் என் பவர். இவர் **சிவானந்த மாலை** பாடினர். இவருடைய மாணக்கர்மூலம் மெய்கண்ட ஞான பரம்பரை இன்னும் பல கிளைகளாகப் பிரிந்தது. ஒரு சீடர் காவை-அம்பலநாதத்

தம்பிரான்; பல சிறு பிரமாண நூல்கள் பாடியவர். இவருடைய மாணாக்கர் சத்தியஞானி; அவர் மாணாக்கர் மதுரை ஞானப்பிரகாசர். இவர் சிவப்பிரகாசவுரை செய்தார். (இவ்வுரை இதுவரை எங்கும் கிடைக்கவில்லை. இப்போது இதன் பிரதியை ஈரோடு வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அன்போடு உதவினார்கள்.) இவருடைய மாணாக்கராகிய மதுரைச் சிவப்பிரகாசர் சிவப்பிரகாச விருத்தியுரை செய்தார். செய்தகாலம் கி. பி. 1488. மதுரைச் சிவப்பிரகாசர் சிறப்பான பேராசிரியராவார். இவர் மரபு 18 ஆம் நூற்றாண்டு வரையில் வளர்ந்தது என்று அறிகிறோம்; அந்நூற்றாண்டில் இம்மரபில் வந்த ஆளுடையப்பர் என்பவர் பைஞ்ஞீலிப் புராணவுரை எழுதினார் என்றும் அறிகிறோம். சத்திய ஞானியின் மற்றொரு மாணாக்கர் பலநூல் செய்த களந்தை ஞானப்பிரகாசர். இவர் மாணாக்கர், மிகப் பெரிய சைவ நூலாசிரியரான மறைஞான சம்பந்தர். சம்பந்த முனிவரின் மற்றொரு மாணாக்கர் வரையறுத்த பாட்டியல் என்ற பாட்டிலக்கண நூல் செய்தார்; இவர் பெயர் தெரியவில்லை.

சம்பந்தமுனிவரின் மற்றொரு சீடர் சம்பந்த சரணாலயர் என்பவர். இவர் தத்துவ விளக்கம் பாடினார். பிற்காலத்தில் இதே சம்பந்த சரணாலயர், சைவ சித்தாந்தத்தை விட்டு விலகி, ஐக்கியவாத சைவக் கொள்கையைக் கொண்டார். அப்போது இவர் மாணாக்கரா யிருந்தவரொருவர், புதுநெறி சென்ற குருவைப் பின்பற்றாது விலகிச்சென்று, பொதிகையில் வாழ்ந்த குறுமுனியடிகளால் தேவாரத்திரட்டு தொகுத்துத்தரப்பெற்ற சிவாலய முனிவர் என்ற பெரியாரைத் தம் குருவாகக் கொண்டு வாழ்ந்து, **திருநெறி விளக்கம்** பாடினார் என்று அறிகிறோம்.

ஐக்கிய வாத சைவத்தை மேற்கொண்ட சம்பந்த சரணாலயர் தம் பெயரைக் கண்ணுடைய வள்ளல் என மாற்றிக்கொண்டார். தம் குருவாகிய சம்பந்தமுனிவராக, காழித்

திருஞானசம்பந்தப் பெருமானே வந்தார் என்று கொண்டு, பலநூல்களில், பல பாடல்களில், திருஞான சம்பந்தரையே குறிப்பிடுகிறார். ஒழிவிலொடுக்கம் போன்ற சிறு நூல்கள் இவர் செய்தவை. இந்நூல் பின் வந்த திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் உரை செய்த பெருமையுடையது. இக் கண்ணுடைய வள்ளல் சீகாழியில் கண்ணுடைய வள்ளல் ஆதீனத்தைத் தாபித்தார். இவருக்குப் பின் தலைவரா யிருந்தவர் சயம்பிரகாச வள்ளல்; பின்னர் சிவஞான வள்ளல்; இவர் சித்தாந்த ஐக்கிய வாத சமரசம் செய்ய முற்பட்டு, வேதாந்தம் என்று எல்லோரும் கருதுகிற வள்ள லார் சாத்திரம் செய்தார். இவர் மாணாக்கரான சட்டை நாத வள்ளல் நடராச தத்துவத்தை விளக்கும் சதாசிவ ரூபம் பாடினார். அவருடைய மாணாக்கர் இதற்கு அரிய தோர் உரை செய்தார். இவ்வள்ளல் ஆதீனமானது 1960 வரையிலும் பெயரளவில் இருந்தது. இவர்கள் கிரகத்தர் களாயிருந்தனர். இந்த இருபதாம் நூற்றாண்டில் இப்பரம் பரையில் வந்தவர் கல்வியறிவில்லாமல் சீரழிந்து போனார்; வள்ளல் போகவே, பரம்பரை என்ற பெயருக்கே இட மின்றி அவ்வாதீனமும் மறைந்து போய்விட்டது.

சம்பந்தமுனிவருடைய மற்றொரு சீடர் சிவபுரம் ஞானப் பிரகாசர் என்பவர். அக்காலத்தில் சிவபுரத்திலிருந்த கார் காத்த வேளாளர் சாத்திரஞானம் நிரம்பியவர்களாக வாழ்ந்தார்கள்.[1] சிற்றம்பல நாடிகள் பரம்பரையுடன் நெருங் கிய தொடர்பு பூண்டு ஒழுகினார்கள். அவர்களுள் மிக்க சிறப்புடைய பெரியாரொருவரே சிவபுரம் - ஞானப்பிர காசர். சம்பந்த முனிவருக்குப் பின் இவர் ஆசாரியராயிருந் தார். இவருடைய மாணாக்கர் சிவபுரம் தத்துவப் பிரகாசர். இவருடைய சீடர் திருவாரூர் - பழுதை கட்டிச்சிதம்பரநாத ஞானப்பிரகாசர். (இவர் சிதம்பரநாதர் என்ற இயற்பெயர்

1. சில நூற்றாண்டுகளுக்குப் பின், சிவபுரம் பெரியபிள்ளை என்பவர், திருவாவடுதுறை ஆசாரியரிடம் சீடராயிருந்து, அவர்மீது பத்து வெண்பாக்கள் கொண்ட ஒரு குரு தோத்திரம் பாடினார்.

உடையவராயிருந்து ஆசாரிய பரம்பரைக்கு வந்த பின் தம் குருவாகிய தத்துவப் பிரகாசரால் அவருடைய குருவாகிய ஞானப்பிரகாசர் பெயரைத் தீக்ஷா நாமமாகச் சூட்டப்பெற்றார் போலும்.)

சிதம்பரநாத ஞானப்பிரகாசர் இல்லறத்தார். இவர் புதல்வரே இவரிடம் மாணாக்கராயிருந்து, பின்னர் கமலை ஞானப்பிரகாசர் என்ற புகழ்பெற்ற ஆசாரியரானார்.

இவர்கள் இருவரும் இல்லறத்தாராவர். (சாமானிய மொழியில், காவி வேட்டியல்ல, வெள்ளை வேட்டி என்பார்கள்.) இவர் **சிவபூசை யகவல்** முதலான சாத்திரநூல்களும் **மழபாடிப் புராணம்** முதலான பல இலக்கியங்களும் செய்தவர். காலம் 1525-75.

இவருடைய மாணாக்கர் பலர். அவருள் நால்வர் இங்குக் குறிப்பிடத்தக்கவர். ஒருவர் தருமபுரம் ஆதீனக் குரு முதல்வராக ஆன குரு ஞானசம்பந்தர்; காலம் 1550-1575. இவர் **சிவபோக சாரம்** முதலான சாத்திர நூல்கள் சில பாடியவர். இவருக்குப் பின் வந்த ஆசாரியர்கள் மூலமாகத் தருமபுர ஆதீன பரம்பரை இன்றுவரை இடையறாது வளர்ந்து வந்திருக்கிறது. 17 ஆம் நூற்றாண்டில் முருகன் திருவருள் பெற்று விளங்கிய குமரகுருபர சுவாமிகள் இம்மடத்தில் உபதேசம் பெற்றார்; அவர் புகழால் இவ்வாதீனத்தின் புகழ் நின்று நிலவுகிறது.

கமலை ஞானப்பிரகாசருடைய மற்றொரு மாணாக்கர் நிரம்ப அழகிய தேசிகர். இவர் துழாவூர் ஆதீனத்தார்; **சேது புராணம், திருப்பரங்கிரிப் புராணம்** பாடியவர்; **சித்தியார் திருவருட் பயன்** உரைகள் எழுதியவர். காலம் 1550-75. இவருடைய மாணாக்கர் சம்பந்த முனிவர் என்பவர். **திருவாரூர்ப் புராணம்** பாடினார்; மற்றொரு மாணாக்கரான ஞானக்கூத்தர் என்பவர் **செப்பேச புராணம்** என்னும் திருவையாற்றுப் புராணம் பாடினார்.

கமலை ஞானப் பிரகாசருடைய மற்றொரு சீடரான மாசிலாமணிச் சம்பந்தர் என்பவர் **உத்தரகோச மங்கைப் புராணம்** பாடினார். பின்னுமொரு சீடரான திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் **ஒற்றியூர்ப் புராணம், சித்தியார் பரபக்கவுரை, சங்கற்ப நிராகரணவுரை** முதலியன செய்தார்; இவர் மாணாக்கரான திருவொற்றியூர்த் தத்துவப் பிரகாசர் தாமும் மற்றொரு **சித்தி பரபக்கவுரை** எழுதினார். ஞானப்பிரகாசருடைய மற்றொரு மாணாக்கர் அவரைத் துதித்து **ஆன்மலிங்க மாலை** பாடினார்.

இங்ஙனமாக, மெய்கண்டாரின் ஞான பரம்பரை வளர்ந்து பல கிளைகளாகப் பிரிந்தது. அவற்றுள், சீகாழி கண்ணுடைய வள்ளலாதீனம் இன்று இல்லை. திருவாவடுதுறை நமச்சிவாயமூர்த்திகள் ஆதீனமும் தருமபுரம் குரு ஞான சம்பந்தர் ஆதீனமும் இன்றுவரை நடைபெற்று வருகின்றன.

பிற்காலத்தில் திருவாவடுதுறை அடியவரான சிவப்பிரகாசர் என்பவரால் துறையூர் - வீரசைவச் சிவப்பிரகாசராதீனம் தோன்றியது. திருப்பனந்தாள் காசி மடம் என்பது தருமபுர ஆதீனத்தில் உபதேசம் பெற்ற பெரும் புலவரான குமரகுருபர சுவாமிகளின் வழியாக 18ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் திருப்பனந்தாளில் நிலைபெற்றது. இதே காலத்தில் சொர்க்கபுரம் தனி மரபொன்று தருமபுரத்திலிருந்து கிளைத்து வளர்ந்தது; இப்போது இது இல்லாமல் அழிந்தது போலும்.

இதுகாறும் கூறியவற்றுள், கி. பி. 13ஆம் நூற்றாண்டில், முதல்முதலாக மெய்கண்டாரோடு தொடங்கிய சைவ சித்தாந்த ஞான பரம்பரையும் இலக்கியப் பரம்பரையும் தொடர்பாக வளர்ந்து, 18ஆம் நூற்றாண்டு வரையிலும், அதற்குப் பின்னரும் கூட, விரிவடைந்து வந்திருக்கின்றன என்று அறிகிறோம். இனி, இப் பரம்பரையில் 14ஆம்

நூற்றுண்டில் இலக்கியம் செய்தாருடைய வரலாற்றையும், அவர்கள் செய்த இலக்கியங்களையும் முறையாகக் காண்போம்.

## மறைஞான சம்பந்தர்

சைவ சித்தாந்த சமய வரலாற்றில், அகச் சந்தானம் புறச் சந்தானம் என இருவகையாக ஆசாரியர்களை முறைப்படுத்திக் கூறுவது மரபு. இம் முறையுள், கயிலாயவாசிகளான ஸ்ரீகண்ட பரமேசுவரன், சனற்குமார முனிவர், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதி முனிவர் என்ற முறையினர் நால்வரும் அகச் சந்தானம் என்று சொல்லப் பெறுவர். அடுத்த மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியர் என்னும் நால்வரும் பூலோகவாசிகள்; புறச் சந்தானம் என்று சொல்லப் பெறுவர்.

சைவ சித்தாந்த ஆசாரிய பரம்பரை என்பது இந்த மெய்கண்டாரோடு தொடங்குகிறது. இவரே சைவ சித்தாந்த தத்துவ நூல் மரபுக்குரிய முதல் மூலசாத்திரமாகிய சிவஞான போதத்தைச் செய்தவர். இவர் காலம் கி. பி. 1232ஐ ஒட்டியது என்று ஆன்றோர் சாசன ஆராய்ச்சி மூலம் முடிவு செய்திருக்கிருர்கள். இச் சிவஞான போதத்தின் முதன்மையை நிலைநாட்ட வேண்டும், இதுவே பிற சமயங்களாகிய இருளைக் கடியவல்ல ஞான சூரியன் என்று கருதிய சூரியனுர் கோயிலாதீன ஸ்தாபகராயும் சிறந்த ஞானுசிரியராயும் விளங்கிய சிவாக்கிர யோகிகள் (16ஆம் நூ.) வடமொழிச் சிவஞான போதத்துக்கு வடமொழியிலேயே சிவாக்கிர பாஷ்யம் என்ற பேருரை எழுதினுர்.

மெய்கண்டார் மூன்று வயதுக் குழந்தையாக ஞானோபதேசம் பெற்றவர் என்பது பரம்பரையான சரித்திரம்.

அவருக்குப் பின், அவரிடம் உபதேசம் பெற்று ஆசாரியராய் இருந்தவர், அருணந்தி சிவாசாரியர். இவரிடம் உபதேசம் பெற்று ஆசாரியராய் வந்தவர் மறைஞான சம்பந்தர். இவருடைய மாணுக்கர் உமாபதி சிவாசாரியர். உமாபதி சிவாசாரியர் சங்கற்ப நிராகரணம் என்ற நூல் செய்த காலம் சகம் 1235, அதாவது கி. பி. 1313. ஆதலால் மறைஞான சம்பந்தர் 1300ஐ அடுத்து விளங்கியவர் என்று நாம் கொள்வது பொருத்தமாய் இருக்கும். எனவே, 14ஆம் நூற்ருண்டின் சைவ இலக்கிய வரலாறு இவரோடு தொடங்குகிறது என்பது பொருந்தும்.

மறைஞான சம்பந்தர், மறைஞான தேசிகர் என்பன போன்ற பெயரால் விளங்கிய பெரியார் பலர். இவர்கள் அனைவரினும் காலத்தால் மிகவும் முந்தியவர் சந்தான ஆசாரியரான இம் மறைஞான சம்பந்தராவார்.

மறைஞான சம்பந்தர், மெய்கண்டாரின் அவதாரத் தலமாகிய பெண்ணுகடத்தில், சாம வேதத்திற்குரிய பிராமண மரபில் பராசர கோத்திரத்தில் பிறந்தார். இவருடைய இயற்பெயர் ஞான சம்பந்தர் என்று இருந்திருக்கலாம்; வேதம் ஆகமம் முதலான வைதிக நூல்கள் யாவையும் இவர் முறையாக ஓதியுணர்ந்து பெரும் பண்டிதரானமையால், மறைஞான சம்பந்தர் எனப்பெற்ருர் போலும். உரிய காலத்தில் இவர் திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியரை அடைந்து அவரை ஞானசாரியராகக் கொண்டார். அவர் இவருக்கு ஞானேபதேசம் செய்து மெய்கண்டார் நூலையும் தமது நூல்களையும் தந்து, சந்தானத்தை வளர்த்து வரும்படி கட்டளையிட்டார். அருணந்தியார் காலத்திற்குப் பின் இவர் சிதம்பரத்திற்கு வடகிழக்கிலுள்ள திருக்களாஞ்சேரி[1]

1. இவ்விடம் இன்று சிங்காரத் தோப்பு என வழங்கிவருகிறது. அழகான தோப்புக்கள் இருந்து அழிந்து போயின. பழைய கல்வெட்டுக்கள் பொறித்த சிவாலயமொன்று மிகவும் சிலமான நிலையில் உள்ளது. இங்கு மறைஞான சம்பந்தர் சமாதி மட்டும் திருவாவடுதுறையார் பராமரிப்பில் இருந்துவருகிறது.

என்னுமிடத்தில் இருந்துகொண்டு, தினமும் நடராசப் பெருமானைச் சென்று வணங்கி, தக்க சீடன் வரும் தருணத்தை எதிர்நோக்கி யிருந்தார்.

அப்போது ஒரு நாள், தில்லைவாழ் அந்தணருள் ஒருவ ராகிய உமாபதி சிவாசாரியர், தம்முடைய முறையின்படி நடராசப் பெருமானைப் பூசித்து முடித்து, வீதியில் சிவிகை யூர்ந்து சென்றார். அவரைப் பார்த்த மறைஞான சம்பந்த ருக்கு அவரது பக்குவ நிலைமை புலப்பட்டது. அப்போது வீதியில் பிட்சை எடுத்துக்கொண்டு இவர் சென்றார். இவரை உமாபதி கவனிக்கவில்லை. தக்க சீடனைத் தேடிக் கொண்டிருந்த மறைஞான சம்பந்தர், உமாபதி செவியில் விழும்படி 'பட்ட கட்டையிற் பகற்குருடன் போகின்றான்' என்று கூறினார். உமாபதியாருக்கு இது தடுத்தாட்கொள் ளும் மொழியாயிற்று. உடனே அவர் சிவிகையை விட்டுக் குதித்து, இவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம்மை ஆட்கொள்ளும்படி வேண்டினார். இவரும், அவரை ஏற்றுக் கொண்டு அவரைப் பலவிதத்தில் சோதித்தார்.

ஒரு நாள் மறைஞான சம்பந்தர் துணி நெய்வார் வீதி வழியே செல்லுகையில், அவர்கள் பாவுக்கு இடுவதற்காக வைத்திருந்த கஞ்சியைக் கையேற்று உண்டார். உடன் வந்த உமாபதியார் தம் ஆசிரியர் கையிலிருந்து ஒழுகிய கஞ்சியைத் தாம் ஏற்று அருந்தினார். இதைக் கண்டு மறை ஞான சம்பந்தர் அவருடைய பரிபாகத்தை அறிந்து, தம் மரபில் வந்த சாத்திரங்களை அவருக்கு உபதேசித்து, 'மெய் கண்ட சந்தானத்தை வளர்ப்பாயாக' என்று கட்டளையிட்டு, திருக்களாஞ்சேரியில் வாழ்ந்திருந்து, சில காலம் கழிந்த பின் ஓர் ஆவணி மாதம் உத்திர நட்சத்திரத்தில் முத்தி யடைந்தார். (இக்காலம் கி. பி. 1300க்கு சில ஆண்டுகள் பின்னுக இருக்கலாம்). தில்லை நகரின் ஈசானிய திசையில் அரை மைல் தூரத்தில் ஒரு திடலில் மறைஞான சம்பந்தர் சமாதியும், இடிந்த மடமும், பிரம தீர்த்தம் என்ற திருக்

குளமும், இடிந்துபோகிற 'திருக்களாஞ் செடியுடைய மகா தேவர்' கோயிலும் அமைந்திருக்கின்றன.

இதுவே இதுகாறும் வழங்குகின்ற மறைஞான சம்பந்தர் வரலாறு. சென்ற நூற்றாண்டின் மத்தியில் திருவாரூரில் வாழ்ந்த சுவாமிநாத தேசிகர் என்ற சைவப் பெரியார், முதன் முதலாக சந்தாநசாரியர் நால்வரின் வரலாற்றையும் 126 பாடல்கள் கொண்ட **சந்தாநசாரிய புராண சங்கிரகம்** என்ற ஒரு சிறு நூலாகப் பாடினார். இவருக்கு முன் இதே வரலாறு வழங்கிய போதிலும் கூட, இவர் நூலே இன்று ஆதார வரலாறு ஆகிவிட்டது. இதனுள் மறைஞான சம்பந்தர் வரலாறு கூறும் பாடல்கள் 8.

உமாபதியார் தம் குருவாகிய மறைஞான சம்பந்தரைத் தம் நூல்கள் பலவற்றில் போற்றியிருக்கிறார். சிவப்பிரகாசத்தின் பாயிரப் பகுதியில் 'விறலார் செல்வத் தாவில்அருள் மறைஞான சம்பந்தர்' என்றார். பின்னர் 6ஆம் பாடலை, தனியே குரு வணக்கமாகவே பாடியிருக்கிறார்:

பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை யாண்ட
சைவசிகா மணிமருதத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே மதியம்
கடவாமல் நெடுங்கொடியின் கரந்தகையும் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை
திருவளரும் மலரடிகள் சென்னி வைப்பாம்.

இப்பாட்டே மறைஞான சம்பந்தர் பற்றிய வரலாற்றுக்கு ஆதாரமாய் இருந்திருக்கிறது. பின்னும் உமாபதியார், வினாவெண்பா 12 பாடல்களுள் மருதச் சம்பந்தர் என்று 9 முறையும், கடந்தைச் சம்பந்தர் என்று 3 முறையும் கூறுகின்றார். போற்றிப் பஃறொடை, நெஞ்சு விடுதூது, சங்கற்ப நிராகரணம் ஆகியவற்றில் சம்பந்த மாமுனிவன்,

மருதச் சம்பந்தன், சம்பந்தநாதன் என்று குறிப்பிடுகிறார். பெண்ணாகடமாகிய கடந்தையே மறைஞான சம்பந்தருடைய ஊரென்றும், அவர் மருதூரில் தங்கிய காரணத்தால் மருதச் சம்பந்தர் என்று பெயர் பெற்றார் என்றும் கொள்ளலாம்.

மறைஞான சம்பந்தர் ஞானோபதேசம் செய்து மெய் கண்ட பரம்பரையை வளர்த்தார். இவரிடம் உபதேசம் பெற்றவர்களில் இருவர் பெயர் இப்போது தெரியும். முதலாமவர் மச்சுறைவார் என்று சொல்லுகின்ற மச்சுச் செட்டியார்; இவரே பிற்காலத்தில் அருள் நமச்சிவாயர் என்ற ஞானசாரியரானார். மற்றவர் மிகவும் பிரசித்தமான உமாபதி சிவாசாரியர். ஞானோபதேசம் செய்ததை யன்றி இம் மறைஞான சம்பந்தர் நூல் ஒன்றும் செய்யவில்லை என்று பலரும் கூறியிருக்கிறார்கள். உண்மை அதுவன்று; பண்டைய பிரமாண நூல்களுள் ஒன்றாகிய சதமணிக் கோவை என்ற சிறு நூல் இவர் செய்தது என்று நாம் இப்போது அறிகிறோம்.

உமாபதி சிவாசாரியர் காலத்தை அடுத்துத் தோன்றிய ஞான தீக்கைத் திரு விருத்தம் செய்தாரும், 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் சிவப்பிரகாசத்துக்குப் பேருரை எழுதிய மதுரைச் சிவப்பிரகாசரும், **தத்துவ ரத்நாகர** முடையாரும், 18ஆம் நூற்றாண்டில் சிவஞான பாடியம் எழுதிய சிவஞான சுவாமிகளும் இந்நூலை மேற்கோள் காட்டுகிறார்கள். இவ்வளவு பழமையும் சிறப்பும் உடைய இந்நூலைச் செய்தார் யார், காலம் யாது என்பது திட்டமாக இதுகாறும் வரையறை செய்யப்படவில்லை. ஆசிரியர் பெயர் தெரியவில்லை என்பதே வழங்கும் பொதுவான கருத்து.

சதமணிக் கோவையை முதல் முதல் 1898ஆம் ஆண்டில் நாகை வேதாசலம் பிள்ளை (மறைமலை அடிகள்) அச்சிட்டார். அப்பதிப்பில் ஆசிரியரைப் பற்றிய குறிப்போ, நூல்

பற்றிய குறிப்போ இல்லை. பின்னர் 1949இல் இது திருவாவடுதுறை ஆதீனத்தில் த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளையால் பரிசோதித்துப் பதிக்கப்பெற்றது. பதிப்பாளர் தம் முகவுரையில் 'இவ்வாதீனத்துப் பெரியார் பொழிப்புரை செய்தார்' என்று குறிப்பிட்டு, அப் 'பொழிப்புரை' யோடு நூலை அச்சிட்டிருக்கிறார்.

நூலானது காப்பு உள்பட 107 நேரிசை வெண்பாக்களால் இயன்றது. நூறு மணிகளாகிய வெண்பாக்களால் கோத்த மாலை என்பதே நூற் பெயராகிய 'சதமணிக் கோவை' என்ற தொடரின் பொருளாகும். செய்யுட்கள் திட்டமாக நூறு என்றில்லாமல், சில பாடல்கள் கூடியிருப்பதால் பெயரின் பொருத்தம் குறையாது.

ஒவ்வொரு பாட்டுக்கும் பின்னுள்ள சிறு குறிப்பையே 'பொழிப்புரை' என்று அச்சிட்டோர் கூறினர். நூலைப் பார்த்த மாத்திரத்தில் இது பொழிப்புரை அன்று என்பது வெளிப்படையாகத் தெரியும். ஒவ்வொரு வெண்பாவிலும் ஆசிரியர் ஒரு வினாவை எழுப்புகிறார். பின் உரைநடையாக, மிகச் சுருங்கிய அளவில், ஒன்றிரண்டு சொற்களால்கூட, அவ்வினாவுக்குப் புத்தி பூர்வமாகவும் புராண கதை மூலமாகவும்தாமே விடைகூறுகிறார். இவ்வினாவும் விடையும் மாணிக்க வாசகர் பாடிய திருவாசகம் திருச்சாழலில், ஒவ்வொரு பாடற் கண்ணும் முன்னிரு வரிகளில் ஊமைப் பெண்ணை நோக்கி ஒரு வினா விடுப்பதாகவும், பின்னிரு வரிகளில் அப்பெண் விடைபகர்வதாகவும், அமைந்துள்ள அமைப்பை நினைவூட்டும்.

வினா விடைகட்கு எடுத்துக்காட்டாக இரு பாடல்களை இங்குக் கூறலாம். ஒன்று புராணக்கதை; ஈசன் எங்கும் உளன் என்றால் காசி முதலான பதிகளைச் சிறப்பித்துப் புகழ்வது ஏன் என்று கேட்கிறார்.

ஈசன் குறைவறவே எவ்விடத்தும் நிற்பனெனில்
காசி முதலாகும் பதிகதியாப் - பேசியதிங்கு
ஏதோ புராணங்கள் எல்லாம், இறைவனே!
ஈதென்று நாயேற்கு இயம்பு.

*விடை : "பசுவின் முலையிலே பால் பலித்தாற் போல". மற்றொன்று அத்துவித முத்தி நிலையை விளக்கக் கேட்கும் வினு :*

சென்றணையில் ஏகதே சந்தான் சிவமாகும்,
அன்றிநிறை வென்னில் அரனடியைக்—குன்றுமல்
கூடலென்னும் சொல்லில்லை யாகும், குருபரனே!
நாடிஉன துண்மை நவில்.

*விடை : "கண்படலம் நீங்குமதொழிந்து, பிரகாசம் வந்து கூட வேண்டுவதில்லை."*

*சதமணிக்கோவை செய்தார் யார் என்று பலர் பலவாறுகக் கூறியுள்ளனர். சந்தாைசாரியர் நால்வருள் மூன்றமவர் என்றும், அருள் நமச்சிவாயர் என்றும், காழிக் கங்கை மெய்கண்டார் என்றும், காழிச் சிற்றம்பல நாடிகள் என்றும் பலவகைக் கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன.*

கண்ணை நுதலிற் கறையைக் களத்தில்மறைத்து
எண்ணமிலா என்போல் எழுந்தருளும்—
வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டதேவர் விஞவெண்பா விற்குமுகங்
கைகண்ட தேமிகவும் காப்பு.

*இது காப்புச் செய்யுள். வெண்ணெய் நல்லூர் மெய் கண்ட தேவர் விஞ வெண்பா என்பதால் காழிக் கங்கை மெய்கண்டாரை விளித்து அவர் மாணக்கர் சிற்றம்பல நாடிகள் செய்யவில்லை என்றும், அருள் நமச்சிவாயரை விளித்து அவர் மாணக்கர் கங்கை மெய்கண்டார் செய்ய வில்லை என்றும் நாம் முடிவு செய்யலாம். பின் வந்த ஆசிரியர் தங்கள் ஞான பரம்பரை முதல்வரை முன்னிலைப்*

படுத்திப் பாடல்கள் இயற்றுதல் மரபேயாகும். இவ்வாறு இங்குக் கொள்ளலாமாயினும், அருள் நமச்சிவாயரோ அவர் பின் வந்தவரோ பாடியிருந்தால், தத்தம் குருவாகிய உமாபதியார் போன்ருரை ஓரிடத்தேனும் முன்னிலைப் படுத்தி இருப்பார்கள் எனக் கருதலே முறையாகும். அங்ஙன மின்மையின், இவர்கள் யாரும் ஆசிரியர் அல்லர் என்று திட்டமாய்ச் சொல்லலாம். ஞான தீக்கைத் திரு விருத்தம் என்ற நூல் சதமணிக் கோவையை எடுத்துக் கூறுகிறது. கூறும் பாடல் பின்வருவது :

> தேசுமிகும் அருட்பயின்ற சிவப்பிர காசத்தில்
> திருந்துபொதுச் சங்கற்ப நிராகரணம் திருத்தி
> ஆசிலருள் விஞவெண்பாச் சார்பு நூலால்
> அருள்எளிதிற் குறிகூட அளித்து ஞானப்
> பூசைதக்க காரணமுன் புகன்றதனிற் புரிந்து
> புணர்விக்கச் சிவஞான போதசித்தி வழிநூல்
> மாசில்சத மணிக்கோவை முன்னூல் சான்று
> மருவுதிரு முறைத்திரட்டு வைத்தனன்மன்
> னுயிர்க்கே.

இப்பாடலுள், இவ்விருத்த ஆசிரியர் சதமணிக் கோவையின் பெயர் குறிப்பிட்டு எடுத்துச் சொல்கிருர். மதுரைச் சிவப்பிரகாசர் உரை செய்த காலம் கி. பி. 1488. அவர் இவ்விருத்தப் பாடலை எடுத்துக் காட்டுகிருர். ஆதலால் இது அவருக்குக் கொஞ்ச காலம் முற்பட்ட நூலாகும். பல ஆதாரங்களால் ஞான தீக்கைத் திருவிருத்த காலம் கி. பி. 1350 என்று ஏற்படுகிறது. (பின்னர் இதை விளக்குவோம்.) ஆகவே இதற்குச் சில காலம் முந்தியதே சத மணிக்கோவை என்று கொள்ளவேண்டும்.

இனி, 'தேசுமிகும்' என்ற இந்தப் பாடலைக் கூர்ந்து ஆராய்ந்தால் ஓர் உண்மை புலப்படுகிறது முதல் இரண்டு அடிகளில் இப்பாடல் ஆசிரியர், உமாபதி சிவாசாரியர் செய்த சிவப்பிரகாசம், சங்கற்ப நிராகரணம், திருவருட்

பயன், வினு வெண்பா ஆகிய நான்கு நூல்களைச் சார்பு நூல் என்று குறிப்பிடுகிருர். பின்பு, உயிரை ஞான பூசையில் இயைவிப்பதற்கு, நான்கு நூல்களைப் பின் இரண்டடிகளில் குறிப்பிடுகிருர். சிவஞான போதம், சிவஞான சித்தி, வழிநூல் மாசில் சதமணிக்கோவை, முன்னூல் சான்று மருவு திருமுறைத்திரட்டு என்கிருர். இந் நான்கினுள் சிவஞான போதமும் சிவஞான சித்தியும் அனைவரும் வெளிப்படையாக அறிந்த சைவசித்தாந்த சாத்திரங்கள்; சைவசித்தாந்த சந்தான பரம்பரையின் முதல் இரு ஆசாரியர்களான மெய்கண்ட தேவரும் அவர் மாணுக்கர் அருள் நந்தி சிவாசாரியரும் செய்தவை. வரிசையில் கூறிய நான்காவது நூல் திருமுறைத்திரட்டு; இதை முன்னூல் சான்று மருவு திருமுறைத் திரட்டு என்கிருர்; 'முன்னூலாகிய திருமுறைப் பிரமாணங்களைத் தொகுத்த திரட்டு' என்பது இதன் கருத்து.

இத்திருமுறைத் திரட்டு மூவர் அடங்கன் முறையிலிருந்து நான்காவது சந்தான ஆசாரியரான உமாபதி சிவாசாரியர் திரட்டி வைத்த 99 தேவாரப் பாடல்களைக் கொண்ட ஒரு தொகுப்பு[1]. அவர் செய்த திருவருட் பயன் அதிகார முறையாகவே இத்தேவாரப் பாடல்களையும் அமைத்திருக்கிருர்.

இங்ஙனமாக, இங்கு நாம் குறிப்பிட்ட நான்கு நூல்களில் ஒன்று, இரண்டு, நான்கு எண்ணுள்ள நூல்களை முறையே ஒன்று, இரண்டு, நான்காவது ஆசாரியர் செய்தார்கள் என்பது தெரிந்த செய்தி. இவற்றின் இடையிலுள்ள மூன்ருவது நூலை மூன்ருவது ஆசாரியர் செய்தார் என்பது சொல்லாமலே அமையும். இதன் பொருளாவது, சதமணிக்கோவையைச் செய்தவர் மூன்ருவது ஆசாரியராகிய மறை ஞான சம்பந்தர் என்பதாகும்.

---

1. இத் திருமுறைத் திரட்டு சித்தாந்தம் பத்திரிகையில் இரு முறை வெளியாகி இருக்கிறது. பலர் பின்னர் தனி நூலாகவும் அச்சிட்டுள்ளனர். மா.வே. நெல்லையப்பபிள்ளையின் விரிவுரை கொண்டது.

ஞான தீக்கைத் திரு விருத்தப் பாடலுடையாரின் கருத்து இதுவே. இடையில் எக்காரணத்தாலோ சாத்திரங்களின் பயிற்சி குன்றிய காலத்தில், சதமணிக் கோவையின் பயிற்சியும் குன்றி அதன் ஆசிரியர் பெயரும் மறந்து போய், மறைஞான சம்பந்தர் எந்த நூலும் செய்யவில்லை என்ற வழக்கும் ஏற்பட்டது. இதை இங்கு ஆராய்தல் தகும். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு என்ற வழக்கு மிகவும் பிற்காலத்தில் ஏற்பட்டது. 'உந்திகளிறு' என்ற பாடலே இவ்வழக்கத்தைத் தோற்றுவித்தது. 1866 இல் சைவ சித்தாந்த சாத்திரங்களை முதன் முதலில் அச்சிட்ட மதுரை நாயகம்பிள்ளை என்பவர் இப்பாடலை அச்சிட்டார்; இது எந்த ஏட்டிலும் காணப்படவில்லை. (நினைவுபடுத்திக் கொள்ள எளிதாயிருக்கும் பொருட்டு இவரே இப்பாடலைச் செய்தார் போலும்.) இந்தக் காலத்திலிருந்து தான் 'பதினான்கு' என்ற வரையறை தொடங்குகிறது என்று தெரிகிறது. அக்காலத்தில் சாத்திரப் பயிற்சி குன்றி இருந்தமையால், சதமணிக் கோவையின் பயிற்சியும் குன்றியிருந்தது. பதினான்கு என்ற வரையறை செய்தவர்கள் சதமணிக்கோவையை மறந்துவிட்டார்கள். பதினான்கனுள் சீகாழி - தத்துவ நாதர் செய்த உண்மை நெறிவிளக்கம் கொள்ளப்பட்டு வருகிறது. ஆனால் இதை விலக்கித் துகளறுபோதத்தைக் கொள்ள வேண்டும் என்று அனவரத விநாயகம்பிள்ளை முதலியோர் கருதினர்கள். இன்னும் நுணுகிப் பார்த்தால், பதினான்கினுள் ஒன்றாக சதமணிக் கோவையைக் கூட்டி, பின் வந்த நூல்களாகிய துகளறு போதம் உண்மை நெறி விளக்கம் என்ற இரண்டையும் பதினான்கினுக்கு மேற்பட்டனவாகக் கொண்டு, சாத்திரங்கள் பதினாறு என்று முடிவு செய்வதே பொருத்தம்; ஆனால் வழக்கை மாற்றுவது எளிதான காரியமா?

சதமணிக் கோவை வினாவும் விடையுமாக மட்டும் அமைந்து, சித்தாந்த சாத்திரங்கள் பொதுவாய்

இயன்றுள்ளமுறையில். பதி பசு பாசங்களையோ, அவற்றுள் ஒன்றையோ, அதன் பிரிவுகளையோ, எடுத்து விளக்கும் வகையில் அமையாமையால், பின்வந்த சைவமக்கள் இதுவும் சாத்திரம் என்பது மறந்து, இது ஒரு பிரமாண நூல் என்று மட்டுமே கொண்டார்கள் என்று நாம் யூகிக்கலாம். இக்காரணம் பற்றியே சிவஞான போதம், சிவஞான சித்தி, சிவப்பிரகாசம் என்ற வரிசையில் மதுரைச் சிவப்பிரகாசர் போன்றோர் இந்நூலைக் கூறவில்லை.

சதமணிக் கோவையானது, சிவஞான சித்தியார் உண்மை விளக்கம் ஆகிய முன்னுள்ள சாத்திரங்களின் சொற்களையும் பொருளையும் அப்படியே ஆள்கின்றது. முன்னமே குறிப்பிட்ட முதல் உதாரணப் பாடலானது,

—மிகுஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண ஒண்ணாத தாய்முலைப் பால்விம்மி
ஒழுகுவது போல் வெளிப்பட் டருளுவன் அன்பருக்கே.

என்ற சித்தியார் பாடலைத் தழுவியது (325). 'சென்றணையில் ஏகதேசம்' என்ற பாடல் பின்வரும் உண்மை விளக்கப் பாடலின் சொல்லையும் பொருளையும் உடையதென்பது வெளிப்படை:

சென்றிவன்தான் ஒன்றில் சிவபூரணம் சிதையும்
அன்றிவன்தான் ஒன்றுமெனில் அன்னியமாம்
—இன்றிரண்டும்
அற்றநிலை ஏதென்னில் ஆதித்தன் அந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோற் கொள்.

இவற்றையும் நாம் நன்கு கவனிக்கும்போது, சதமணிக் கோவை செய்த ஆசிரியர் அருள்நந்தி சிவத்தின் மாணாக்கர் என்று நாம் முற்கூறிய கருத்து வலியுறுகின்றது.

இவ்வாசிரியர் இந்த நூலில் முப்பது இடங்களில் மெய்கண்ட தேவரையும் அவருடைய வெண்ணெய் அருள்

துறையையும் விளித்துப் பேசுகிறார். 'பெண்ணை சூழ்வெண்ணெய்ப் பதி திகழும் மெய்கண்ட தேவ', 'தென்பெண்ணைக் கதிபதியே பேசு' (66), அருட்டுறையாய் (20, 307), 'வெண்ணெய்த் தேசிகா' (73) என்பன சில எடுத்துக்காட்டுக்கள். இதனாலும் இவர் மெய்கண்டாரின் சீடர் எனக் கருதுவார்கள். ஆனால், காலத்தால் மிகவும் பின் வந்தோர் தம்முடைய ஈடுபாட்டின் மிகுதி காரணமாக, முன்தோன்றிய ஆசாரியர்களை விளித்துப் பேசுதல் சமய மரபு. 15ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த கண்ணுடைய வள்ளல் 7ஆம் நூற்றாண்டின் மத்தியில் விளங்கிய திருஞான சம்பந்தரை முன்னிலைப்படுத்தித் தம் செய்யுள்களைச் செய்திருக்கிறார். அந்த முறையிலேயே சதமணிக் கோவை ஆசிரியரும் மெய்கண்டாரை முன்னிலைப் படுத்திச் சொன்னார் என இதைக் கருதவேண்டும்.

இதுகாறும் கூறியவற்றால், ஆன்றோர் பெரிதும் போற்றிய பிரமாண நூலாகிய சதமணிக்கோவை என்பது மூன்றாவது சந்தான ஆசாரியரும் அருள்நந்தி சிவாசாரியர் மாணாக்கருமாகிய மறைஞான சம்பந்தரால் செய்யப் பெற்றதென்பதும், இதுவும் சித்தாந்த சாத்திரங்களில் ஒன்று என்பதும் தெளிவாகின்றன.

சதமணிக்கோவை கூறும் பொருள்கள் பின் வரும் தலைப்புக்கள் பெற்றுள்ளன: நூலுண்மை, தாரகம், புராணம், சரியை, கிரியை, தாராபூருவம், போக இழிவு, சிருட்டி, பூததரிசனம், காலம், திக்கு, தத்துவம், கன்மம், மாயை, ஆணவ மலம், திரோதானம் சத்தி நிபாதம், அவத்தை, ஆன்ம தரிசனம், கர்த்துரு பாவம், உண்மை நிலை, குரு தரிசனம்.

புராணம் என்ற பகுதி காமன், இளைவண்டன், தக்கன், மார்க்கண்டேயன், கண்ணப்பர், சண்டேசர், இராமன், பாண்டியன், மண்சுமந்த கூலியாளைப் பிரம்பால் அடித்தது,

அருச்சுனன் கீதை உபதேசம் பெற்றது ஆகிய வரலாறு களைக் குறிப்பிடுகிறது. சிவஞான சித்தியாருள் (114)

**மனமது நினைய வாக்கு வழுத்தமந்தி ரங்கள் சொல்ல**
**இனமலர்கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்**
**சினமுதல் அகற்றி வாழும்செய லறமாகுல் யார்க்கும்**
**முனமொருதெய்வமெங்கும் செயற்குமுன்னிலையாமன்றே**

என்ற பாடலைச் சுட்டி, இதற்கு இலக்கியமாகச் சண்டேசர் வரலாற்றை யுரைக்கிறது. சரியைப் பகுதி, குரு திருமேனியை அனவரதமும் தரிசிக்கப் பெற்ருல் சாயுச்சிய மும் வேண்டாம் என்றும், ஞானம் பெற்ற பின்னும் பணி கின்றதும் பாடுகின்றதும் சிவானந்தானுபவம் என்றும் கூறுகின்றது. கிரியைப் பகுதி சில கிரியைகளின் தத்து வத்தைக் கூறுகிறது. கன்மம் என்ற பகுதி வினை பற்றிய சில கருத்துக்களை விளக்குகிறது. பிறவும் அங்ஙனமே. கர்த்துரு பாவம் என்ற தலைப்பில் பல பாடல்களில் திருவாசகத் தொடர்களை ஆசிரியர் எடுத்து ஆளு கிருர். உண்மை நிலை என்ற பகுதியில் திருவாதவூரரையும் திருஞான சம்பந்தரையும் குறிப்பிடுகிருர். சில பாடல் களில் சிவஞான சித்தியாரை ஆசிரியர் மறை என்றும் வேதம் என்றும் குறிப்பிடுகிருர். வன்தொண்டர், சம்பந்தர், அப்பர் என்ற மூவரையும் குறிப்பிடுவது மட்டும் அன்றி, முதலை உண்ட பாலனை அழைத்தது, பூம்பாவை உயிர் பெற்றது ஆகிய வரலாறுகளையும் இந்நூல் கூறுகிறது.

சொல் நயத்தாலும் கருத்தின் சிறப்பாலும் ஆன்ருேர் ஆட்சியாலும், முன் எடுத்துக் காட்டியபடி, இந்நூல் சாத் திரமாகவே கொள்ளத் தக்கது. சதமணிக்கோவை என்ற பெயர் உமாபதியார் தொகுத்த சதரத்தின சங்கிரகம் என்ற வடமொழி ஆகம நூலையும், சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய சதமணி மாலையையும் நினைவூட்டும்.

[சதமணிக்கோவை—சித்தாந்த ஞானபோதம் என்ற பெயரில் 1898இல் வேதாசலம் பிள்ளையால் பதிப்பிக்கப் பட்டது.]

## உமாபதி சிவாசாரியர்

சைவசித்தாந்த சந்தான ஆசாரியருள் நான்காவது ஆசாரியராகிய உமாபதி சிவாசாரியர் வரலாறும் அவர் செய்த நூல்கள் பலவும் தமிழுலகம் நன்கறியும். சம்பிரதாய மாகச் சொல்லி வருகின்ற கதையை இங்குக் கூறுவோம்.

சோழநாட்டில் சிதம்பரத்தில் தீக்ஷிதர் என்று வழங்கு கிற சைவ வேதியர் குலத்தில் அவதரித்தவர் உமாபதி சிவாசாரியர். இவர் வேத சிவாகமங்களை ஓதி உணர்ந்து, தில்லை மூவாயிரம் சைவ அந்தணர்களுள் தமக்கும் உள்ள முறைப்படி ஒரு நாள் நடராசப் பெருமானைப் பூசை செய்து வந்தார். தம்முடைய தகுதி காரணமாக இவர் சிவிகையில் ஊர்ந்து செல்வதுண்டு. ஒருநாள் இவ்வாறு வீதி வழியே செல்கையில், கடந்தை மறைஞான சம்பந்தர் அவ்வீதி வழியே பிட்சை எடுத்துக்கொண்டு வந்தார். இவர் சிவிகை மீது இவர்ந்து விருதுகளோடு செல்வது கண்டு அவர் 'பட்ட மரத்தில் பகற் குருடன் செல்கின்றான்' என்று கூறவும், இச் சொல்லைக் காதில் ஏற்ற உமாபதியாருக்கு உணர்ச்சி வந்து, அவர் தாளில் விழுந்து வணங்கி, அவருக் குத் தொண்டரானார். பின்னர் மறைஞான சம்பந்தர் இவருடைய பக்குவத்தைச் சோதித்துத் தகும் என்று கண்டு இவருக்குச் சிவஞான போதத்தை உபதேசித்தார். இதைத் தெரிந்துகொண்ட தில்லை மூவாயிரவர், மெய் கண்ட பரம்பரையில் இவர் சீடரானது தகுதியன்று என்று கருதி, இவரைத் தங்கள் கூட்டத்திலிருந்து விலக்கி விட் டார்கள்.

அதன்மேல் இவர் சிதம்பரத்திற்குக் கிழக்கேயுள்ள கொற்றவன்குடி என்ற இடத்தில் திருமடம் அமைத்துக்

கொண்டு அங்கு நிட்டையில் அமர்ந்திருந்தார். தமக்குரிய பூசை முறை நாள் அன்று பூசிப்பதற்காக நடராசர் ஆலயத்திற்குச் சென்றபோது, தில்லைமூவாயிரவர் இவரை உட்புகாதவாறு தடுத்து விட்டனர். வருந்திய இவர் தம்மிடத்தில் வந்து மானத பூசை செய்துவந்தார். இவரைத் தடுத்த அந்தணர் திருக்கோயிலைத் திறந்து பார்த்தபோது, பூசைப் பெட்டகத்தைக் காணவில்லை. அவர்கள் அப்போது திகைத்து வருந்த, சிவபெருமான், "நாம் உமாபதியின் பெட்டகத்தில் இருக்கின்றோம்" என்று அசரீரியாகக் கூறினார். அந்தணர் உமாபதியின் பெருமையுணர்ந்து, அவரைச் சென்று பணிந்து, மீண்டும் அவரை அழைத்து வந்து ஆலயத்தில் பூசை புரிவித்தனர்.

சிலநாட்கள் செல்ல, கொற்றவன்குடியில் இவருடைய மடத்தில் ஓர் அற்புத சம்பவம் நிகழ்ந்தது. தாழ்ந்த வகுப்பினரான பெற்றான் சாம்பான் என்பவர் பெருமான் திருமடைப் பள்ளிக்கு விறகு வெட்டிக்கொண்டு வந்து கொடுப்பவர். முற்பிறப்பில் இவர் உயர்ந்த நிலையிலிருந்து சிறிது பாவ வசத்தால் இவ்வாறு பிறந்திருந்தார். இவருடைய பரிபக்குவ நிலையைப் பெருமான் கண்டு இவருடைய கனவில் தோன்றி,

> அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
> குடியார்க் கெழுதிய கைச் சீட்டு—படியின்மிசைப்
> பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
> முத்தி கொடுக்க முறை

என்று எழுதிய சீட்டு ஒன்றைக் கொடுத்து, அதை உமாபதி சிவாசாரியரிடம் சேர்க்கும்படி உத்தரவிட்டார். சாம்பான் அதைப் பத்திரப்படுத்தி உமாபதியாரிடம் கொடுக்க எண்ணிக் கொற்றவன்குடிக்கு வந்தபோது, உமாபதியாரைப் பார்க்க முடியவில்லை.

அதன்மேல் அவர், உமாபதியார் மடத்தின் மடைப் பள்ளிக்கு விறகு வெட்டிக் கொடுக்கும் வேலை பலநாள்

செய்து வந்தார். ஒருநாள் மழை காரணமாக விறகு வரத் தாமதித்தமையால், உமாபதியாருக்கு உணவுவேளை காலம் கடந்து போயிற்று. இவர் தாமதத்தின் காரணத்தை வினவ, பணிசெய்த அந்தணர்கள் "மடைப்பள்ளிக்கு நாள் தோறும் ஒருவர் விறகு கொண்டு வந்து தருவார். அவர் இன்று நேரத்தோடு வராமையால் உணவு செய்யத் தாமதித்தது" என்றார்கள். கேட்ட உமாபதியார், "நாளை அவர் வரின் நம்மிடைக் கொணர்க" என்றனர்.

பெற்றான் சாம்பான் மறுநாள் இரண்டுநாள் விறகும் சேர்த்துக் கொண்டுவந்தார். பணியாளர் அவ்வாறே அவரை உமாபதியாரிடம் அழைத்துச் சென்றனர். உமாபதியார் அவர் வரலாற்றை வினவ, பெற்றான் தம் வரலாற்றைக் கூறி, பெருமான் தந்த திருமுகத்தை வைத்து வணங்கினார். உமாபதியார் அதனை எடுத்துப் பார்த்து, அதில் கண்ட செய்தியை உணர்ந்து, பெருமானுடைய திருவருளை எண்ணி வியந்து அந்தக் கணமே அப்பெற்றான் சாம்பானுக்குச் சத்தியோ நிர்வாண தீக்ஷையால் முத்தியளித்தார்.

இதன் உண்மை உணராது, சாம்பானுடைய மனைவியும் சுற்றத்தாரும், "உமாபதியார் சாம்பானைத் தீயில் எரித்துவிட்டார்" என்று அரசனிடம் சென்று குறை கூறினார்கள். அரசன் இதன் உண்மையைக் காண எண்ணி சுவாமிகளிடம் சென்று வினவியபோது, அவர் தீக்ஷையின் மேன்மையை விளக்கிக் கூறினார். அரசன் அதை உணர்ந்த போதிலும், உலகத்தாருக்குக் காட்ட வேண்டுமென்பதற்காக, "மற்றொரு தீக்ஷை செய்யமுடியுமா?" என்று சுவாமிகளைக் கேட்டான். கேட்ட சுவாமிகள், புன்முறுவலோடு தம் அடியார் குழாத்தையும் சூழ்ந்திருந்த மக்களையும் ஒருமுறை நோக்கினார். அவர்களுள் யாரும் பக்குவம் பெற்றவராக அவர் கண்ணுக்குப் புலப்படவில்லை. அப்போது தாம் பூசித்த மூர்த்தியின் திருமஞ்சன நீராலே வளர்ந்ததாய், கோமுகையின் பக்கத்தே இருந்த முள்ளிச் செடி ஒன்று

பக்குவம் எய்தியிருப்பதைக் கண்டு, அதன்மீது தம் அருட் பார்வையைச்செலுத்திஞர். அக்கணமே அது எரிந்து சாம்ப லாகி, ஒளி மயமாக வானில் எழுந்து பரவெளியில் சென்று பெருமான் திருவடியில் கலந்தது. கண்டிருந்த அரசனும் பெற்ருன் மனைவியும் சுற்றத்தாரும் சமாதானம் அடைந்து, சுவாமிகளை வணங்கிச் சென்றனர்.[1]

மற்ருெரு நாள், நடராசப் பெருமான் திருவிழாவில் கொடியேற்றத்தின்போது, கொடி ஏருமல் தடை பட்டமை கண்டு, தில்லைவாழ் அந்தணர் கவலை அடைந்தனர். அப் போது, '' இங்கு உமாபதி வந்தால் கொடி ஏறும் '' என்ற திருவாக்கு விசும்பில் எழுந்தது. அந்தணர் அவரிடம் சென்று வேண்ட, அவரும் அங்ஙனமே வந்து **கொடிக்கவி** என்ற நான்கு பாடல்கொண்ட சிறு நூலைப் பாடத்தொடங் கியவுடனே, தடை நீங்கி கொடி ஏறிற்று. இச்சிறு நூல் சைவ சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்ருக இருக்கிறது.

இதுவே சம்பிரதாயமாகக் கூறப்படும் உமாபதியார் வரலாறு. இவர் தமிழில் மெய்கண்ட சாத்திரங்களில் ஏழு செய்திருக்கிருர். வேறு தமிழ் நூல்களும் வடமொழியி லுள்ள பௌஷ்கரம் என்ற உபாகமத்துக்கு விருத்தியுரை யும் சத ரத்தின சங்கிரகம் என்ற ஆகம சுலோகத் தொகுப் பும் உரையும் செய்திருக்கின்ருர். இவர் நூல்களைப்பற்றிய குறிப்புக்களைக் கீழே காணலாம்.

உமாபதியாரைக் குறித்துப் பின்வரும் தனி வணக்கப் பாடல்கள் ஏடுகளில் காணப்படுகின்றன:

> இப்பிறப்பே சீவன்முத்தி எய்துவிக்கும் மேற்பிறக்கும்
> அப்பிறப்பும் இங்கே அறுத்தருளி—ஒப்பறவே
> உண்மையருள் கொற்றங் குடிவாழ் உமாபதிதன்
> வண்மையருட் குண்டோகைம் மாறு.

1. பெற்ருன் சாம்பான் வரலாறு மிகவும் விரிவான கீர்த்தன மாக இந்நூற்ருண்டின் தொடக்கத்தில் தியாகராச தேசிகரால் பாடி அச்சிடப் பெற்றுள்ளது.

கற்றவன் கருணை கூரக் கலந்துயிர் சிவமாய் வாழப்
பற்றவன் பரமேயாகப் பரிவினுற் சிவப்ரகாசம் [லோன்
சொற்றவன் பொருட்சு பாவந் துலக்கிய தூயன் தொல்
கொற்றவன் குடியா னந்தங் குலமுழு தாண்டகோவே.

ஓரறி வாதி ஐந்தறி வுயிர்க்கும்
உண்மையாம் சிவானந்தப் பொருளை
ஒருமைய தாக அனுபவ விருப்பம்
உள்ளத்தில் உணர்த்தியே வினையும்
வேரறக் களைந்து வீடளித் துதவும்
விமலநல் தேசிக வடிவாய்
விண்ணவர் போற்றும் அண்ணல்எப் போதும்
வியாபக ஞகிநித் தியனுய்ப்
பாரினிற் சிறந்த வெண்ணெய் நல்லூரிற்
பரந்தெழு மெய்கண்ட தேவன்
பரம்பரை யதற்குத் தீபமாய் விளங்கும்
பரசிவசாட் குண்ணிய ரூபன்
கார்செறி சோலைக் கொற்றவன் குடியிற்
கனகசிங் காதனத் தமர்ந்த
கருணையின் வடிவாம் உமாபதி சிவன்பொற்
கழலிணை இறைஞ்சிவாழ்த் திடுவாம்.

*[குறிப்பு: சிதம்பர சாரம் என்ற வடமொழிப் புராணத்தில் பிரம்மானந்த யதீசுவரருக்கும் சங்கராசாரியருக்கும் நடந்த சம்வாதம் எனப்படும் பார்த்தவன மான்மியம் (கொற்றவன்குடிப் புராணம்) ஆகிய உமாபதி சிவாசாரிய புராணம் என்று பெயரிட்டு 240 சுலோகங்களும், தில்லை சிவானந்த தீக்ஷிதர் செய்த இராசேந்திரபுர (தில்லை) மான்மியம் என்ற உமாபதி விசயம் என்று பெயரிட்டு 108 பாடல்களும், 1925 இல் சிதம்பரம் அம்பலவாண நாவலர் தாம் அச்சிட்ட பௌஷ்கர சங்கிதையில் சேர்த்துப் பதிப்பித்தார். பொதுவான கதை இங்குச் சொல்லப்பட்டதே. இம்மான்மியங்கள் பெரும் பகுதி மிகவும் பிற்காலத்துக் கற்பனையே.]*

# உமாபதியார் செய்த நூல்கள்

மெய்கண்ட சாத்திரங்கள் யாவை என்று கூறுகிற வெண்பா எல்லோரும் அறிந்தது :

**உந்தி களிறே உயர்போதம் சித்தி**
**பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தஅருட்**
**பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு**
**உண்மைநெறி சங்கற்பம் உற்று.**

*இது கூறுகின்ற சாத்திரங்கள் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபா இருபது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக் கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் எனப் பதினான்கு. இவை பல உரைகளோடு சைவசித்தாந்த மகாசமாஜ வெளியீடாக இரண்டு பதிப்புக்கள் (1933, 1940) வெளிவந்துள்ளன. சமாஜத்துக்கு முந்தியும், பிந்தியும் அனேகர் மூலப் பதிப்புக்களும், உரைப் பதிப்புக்களும் வெளியிட்டிருக்கிறார்கள். இவைபற்றிச் சில கருத்துக்களைத் தொடக்கத்தில் நாம் அறிதல் வேண்டும்.*

*இவ்வெண்பா எல்லாப் பதிப்புக்களுக்கும் ஆதாரம். எக்காலத்தில் யார்செய்தார் என்பது தெரியாது. முதன் முதலில் சித்தாந்த சாத்திரங்களை அச்சிட்ட மதுரை நாயகம் பிள்ளை (1866) இப்பாடலை அச்சிட்டார்; இது அவரே செய்ததா என்பதும் தெரியவில்லை. இதை ஆதாரமாகக்கொண்டு கொன்றைமா நகரம்-சண்முக சுந்தர முதலியார் முதலான பலர் சென்ற நூற்றாண்டின் இறுதியில் இப்பதினான்கு நூல்களையும் பழைய உரைகளோடு பதிப்பித்தார்கள். இவற்றுள் உமாபதி செய்தவை முன் குறிப்பிட்ட ஏழு.*

**சிவப்பிரகாசம் :** *தமிழ்ச் சிவஞான போதம் முதல் நூலாயிருக்க, சிவஞானசித்தி வழிநூலாக, இது சார்புநூல்*

ஆகும். இதன் பாயிரத்துள் ஆசிரியர், ஆசாரியர் மரபு, சைவ நூல்களின் இயல்பு, தீக்கை வகைகள் ஆகியவற்றைச் சுருங்கக் கூறுகிறார். இதன் அவையடக்கப் பாடல் மிகவும் சிறப்பானது (12):

தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா; இன்று
தோன்றியநூல் எனும் எவையும் தீதாகா; துணிந்த
நன்மையினர் நலங்கொள்மணி பொதியும் அதன் களங்கம்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர்; நடுவாம்
தன்மையினர் பழமைஅழகு ஆராய்ந்து தரிப்பார்;
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினர் பலர்புகழில் ஏத்துவர்ஏ திலருற்று
இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கென வொன்று
[இலரே.

இதன் பொருள், பழமைபற்றி ஒன்றை நன்றென்று கொள்வதும், புதுமைபற்றி ஒன்றைத் தீதென்று கொள்வதும் சரிஅன்று என்பதாகும். இந்நூல் நூறு அழகான விருத்தங்களில், பொது 50, சிறப்பு 50 என இரு பகுதிகளாய் உள்ளது. சிவஞான போதத்தின் பன்னிரு சூத்திரங்களை யொட்டியே இந்நூற் பாடல்களைப் பாகுபடுத்திக் கூறுவது மரபு. பதியிலக்கணம் கூறும் பாடல் உபநிடதக் கருத்தைச் சித்தாந்த வழியில் கூறுகின்றது. இங்குக் கூறப்படும் பொருளானது உபநிடதத்தின் தெளிவு என்பதை மிகவும் அழகாகக் கூறுகின்றார். "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன் இங் கத் தெரிக்கலுற்றாம் (7)". மறைஞான சம்பந்தரை அழகான பாடலால் வணங்குகிறார்: பார்திகழ வளர் சாமவேதம் மல்க என்ற பாடல் (பாடல் 6).

இந்நூலுக்குப் பல உரைகள் உள்ளன: மதுரை ஞானப்பிரகாசர் உரை (அச்சாகவில்லை), மதுரைச் சிவப்பிரகாசர் எழுதிய பேருரை, சிதம்பரநாத முனிவர் உரை, வேறு பழைய உரைகள், நல்ல சிவதேவர் சிந்தனை உரை,

அருணந்தி தேவர் உரை (அச்சாகவில்லை), திருவுருமாமலை அடிகள் உரை, திருவிளங்கம் புத்துரை முதலியன.

**திருவருட்பயன்:** இது திருக்குறள் போலப் பத்து அதிகாரங்களாக 100 குறள் உடையது. பாடல்கள் அழகான எளிய பாடல்கள். இதன் தலைப்புக்கள் பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருள் மலநிலை, அருளது நிலை, அருளுரு நிலை, அறியும் நெறி, உயிர் விளக்கம், இன்புறு நிலை, ஐந்தெழுத்து அருள் நிலை, அணைந்தோர் தன்மை என்பன. சித்தாந்த சாத்திரம் கற்கப் புகுவோர் முதலில் பயில்வது இந்நூலே யாகும்.

இதற்கு நிரம்ப அழகிய தேசிகர் உரை, சிந்தனை உரை முதலான பல பழைய உரைகளும் புதிய உரைகளும் உள்ளன. பிற்காலத்தில் தம்பிரான் ஒருவர் இதன் பாடல்களை அமைத்து திருவருட்பயன் உதாரணக் கலித்துறை என்ற ஒரு நூல் செய்திருக்கிறார்.

**வினா வெண்பா:** இது 13 பாடல்கள் உடையது. ஆசிரியர் தம் குருவாகிய மறைஞான சம்பந்தரை வினாவும் முறையாக உள்ளது. இதற்குத் திருவாவடுதுறை நமச்சிவாயத் தம்பிரான் உரை அச்சாகியுள்ளது.

**போற்றிப் பஃறொடை:** இது 95 கண்ணிகள் கொண்ட பஃறொடை வெண்பா. இறுதியில் ஒரு வெண்பா உடையது. இந்த நூலில் ஆசிரியர் தம்மைக் குரு ஆட்கொண்ட அருட்செயலைப் பலவாகப் போற்றுகிறார். பல உரைகள் உள்ளன.

**கொடிக்கவி:** இதன் வரலாறு முன்னே சொல்லப்பட்டது. நான்கு வெண்பாக்களால் ஆனது. சிவமந்திரங்களின் இயல்பு உணர்த்துவது. அச்சிட்ட உரை மிகவும் சிறப்பானது. துகளறு போதம் 100 ஆம் பாடலாகிய "அந்த மல மறுத்து இங்கு" என்ற பாடல் சில ஏடுகளில் இக் கொடிக்கவியில் காணப்படுகிறது.

**நெஞ்சுவிடு தூது :** 125 கண்ணிகள் கொண்ட கலி வெண்பாவும் ஒரு தனி வெண்பாவும் உடையது. ஆசிரியர் தம்மை ஒரு பெண்ணாக்கி, தம் ஆசிரியரைக் காதலராக்கி தம் நெஞ்சத்தைக் காதலரிடம் சென்று அவர் அருளைப் பெற்றதற்கு அடையாளமாகத் தார் வாங்கி வா என்று கூறித் தூது அனுப்புகிற அகத்துறை யமைப்பில் இதைப் பாடியிருக்கிறார். தலைவருடைய தசாங்கம் இங்குக் கூறப் பட்டுள்ளது. சமய நூற்பொருள்கள் யாவும் இங்குச் சொல் லப்பட்டுள்ளன. இன்னார் பால் செல்லாதே என்று கூறு மிடத்து, வேதாந்தத்தைக் கண்டித்து, 'அகம் பிரமம் என் பவர் பால் நண்ணாதே' என்று ஆசிரியர் இங்குக் கூறுவது அறியத்தக்கது. உரையுள்ளது.

**உண்மைநெறி விளக்கம் :** ஆன்மரூபம் ஆன்ம தரி சனம் ஆன்ம சுத்தி, தத்துவரூபம் தத்துவதரிசனம் தத் துவ சுத்தி, சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகம் என்ற பத்துப் பொருள்களையும் நான்கு பாடல்களால் விளக்கும் சிறு நூல். உரையுடையது. இது உமாபதி சிவா சாரியர் செய்ததாகவே பலர் கொண்டிருந்த போதிலும், அவர் செய்ததன்று, சீகாழித் தத்துவநாதர் செய்தது என்ற கருத்து தத்துவ நாதர் என்ற தலைப்பில் ஆராயப் பெறும்.

**சங்கற்ப நிராகரணம் :** இருபது அழகிய அகவற்பாக் களால் அகச்சமயங்களான மாயாவாதம், ஐக்கிய வாதம், பாடாண வாதம், பேதவாதம், சிவசம வாதம், சங்கிராந்த வாதம், ஈசுவர அவிகாரவாதம், நிமித்த காரண பரிணாம வாதம், சைவ வாதம் என்னும் ஒன்பதையும் மறுப்பது. ஞானப்பிரகாச தேசிகர் என்பவர் இதற்கு அரியதோர் உரை எழுதி யிருக்கிறார். இந்நூலிலுள்ள ஒரு குறிப்பு, உமாபதியார் காலத்தை அறியவும் முன்பின் வந்த சாத்தி ரங்களின் காலத்தை வரையறை செய்யவும் பேருதவியா யிருக்கிறது. அதை முடிவில் பார்ப்போம்.

**திருமுறைத் திரட்டு :** மூவர் தேவாரங்களும் அடங்கன்முறை எனப்பெறும். திருமுறை எனவும் இவை சிறப்பாக வழங்கப்பெறும். மிகப் பழைய காலத்திலேயே இவற்றிலிருந்து இரண்டு திரட்டுக்கள் தொகுக்கப் பெற்று வழங்கின. இன்றுவரை பெரிதும் வழக்கத்திலுள்ளது அகத்தியர் தேவாரத் திரட்டு என வழங்குவது; இது காலத்தால் பிந்தியது. இதுபற்றி நாம் பின்னே பார்ப்போம். மற்றொன்று காலத்தால் முந்தியது, உமாபதி சிவாசாரியர் திரட்டியது; திருமுறைத்திரட்டு என்ற பெயருடையது. உமாபதியார் இத்திரட்டுத் திரட்டினர் என்பதற்கு ஆதாரமாக நமக்கு மூன்று குறிப்புக்கள் கிடைக்கின்றன. முதலாவது ஞானதீக்ஷைத் திருவிருத்தம் என்ற சாத்திர நூல். அதன் எட்டாம் பாடல் "தேசுமிகும் அருட்பயின்ற சிவப்பிரகாசத்தில்" என்பது; மறைஞான சம்பந்தர் வரலாற்றில் இப்பாடல் தரப்பட்டுள்ளது. இவ்விருத்தத்தின் பிற்பகுதியில், "உயிருக்கு ஞான தீக்ஷைக்காக வைத்த நூல்கள் முறையே சிவஞானபோதம், சிவஞான சித்தியார், மாசில் சதமணிக்கோவை, திருமுறைத் திரட்டு என்ற நான்கும் ஆகும்" என்று அறிகிறோம் இத் திருமுறைத்திரட்டு உமாபதி சிவசாரியர் திரட்டிய நூல்.

இனி இரண்டாவது சான்று, இந்தத் திருமுறைத் திரட்டுப் பிரதியின் முடிவில், 'திருமுறைத் திரட்டு கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் எடுத்துத் திரட்டியது முற்றியது. உதாரணம் திருமுறைத் திரட்டு உணர்த்தும் தேவே என்பதனாலும் அறிக' என்று எழுதப் பட்டுள்ளது. இதனால் இந்தத் திருமுறைத் திரட்டு மிகவும் பழமையானது என்றும் இதனைத் திரட்டினர் உமாபதி சிவாசாரியர் என்றும் நாம் அறிகிறோம்.

இனி மூன்றாவது, தருமபுர மடத்தில் கி. பி. 1740 இல் வாழ்ந்த சிவானந்த முனிவர் என்பவர் தாம் எழுதிய சம்பிரதாய தீபம் என்ற நூலில் இந்தத் திருமுறைத் திரட்டைக்

குறிப்பிடுகின்றார். அளவைக்குத் தாம் பிரமாணமாகக் கொண்ட நூல்கள் இவை என்று இரண்டு வெண்பாக் களால் உணர்த்துகிறார். அவை பின் வருவன:

வந்தஅனு மானஉப மான அளவைக்கிங்கு
எந்தநூல் முன்னூல் இயம்புவாய்—மைந்தா
சிவநெறி ப்ரகாசம் சிவப்பிர காசம்
தவர்புகழ்ஞா னமிருதந் தாம்.

தத்துவப்ர காசம் சதரத்ன சங்கிரகம்
முத்தர்பாற் கேள்வி முறைத் திரட்டுச்—சித்திமுதற்
பன்னூலில் உண்மை பகர்ந்தான் குருஅவைகள்
இந்நூலிற் சொன்னோம் எடுத்து.

இங்கு இரண்டாம் பாடலில் திருமுறைத்திரட்டு என்று குறிப்பிடுவது முன்னே குறிப்பிட்ட உமாபதி சிவாசாரியர் செய்த திருமுறைத் திரட்டு என்றே கொள்ளத் தகுந்தது.

இந்தத் திருமுறைத் திரட்டானது 99 திருப்பாசுரங் களை உடையது; திருவருட்பயன் பாகுபாட்டைத் தழுவியது. 1. பதிமுது நிலை, 4. உயிரவை நிலை, 3. இருண் மல நிலை, 4. அருளது நிலை. 5. அருளுரு நிலை, 6. அறியும் நெறி, 7. உயிர் விளக்கம், 8. இன்புறு நிலை, 9, அஞ்செழுத் தருள் நிலை, 10. அணைந்தோர் தன்மை என்று பத்துப் பகுதியாகப் பகுக்கப்பட்டு, முறையே 14, 13, 6, 8, 7, 14, 12, 5, 4, 16 ஆகிய பாசுரங்களை உடையது. மூவர் திருப் பாட்டையும் கொண்டது. இப் பகுப்பு, கொற்றவன்குடிப் பெரியாரே செய்த திருவருட்பயன் பகுப்பினைத் தொடர்ந்து செய்யப் பட்டுள்ளமை வெளிப்படை. இதில் சம்பந்தர் பாடல்கள் 26, அப்பர் பாடல்கள் 63, சுந்தரர் பாடல்கள் 10. இப்பாடல்கள் திரட்டில் திருமுறைக் கிரமப் படித் தொகுக்கப் பெறவில்லை. கருத்தமைதியும் தொடர்பும் கருதியே தொகுக்கப் பெற்றுள்ளன. மிக அதிகமான பாடல்கள் அப்பர் பாடல்கள். இந்தத் திருமுறைத் திரட்டு

சைவ உலகில் இன்று வழக்கில் அதிகம் இருப்பதாகத் தெரியவில்லை.

மிகச் சமீப காலம் வரையில் இத்திரட்டு சொர்க்கபுரம் ஆதீனத்தார் நித்திய பாராயணத்துக்குரிய தொகுப்பாகக் கொண்டிருந்தார்கள். இம்மடம் இந்நூற்றாண்டு பிறப்பதற்குச் சற்று முன்னமேயே அழிந்து போயிற்று. அங்கு, 18ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 19 தொடக்கத்திலும் தவப்பிரகாசத் தம்பிரான், அவர் மாணுக்கர் சிவப்பிரகாசத் தம்பிரான் என்போர் இருந்தனர். சோம சுந்தர தேசிகர், இத்தம்பிரானுடைய ஏட்டிலிருந்தே இத்திருமுறைத் திரட்டைப் பிரதிசெய்து முதன்முதல் வெளியிட்டார் என்பது அறியத்தக்கது.[1]

இதுவே ஆதியில் தோன்றிய திருமுறைத் திரட்டு ஆதலினுலும், சந்தான ஆசாரியரான உமாபதி சிவாசாரியர் திரட்டியது ஆதலினுலும், இது சைவர்களிடையே பெரிதும் பயிலுவதற்கு உரியது.

மேற்குறித்த திருவிருத்தம் வெண்பாக்கள் ஆகிய மூன்று பாடல்களிலும் குறிப்பிட்ட நூல்கள் மெய்கண்ட சாத்திரங்கள் தவிர, பின்வருவன; 1. ஞான பூசா கரணம், 2. சதமணிக் கோவை, 3. சிவநெறிப் பிரகாசம், 4. ஞானுமிருதம், 5. தத்துவப் பிரகாசம், 6. சதரத்ன சங்கிரகம், 7. திருமுறைத் திரட்டு. இவற்றுள் திருமுறைத் திரட்டு இதுவரை ஆராய்ந்தோம். சதமணிக் கோவை முன்னமே குறிப்பிட்டோம். 1, 5 பின்னர் ஆராய்வோம். ஞானுமிருதம் காலத்தால் மிகவும் முந்தியதாதலால் (12 ஆம் நூற்றாண்டு) இங்கு நாம் குறிப்பிடவில்லை. சிவநெறிப் பிரகாசம்,

---

1. முதன் முதலாக இத் திருமுறைத் திரட்டை, சோமசுந்தர தேசிகர், ஏட்டின் துணை கொண்டு ஆராய்ந்து 1930 இல் சித்தாந்தம் இதழில் வெளியிட்டார். பின்னர் 1932 இல் மா. வே நெல்லையப்பப் பிள்ளை உரையுடன் சித்தாந்தம் இதழில் வெளிவந்தது.

சூரியனூர் கோயில் ஆதீன முதல்வரான சிவாக்கிர யோகிகள் செய்த நூல்; காலம் 16 ஆம் நூற்றூண்டு. சதரத்ன சங்கிரகம் என்பது மற்ற நூல். இது உமாபதி செய்த ஆகமத்திரட்டு.

கி. பி. 1488 இல் மதுரைச் சிவப்பிரகாசர் சதரத்ன சங்கிரகத்தைத் தாம் எழுதிய சிவப்பிரகாச உரையில் இரண்டிடங்களில் குறிப்பிடுகிறூர்; இதுபற்றிய விளக்கம் 158ஆம் பக்கத்தில் காண்க.

**கோயிற் புராணம்:** சிதம்பரம் நடராசப் பெருமானின் சிறப்பைக் கூறுகின்ற சிறு நூல். 415 பாடல்கள். பாயிரமும் வியாக்கிரபாதர், பதஞ்சலி, நடராசர், இரணிய வன்மர், திருவிழா என்ற ஐந்து சருக்கங்களும் கொண்டது. சமயர் கருத்துக்கள் நிரம்பப் பொதிந்து, பழைய பொழிப்புரை உடையது.

பாயிரத்தில் திருநீற்றுச் சோழர் என்னும் அனபாயச் சோழருக்கும் வணக்கம் கூறுகிறூர். அடுத்து வியாக்கிர பாதர் புலிக்கால் நகக்கண் பெற்றது, தாருகா வனத்தில் நடமாடியது என்பன கூறப்பெற்றுள்ளன; பின்னர் ஆதி சேடன் பதஞ்சலியாக வந்து நடன தரிசனம் செய்தமை; நடராசச் சருக்கத்தில் ஆனந்த நடனம் மூவாயிரம் முனிவர் தரிசித்தமை; அடுத்து இரணியவன்மன் நடன தரிசனம் செய்தமை, முத்தித் தலங்கள், சைமினி முனிவர் செய்த வேதபாத ஸ்தவம், தீர்த்தங்கள், இறுதியில் பல்வேறு விழாக்கள்—என்பன கூறப் பெற்றுள்ளன.

இதன் பழைய உரை மிகவும் சிறப்பானது. மிக்க அருமையான சைவ சம்பிரதாய நடை; ஆசிரியர் பெயர் காலம் விளங்கா விட்டாலும், அவர் உமாபதியாரின் மாணக்கருள் ஒருவராயிருக்கலாம் என்ற நினைவு தோன்றுகிறது. இவர் வடமொழிப் பயிற்சி பெற்றவர், சிவாகமங்களிலும்

சைவ சித்தாந்தத்திலும் சிற்ப சாத்திரங்களிலும் மிக்க பயிற்சியுடையவர். கோயில் கட்டும் முறைகளைச் சிற்பநூல் முறைப்படி மிகவும் விரிவாகக் கூறுகிறார்.

**திருமுறை கண்ட புராணம்:** நெடுங்காலமாக, இதுவும், பின்னே சொல்லப்பட்ட நூல்களும் உமாபதி சிவாசாரியர் செய்தார் என வழங்குகின்றன. இவற்றை அவர் செய்தார் அல்லது செய்யவில்லை என்பதற்கு வழக்காற்றைத் தவிர வேறு ஆதாரமில்லை. இப்புராணம் 46 பாடல்களைக் கொண்டது. திருநாரையூரிற் பிறந்த நம்பியாண்டார் நம்பி இராச ராச மன்னன் வேண்டுகோளுக்கிணங்கித் தில்லையில் சபையின் மேல்பால் காப்பிடப்பட்டிருந்த திருமுறைகளை வெளிப்படுத்தி இறைவன் கட்டளைப்படி அவற்றுக்குப் பண் வகுத்த வரலாற்றைக் கூறுகிறது. இதன் கடைசிப் பாடல் இங்குக் கருதத் தக்கது:

சீராரும் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனும்
ஏராரும் இறைவனையும் எழிலாரும் நம்பியையும்
ஆராத அன்பினுடன் அடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதல்மிகுந் திருத்தொண்டர் பதம்துதிப்பாம்.

**திருத்தொண்டர் புராண சாரம்:** சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத்தில் கண்ட வரலாறாகிய கதையைச் சுருக்கி, புராணத்துக்கு ஒவ்வொரு பாடலாகக் கூறுகிறது. அப்பர் சம்பந்தருக்கு இரண்டு பாடல்கள். பாயிரப் பாடல்களையும் கூட்டி நூல் மொத்தம் 83 பாடல்கள். இறுதியிலுள்ள பாடல்கள் தொண்டர்கள், புராணப் பாடல் தொகை, தனியடியார், தொகையடியார் இனம் முதலிய பாகுபாடுகளைக் கூறுவன. 78 ஆம் பாடல் 'அல்லல் அறுத்து எனை ஆண்ட சைவசிகாமணிஉமாபதியார் அருள் செய்தாரே' என்று கூறுகிறது. இப் பாடல் பின் வந்தோர் பாடல் என்றும், மற்று இந்நூல் முழுமையும்

உமாபதியார் பாடியது என்றும் இதனல் நாம் கருதக் கூடும். மேலும் முந்திய நூல் "திருத்தொண்டர் பதம் துதிப்பாம்" என்று முடிந்து, இந்நூலும் தொண்டர் களைத் துதிப்பதால் இரு நூல்களையும் ஒருவரே செய்தார், அவர் உமாபதியே என்றும் நாம் எண்ண இடமாகிறது.

**சேக்கிழார் புராணம்:** திருத்தொண்டர் புராண வரலாறு என்பது இதன் மறு பெயர். சேக்கிழார் வர லாறு கூறும் நூல் இது ஒன்றே. சைவ உலகு முழுதும் பரவியுள்ள சிறு நூல். 103 பாடல்கள் உடையது. அனபாய சோழன் சமண நூலில் ஈடுபட்டிருந்த போது அதனை விலக்கி, சைவப் பெருநூல் ஒன்று அவன் பயில்வ தற்காக ஆசிரியர் செய்து கொடுத்தார் என்ற வரலாற்றை இந்நூல் கூறுகிறது. இதன் சிறப்புப் பாயிரம் பின் வருமாறு.

திருக்கிளரும் கயிலைமலைக் காவல் பூண்ட
  செல்வமலி திருநந்தி மரபில் வந்து
கருக்குழியில் எமைவீழா தெடுத்தாட் கொள்ளும்
  கருணைமிகும் மெய்கண்ட தேவர் தூய
மருக்கிளர்தாள் பரவும்அரு ணந்தி தேவர்
  மகிழும்மறை ஞானதே வருக்கன் பாகி
இருக்கும்உமா பதிதேவர் சேக்கி ழார்தம்
  இசைப்புரா ணம்உரைத்தார் என்ப மாதோ.

இதனல் உமாபதி சிவாசாரியர் சேக்கிழார் புராணம் பாடினர் என்பது தெளிவாகிறது; இதை மறுக்க நியாய மில்லை.

**சிவஸ்தல சிவநாம சத்திநாமக் கலி வெண்பா:** இது 300 கண்ணிகள் உடைய கலி வெண்பா. தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் 274. இவற்றைச் சம்பிரதாயமான முறை யில் நாட்டு வரிசைப்படிப் பிரித்து, ஒவ்வொரு தலத்தின்

பெயர், சுவாமி பெயர், அம்பிகை பெயர் ஆகியவற்றை ஒவ்வொரு கண்ணியில் அமைத்துப் பாடப்பெற்ற சிறுநூல். எவ்விதப் பிரயாண வசதியும் இல்லாது நடந்தே சென்று யாத்திரைசெய்ய வேண்டியிருந்த அப்பழங்காலத்தில், தலங்கள் தோறும் சிவ-சத்தி நாமங்களை மிகவும் திருத்தமாக இப்பாடலில் ஆசிரியர் அறிந்து பாடியிருப்பது மிகவும் வியக்கத்தக்கதாயுள்ளது. இது உமாபதியார் பாடியது என்பது வழக்கு; இது உபசாரமென்றே கொள்ளத்தக்கது.

திருத்தொண்டர் திருநாமக் கோவை முதலான சில சிறு நூல்களும் இவர் செய்தார் என்று சொல்வர்; இக்கூற்றுக்கு ஆதாரமில்லை.

**பௌஷ்கர பாஷ்யம் :** சைவ உபாகமங்களில் ஒன்று பௌஷ்கராகமம் எனப்படும். இதன் நான்காவது பாதம் பௌஷ்கர சங்கிதை ஞானபாதம். இது எட்டுப் படலங்களும், 973 சுலோகங்களுமுடையது. இதற்கு உமாபதியார் எழுதிய வடமொழிப் பேருரை சிதம்பரம் அம்பலவாண நாவலரால் 1925 இல் அச்சிடப்பெற்றது. இதனுள் வடமொழியில் சிவானந்த தீக்ஷிதர் செய்த உமாபதி சிவசார்ய விசயம் சேர்க்கப்பட்டுள்ளது.

**சதரத்தின சங்கிரகம் :** இது சுவாயம்புவம், நிச்சுவாசம், மதங்கம், தேவியாமதம், மிருகேந்திரம், கிரணம், பராக்கியம், தேவிகாலோத்தரம், விசுவசாரம், ஞானோத்தரம் ஆகிய ஆகமங்களிலிருந்து உமாபதி சிவாசாரியர் தொகுத்த 100 சுலோகங்களை உடையது. இவற்றிற்கு அவரே சதரத்தின உல்லேகினி என்ற பெயரால் ஒரு வியாக்கியானம் எழுதியிருக்கிறார். இரத்தினங்களைக் கடைந்து பட்டை தீட்டினால் அவை பிரகாசிப்பதுபோல, இவருடைய உரை, மூலப்பாடல்களைப் பிரகாசிக்கச் செய்கிறது என்பது கருத்து. இந்த நூல் கல்கத்தாவில்

பஞ்சானன சாஸ்திரியால் 1944 இல் அழகாக அச்சிடப் பட்டுள்ளது. இந்த நூறு ஆகமப் பாடல்களின் மொழி பெயர்ப்பே துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் செய்த சதமணிமாலை.

**உமாபதியார் காலம் :** உமாபதி சிவாசாரியர் செய்த நூல்களில் சங்கற்ப நிராகரணத்தின் காலத்தை மட்டும் நமக்குத் தெளிவாய்ப் புலப்படுத்தும் சான்று அதனுள் ளேயே காணப்படுகின்றது.

சாலிவாகன சகம் 1235 இல் தில்லை நடராசப் பெரு மான் ஆலயத்தில் ஆனித் திருவிழா ஆரும் நாளில் சமய வாதிகள் வந்துகூடி வாதம் செய்தனர் ; அங்கு மறைஞான சம்பந்தருடைய மாணக்கர் ஒருவர் வந்து, பிறர் கோள் மறுத்துத் தம் கோள் நிறுவினர் என்று அந்நூல் கூறு கிறது. அதனுள் தொடக்கத்தில் வரும் பின்கண்ட வரிகள் கால வரையறைக்கு ஆதாரமாயுள்ளன :

வாய்ந்த நூல்கள் ஆய்ந்தன ராகி
ஆசா ஞகி வீசிய சமத்துடன்
ஏழஞ் சிருநூறு எடுத்த ஆயிரம்
வாழும் நற்சகனம் மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த அற்புதன் ஆனி
ஆரும் விழவில் பொற்றேர் ஆலயத்து
ஏரு அறுவர் நிரையில் இருப்ப—

என்பது பாட்டு. "ஏழஞ்சு இருநூறு எடுத்த ஆயி ரம்" என்பது சகம் 1235: அதாவது கி. பி. 1313. எனவே, இது சங்கற்ப நிராகரணம் செய்த காலம் எனத் திட்டமாய் வரையறை செய்ததாயிற்று. சங்கற்ப நிராகரணம் அப் போதே செய்தாலும் சற்று முன் அல்லது பின் செய்தாலும் கூட இம்முடிவு மாறுதலடையாது. இதிலிருந்து பதினன்கு சாத்திரங்களுக்கும் பின் வருமாறு காலங் கூறுவார்கள். உந்தி 1148, களிறு 1178 ; சிவஞானபோதம் 1223, சித்தி

1253; இருபா இருபது 1254; உண்மை விளக்கம் 1255; மற்ற எட்டும் முறையே 1306, 1307, 1308, 1309, 1310, 1311, 1312, 1313 ஆகிய ஆண்டுகள். இவை எந்த அளவு உண்மையென ஆராய்ந்து முடிவு கட்ட இப்போது இயல வில்லை. எனினும், சங்கற்ப நிராகரணம் குறிப்பிடும் காலம் 1313; சாசன ஆராய்ச்சியாளர், மெய்கண்டாரின் காலம் கி. பி. 1232ஐ ஒட்டியிருக்கலாம் எனக்கூறுவர்.[1] இவற்றால் சிவஞான போதம் 1223 என்று மேற்குறிப்பிட்ட காலக் கணக்கு ஓரளவுக்குப் பொருந்துவதாய்க் கொள்வதில் தவறில்லை. முறையே அருணந்தியின் காலம் 1253-4 (சித்தியார்-இருபா இருபது); பின் மறைஞான சம்பந்தர் 1300; பின் உமாபதி சிவாசாரியர் (சிவப்பிரகாசம் முதலியன 1306-1313) 1300-1325 என்று கொள்வதும் பொருத்தமாய் உள்ளது; இக்காலம் ஆயுட்காலம் அன்று; ஆசாரியப் பதவிக் காலம் அல்லது வியாபக காலம் ஆகும்.

## அருள் நமச்சிவாய தேசிகர்

இவர் சீகாழிப் பதியினர். செல்வ நிலையுள்ள சைவக் குடும்பத்தில் தோன்றி இளமையிலேயே ஞான நாட்டங் கொண்டு தக்க ஆசிரியரைத்தேடியிருந்தார். கடந்தை மறை ஞான சம்பந்தரின் சிறப்பைக் கேள்வியுற்று அவரை யடைந்து சாத்திரங்களை ஓதி வந்தார். இவரது இயற் பெயர் சாமிநாதன் என்று சொல்வர். ஞான நாட்டமே கொண்டு, உலக விஷயங்களில் மனத்தை விடாதபடி திருப்பி, தம் வீட்டின் மச்சிலேயே இருந்து தியானம் முதலிய ஆன்மார்த்த நெறியில் ஈடுபட்டிருந்தமையால், மச்சுச் செட்டியார் என்றும் மச்சுறைவார் என்றும் இவர் வழங்கப் பெற்றார்; சைவவேளாளர், செட்டியார் என்று வழங்கும் பிரிவினர்.

---

[1] பல காரணங்களால் இக்கருத்தை அப்படியே ஏற்பதில் இடர் உண்டாகிறது.

காலம் செல்ல, சைவசித்தாந்த சந்தானசாரியரும், இவருக்கும் உமாபதி சிவாசாரியருக்கும் ஆசிரியரும் ஆன மறைஞான சம்பந்தர் ஓர் ஆவணி உத்திரத்தில் சிதம்ப ரத்தை யடுத்த திருக்களாஞ்சேரியில் பரிபூரணமானர். அந்த நிலையில் இவர் பூரண பக்குவியாகவில்லை. குருவின் பிரிவுக்காக இவர் மிகவும் வருந்தியிருந்தபின், தம் உடன் மாணுக்கராயிருந்த உமாபதியாரே இறைவன் திருவருளைப் பூரணமாகப் பெற்று ஞானசாரியராக விளங்கி வருவது உணர்ந்து, அவரிடமே தாமும் சீடராய் இருந்து வந்தார்.

உரிய காலத்தில் உமாபதியார் தம் பரிபூரண நாள் நெருங்கி வருவதுணர்ந்து, இவருக்கு ஆசாரிய அபிடேகம் செய்து அருள் நமசிவாயர் என்ற ஆசாரியத் திருநாமமும் சூட்டி, தாம் பூசித்த ஆன்மார்த்த மூர்த்தியாகிய நடராசப் பெருமான் பூசையையும் இவருக்கே கொடுத்து, கொற்ற வன்குடியில் ஒரு சித்திரை அத்தத்தில் பரிபூரண மடைந் தார். பின்னர், அருள் நமசிவாய தேசிகர் கொற்றங்குடியி லேயே பலகாலம் தங்கியிருந்து, தம்மை வந்தடைந்த பக்கு வான்மாக்களுக்கு ஞானுபதேசம் செய்துவந்தார்.

இவர்பால் ஞானுபதேசம் பெற்றவர்கள் இருவர். ஒருவர் வேதாரண்யத்திலும் திருவாவடுதுறையிலுமாக வாழ்ந்திருந்த சிவப்பிரகாசர் என்பவர்; இவரிடத்து அருட் சக்தி சிறிது விளங்கியமையால் இவரைச் சித்தர் சிவப்பிர காசர் என்றும் சொல்வார்கள். தக்க ஞானசாரியரைத் தேடிக்கொண்டு பலதலங்களும் தரிசித்து இவர் சிதம்பரம் வந்தபோது, அங்கு அருள் நமசிவாய தேசிகரது உபதே சச் சிறப்பை அறிந்து அவரிடத்தில் அணுக்கத் தொண்ட ராக அமர்ந்து அருள் உபதேசம் பெற்று வாழ்ந்து வந்தார். காலக்கிரமத்தில் தேசிகர் தமக்குப் பரிபூரண தசை நெருங்கி வந்ததை உணர்ந்து, சிவப்பிரகாசருக்கு ஞான அபிஷேகம் செய்து தம் ஆன்மார்த்த பூசையையும் அவரிடம் ஒப்பு வித்து, தம்மை வந்து அடைந்த பக்குவான்மாக்களுக்கு

ஞானோபதேசம் செய்து சைவ பரம்பரையை வளர்க்குமாறு கட்டளையிட்டு, தாம் அவ்வூரில் மார்கழி மாதத்துத் திருவாதிரை நட்சத்திரத்தில் நடராசப் பெருமானது குஞ்சித்த சேவடி நிழலில் கலந்தருளினார்.

சிவப்பிரகாசர் மூவலூரில் உதித்த நமசிவாய மூர்த்திக்கு உபதேசம் செய்தார். இந் நமசிவாய மூர்த்தியே திருவாவடுதுறை ஆதீனத்துக்கு மூலகுரு ஆவார்.

அருள் நமசிவாய தேசிகர் சீகாழியில் மச்சுச் செட்டியாராக வாழ்ந்து மறைஞான சம்பந்தரிடம் தொண்டு பூண்டிருந்த காலத்து, அவ்வூரில் கங்கை மெய்கண்டார் என்பவர் அவருக்குத் தொண்டு புரிந்து பக்குவியாகி தீக்ஷையும் உபதேசமும் பெற்றார். இவர் சீகாழியிலேயே தங்கி விட்டமையால் காழிக் கங்கை மெய்கண்டார் எனப் பெற்றார். இவருடைய மாணாக்கர் காழிச் சிற்றம்பல நாடிகள். இவரிடம் உபதேசம் பெற்றார் பலருள், சம்பந்த பண்டாரம் என்பவர் சிறப்பான சீடர். இவரிடம் சிவபுரம் ஞானப் பிரகாசர், இவரிடம் சிவபுரம் தத்துவ ஞானப் பிரகாசர், இவரிடம் திருவாரூர் செட்டித் தெரு சிதம்பர நாத ஞானப் பிரகாசர், இவரிடம் கமலை ஞானப்பிரகாசர், இவரிடம் குருஞான சம்பந்தர் என்று இந்த முறையிலே மற்றோர் உபதேச பரம்பரை வேறாக வளர்ந்து வந்தது. இந்தக் குருஞான சம்பந்தரே இன்றைய தருமபுர ஆதீனத்துக்குக் குரு முதல்வர்.

உமாபதியாரின் உடன் மாணாக்கராகவும் சீடராகவும் இருந்த அருள் நமசிவாய தேசிகரின் காலம் கி.பி. 1300-1330 ஆக இருத்தல் கூடும். அருள் நமசிவாய தேசிகர் செய்த நூல்கள் ஞான சாத்திர பஞ்சகம் என்ற பெயரால் வழங்குகிற ஐந்து சிறு சாத்திர நூல்கள். இவை **ஞான சரிதம்** என்ற பெயராலும் வழங்கும் இவை **ஞான பூசாகரணம், ஞான பூசாவிதி, ஞான தீக்ஷா**

விதி, ஞான அந்தியேட்டி, போசன விதி என்ற ஐந்து சிறு நூல்கள். இவற்றின் செய்யுட்கள் முறையே 30, 18, 8, 2, 4 ஆகும். கடைசி நூலாகிய போசன விதியானது, "ஞான சரிதம் இது மெய்கண்டான் சந்தானத்தே" என்று முடிவதால், இந்தத் தொகுப்பின் பெயர் ஞான சரிதம் என்று பின் வந்தோர் கருதினர் போலும். ஞான சரிதம் என்பது ஞான ஒழுக்கம் என்னும் பொருளை யுடையது. (சரிதம்—சரியை, ஒழுக்கம்.)

இந்த ஐந்து நூல்களும் மதுரைச் சிவப்பிரகாசரால் (1488) எடுத்தாளப்பட்ட பெருமையுடையன; பிற்காலத்தில் வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சிவஞான சுவாமிகள் ஆகியோரும் இவற்றைக் குறிப்பிடுகிறார்கள்.

முதலாவது ஞான பூசாகரணம் என்பது, சிவஞானியானவன் சிவப்பிரகாசம் கூறியபடி உடல் உள்ளவரையில் ஞான பூசையும் ஞானசந்தியும் செய்வதன் அவசியத்தை உணர்த்துவது.

ஞான பூசாவிதி என்பது, ஞானியானவன் ஞான பூசை செய்வதற்குரிய கிரியை முறைகளைக் கூறுவது. இது விளக்கமான ஒரு நல்ல உரையோடுகூட திருவாவடுதுறையாரால் அச்சிடப்பெற்றுள்ளது. இது வாதுளாகம சாரம். தருமபுர ஆதீனத்துத் தம்பிரான் ஒருவர் சித்தாந்த மரபு கண்டனம் என்ற ஒரு கண்டன நூல் எழுத, அதற்கு மறுப்பு எழுதிய திருவாவடுதுறை சிவஞானசுவாமிகள், தங்கள் ஆதீனத்தாருக்கும் தருமபுரத்தாருக்கும் லிங்க சுத்தி, ஆவாகனாதி முதலியவற்றில் உள்ள வேற்றுமையை எடுத்துக்காட்டி, சோமசம்பு சிவாசாரியர், ஞானசிவாசாரியர் இருவரும் சிவாகமத்தின் வழி பத்ததி செய்தார்கள் என்றும், அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்துச் செய்யப் பெற்ற நூல்கள் ஞானாமிர்தம் சிவார்ச்சனா போதம் என்றும், இவற்றுக்கு முரணாக சிவ சமவாதத் தாபகரான

அகோர சிவாசாரியர் முதலியோர் **ஆகம ஆதார**மின்றித் தாமே பத்ததி செய்து கொண்டார்கள் என்றும், சிவபூசா **முறைகள்** ஞான பூசாவிதியில் நன்கு சொல்லப்பட்டுள்ளன என்றும் குறித்திருக்கிறுர். இந்நூல் ஞானபூசைத் திருவிருத்தம் என்றும் பெயர் பெறும். குருஞான சம்பந்தர், தமது ஞானவரண விளக்கத்தில் இதன் பாடல்களைச் சில ஞானசித்தியார் செய்யுட்களோடு ஒருங்கு வைத்து எண்ணுகிறுர்.

மூன்றுவதான **ஞான தீக்ஷாவிதி** என்பது, சீடனுக்கு ஞானதீக்ஷை செய்வதற்கான முறைகளை விளக்கமாகக் கூறுகிறது. **ஞான அந்தியேட்டி** என்பது ஞான சமாதிக்கான கிரியைகளைச் சுருக்கிக் கூறுகிறது. ஞான அந்தியேட்டி என மதுரைச் சிவப்பிரகாசர் எடுத்துக்காட்டுகின்ற இருவரிகள் இந்நூலிலோ தத்துவப்பிரகாசம் ஞான அந்தியேட்டி என்ற பாகத்திலோ காணப்படவில்லை:

மற்றதனில் தர்ப்பணுதி சரியைகிரியை பூசை
மருவுபிரா ணுயாமம் மன்னிவளர் யோகம்.

**போசனவிதி** என்பது ஞானி பிக்ஷை ஏற்கும் விதிகளைக் கூறுகின்றது.

இங்குக் குறித்த நூல்களில், ஞானபூசாவிதி ஆறும் பாடலும், ஞானதீக்ஷா விதி எட்டாம் பாடலும், விரிவாய்க் கருதத் தக்கவை.

விரவும் உமாபதி சிவன்நன் மறைஞான சம்பந்தன்
மேவுபரத் தருணந்தி மெய்கண்ட தேவன்
திருவளரும் பரஞ்சோதி சத்தியமெய்ஞ் ஞான
தெரிசனிகள் சனற்குமரன் திருநந்தி இருபால்
மருவுறவுள் வலமிடமா முன்னர்வட முகமாய்
வருபவரை அபிமுகமாய் மன்னுவிக்க உரைசேர்
அருள்புரிமுத் திரையின்உருத் திரர்எதிர்அஞ் சலிசேர்
அஞ்செழுத்து நந்திக்கா அனைவரையும் நிறுத்தே

என்பது பூசாவிதிப்பாடல். இப்பாடல் உமாபதி முதலான ஆசாரியர் எண்மரையும் தக்ஷிணத் துவாரத்தில் பூசிக்கும் முறையைக் கூறுகிறது. இவ்வெண்மர் உமாபதி, மறை ஞான சம்பந்தர், அருணந்தி, மெய்கண்டதேவர், பரஞ் சோதி சத்தியஞான தரிசனிகள் சனற்குமாரர் திருநந்தி தேவர் ஆகிய புறச்சந்தான குரவரும் அகச்சந்தான குர வரும் ஆவர். பொதுவாக இந்த ஐந்து நூல்களையும் உமாபதி சிவாசாரியரே செய்தார் என்று வெள்ளியம் பலவாணத் தம்பிரானும் தருமபுரப் பதிப்பாளரும் கூறியிருக்கிறார்கள். உமாபதியாரே செய்திருந்தால், தம்மை வைத்துப் பூசிக்கும்படி தாமே கூறியிருக்க மாட் டார். அவருடைய மாணாக்கரான அருள்நமசிவாயர் தம் குருவைப் பூசிப்பது மரபு. ஆதலால் அருள்நமசிவாய தேசிகரே இப் பாடல்களைப் பாடினார் என்று நாம் கருத லாம்; இவ்வாறே ஒரு வழக்காறுமுண்டு.

பூசாவிதி ஏழாம் பாடல் உருத்திராக்கம், திருநீறு, முறை இவற்றை நிரலே, அக்கினி, நிருதி, தெற்கு ஆகிய திசைகளில் வைத்துப் பூசிக்க என்று கூறுகிறது. முறை என்பதை உரைகாரர் சிவஞானபோதத் திருமுறை என்றே குறிப்பிட்டார் இது பொருந்தாது. முறை என்பது திரு முறையேயாகும். பொதுவாகத் திருமுறையைப் பூசிப்பது மரபேயன்றி, சிவஞான போதத்தைத் திருமுறை என்று கூறுவதோ பூசிப்பதோ வழக்கிலில்லை.

ஞானதீக்ஷாவிதி எட்டாம் பாடல், "தேசுமிகும் அருள் பயின்ற சிவப்பிரகாசத்தில்" என்பது. இது சதமணிக் கோவையைக் குறிப்பிடுவதால், அக்கோவையைச் செய்த வர் மறைஞான சம்பந்தரே என்று அவர் வரலாற்றில் கூறி னோம். மேலும் இப்பாடலில் சிவப்பிரகாசம், சங்கற்ப நிரா கரணம், திருவருட்பயன், வினாவெண்பா ஆகிய நூல்களைக் குறிப்பிடுகிறார். உமாபதியார் தம்நூலைத் தாமே இவ்வாறு குறிப்பிடமாட்டார். மேலும், ஞானபூசாகரணம் முதற்

பாடல், சிவப்பிரகாசம் குறிப்பிடுகின்ற மார்க்கத்தைப் பின் பற்றுவோருக்கு ஞானபூசையைக் கூறுகின்றோம் என்று தொடங்குகிறது. அன்றியும், இங்கே குறிப்பிட்ட ஞான தீக்ஷாவிதிப் பாடலானது ஞானசாத்திரம் மனத்தில் நிலவா விட்டால் சிவப்பிரகாசத்தைப் பின்பற்றி ஒழுகுக என்று உபதேசிக்கிறது. இவற்றால் உமாபதியாருடைய மாணாக் கர் சிவப்பிரகாசத்தின் பெருமையுணர்ந்து அது இறை யுணர்ச்சியைப் பக்குவான்மாவின் மனத்தில் நிறுத்த வல் லது என்று கருதி, தாம் செய்த தீக்ஷாவிதி முதலான நூல் களில் அந்நூலை இவ்வாறு சிறப்பித்துக் கூறினார் என்று கருதுதலே நியாயம். உமாபதியார் தாம் பாடிய ஒரு சாத் திர நூலில் தம்மையே இத்தனை முறை போற்றி எடுத் துரைக்க மாட்டார்.

இதுகாறும் கூறியவற்றால் அருள் நமசிவாய தேசிகர் இரண்டு ஞானபரம்பரைகளுக்கு மூலமாயிருந்தார் என்ப தும் ஞானபூசை நூல் ஐந்தையும் செய்தார் என்பதும் தெளிவு.

அருள் நமசிவாயதேசிகரின் மாணாக்கர் சித்தர் சிவப் பிரகாசர், அவர் மாணாக்கர் திருவாவடு துறையாதீனத் தாபகராகிய நமசிவாய தேசிகர். இவ்விருவரும் எந்த நூலும் செய்ததாகத் தெரியவில்லை. இருவர் காலமும் 14-15 நூற்றாண்டுகளுக்குள் அமையக் கூடுமென்றே தோன்றுகிறது. ஆதலால் இவர்கள் வரலாற்றைச் சிறி தளவு தெரிந்துகொள்வதும் பொருத்தமுடையது.

[பதிப்பு: ஞானசரிதையை முதல் முதலாக கொ. சண்முகசுந்தர முதலியார் 1891 இல் வெளியிட்டார். பின் னர் இவை, போசன விதி நீங்கலாக, சித்தாந்தம் இதழில் வெளியிடப்பட்டன. இது உமாபதி சிவாசாரியர் செய்தது என்ற குறிப்போடு, சட்டநாதத் தம்பிரான் எழுதிய குறிப் புரையுடன், தருமபுர ஆதீன வெளியீடாக 1934 இல் வெளி

வந்தது. ஞானபூசாவிதி மட்டும் பழைய உரையுடன் வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை பரிசோதித்துத் திருவாவடு துறை ஆதீனப் பதிப்பாக 1942 இல் வெளி வந்தது.]

## சித்தர் சிவப்பிரகாசர்

சிவப்பிரகாசர் என்பவர் திருவாவடுதுறையினர். தல யாத்திரை செய்து சிலகாலம் இவர் வேதாரண்யத்தில் சென்று தங்கியிருப்பதும் உண்டு. அதனால் இவரைச் சித்தர் என்றும் சொல்லி வந்தார்கள். இவர் தமக்கு ஞானா சாரியன் தேடிப்பெற்று உபதேசம் பெறவேண்டு மென்ற கருத்தோடு தலங்களைத் தரிசித்து வந்தபோது, தில்லையை யடைந்து, அங்கு உமாபதி சிவாசாரியரின் பெருமையைக் கேள்வியுற்றார். அவருடைய திருமடத்திற்குச் சென்று, அவருக்குப் பின் ஞானாசாரியராய் விளங்கிய அருள்நம சிவாயரைக் கண்டுபணிந்து உடன் இருந்தார். இவருடைய பக்குவ நிலையைக் கண்டு உரியகாலத்தில் அவரும் இவருக்கு ஞானோபதேசம் செய்து, தாம் கற்ற மெய்கண்ட சாத்திரங் களையும் இவரிடம் தந்து, சிவஞானப்பயிர் வளர்க்குமாறு கட்டளையிட்டார்.

அவ்வாறே இவர் நெடுங்காலம் வாழ்ந்திருந்து சைவப் பயிர் வளர்த்து வந்தார். அருள்நமசிவாயர் காலத்துக்குப் பின் இவர் வழக்கம்போல் தலயாத்திரை செல்வாரானார். அவ்வாறு செய்த காலத்தில், மூவலூரிலிருந்து வந்த ஓர் இளம் பிள்ளையைக் கண்டு ஆட்கொண்டு, யாத்திரையில் தம்முடன் வைத்திருந்து, பின்னர் அவருக்கு நமசிவாய தேசிகர் என்ற பெயரையும் சூட்டி, உரியகாலத்தில் ஆசா ரியராக அபிடேகம் செய்து தாம் முத்தியடைந்தார். இவர் சித்தர் ஆனமையால், இன்ன இடம் இன்ன நாள் என்றில் லாமல், உருக்கரந்தார் என்பது பெரியோர் கருத்து ; இன் றும் இருக்கிறார் என்ற கருத்தும் நிலவுகிறது. இவர் முத்தி யடைந்த இடம் நட்சத்திரம் சொல்லப்படவில்லை.

இதே பெயரோடு மற்றொருவர் 17 ஆம் நூற்றாண்டில் திருவாவடுதுறையிலிருந்து வேலூர் சென்று வீரசைவ வேடம் பூண்டு, அரசனைத் தம் வசப்படுத்தி, நிலைகுலைந்திருந்த தில்லை வழிபாட்டை நிலைபெறுத்தினார் என்று ஒரு வரலாறு உண்டு. அச்சித்தர் சிவப்பிரகாசர் இவரினும் வேறுவர். காலத்தால் இருநூறு ஆண்டுகளுக்குமேல் பிற்பட்டவர்.

## நமசிவாய தேசிகர்

மூவலூரிலிருந்த வேளாளரொருவர் தமக்குப் புத்திரப் பேறின்மையால் வருந்தி வைத்தீசுவரன் கோயிலையடைந்து பெருமானை வணங்கிக் குறையிரந்தார். பெருமான் அருளால் உரிய காலத்தில் இவர் மனைவி ஓர் ஆண் குழந்தை பெற்றார். அதற்கு வைத்தியநாதன் என்றே பெயரிட்டு வளர்த்து வந்தார்கள். ஒருநாள், குழந்தைக்கு ஐந்து வயதான சமயம் மீண்டும் அங்குசென்று வழிபட்டு வந்தபோது, உடன் வந்த பிள்ளை காணாமல், பின் சண்டேசர் சந்நிதியில் கையில் ஒரு சிவலிங்கம் ஏந்திக்கொண்டு நிற்கக் கண்டார்கள். கேட்டபோது, ஒரு சிவாசாரியர் இவ்விலிங்க வுருவத்தைக் கொடுத்து உபதேசித்து மறைந்தார் என்று அக்குழந்தை சொல்லிற்று. கேட்ட பெற்றோர் மிக ஆச்சரியம் அடைந்து, திருவருளை வியந்து, இறைவனை வணங்கி விடைபெற்றுத் தம்மூர் சென்று, இல்லத்தில் ஒரு கோயிலமைத்து அவ்விலிங்கத்தை அதில் அமர்த்தித் தம் குழந்தையோடு வழிபட்டு வருவாராயினர்.

இதற்கிடையில் சித்தர் சிவப்பிரகாச தேசிகர் தலயாத்திரை செய்து மூவலூருக்கு வந்தபோது, இச்சிறு பிள்ளையைக் கண்ணுற்றார். பெற்றோரையழைத்துப் பிள்ளையைத் தம்மிடம் விட்டுவிடும்படி கேட்டுப்பெற்று, உடனழைத்துக் கொண்டு திருவாவடுதுறையடைந்தார். அங்குச் சிலகாலம் வசித்து, தாம் அழைத்து வந்த சிறுபிள்ளையாகிய வைத்திய

நாதருக்குப் பக்குவ முதிர்ச்சி ஏற்பட்டிருந்தமையுணர்ந்து, அவருக்கு ஆசாரியப் பதவி நல்கி அங்கேயே இருக்குமாறு பணித்துவிட்டுத் தாம் வேதாரண்யம் சென்று மறைந்தார்.

பின்னர் நமசிவாய தேசிகர் திருவாவடுதுறையி லேயே மடம் அமைத்துக்கொண்டு பக்குவிகளான மாணுக் கருக்கு உபதேசம் செய்துகொண்டு நெடுநாள் வாழ்ந்திருந் தார். உரியகாலத்தில் தம் மாணுக்கருள் சிறந்தவராகிய மறைஞான தேசிகர் என்பவரை ஆசாரியராக்கித் தாம் சமாதியடைந்தார்.

இதுவே நமசிவாய தேசிகர் வரலாற்றின் சுருக்கம். இவ்வரலாற்றுக்கும் ஏனைய வரலாறுகளுக்கும் உள்ள தொடர்புகளை ஆராயும்போது, சில முரண்பாடுகள் தெரி கின்றன. இவற்றை ஒற்றுமைப்படுத்துவது பெரிதும் இய லாததாயிருக்கிறது. இரண்டு வரலாறுகளை இங்கு ஒற்று மைப்படுத்த வேண்டியுள்ளது. ஒன்று, நமசிவாய தேசிகர் வேலூருக்குத் தம் மாணுக்கரான சித்தர் சிவப்பிரகாசரை அனுப்பினுரென்பது. மற்றது, நமசிவாய தேசிகர் சிவாக் கிர யோகிக்குச் சமகாலத்தவர் என்ற வரலாறு.

அருள்நமசிவாயர் காலம் திட்டமாகத் தெரியும். இவர் உமாபதியாருக்கு ஒருசாலை மாணுக்கர்; அவருக்குப் பின் சந்தான மரபில் ஆசாரியரானவர். உமாபதியார் ஆசாரி யராயிருந்தகாலம் பொதுவாக 1300-25. அருள்நமசிவாயர் காலமும் 1300-1330. இவர் அதிகநாள் உயிர்வாழ்ந்தார் என்று கொண்டாலும், 1350 வரை இவர் ஆயுள்காலம் செல் லக்கூடும். இவருடைய மாணுக்கர் சித்தர் சிவப்பிரகாசர், தாமாக இவரைத் தேடிவந்தடைந்தார் என்றால், அவர் காலம், எவ்வளவு நீட்டிப்பினும் 1325-1400 ஆகலாம். அவ ருடைய மாணுக்கர் நமசிவாயர் 1400 இல் குறைந்தது இரு பது வயதாக இருக்கவேண்டும். நூறு வயது காலம் இவர் வாழ்ந்தார் என்று கருதினுலும் இவர்காலம் 1380-1480

ஆகவேண்டும். வேலூர் சென்ற சித்தர் சிவப்பிரகாசர் காலம் கி. பி. 1609 என்று தெரிகிறது. அவர் நமசிவாய தேசிகர் மாணுக்கரா யிருத்தல் பொருந்தாது. ஒரு சந்தான மரபில் மூலகுருவின் பெயரையே பின்வந்த ஆசாரியர் தாமும் புனைந்து கொள்வது இன்றும் மரபாகையால், இச் சிவப்பிரகாசர், ஆதி நமசிவாய தேசிகர் மாணுக்கராயிரா மல், பின்வந்த மற்றொரு நமசிவாய தேசிகருடைய மாணுக் கரா யிருக்கலாம் என்பதே பொருந்தும் கருத்து.

சிவாக்கிர யோகிபற்றிய குறிப்பும் இது போன்றதே. இவர் 1564 இல் நூல்செய்தார். இவர் நமசிவாய தேசி கரைச் சென்று பார்த்து அளவளாவினுர் என்று ஒரு வர லாறு உண்டு. "அக்காலத்தில் ஓர் நாள் ஸ்ரீ ஸ்கந்தமரபில் வாமமுனி சந்ததியில் வந்தருளிய ஆசிரியர் சிவாக்கிர யோகிகள், வேதாரண்யத்தில் எழுந்தருளியிருக்கும் சித்தர் சிவப்பிரகாச தேசிகர் திருவருளுபதேசம்பெற்ற துறைசை நமசிவாய தேசிகரது மகிமையைக் கேள்வியுற்றுச் சூரிய ஞர் கோயிலிலிருந்து புறப்பட்டுத் திருவாவடுதுறைக்கு எழுந்தருளி வந்தார். அப்போது அங்குத் திருவீதியில் பிக்ஷைகொள்ளுதற்குச் சென்றிருந்த அடியவர்கள் அவ் வாசிரிய சுவாமிகளைக் கண்ணுற்ற மாத்திரத்தில், தாம் கொண்டு வந்திருந்த பிக்ஷா பாத்திரங்களைப் புறத்திண்ணை யொன்றினில் வைத்துவிட்டு, வேகமாக அவ்வாசிரிய சுவாமி கள் திருமுன்சென்று பூமியில் வீழ்ந்து நமஸ்கரித்து நிற்ப, அக்குருபரர் புன்னகை கொண்டு அவர்கட்குத் தண்ணருள் பாலித்துச்சென்று, திருக்கோயிலுக்கெழுந்தருளி மாசிலா மணியீசுரரையும் ஒப்பிலா முலையம்மையையும், செம்பொற் றியாகரையும், திருமூலதேவரையும் தரிசனஞ்செய்து சித்தர் திருமடத்தின் வடக்கு வாசலிற்சென்று, அவ்வாசலின் மேற் பால் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் சிவப்பிரகாச விநாயகரை தரிசித்து, மடத்தினுட்சென்று திருமாளிகைத் தேவர் குருமூர்த்தம் தரிசித்து வருஞ்சமயத்தில், ஞான

தேசிகராகிய நமசிவாய தேசிகர், ஆசிரியர் சிவாக்கிர யோகிகளை ஆவலோடெதிர்கொண்டழைத்து, ஒடுக்கத்திற் சென்று இருவரும் ஆசனத் தமர்ந்து அளவளாவி யிருந்தனர்.

"அப்போது ஆசிரியர் சிவாக்கிர யோகிகள் ஞான தேசிகராகிய நமசிவாய மூர்த்தியை நோக்கி, 'இவ்விடத்துப் பணிசெய்து வரும் அடியவர்கட்கு இன்னும் ஆசார அனுட்டானங்கள் முற்றக் கைவரப் பெற்றிலர் போலும்' எனக் கூறினர். அதனைக் கேட்ட ஞான தேசிகர், 'அது எதனால்?' என வினவ, அதற்கு அவ்வாசாரிய சுவாமிகள் வீதியில் அடியவர்கள்பால் நிகழ்ந்த செயலைத் திருவாய் மலர்ந்தருளினர். அப்போழ்தில் தம் அடியவர் மாட்டுத் திருவுளமிரங்கி, 'இவர்கள் அவ்விடத்தில் தம் கையிலுள்ளவை இன்னவையெனக் கருத்தில் தோன்றப் பெறுதவராய்க் கடிதின் முன்வந்து சுவாமிகள் சரண் பணிந்திலரே! அங்ஙனம் பணியாமையால் தம்மை மறந்து பரவசமாகும் அன்பின் மேலீடு இலராயினரே!' என ஞான தேசிகர் கூறி வருந்த, அதனையுணர்ந்த ஆசாரியர் சிவாக்கிர யோகிகள், ஞானதேசிகர் பால் திகழ்ந்தோங்கும் சீவகாருண்ணியப் பொலிவையும் பக்தி ஞானங்களின் வலிமையையும் கண்டு அதிசயித்தார்."

இந்த வரலாறும் நமசிவாய தேசிகர் வரலாற்றுக்கு முரணாயிருக்கிறது. தேசிகர் சுமார் 1480க்குமுன் சமாதியடைந் திருக்கக்கூடும் என்பதில் வேறுபாடு இருக்க முடியாது. இதுவே உலக இயல்புக்குப் பொருந்துவது. கி. பி. 1564 இல் நூல் செய்த சிவாக்கிர யோகிகளோடு இவர் அளவளாவினர் என்பது சிறிதும் ஒவ்வாது. ஆகவே, இவ்வரலாறு முழுதும் புனைந்துரையாதல் வேண்டும்; அல்லது சிவாக்கிர யோகி காலத்தில் இருந்தவர் நமசிவாயருக்குப் பின்வந்த வேறு தேசிகராதல் வேண்டும். சிவாக்கிர யோகிகளின் பெருமை தமிழ்நாடு நன்கு அறிந்தது. அதை

உணர்ந்தவர்களால், திருவாவடுதுறைக்குப் பெருமை கற்பிக்கவேண்டி முதலிற் கூறிய வரலாறு புனைந்துரையாகக் கட்டப்பட்டது என்று கருதுவதற்கு நியாயங்கள் உள்ளன. எனினும், வேலூர் சென்ற சிவப்பிரகாசர் வரலாற்றில் கூறியதுபோல, மற்ருெரு தேசிகருடன் சிவாக்கிர யோகிகள் உரையாடிக்கொண்டிருந்தார் என்று நாம் தற்போதைக்கு முடிவு செய்வது போதுமானது.

அருள் நமசிவாயருக்கும் நமசிவாய தேசிகருக்கும் இடையில் வேறு சில ஆசாரியராவது வாழ்ந்தனர் என்று தெரியவந்தால், நமசிவாய தேசிகர் 16 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தார், துறையூர் (சித்தர்) சிவப்பிரகாசரும் சிவாக்கிர யோகிகளும் இவருக்கு உடன் காலத்தவர் என்று எளிதாக நாம் கருதிவிடலாம். ஆனுல் வரலாறுகள் அவ்வாறு சொல்லாமையால், நாம் மேல் கண்ட முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது. விருப்பு வெறுப்புக்களும் சம்பிரதாயப் பற்றும் இவ்விஷயத்தை முடிவு செய்யப் பயன்படமாட்டா. சரித்திரக் கண் கொண்டும் ஆராய்ச்சிக் கண் கொண்டும் இச்செய்திகளை நாம் சீர்தூக்கவேண்டும்.

முடிவாக இங்குக் கருத வேண்டிய செய்தி, அருள் நமசிவாய தேசிகருக்கும் நமசிவாய மூர்த்திகளுக்கும் இடையில் சந்தான பரம்பரையில் சித்தர் சிவப்பிரகாசரையன்றி வேறு சில குருமூர்த்திகள் இருந்திருக்க வேண்டும் என்பதாகும். சரித்திரச் செய்திகளும் மரபுகளின் தொடர்பும் விளக்கம் பெருதிருந்த அக்காலத்தில் இங்ஙனம் சிலர்பெயர் மறந்து போயிருத்தல் இயல்பே. இவர்கள் சதா நிட்டையிலேயே இருந்திருத்தல் கூடும்; நூல்கள் செய்யவில்லை; வேறு செய்திகளும் இவர்கள்பற்றி ஏற்படவில்லை. எனவே இவர்கள் பெயர் மறக்கப்பட்டன. ஆகவே அருள் நமசிவாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமசிவாய மூர்த்தி என்ற பரம்பரை மட்டும் நிலைபெற்று, ஏனைய பெயர்கள் மறந்து போயின என்ற முடிவுக்கு வருகிருேம்.

ஒன்று குறிப்பிடுதல் தகும். மடத்தின் மெய்யடியார்கள், "சித்தர் சிவப்பிரகாசர் சித்தரானமையால் நீண்ட நாள் ஆயுளோடு வாழ்ந்தார். இருநூறு ஆண்டுகளுக்கு மேலுமிருந்தார். ஆகவே அவர்காலம் கி. பி. 1310 முதல் 1510 வரை இருந்திருக்கக்கூடும், நமசிவாய மூர்த்தி 1490 முதல் 1575க்கு மேலும் இருந்திருப்பார், அன்றியும் சித்தர் சிவப்பிரகாசர் உருக்கரந்தாரேயன்றி, சமாதியடைந்ததாக வரலாறில்லை" என்பார்கள். இதற்கு யாரே மறுமொழி கூற இயலும்?

## மச்சுறை வணிகயோகி பரம்பரை

சைவசந்தான ஆசாரியருக்குச் சீடர் பலர் இருந்தனர் என்று வரலாறுகள் கூறும். மெய்கண்டதேவருக்குச் சீடர் 49 பேர் என்றும், அவருள் தலைவர் அருணந்தி என்றும் தத்துவப் பிரகாச உரை (சு. 1400) கூறும்; இவருள் அருணந்தி, மனவாசகங்கடந்தார் என்ற இருவரையே சைவ உலகம் அறியும். இங்ஙனமே பிற ஆசிரியருக்கும் சீடர் பலரென்றும் பரம்பரைகள் பலவென்றும் வரலாறுகள் கூறும். மறைஞான சம்பந்தரின் சீடராயிருந்த மச்சுச் செட்டியார் வரலாற்றை இதுவரை பார்த்தோம். இவர் சீடர் காழிக் கங்கை மெய்கண்டாரென்றும் அவர் வழியே ஒரு சந்தான பரம்பரை தனியே வளர்ந்ததென்றும் கண்டோம். அன்றியும் இவர் தம்மோடு ஒருசாலை மாணுக்கரா யிருந்த உமாபதியாரிடம் உபதேசம் பெற்று அருள் நமசிவாய தேசிகராகி, மற்றெரு பரம்பரையாகிய திருவாவடுதுறைப் பரம்பரையைத் தோற்றுவித்தாரென்றும் கண்டோம்.

இனி, திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள செப்பறை மடத்தார் வெளியிட்ட தங்கள் மடத்து வரலாற்றின்படி, மச்சுச் செட்டியாரிடம் திருவையாறு சந்திரசேகர தேசிகர் என்பவர் உபதேசம் பெற்றார் என்றும், இவர் வழியாக பொன்னம்பல தேசிகர் பரம்பரை என்ற ஓர் ஆசாரிய

பரம்பரை தோன்றிற்று என்றும் அறிகிறோம். அவர்கள் மரபின் குருவணக்கப் பாடல் பின்வருவது :

திருநந்தி கேசுரர்நற் சத்திய மெய்ஞ் ஞான
தெரிசனிகள் பரஞ்சோதி மாமுனிகள் வெண்ணெய்
வருகுருமெய் கண்டமுனி அருணந்தி சாமி
மறைஞான சம்பந்தர் வளர்ஞான பானு
உருவெனவந் திடும்மச்சி லுறைவணிக யோகி
ஓங்குசந்திர சேகரர்பின் புறுசாமி நாதர்
அருள்பெறுபொன் னம்பலசற் குருசாமி இவர்கள்
அடியிணைகள் நமதுசிர மதனில்வைத் திடுவாம்.

இப்பாடலால் நாம் அறிவது, "மறைஞான சம்பந்தரின் மாணக்கராய் ஞானசூரியன் உதித்தாலெலன வந்தவர் மச்சிலுறை வணிகயோகி" என்பது. இவர் மச்சுச்செட்டியார் ஆவார். செப்பறை வரலாற்றில் இவர் திருவதிகை மச்சுச்செட்டியார் என்று மட்டும் சொல்லப்பட்டுள்ளது. திருவதிகை என்பதற்குப் பாடலில் ஆதாரமில்லை. இவர் சீகாழிப் பதியினர் என்று நாம் முன்னமே விளக்கி யிருக்கிறோம். இவர் மாணக்கர் சந்திரசேகரர் சாமிநாதர் என்ற வழியாக வந்தவர் என்றும், இவ்விருவரும் பிராமணர் என்றும் அடுத்து வந்தவர் பொன்னம்பல தேசிகர் (வேளாளர்) என்றும் வரலாறு கூறுகிறது. பிராமணர் என்பது பொருத்தமில்லை என்று சொல்ல அவசியமில்லை ; சூரியனர் கோயிலாதீனத்துச் சிவாக்கிர யோகிகளுக்கு முன்னும் பின்னும் பிராமணர்கள் ஆசாரியராக வந்திருக்கிறார்கள். மறைஞான சம்பந்தரே பிராமணர் ; அதுபோல இந்த மரபிலும் இவ்விருவரும் திருவையாற்றிலிருந்து வந்து முறையே உபதேசம் பெற்ற அந்தணரா யிருந்திருக்கக்கூடும்.

பொன்னம்பல தேசிகர் காலம் கி. பி. 1560 என்றும் அவருக்குப்பின் முறையே வந்த சீடர்கள், கிரகத்தர்கள் புத்திர பரம்பரையாய் வந்துள்ளார்கள் என்றும், வந்தோர் வரிசையும் காலமும், அவ் வரலாற்றில் காண்கிறோம். பின்

வந்த ஆசாரியர் சிலர் பிரபந்தங்களும் பாடியிருக்கிறார்கள். பின் வந்தோரைப் பொறுத்த வரையில் இப்பரம்பரை கிரமமாக ஒப்புக்கொள்ளக் கூடியதே.

மச்சுச் செட்டியார் காலம் 1330 ஆகவே, அடுத்த மூன்றாவது ஆசாரியராக 1560 இல் பொன்னம்பல தேசிகர் வந்தார் என்று சொல்லும்போது, மூன்றும் ஆசாரியராக வந்திருக்க முடியாது, பின்னும் பலர் இடையில் இருந்திருக்கலாம், அவர்கள் பெயரும் வரலாறும் அறிவதற்கியலாதபடி மறைந்து விட்டன என்று மட்டுமே நாம் சொல்ல முடியும்.

மேலும், இந்தப் பரம்பரையைக் குறித்த செய்திகள் தமிழ் இலக்கிய பரம்பரையிலோ சைவசமய பரம்பரையிலோ எங்கும் பயிலவில்லை. அன்றியும், முன்குறிப்பிட்ட குருபரம்பரைப் பாடலும் மிகவும் பிற்காலத்துப் பாடல். எனவே இவ்வரலாறுகள் பூரணமாய் ஏற்றுக் கொள்வதற்கான சான்றுகள் நமக்கு இன்று திட்டமாய்க் கிடைக்கவில்லை. எனினும், சந்தான ஆசாரியர் பரம்பரை பல பிரிவுகளாக வளர்ந்தது என்ற வழக்காற்றுக்கு இதுவும் ஒரு துணையாக உதவுகிறது.

பொன்னம்பலதேசிகர் தம் குருவிடமிருந்து ஐயாறப்பர் (பஞ்சநதேசுவரர்) பூசையைப் பெற்றார். இவர்கள் அனைவரும் தில்லையில் வாழ்ந்தார்கள். தேசிகர் ஊர் நாகை; அவ்வூர்க் கனக சபாபதி தேசிகரைச் சீடராகக் கொண்டொழுகும் நாளில், தில்லைப் பெருமான் கட்டளைப்படி பொருநைக் கரையிலுள்ள செப்பறையில் சென்று மடம் அமைத்துச் சமயம் வளர்த்து வந்தார். உரியகாலத்தில் கனகசபாபதி தேசிகர் மாணாக்கராய்க் கனக சபாபதி சிவாசாரியர் இருந்தார். இவர் ஆசாரியரா யிருந்தபோது இவரிடம் படித்தவரே, ஈசானிய மடம் சுவாமிநாத தேசிகர்; இலக்கணக் கொத்தில் இவர் கூறும் ஆசிரிய வணக்கம் இதைப் புலப்படுத்தும்.

செப்பறைப் பதியில் வாழ்சிவத் துவிசன்
கனக சபாபதி கருதுவட நூற்கடல்
தபோதனர் புகழும் சைவாதி ராசன்
உபய பதங்களை உண்மையொடு பணிவாம்.

இவ்வாறு வளர்ந்து வந்த இந்தப் பரம்பரையில் 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் (1817) வாழ்ந்த அழகிய கூத்த தேசிகரென்பவர் செப்பறை உலா கனகசபை நாதன் உலா என்ற பிரபந்தங்களும் பிறவும் பாடினார். இவ்விரு உலாக்களும் அச்சிடப்பட்டுள்ளன. இவரே மச்சுறை வணிக யோகி பரம்பரை என்று குறிப்பிடுகின்றவர்.

அத்தியாயம் 6

# சைவ இலக்கியம்-2
# சிற்றம்பல நாடிகள்

## முன்னுரை

உமாபதி சிவாசாரியருக்குப் பின் 14 ஆம் நூற்றாண்டின் இடையில் ஒப்பற்ற ஞானாசாரியராகப் பிரசித்தமாய் வாழ்ந்து, சைவசித்தாந்த சாத்திரங்களையும் ஆசாரத்தையும் பெரிதும் வளமுறச்செய்து, சமயம் வளரவும் பல ஞானபரம்பரைகள் தோன்றவும் காரணமாய் இருந்த பெரியார் சீகாழிச் சிற்றம்பல நாடிகள். இவருடைய சரித்திரமே பதினான்காம் நூற்றாண்டின் சைவசமய சரித்திரமாகும். இவருடைய குரு ஆவார் கங்கை மெய்கண்டார்.

## காழி - கங்கை மெய்கண்டார்

மெய்கண்டாரின் மாணாக்கரான அருணந்தி சிவாசாரியரிடம் கடந்தை - மறைஞான சம்பந்தர் உபதேசம் பெற்றார். அவரிடம் இரு மாணாக்கர் உபதேசம் பெற்றனர். ஒருவர் உமாபதி சிவாசாரியர்; இவர் சரித்திரம் தமிழுலகும் சைவ உலகும் நன்கு அறிந்தது. மற்றொருவர் மச்சுச் செட்டியார் என்பவர். இவர் சைவச் செட்டியார் மரபில் தோன்றி ஞானோபதேசம் பெற்று உலக விவகாரத்திலிருந்து தம் மனத்தைத் திருப்புவதற்கு அனுகூலமாக மச்சு ஒன்று கட்டிக்கொண்டு அதில் வாழ்ந்தார் என்பர். தம் ஞானகுரு சமாதியடைந்த காலத்து இவர் பக்குவம் பெறாமையால், அவர் முத்தியடைந்த பின் தம்முடன் மாணாக்கராயிருந்து பக்குவம் பெற்றுப்பின் ஞானாசிரியராகி விளங்கிய உமாபதி

சிவாசாரியரிடம் தாமே மாணாக்கரா யிருந்தார். உமாபதி யார் முத்திபெற்றபோது, இவர் அருள் நமசிவாயர் என்ற பெயரோடு, சந்தான பரம்பரையின் ஆசாரியரானார் என் பதை முன்னமே குறிப்பிட்டோம். மறைஞான சம்பந்த ரிடம் இவர் சீடராயிருந்த காலத்தில் இவரிடம் ஒரு மாணாக் கர் தொண்டுசெய்து சீடராக ஒழுகி வந்தார். அவருக்குக் கங்கை மெய்கண்டார்[1] எனப் பெயரிடப் பெற்றிருந்தது. அவர் சீகாழிப் பதியினர். காலக்கிரமத்தில் மச்சுச் செட்டி யார் ஞானாசிரியராகி உபதேசம் செய்த காலத்தில், இம் மாணாக்கருக்குப் பக்குவம் முதிர்ந்திருப்பதை உணர்ந்து, இவருக்கு உபதேசம் செய்து, காழி கங்கை மெய்கண்டார் என்ற பெயரை நிலைநிறுத்தி, ஆசாரியராக்கி வைத்து, பின் உரிய காலத்தில் தாம் முத்தியடைந்தார். கங்கை மெய் கண்டார் பிரிந்து சென்று சைவ சமயத்தையும், ஞானோப தேசத்தையும் வளர்த்துக் கொண்டு வருங்காலத்து, அவரி டம் ஒரு சீடர் வந்து சேர்ந்தார். இவரே பிற்காலத்தில் சிற்றம்பல நாடிகள் எனப் பெயர் விளங்க இருக்கும் பக்குவ வான். கங்கை மெய்கண்டார் அதிக நாள் வாழ்ந்திருக்க வில்லை; எந்த நூலும் செய்யவில்லை.

## சிற்றம்பல நாடிகள்

இவர் வேளாளகுலத்தில் பிறந்தவர். ஊர் வேளாநகர் அல்லது சீராசை என்று தெரிகிறது.[2] (பின்னே சிற்றம்பல நாடி தாலாட்டு பார்க்க.) உரியகாலத்தில் கற்பனவெல்லாம் துறைபோகக் கற்று, சிவபெருமான் திருவடியில் தோய்ந்த மனமுடையவராய் வளர்ந்தார். நல்வினைப் பயனாய் இவர் சீகாழியில் கங்கை மெய்கண்டாரிடம் வந்தடைந்தார்.

1. கங்கை என்பது கொண்டு இவர் கங்கைகொண்ட சோழ புரத்தில் வாழ்ந்தார் என்று சொல்வர்; இக்கூற்றுக்கு ஆதாரமில்லை.

2. வேளாநகர்-வேளூராகிய வைத்தீசுவரன் கோயில்; சீராசை-சிறப்புடைய இராசதானியாகிய சீகாழி.

அவரிடம் உபதேசம் பெற்று, அவர் முத்தியடைந்தபின், சிற்றம்பல நாடிகள் தாமே அந்த ஞானபரம்பரையின் தலைவ ராயினர். தில்லைச் சிற்றம்பலவருடைய திருவருளையே எந் நேரமும் நாடி நின்றமையால் இவர் சிற்றம்பல நாடிகள் என்றும், திருச்சிற்றம்பல நாடிகள் என்றும் பெயர் பெற் றார். சைவ உலகம்முழுமையும் போற்றித் தொழும் பெரு ஞானியாக இவர் விளங்கினர் (வெண்பா 30.) இவரிடம் உபதேசம் பெற்றார் மிகப்பலர். அவர்களுள் சம்பந்த முனி வர், தத்துவப் பிரகாசர், தத்துவநாதர் போன்றார் வெவ் வேறு தனி ஆசிரியர்களாய் விளங்கினர்கள். இவர்களை யன்றி ஞானப்பிரகாசர், கண்ணப்பர், மழபாடிப் பண்டாரம் போன்ற 63 பேர் ஓர் அடியார் கூட்டமாக இவரோடு சேர்ந்தே வாழ்ந்து வந்தார்கள்.

சிவானுபூதிமான்களாகிய இத்திருக் கூட்டத்தார், கௌரி மாயூரம் என்னும் மயிலாடு துறையில் காவேரித் தீர வாசம் செய்துகொண்டு சிவானந்த நிட்டையில் எழுந்தருளி யிருந்த தங்கள் குருவுடன் குருலிங்க சங்கம வழிபாடு நடத்திக் கொண்டு வந்தனர்.

இவ்வாறிருக்கையில் ஒருநாள், இவர்களுடைய பரிசார கன் இவர்களனைவரும் உண்ணும்போது கவனக் குறைவி னாலே வேப்பெண்ணெயைக் கொண்டு வந்து நெய்யென்று உண்கலத்தில் படைத்துவிட்டான். சிற்றம்பல நாடிகளும் மற்றைய அடியாரும் வேற்றுமை யுணர்ச்சி சிறிதுமின்றி உண்ண, கண்ணப்பர் என்பவர் மட்டும் வேப்பெண்ணெய் என்று உணர்ந்து ஓக்களித்தனர். கண்ட சிற்றம்பல நாடி கள், "நம் திருக்கூட்டத்தில் பக்குவம் இல்லாதவர் இருப் பது தகுதியோ?" என்று கேட்டலும், கண்ணப்பர் மனம் மிக வருந்தி, திருக்கூட்டத்தினின்று தாமே நீங்கி, வடக்கு நோக்கிச் சென்றுவிட்டார்.

சில காலமான பின்னர், நாடிகள் தமக்கு முடிவு நெருங்கி வருவதை யுணர்ந்து, அடுத்த சித்திரைத் திரு

வோணத்தில் தாமும், திருக்கூட்டத்தினரும் சமாதியில் இறங்குவதாக, அந்நாட்டை யாண்ட அரசனுக்கு அறிவித்து, அனைவருக்கும் தனியே 63 சமாதிகள் அமைக்கக் கட்டளையிட்டார். சமாதிகள் தயாராயின. உலகோர் இவ்வற்புதத்தைக் காண வந்து குழுமினர். குறித்த நேரத்தில், சிற்றம்பல நாடிகள் யாவரையும் ஆசீர்வதித்து, மூன்று வெண்பாக்கள் பாடி நிட்டையில் இருந்தார். மாணாக்கர் அவரை வணங்கி ஒவ்வொரு வெண்பா பாடித் தத்தமக்கு அமைத்த குழியில் இறங்கி, அவர் திருவடியில் மனம் ஒன்றச்செய்து சமாதி கூடிவிட்டார்கள். அந்த நேரம், கூடி இருந்த எல்லோர் மனமும், வடக்கே சென்ற கண்ணப்பர் என்ன ஆனாரோ என்று எண்ணியபோது, அவர் அங்கு வந்து, தமக்கோர் சமாதி அமைக்கப் பெறாமை கண்டு சிற்றம்பல நாடிகள் சமாதியை வலம் வந்து வணங்கி, இங்குத் தமக்கோர் இடம் தருமாறு குறையிரந்து ஒரு வெண்பா பாடினார் :

ஆண்ட குருசிற்றம் பலவா அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ?—நீண்டமால்
ஆரணனும் காணாத ஆனந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது.

உடனே சிற்றம்பல நாடிகளின் சமாதி திறந்து, அடிகள் கண்விழித்து நோக்கிக் கண்ணப்பரைத் தழுவித் தம்மடியில் இருத்தித் தம்மோடு இரண்டறக் கலக்கச்செய்தார். இவ்வற்புதம் நிகழ்ந்த இடம் இன்று மாயூரத்திற்கும் மேற்கே சிறிது தூரத்தில் சித்தர்காடு என்ற ஊராகிவிட்டது. சமாதி ஒரு சிறு கோயிலாகக் கட்டப்பட்டுள்ளது.

சிற்றம்பல நாடிகள் பரம்பரையை விளக்கமாகக் கூறுகின்ற வெள்ளியம்பலவாணத் தம்பிரான், " ஏக காலத்தில் அறுபத்து மூன்று திருப்பெயருக்குச் சாம்பவ தீக்கையாற் சத்தியோ நிர்வாண தானம் பண்ணித் தாமும் சிவகதி

யடையும் பெருமையுடைய சிற்றம்பல நாடி பண்டாரம்" என்று இவரைக் குறிப்பிடுகிறார். அன்றியும், பழம் பாடலொன்று அக்காலத்திலேயே இவ்வற்புதத்தைப் பாடுகின்றமையும் நாம் இங்கு அறியலாம்.

முத்தர்அறு பத்து மூவர் பணிந்தேத்தும்
சித்தர்வனம் தில்லைச்சிற் றம்பலவா—பத்தர்
பவவிருளை நீக்கியருள் பானுவே துய்ய
தவவடிவே நின்தாள் சரண்.

புலவர்புராணம் பாடிய தண்டபாணி சுவாமிகள் செவியாறலாகத் தாம் கேட்டறிந்த சிற்றம்பல நாடிகள் கதையைச் சில மாறுதல்களுடன் 28 செய்யுட்களில் 38 ஆவது சுருக்கமாகப் பின் வருமாறு கூறுகிறார்: சோழ நாட்டிலே சைவ வேளாளர் மரபிலே வந்த ஆசிரியர் ஒருவர் மனைவியோடு தவம்செய்து உத்தமமான இரு புத்திரரைப் பெற்றார். இருவருள் மூத்தவன் செந்தில் நகரடைந்து வேலனை வழிபட்டு அருள்பெறவும், அவனுக்கு எல்லோரும் திருச்சிற்றம்பல நாடிகளென்று பெயர் தந்தனர். இவன் இயற்பெயர் இன்னதெனத் தெரியவில்லை. இளையவனுக்குக் காழியர் பெருமானாகிய திருஞான சம்பந்தப்பெருமான் காட்சி நல்கி தத்துவாதீத ஞானமும், கண்ணுடைய வள்ளல் என்ற பெயரும் நல்கினார். மூத்தவரான நாடிகள் தம்பிக்குத் தாமே தீட்சைசெய்தார். இவர் அன்பர்களுக்குப் பக்குவம் அறிந்து அதற்கேற்ப உபதேசம் செய்திருந்தார். ஆனால் இளையவர் பக்குவம் பாராது எல்லோருக்கும் ஞானோபதேசம் ஒன்றே செய்து வந்தார். கண்ட நாடிகள் இது முறையன்று என்று திருத்தியும் திருந்தாமையால், "என்முன் இனி வரேல்" என்றார். கேட்ட இளையவர், "அங்ஙனமாயின் உம் தீட்சைக்குறியும் இனி வேண்டேன்" எனக்கூறி, தம் இரு கைகளிலுமுள்ள திருநீற்றுப் பூச்சுக்களை அழித்துவிட்டார். அழித்து, காவிரியாறு கடந்து அப்பால் செல்லவே, சிவபெருமான் திருவருளால் ஆற்றில்

வெள்ளம் கரைகடந்து பெருகிற்று. அப்பாற் சென்ற இளையவர் தம் பூசைப் பெட்டகத்தை வீட்டிலேயே வைத்து வந்ததை யெண்ணித் திரும்பி, வெள்ளம் கண்டு இறைவனைப் போற்ற, பெட்டகம் ஆற்றில் நீந்தி அவரிடம் வந்தடைந்தது. இச்செய்திகேட்ட பெரியவர், "ஐந்தொழில் செயும் பரமன் இது செய்தது ஏற்றமன்று" என்றார். பின் அவர் திருவண்ணாமலை சென்றார்.

இளையவராகிய கண்ணுடைய வள்ளல் ஒழிவில் ஒடுக்கம் செய்தார். இது சமரச நூலாயினும் துவித வாதத்துக்கும் இடம் கொடுக்கும். இவர் மாணாக்கர் இவர் அடியராகி வெண்ணீறு பூசிப் பின் பூசியதை அழிக்கும் பழக்கத்தைத் தழுவினர்.

திருச்சிற்றம்பல நாடி, பெருஞானியாகி சற்குருநாதரென்று அனேகரால் தொழப்பெற்று, தமது 63 மாணாக்கரோடு ஐயம் ஏற்று உண்டு வந்தார். தாம் இறந்தால், தமக்கு எந்தக் கிரியையும் செய்யாமல் தம் உடலைக்கூடத் தொடாமல், உலகோர் காலைப் பிடித்திழுத்து உடலை ஆற்றில் எறிந்துவிடவேண்டும் என்றுகூறி, அதற்கு அடையாளமாகக் காலில் ஓர் பழுதைக் கயிற்றையும் கொண்டு உலாவினார்.[1] இவர் மாணாக்கரும் அங்ஙனமே கட்டியிருந்தனர்.

மனையில் அழைத்து அன்னமிட்டால் உண்பார். ஒரு நாள் செல்வந்தனான ஓர் அன்பன் இவரை இல்லத்தழைத்து உணவருத்தினான். சீடர்களோடு இவரும் சென்று அமர்ந்தார். அவன் மனையாள், நல்ல தேன் வைத்திருந்த உறியில் அன்று, இறைவன் அருளால் போலும், வேப்பெண்ணெயைக் கைதவறி மாற்றி வைத்துவிட்டாள். நினைவில்லாமல் அதை எடுத்து வந்து பரிமாறினாள்.

1. இச் செய்தியின் விளக்கத்தை இரட்டையர் வரலாற்றில் தில்லைக் கலம்பக ஆராய்ச்சியின்கண் உள்ள ஒரு சிறு குறிப்பினாலும் அறியலாம்.

எல்லோரும் அவ்வேப்பெண்ணெயை உண்டார்கள். உண்டவர்களுடைய பக்குவத்திற்கேற்ப அவர்கள் எண்ணமும் பலவாயிருந்தது. சிலர் சமபாவனையினால் ஒன்றுமே அறியவில்லை. சிலர் தம்முடைய ஞானத்தால் நடந்ததையுணர்ந்து "நாம் இயம்ப வொண்ணாது" என்று உண்டார்கள். பக்குவமில்லாத ஒரு சீடன், முகம் சுளுக்கி "இது வேம்பு" என்று சொல்ல வாயெடுத்தவன், 'வே' என்று சொல்லி, பிற ஒலிகளை அடக்கிக் கொண்டான். உண்மையை அறிந்த அவ்வில்லத்தான் நிகழ்ந்தது உணர்ந்து பெரிதும் வருந்தினான்.

பின்னர் அனைவரும் ஒன்று கூடியபோது, சிற்றம்பல நாடிகள் அப்பக்குவமிலியை அழைத்து "நீ சென்று தில்லையில் ஆலயம் தொழுது கொண்டிரு, பிறகு பக்குவ மடைவாய்" என்று சொல்லி, திருநீறளித்து அனுப்பிவிட்டார். அவனும் அங்குச் சென்று வழிபட்டு, தனது குருவே தெய்வமாக நினைத்துப் பலவகையான அனுபவங்களும் பெற்றுப் பக்குவ மடைந்திருந்தான்.

இப்பால், சிற்றம்பல நாடிகள் சித்தர்காடு என்னுமிடத்தையடைந்து அங்குள்ள ஒரு செல்வரையழைத்து "யாம் அனைவரும் சிவசமாதி நிலையடைய 63 குழி செய்க" என்றார். மறுநாள் நாடிகள் தம் மாணாக்கர் அனைவரையும், ஒவ்வொருவரும் ஒரு குழியிலிருந்து சமாதியடையச் செய்தார். பிறகு தமக்குரிய சமாதிக்குழியில் இறங்கித் தில்லைக்கு அனுப்பிய சீடனை மனத்தில் எண்ணி, அவனை விலக்கியதற்குச் சற்று மனம் கவன்றார்.

அப்பொழுது முதல் நாளே இங்கே நிகழ்பவற்றை இறைவனால் உணர்த்தப்பெற்ற அச்சீடன், அந்த நேரத்துக்குச் சித்தர்காடு அடைந்து தன் குரு சமாதி கொள்ள இருந்த இடமடைந்து, "ஆண்ட குரு சிற்றம்பலவா! அடியேற்கா மீண்டும் எழுந்தருள வேண்டாவோ?" என்ற வெண்பாவைப் பாடினான். நாடிகள் அவனையும் அழைத்துத்

தம் தொடைமேல் இருத்த, அவன் ஆன்மா அவரிடம் கலக்க, அவரும் அக்கணத்திலேயே சமாதி கூடிவிட்டார். அவரும் சீடர் 63 பேரும் முத்தியடைந்தார்கள்.

இவ்வரலாறு தண்டபாணி சுவாமிகள் கேட்டு எழுதி வைத்த கதையாகும். இதனுள் வேப்பெண்ணெய் பற்றிய கதையும் சமாதியடைந்த கதையும் சிற்றம்பல நாடிகள் நூற் கொத்தில் எழுதப்பட்டுள்ள கதைகளே. அவர் தம்பி கண்ணுடைய வள்ளல் என்பது முதலான சிலசெய்திகள் வரலாற்றிற்கு ஒவ்வாதவை. கண்ணுடைய வள்ளல், உண்மையில் நாடிகளுடைய மாணாக்கரின் மாணாக்கர், தம்பியல்லர். திருச்செந்தூரகவல் என்ற நூல் சிற்றம்பல நாடிகள் பாடினார் என்று வழங்குகிறது; இது கொண்டே இப்புராணமுடையார், மூத்த புதல்வர் திருச்செந்தூரடைந்து, வேலனருள் பெற்று, சிற்றம்பல நாடி எனப் பெயர் பெற்றார் என்று எழுதினார் போலும்.

சிற்றம்பல நாடிகளுடைய சீடர்கள் இக்கதையில் குறிப்பிட்ட சீடர் மட்டுமல்லர்; வேறு பெருஞானிகள் பலர், அவரிடம் உபதேசம் பெற்று, ஞானவான்களும், ஆசாரியர்களுமாகி, சீகாழியிலேயே விளங்கி, சீகாழியைச் சிவலோகமாகவும், சிவஞான இராசதானியாகவும் ஆக்கியிருந்தார்கள். அவர்களுள் சிறப்பாக சம்பந்த முனிவர், தத்துவப் பிரகாசர், தத்துவநாதர் ஆகியோர் நூல் செய்திருக்கிறார்கள். இவர்கள் தம் குருவோடு யாத்திரைகளில் செல்லவில்லை. இவர்களுடைய பக்குவத்தையும், சைவ வளர்ச்சியையும் கருதிச் சிற்றம்பல நாடிகள் இவர்களைத் தனியே அமர்த்திவிட்டார் என்று நாம் கருதலாம்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் திருவாரூரில் வாழ்ந்த சாமிநாத தேசிகரென்பவர் சந்தானாசாரிய புராண சங்கிரகம் என்ற ஒரு சிறுநூல் 126 செய்யுட்களால் பாடினார். இதனுள் மெய்கண்டார் முதலான சைவ சந்தான

*ஆசாரியர் நால்வரின் சரித்திரத்தையும் சுருக்கமாகக் கூறி யுள்ளார். இங்கு மெய்கண்டாரின் மாணாக்கருள் சிற்றம்பல நாடிகள் ஒருவரென்று கூறினார்.*

மெய்யுணர்ந்தோர் புகழும்அரு ணந்தி யோடு
மேலதிகை மனவா சகங்க டந்தார்
பொய்யகல்சிற் றம்பலநா டிகள்முன் னாகப்
புகழுறுமா ணாக்கர்நாற்பத் தொன்ப தின்மர்.

*என்பது பாட்டு. அவர் காலத்தில் மெய்கண்ட பரம் பரை வரலாறோ, சாத்திர வரலாறோ விளக்கம் பெறுமையி னால் அவர் இவ்வாறு பாடினார். சிற்றம்பல நாடிகள் கங்கை மெய்கண்டாரென்று தம் குருவை விளித்துப் பாடி யிருப் பதை இந்நூலாசிரியர் வெண்ணெய் நல்லூர் மெய்கண் டார் எனவே தவறாக எண்ணிக்கொண்டார் போலும். இச் சிற்றம்பல நாடிகள் மெய்கண்டாரின் மாணாக்கரல்லர்; பரம் பரையில் பின்வந்த கங்கை மெய்கண்டாரின் மாணாக்க ராவார். சிற்றம்பல நாடி கங்கை மெய்கண்டாரின் அருள் பெற்றார் என்றே வெள்ளியம்பலத் தம்பிரான் (17 ஆம் நூற்றாண்டு இறுதி) கூறுகிறார்.*

**சிற்றம்பல நாடி நூல்கள் :** *சிற்றம்பல நாடிகள் சாத் திரக்கொத்து என்ற ஒரு சிறுநூல், ஏட்டுச்சுவடிகளில் உள் ளது. அதை முதன்முதல் திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை 1904 இல் அச்சிட்டார். பொதுவாக வழங்கும் சிற் றம்பல நாடிகள் வரலாறும், அந்நூல் முகவுரையில் அவர் எழுதியதேயாகும். இச்சாத்திரக் கொத்து ஒன்பது பிரிவுக ளுடையது. இவற்றுள் சிற்றம்பல நாடிகள் பாடியனவும், அவர் மாணாக்கர் பாடியனவும் அடங்கியுள்ளன. அவ ருடைய வரலாற்றை அப்படியே நாம் ஏற்றுக்கொண்டால், அவரும் மாணாக்கரும் சமாதி கூடிய பிறகு உடன் சமாதி கூடாதிருந்த ஏனைய மாணாக்கர் சில பாடல்களையும் நூல் களையும் தொகுத்திருக்க வேண்டும் என்று கருதத்*

தோன்றுகிறது. சாத்திரக் கொத்திலுள்ள நூல்கள் வருமாறு: துகளறு போதம், செல்காலத்திரங்கல், வருகாலத் திரங்கல், நிகழ்காலத்திரங்கல், அநுபூதி விளக்கம், தாலாட்டு, வெண்பா, கட்டளைக் கலித்துறை, திருப்புன் முறுவல் என்பன. இவற்றுள் துகளறு போதம், இரங்கல் மூன்று, திருப்புன்முறுவல் ஆகிய ஐந்தும் நாடிகள் பாடியவை. மற்ற நான்கும் அவருடைய மாணக்கர் பாடியவை.[1]

**துகளறு போதம்:** சிற்றம்பல நாடிகள் நூல்களனைத்திலும் இதுவே மிக முக்கியமானது. மெய்கண்ட சாத்திரம் 14 எனக் கணக்கிட்டுக் காட்டும் 'உந்திகளிறு' என்ற வெண்பாவில் இந்நூற்பெயர் காணப்படவில்லை. ஆனால் பல ஏட்டுப் பிரதிகளில் இப்பாடலிற் கூறிய உண்மைநெறி விளக்கம் என்ற நூற்பெயர் இல்லாமல் துகளறு போதத்தைச்சேர்த்து 14 எனக்கணக்கிடப்பட்டுள்ளது. இது மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்று என்ற கருத்துடையவர், அனவரத விநாயகம் பிள்ளையவர்கள். சமாஜசாத்திர முதற் பதிப்பில் அவர்கள் இதையும் சேர்த்து வெளியிட்டார்கள். துகளறு போதம் சித்தாந்த சாத்திரமாகப் பிரசார மெய்தாமைக்குக் காரணம், அதற்குச் சிறப்பான பழைய உரை இல்லாமையென்று தோன்றுகிறது. எந்தவுரையும் அச்சில் வரவில்லை. திருவாவடுதுறை யாதீனத்தார் ஒரு சிறுபழைய குறிப்பைப் பொழிப்புரை என்ற பெயரில் வெளியிட்டிருக்கிறார்கள்; அது நூலிற்கேற்ற பெருமையுடையது அன்று. (இவ்வுரையில் காணும் சில குறிப்புக்களால், இவ்வுரையாசிரியர் சிவானந்தபோதசாரம் (17 நூ.) என்ற நூலின் ஆசிரியரே என்று தெரிகிறது.)

---

1. இதன் பதிப்பொன்று 1954 இல் திருவாவடுதுறையாதீனத்தாரால் வெளியிடப் பெற்றது. இதன் உரையடங்கிய ஏட்டுப் பிரதியொன்று அனவரத விநாயகம் பிள்ளையவர்களிடமிருந்தது; உரையை அவர் படித்துச் சொல்ல முழுமையும் யாம் எழுதி வந்தோம்-1936-40 இல்; இது அச்சாகவில்லை. அவர்கள் இறந்த பிறகு பிரதி என்ன ஆயிற்றென்று தெரியவில்லை. உரை நல்ல அனுபூதி உரை.

இந்நூல் மதுரைச் சிவப்பிரகாசர், திராவிட மாபாடியம் செய்த சிவஞான சுவாமிகள்போன்ற சிறந்த சித்தாந்த சாத்திர உரையாசிரியர்களால் எடுத்தாளப் பெற்ற பெருமையுடையது. கற்பக விநாயகர் காப்புச் செய்யுளும், 100 வெண்பாக்களும் இறுதியில் நூற்பொருள்கூறும் இரு பிற்கால வெண்பாக்களுமுடையது. சிறப்புப்பாயிர அகவல் ஒன்றும், நூற்பொருளும் செய்யுள் தொகையும் கூறும் அகவல் ஒன்றும் கொண்டது. 100 ஆவது செய்யுள் உமாபதியார் கொடிக்கவியின் இரண்டாம் பாடலாகவும் காணப் படுகிறது. சிறப்புப் பாயிர அகவலானது, இவர் கங்கை மெய்கண்டாரின் மாணுக்கரென்றும், ஒரு கணத்தில் அறுபது முனிவர் சிற்றம்பலவன் திருவடியை அடையும் அருள் புரிந்தனர் என்றும் கூறுகிறது.

முத்தி நெறிக்குரிய மார்க்கம் தசகாரியமென்பது சைவ சாத்திர மரபு. தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன தசகாரியங்கள். இவற்றைச் சில சாத்திரங்கள் முப்பது அவதரங்களாகத் தொகுத்துக்கூறும். (அவதரம்-நிலை) இவ்வாறு கூறும் முதல் சாத்திரம் துகளறு போதம். இப்பெயரின் பொருளாவது, ஆன்மாவிடத்திலுள்ள துகளாகிய தொல்லை மலம் அறுதற்கு ஏதுவாகிய துகளறு போதமாம் சிவஞானத்தை விளைவிக்கும் நூல் என்பதாகும். நூலின் பாடல்கள் இனிய எளிய சொற்களாலாகி, சுவையான ஓசை நயமுடைய வெண்பாக்கள். **சித்தியார், உண்மை விளக்கம்** போன்ற முந்தைய சாத்திரங்களின் கருத்தையும், மொழியையும், எடுத்தாளுவன. நூலானது ஞானமார்க்கம் கிரியை சரியை என்ற முறையில் சாதகனுக்கு உபதேசம் சொல்கிறது. இதன் அடிப்படைக் கருத்து, குருவே சிவம், குருவழிபாடே பொருள், குருபணி செய்வாரை வழிபடுவோர் கருவேலை தன்னைக் கடப்பர்

என்பதாகும். "இவை திருவருளைப் பெற்று அனுபவித்த அடியார் வாக்கு" என்று மதுரைச் சிவப்பிரகாசர் சிற்றம்பல நாடிகளைப் போற்றிக் கூறி இருக்கிருர்.

துகளறுபோத இறுதியில். ஞானம், யோகம், கிரியை, சரியை என்ற மார்க்கங்களை ஆசிரியர் வழக்கம் போல் கூறுகிருர். இவற்றுள் கிடைக்கும் ஒரு குறிப்புக் கருதத் தக்கது. சிற்றம்பல நாடிகள் காலம் கி. பி. 1325-50 என்று குறிப்பிட்டோம். கி. பி. 1310 இல் டில்லி சுல்தானின் படைத் தலைவனுகிய மாலிக்காபூர் என்பவன், பாண்டிய சகோதரர் இருவரிடம் இருந்த பூசலைப் பயன்படுத்திக் கொண்டு, மதுரை மீது படையெடுத்துச் சென்று, மதுரையை அழித்தானென்பது சரித்திர வரலாறு. சிற்றம்பல நாடிகள் இதை நன்கு அறிந்திருப்பார். அறிந்து மனம் வருந்தியும் இருப்பார். இது பற்றித் தான் போலும், சரியை யாகிய தாச மார்க்கத்தைக் கூறும்போது, திருவலகு, திருமெழுக்கு, திருவிளக்கு என்பவற்றைச் சொல்லிய பின், "சிவபிரானுக்குப் புதிய கோயில் எடுப்பவர்களும், சீரழிந்த பழைய கோயில்களைப் புதுப்பிப்பவர்களும் சிவலோகம் அடைவார்கள்" என்று ஒரு புதிய பணியையும் சேர்த்துச் சொல்லுகிருர் :

கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து—நின்ருர்
அவலோகந் தன்னில் அடையார் அடைவர்
சிவலோகந் தன்னில் சிறந்து.

அவர் காலத்தில் அவர் கண் முன்னே கண்ட கோயில் நாசமே இக் கருத்துக்குத் தூண்டுகோல் என நாம் யூகிக்கலாம்.

[பதிப்பு: துகளறு போதம் பதிப்புக்கள்: பால்வண்ண முதலியார் பதிப்பு; 1898 நாகப்பட்டினம் வேதாசலம் பிள்ளை; 1904 சண்முகம் பிள்ளை; 1934 சமாஜ சித்தாந்த

*சாத்திரம் முதற்பதிப்பு ; 1950 ஈசான சிவன் புத்துரையுடன் யாழ்ப்பாணப் பதிப்பு; 1952 திருவாவடுதுறை ஆதீனம் பொழிப்புரைப் பதிப்பு.]*

## சிவப்பிரகாசக் கருத்து

*64 ஆசிரியப்பா வரிகளால் சிவப்பிரகாசப் பாடல்களுக்கு அடிவரவும், அதிகார அடைவும் தொகுத்து உரைத்திருக்கிறார். இதை மதுரைச் சிவப்பிரகாசரே நமக்கு எடுத்து உதகரித்தவர்.*

இப்படி உமாபதி தேவன் உரைத்த
மெய்ப்படு சிவப்பிர காச விருத்தக்
கருத்தினது உண்மை விரித்துரைத் தருளினன்
சண்பையில் வாழும் தவகுரு நாதன்
பண்பமர் சிற்றம் பலவன் தானே.

## திருப்புன்முறுவல்

*11 விருத்தங்கொண்ட சிறுநூல். பாடல் ஒவ்வொன்றும் "எனும் குணியோ எம்மான் திருப்புன் முறுவலே" என்ற மகுடத்தோடு முடிவது. தம் குருநாதன் தம் தகுதியின்மையை நோக்கிப் புன்முறுவல் செய்வதாகக் கூறிய பாடல்கள்:*

ஆருன் அந்தோ தீவினைகள் அந்தக் கரணம் சுத்தியிலான்
தேருன்தேற உரைத்தாலும் செய்மாறென்கொல் திருநாமம்
கூருன் கூறுபவரிடத்தும் குறுகான் இவனும் நமைக் காண
வாருன் ஓகோ எனும் குணியோ வானோன் திருப்புன்
[முறுவலே.

*என்பது ஒரு பாடல் (10). வித்தியானந்தர் என்பவர் செய்ததென வழங்கும்* **பேரானந்த சித்தியார்** *என்ற 108 பாடல்கள் அடங்கிய ஒரு சிறு சாத்திர நூலில், இத் திருப்புன்முறுவலின் 11 பாடல்களும் எடுத்து முதற்பதிகமாய் அமைக்கப் பெற்றுள்ளன.*

**இரங்கல் மூன்று:** *காலங்கள் மூன்றையும் குறித்துச் செல்காலத்திரங்கல், நிகழ்காலத்திரங்கல், வருகாலத்திரங் கல் என முறையே 54, 50, 49 கண்ணிகளால் பாடப் பெற் றுள்ள பாடல்கள்.* **செல்காலத்திரங்கல்,** *குருவை வழி பட்டு அவனருள் கூடாமல் நாட்கள் அவமே கழிந்தனவே என்று வருந்துவது. இங்கு கங்கை நகர் மெய் கண்டாரை ஏழு பாடல்களில் குறிப்பிடுகிறார்.*

பொங்கும் பவத்தொடர்ச்சி போக்குதற்கு முன்னமே
கங்கை நகர் மெய்கண்டான் காற்கமலம் பெற்றிலமே.

**நிகழ்காலத்திரங்கல்** *என்பது எதிரே குருநாதராய் எழுந்தருளிய தேசிகனைப் பார்க்கும்படி திருக்கூட்டத் தினரை அழைப்பது:*

ஆகம சீலரைப் பாரீர் அம்பல வாணரைப் பாரீர்
ஏகன் அனேகனைப் பாரீர் இன்ப உருவனைப் பாரீர்.

**வருகாலத்திரங்கல்** *என்பது, தற்போதம் அழிந்து எல்லாம் அவனாய் நிற்கும் காலம் எக்காலம் என்று இரங்குவது:*

நீங்காத பேரறிவில் நீங்காமல் ஒன்றுபட்டே
ஆங்காரம் தீர அடங்குவதும் எக்காலம்.

**ஞானப் பஃறொடை**

*இப்பெயருடைய சில கலிவெண்பா அடிகளை "சிற் றம்பல நாடித் தம்பிரானார் அருளிச் செய்த ஞானப் பஃறொடை" என்று மதுரைச் சிவப்பிரகாசர் 60ஆம் பாடல் சிவப்பிரகாசம் உரையில் கூறுகிறார். இந்நூல் கிடைக்க வில்லை. சாத்திரக் கொத்தில் இல்லை.*

*சிற்றம்பல நாடி நூல்களில் மெய்கண்ட சாத்திரங்கள் பலவற்றின் கருத்தும், சொல்லும், பொன்போற் போற்றி ஆளப் பெற்றிருக்கின்றன.*

## சிற்றம்பலநாடி கட்டளை

சாத்திர உண்மைகளில் குறிப்பிட்ட ஒரு பகுதியை மட்டும் எடுத்துக் கொண்டு அதை அளவுபடுத்தி உரைக்கும் உரைநடை நூல் கட்டளை எனப்படும். பிற்காலத்தில் தமிழில் வேதாந்த பரமாகவும் சித்தாந்த பரமாகவும் இப்படிப் பெயர் பூண்ட சிறு நூல்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் காலத்தால் மிகவும் முந்தியது சிற்றம்பல நாடிகள் செய்த நூல். மெய்கண்ட சாத்திரக் கட்டளை என்ற புதிய பெயரமைத்து, சிறப்பான ஒரு கட்டளை நூல் சித்தாந்தம் மலர் 15 (1942) இதழ் 8, 9 இல் வெளியிடப்பட்டது. அப்போது இந்நூலின் பெயரும் ஆசிரியர் பெயரும் தெரியாமையால் இப்பெயர் புதிதாய் அமைக்கப்பட்டது. இதுவே சிற்றம்பல நாடி கட்டளை என்று தெரிகிறது. இது மெய்கண்ட சாத்திரங்களின் வழியே பதி, பசு, பாச இலக்கணங்களை மிகவும் தெளிவு படுத்திக் கூறுகிறது. சாத்திரங்களைப் பயிலப் புகுமுன் இதைப் பயில்வது மிக்க பயனுடையதாயிருக்கும்.

## சிற்றம்பலநாடி மாணுக்கர் செய்த நூல்கள்

சாத்திரக் கொத்தில் முற்கூறியவாறு எல்லாம் சிற்றம்பல நாடிகள் நூலென்று கூறிய போதிலும், நான்கு நூல்கள் இவர் மாணுக்கர் செய்தன வென்று இந்நூல்களால் அறிகிறோம்.

**அனுபூதி விளக்கம் :** 65 கண்ணிகள் கொண்டது. பல கண்ணிகளில் இது "மெய்கண்டார் கூறும் சிவானுபவம் சிற்றம்பலநாடி செப்பியவா செப்புவாம்" என்று கூறுவதால், அவருடைய மாணுக்கர் செய்தார் என்பது தெளிவு. சிற்றம்பலநாடி உபதேசித்த சிவானுபூதியை உரைத்து, கங்கை நகர் மெய்கண்டாரை வாழ்த்தி முடிகிறது.

## சிற்றம்பல நாடிகள் கலித்துறை

'சிற்றம்பலநாடி பாமாலை சொல்வேன்' என்ற ஒரு காப்புச் செய்யுளோடு 55 கட்டளைக் கலித்துறைகள்

கொண்டது. சுவை மிகுந்த இனிமையான பாடல்கள். சிற்றம்பல நாடியைச் சிற்றைக்கதிபதி என்கிறார். சிற்றை சித்தர் காடு போலும். நாடிகளை மெய்கண்ட நாதன் என்றும் கூறுகிறார். இது முழுமையும் சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பொதிந்து வைத்த ஒரு சாத்திரக் கருவூலம்.

## சிற்றம்பலநாடி தாலாட்டு, வெண்பா

இவ்விரண்டு நூல்களும் சாத்திரக் கொத்தில் காணப் படுவன. இவற்றைச் செய்தவர் சிற்றம்பல நாடிகளின் மாணாக்கரான பழுதை கட்டிச் சம்பந்த பண்டாரம் என் னும் சம்பந்த முனிவர். இவர் வரலாறு கூறும் பகுதியில் இந்நூல்களின் விளக்கத்தை விரிவாகக் காணலாம்.

## திருச்செந்தூரகவல்

சிற்றம்பல நாடிகள் பாடியதென்று வழங்குகிறது. அந்த நூலின் நடையும், சிற்றம்பல நாடிகள் பாடிய துகளறு போத நடையும் மிக்க வேறுபாடு உடையன. சொல்லையும், கருத்தையும் ஆராய்ந்தால் அந்நூல் 17-18ஆம் நூற்றாண் டெனக் கருதுதற்கு இடமுண்டு. மேலும் அதனுள், "சிற்றம்பலவன் செய்யுளாற் புகன்றான்" என வருகின்றது. இது சிற்றம்பல நாடிகளே செய்தது என்ற கருத்துக்குப் பொருந்தாது. எனவே இவ்வாராய்ச்சிக்கு இந்நூல் புறம் பானது. பின் வந்தோரொருவர் செய்தார், அவர் சிற்றம்பல நாடி மாணாக்கர் வழியினராயிருக்கலாம். அல்லது அதே பெயரைத் தரித்துப் பிற்காலத்தில் வாழ்ந்த வேறொரு சிவஞானியாயிருக்கலாம்.

## அறிவானந்த சித்தியார்

தஞ்சை சரஸ்வதி மகால் புத்தக விவரப் பட்டியலில், இது சிற்றம்பலநாடிகள் சாத்திரக் கோவையிலுள்ள தென்றும், இதனைச் செய்தவர் சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

என்றும் சொல்லப்பட்டுள்ளது. இக்கூற்று முழுமையும் பிழை. இந்நூல் அவர் செய்ததுமன்று; அவர் சாத்திரக் கோவையிலும் இது இல்லை. மிகவும் பிற்காலத்தில் வலங்கை மீகாமன் என்பவன் செய்த வேதாந்த நூலென்று பல முறை இது அச்சாகியுள்ளது.

**சிற்றம்பல நாடி பரம்பரை**

சிற்றம்பல நாடிகளின் மாணுக்கர் செய்து வைத்த நூல்களை நாம் ஆராயப் புகுமுன், அவர் பரம்பரை எவ் விதங்களில் வளர்ந்து வந்திருக்கிறது என்பதை ஓரளவு வரையறை செய்துகொண்டால், நூல் ஆராய்ச்சி எளிதா யிருக்கும். இப்பரம்பரையை வெள்ளியம்பலவாணத் தம்பி ரான் தெளிவாக எடுத்துரைக்கிருர்: "உமாபதி சிவாசாரி யரும், மச்சுச் செட்டியாரும் மறைஞான சம்பந்த குரவர் பால் அருள் பெற்ருர். அவருள் (மறைஞான சம்பந்தர் காலத்துக்குப் பின் உமாபதியாரிடமே சீடராயிருந்து அருள் பெற்ற அருள் நமசிவாயர் என்று பின்னர் பெயர் பெற்றவரான) மச்சுச் செட்டியார்பால் அருள் பெற்ருர் காழிக் கங்கை மெய்கண்டார். அவர்பால் அருள் பெற்ருர் காழிப் பழுதை கட்டிச் சம்பந்த பண்டாரம் முதலியோர். அவருள் காழிப் பழுதை கட்டிச் சம்பந்த பண்டாரத்தின் பால் அருள் பெற்ருர் சிவபுரம் ஞானப்பிரகாச பண்டாரம். அவர்பால் அருள் பெற்ருர் சிவபுரம் தத்துவப் பிரகாச பண்டாரம். அவர்பால் அருள் பெற்ருர் திருவாரூர் செட்டித் தெருப் பழுதை கட்டி ஞானப்பிரகாச பண்டாரம் முதலியோர். அவர்பால் அருள் பெற்ருர் சிதம்பரநாத மாசிலாமணி கமலை ஞானப் பிரகாச பண்டாரம் முதலி யோர். அவருள் சிதம்பரநாத மாசிலாமணி கமலை ஞானப் பிரகாச பண்டாரத்தின் பால் அருள் பெற்ருர் இந்நூல் செய்த குருஞான சம்பந்த பண்டாரம் முதலியோர் என்க" என்று முத்திநிச்சயப் பேருரையில் இரண்டிடங்களில் சிறிதும் மாறுபாடின்றி எழுதுகிருர்.

சிற்றம்பல நாடிவரை, அவருடைய ஞான பரம்பரையை முன்னமே பார்த்திருக்கிறோம். முதலியோர் என்றமையால் சிற்றம்பலநாடியும் வேறு சிலரும் கங்கை மெய்கண்டாரிடம் உபதேசம் பெற்றார்கள் என்று தெளிவாகிறது. ஏனையோர் யார் என்பது தெளிவாகவில்லை.

பண்டாரம் என்ற சொல் இக்காலத்தில் இழிவடைந்து விட்டது; ஆயினும் பண்டார சந்நிதி என்றால்தான் பெருமை யென்று நினைக்கிறோம். ஆனால் பண்டாரங்கள் தோன்றிய 14ஆம் நூற்றாண்டில், பண்டாரம் என்பது சிறப்புப் பொருந்திய ஒரு சொல்; அருட் செல்வக் கருவூலமாகிய பண்டாரத்தைப் பொதிந்து வைப்பவர் என்பது பொருள். "மூல பண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே" என்பது திருவாசகம். (பண்டாரம்-தமிழில் சரக்கறை எனலாம்.)

இனி, சிற்றம்பல நாடிகளிடம் உபதேசம் பெற்றார் காழிப் பழுதை கட்டிச் சம்பந்த பண்டாரம் முதலியோர். "பழுதை கட்டி" என்பதன் பொருளை முன்னர்ச் சிற்றம்பல நாடிகளின் வரலாற்றினால் நாம் அறிந்தோம். சம்பந்த பண்டாரத்தைப் பின்னர் சம்பந்த மாமுனிவர் என்றும் வழங்குவர். இவரோடு அருள் பெற்றவர்கள் சீகாழி தத்துவநாதர், சீகாழி தத்துவப் பிரகாசர், காஞ்சி ஞானப் பிரகாசர், முற்கூறிய கண்ணப்பர் முதலான அறுபத்து மூவர். இவ்வறுபத்து மூவர் வரலாறு சிற்றம்பலநாடி வரலாற்றோடு முடிந்தது. ஏனைய இருவர் வரலாற்றையும் தனியே காண்போம். இவ்விருவரையன்றி, காஞ்சியில் மடம் நிறுவிய காஞ்சி ஞானப்பிரகாசரும் சிற்றம்பல நாடிகள் மாணாக்கரென்றும், இவ்வழியினர் சிற்றம்பல நாடிகளைச் சிறப்பாகத் தம் குருவாய்க் கொண்டிருக்கிறார்கள் என்றும் நாம் அறிகிறோம். ஞானப் பிரகாசர் மடத்தில் சிற்றம்பல நாடிகள் கோயிலும் வழிபாடும் விழாவும் இன்றும் உள்ளன.

இங்கு, சம்பந்த முனிவர் கால்வழியினர் வரலாற்றைச் சிறிது குறிப்பிடுவோம். வெள்ளியம்பலவாணர் உரையால் இச்சம்பந்தர்பால் அருள் பெற்றோர் சிவபுரம் ஞானப் பிரகாசர் முதலியோர் என்று அறிகிறோம். இவர்களுள் நன்கு வரலாறு தெரிந்தவர்களாய் உள்ளோர் சம்பந்த சரணலயர், அம்பலநாதத் தம்பிரான் என்ற இருவர். இருவரும் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் செய்தோர். மற்றொரு சீடர் பெயர் தெரியவில்லை; இவர் ஒரு பாட்டியல் நூல் செய்தார். இவர்களுள், சிவபுரம் ஞானப் பிரகாசர் என்பவர் தாம் வந்த ஞான பரம்பரையை வளர்த்திருக்கிறார். அவர் கால்வழியினரே இன்றுள்ள தருமபுரம் ஆதீனத்தார். சம்பந்த சரணலயர் கால்வழி, அடுத்து மூன்று தலைமுறை வரையில் தெரிகிறது. பிறகு விளக்கம் எதுவுமில்லை. அம்பலநாதத் தம்பிரான் கால்வழியும் சில தலைமுறைகளுக்கு மேல் தெரியவில்லை. வரையறுத்த பாட்டியல்காரர், இச்சமய மரபில் வந்தவரன்று; இலக்கியத் துறையில் மட்டும் மாணக்கராயிருந்தார் போலும்.

சிற்றம்பல நாடிகளின் சீடர் பலருள்ளும் சிறப்பான மற்றொருவர் காஞ்சி ஞானப் பிரகாசர். இன்றைய காஞ்சி ஞானப் பிரகாச மடம் இவர் பெயரால் உள்ளது. சீகாழியிலிருந்த சிற்றம்பல நாடிகள் இம்மாணக்கருடைய வேண்டுகோளுக்கிணங்கி இவர் இருந்த காஞ்சி நகரம் வந்து இங்கு சில நாள் தங்கியிருந்தார். அக்காலத்தில் இங்குத் தனிச் சிவாலயமொன்று அமைத்து வழிபட்டார். இவ்வாலயம் மெய்கண்டேசர் என்ற பெயரோடு இன்றும் உள்ளது. பின்னர் அவர் ஏனைய மாணக்கர் வேண்டுகோளுக்கிணங்கி, சிதம்பரம், சீகாழி, கௌரி மாயூரம் ஆகிய தலங்களுக்குச் சென்று விட்டார். சென்ற போது, காஞ்சி மாணக்கராகிய ஞானப்பிரகாசரை இவ்வாலயத்தைப் பரிபாலித்துப் பூசை முதலியன செய்து கொண்டிருக்குமாறு பணித்துச் சென்றார். நாட்கள் பல சென்றன.

சிற்றம்பல நாடிகள் இறைவனோடு கலக்கும் நாள் நெருங்கியது. இதை அங்கிருந்தபடியே ஞானப் பிரகாசர் உணர்ந்தார். தாமும் தம் குருவின் அருகு சென்று அவரோடு முத்திப் பேறு அடைய எண்ணி, தம் மாணுக்கராகிய கண்ணப்பர் என்பவருக்கு ஞான உபதேசம் செய்து எல்லாத் தீட்சைகளும் அளித்து, அவரை இங்கிருத்தித் தாம் புறப்பட முற்பட்டபோது, அவர் தம் குருவைப் பிரிய மனமில்லாதவராய் உடன் செல்ல ஆயத்தமானார். இதையுணர்ந்த ஞானப்பிரகாசர், தம் மாணுக்கருள் மற்றொருவரான பக்குவி ஒருவரை யழைத்து ஞானப்பிரகாசன் என்ற நாமமே சூட்டி, அவரை அங்குத் தங்கியிருந்து, ஆலய பரிபாலனமும், ஞான பரிபாலனமும் செய்து வருமாறு பணித்து விட்டுச் சோழநாடு சென்றுர். இந்த ஞானப் பிரகாசரே இப்பொழுதுள்ள காஞ்சி ஞானப்பிரகாச மடத்தின் முதல்வர் என்று கொண்டு, இவர் தொடங்கியே இங்கு குரு மூர்த்தங்களைக் கணக்கிட்டு வருகின்றனர்.

தெற்கு நோக்கிச் சென்ற ஞானப்பிரகாசர் சித்தர் காடு அடைந்து, சிற்றம்பல நாடிகள் முத்தி பெற்ற போது தாமும் சமாதியிருந்து முத்தி பெற்றுர். உடன் வந்த அவர் சீடரான கண்ணப்பரும் அதே காலத்தில் முத்தியடைந்தார். நாடிகளோடு உடன் சமாதியடைந்த அறுபத்து மூவருள் இந்த ஞானப்பிரகாசரும் ஒருவர். அச்சமயம் தங்கிப் பின் வந்து சமாதியடைந்ததாகச் சொல்லப் பெற்ற கண்ணப்பரே, இக் கண்ணப்பர்.

இது காஞ்சி ஞானப் பிரகாச மடத்தார் கொண்டிருக்கும் வரலாறு. இதற்குப் பொருந்த அவர்கள் தங்கள் ஆதி குருமூர்த்திகளாகச் சிற்றம்பல நாடிகளைக் கொண்டிருக்கிறுர்கள்; இவருக்கே அங்கு குருபூசை. முற்கூறிய மெய் கண்டார் ஆலயத்தில் சிற்றம்பல நாடிகள் திருவுருவம் கற்சிலை; அமர்ந்த கோலத்திலுள்ளது. சிறிய செப்புச் சிலையும் உள்ளது.

வரலாற்றுணர்ச்சியும் கால அறிவும் இல்லாமையால், தமிழ் நாட்டுப் புலவர்களின் சரித்திரத்தையும், நூல் வரலாற்றையும் திட்டமாக அறிவது சாத்தியமில்லை. நாம் இங்கு ஆராய்ந்துவரும் அறுநூறு ஆண்டுகளுக்குமுற்பட்ட காலத்தில் நிலவிய இலக்கிய நிலையும், சமய நிலையும், இன்றுள்ள சொற்ப ஆதாரங்களிலிருந்து இந்த அளவேனும் தெளிவு ஏற்படுவதே நாம் செய்த பாக்கியம் என்று கருத வேண்டியிருக்கிறது.

ஆராய்ச்சி யின்மையும், உழைப்பின்மையும் காரணமாக, அறிஞர் என்போர் பலர் இக்கால இலக்கியச் செல்வம் எத்துணை யென்பதை முயன்று தேடிக் காணமல், இது இருண்ட காலம் என்று கூறி இருக்கிறார்கள். இது சிறிதும் பொருத்தமன்று. சிற்றம்பல நாடிகள் ஒருவர் வரலாறே எண்ணிறந்த நூல்களை நமக்கு உதவுவதாயுள்ளது.

மற்றோர் எச்சரிக்கையும் இங்குப் பயனுடையது. 14-15 ஆகிய இரு நூற்றாண்டுகளிலும் சீகாழியானது ஒப்பற்ற சிவராச தானியாக விளங்கியிருக்கிறது. இங்கு சிற்றம்பல நாடிகள் ஒளிகாலும் ஞாயிறு போன்ற பெரியாராகத் திகழ்கிறார். சீகாழி என்றமையால், அனைவருக்கும் மூல ஒளி, காழி ஆளுடைய பிள்ளையான திருஞான சம்பந்தப் பெருமான்; ஆதலால் எல்லா ஆசிரியர்களும் இக்காலத்தில் திருஞான சம்பந்தரையே பாடுகிறார்கள்; சம்பந்தர் செய்துள்ள அற்புதங்கள் அனைத்தும் தத்தம் ஆசிரியர் மீது ஏற்றியும் கூறுகிறார்கள். இது இயல்பே. சைவ சமயமானது இறைவனே குருவாக எழுந்தருளுகின்றான் என்று கூறுகிறது. சிவபிரானுக்கும் குருவுக்கும் வேறுபாடு அவர்கள் காண்பதில்லை. முந்திய நூற்றாண்டில் வாழ்ந்த அருணந்திப் பெருமான், சிவபிரானே கண்ணுதலும் கறைக் கண்டமும் கரந்து, மண்ணுலகில் வெண்ணெய் நல்லூர் மெய்கண்டாராக வந்தான் என்று கூறுகிறார்:

**கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி [நல்லூர்**
**மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்—வெண்ணெய்**
**மெய்கண்டான் என்றொருகால் மேவுவரால் வேறின்மை**
**கைகண்டார் உள்ளத்துக் கண். (இருபா இருபது)**

*இம்மரபிலே பின்வந்தோர் தம் குருவாகிய சிற்றம்பல நாடிகளையோ சம்பந்த முனிவரையோ கூறும் போது, சீகாழியினர் என்ற காரணத்தால், திருஞான சம்பந்தராகவே கூறுகிறார்கள். இந்தச் சம்பிரதாயத்தைக் கண்டு குழம்பக் கூடாது என்று உணர்வது முக்கியம்.*

*[வடலூருக்குச் செல்பவர்கள் இன்று அங்கு வியாழனன்று வெண்பொங்கல் செய்து ராமலிங்க சுவாமிகளின் சத்திய ஞானசபையிலே சம்பந்தருக்குப் படைக்கிறார்களாம். இராமலிங்கசுவாமி சபையில் சம்பந்தருக்கு ஏன் படைப்பு என்று கேட்டுப் பயனில்லை. சம்பந்தரிடம் உள்ள ஈடுபாடு இவ்வாறு வெளிப்படுகிறது என்றே கருத வேண்டும். மறுபுறம் இங்கு, தேவாரமோ, திருவாசகமோ பாடக்கூடாது என்ற கொள்கையை உடைய இராமலிங்கர் தொண்டர்களையும் பார்க்கிறோம். வான் கலந்த மாணிக்க வாசகருடைய பாடல்களைத் தாம் கலந்து பாடும்போது இராமலிங்கருக்குத் தெவிட்டாமல் இனிக்கலாம்; ஆனால் அவருடைய தொண்டர்களுக்குக் கைக்கும் போலும்.]*

*சிற்றம்பல நாடிகளுடைய அருட்பெருமை காரணமாக, பின் வந்தோர் அனேகர் அவருடைய பரம்பரை என்று சொல்லிக் கொள்வதைப் பார்க்கிறோம். செங்குந்த மரபினர் தங்கள் மரபின் பெரியவராக நாவினால் மழுவெடுத்த ஞானப் பிரகாசர் என்ற ஒருவரைப் போற்றுவார்கள். இப் பெரியார் பிற்காலத்தில் வாழ்ந்தவர் என அறியக் கிடக்கிறது. இவரைத் "திருக்கயிலாய பரம்பரை மெய்கண்டார் சந்தானம் சிற்றம்பலநாடிகளாதீனம் திருச்சேய்ஞலூர் ஞானப்பிரகாசர்' என்று சொல்வதுண்டு. இவர் வீர நாராயணர் விசயம், செங்குந்தர் புராணம் செய்தார் என்றும் கதையுண்டு. இது கச்சியப்ப சிவாசாரியர் வரலாற்றில் குறிப்பிடப்பட்டது (பக்கம் 78).*

அத்தியாயம் 7

# சைவ இலக்கியம் - 3
# சிற்றம்பலநாடி மாணுக்கர்

## முன்னுரை

*சிற்றம்பல நாடிகளின் மாணுக்கர், அவர் காலம், அவர் செய்த நூல்கள், அவர் வழி வந்த பரம்பரையினர் முதலிய எல்லா வரலாற்றுச் செய்திகளையும் இந்நூலில் இணைத்துள்ள மெய்கண்ட பரம்பரை விளக்க அட்டவணையில் தெளிவாகவும் விளக்கமாகவும் காணலாம்; முந்திய அத்தியாயத்திலும் இது ஓரளவு குறிப்பிடப்பட்டது. இவர்களுள் பலர் 14-15 நூற்றுண்டுகளில் வாழ்ந்து சாத்திர நூல்களும் உரைகளும் செய்தார்கள். தெரிந்த வரையில் இவர்களுடைய வரலாற்றையும் இவர்கள் செய்த நூல்களையும் இந்த அத்தியாயத்துள் ஆராய்வோம்.*

*சிற்றம்பலநாடிகளின் நேர் மாணுக்கர் நால்வரை நாம் இங்கு அறிகிறோம். இவர்களுள், தத்துவ நாதர், தத்துவப் பிரகாசர் என்போர் நூல் செய்தார்கள்; ஆயினும், அவர்கள் பரம்பரை பின்னல் வளர்ந்ததா என்பது தெரியவில்லை. மற்றைய இருவர் சம்பந்த முனிவர், ஞானப்பிரகாச முனிவர் என்போர். இவ்விருவர் பரம்பரைகளும் இன்று வரை வளர்ந்து வந்திருக்கின்றன. சம்பந்த முனிவரும் அவர் பரம்பரையினரும் நூல் செய்திருக்கிறார்கள். ஞானப் பிரகாசரும் அவர் பரம்பரையினரும் நூல் செய்யவில்லை. இங்குக் கூறிய முறையிலேயே இவர்கள் வரலாற்றை நாம் ஆராய்வோம்.*

## சீகாழி-தத்துவநாதர்

*சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கில் பதின்மூன்றுவதாக எண்ணப்படுவது* **உண்மைநெறி விளக்கம்.** *இதை உமாபதி சிவம் செய்தார் என்ற கருத்து பழமையாக வழங்கி வருகிறது. சைவ சித்தாந்த நூலாராய்ச்சியும் பக்தியும் நிரம்பியவரான அனவரத விநாயகம் பிள்ளையவர்கள், தக்க ஆதாரத்தின் மேல், இந்த நூல் செய்தார் உமாபதியாரல்லர், இவர் சீகாழி-தத்துவநாதர் என்று நிறுவினூர்கள். அவர்கள் கருத்து சமாஜ சித்தாந்த சாத்திர உரை முதல்பதிப்பில் வெளியாகியுள்ளது. ஆதாரமான செய்யுள் பின்வருமாறு:*

> **எண்ணும் அருள்நூல் எளிதின் அறிவாருக்கு**
> **உண்மை நெறிவிளக்கம் ஓதினுன்—வண்ணமிலாத்**
> **தண்காழித் தத்துவனூர் தாளே புனைந்தருளும்**
> **நண்பாய தத்துவ நாதன்.**

*காழித் தத்துவனூர் ஆவார் சீகாழிச் சிற்றம்பலநாடிகள்; அவருடைய மாணுக்கராகிய சீகாழித் தத்துவ நாதர் இந் நூல் செய்தார் என்பது கருத்து.*

*சித்தாந்த சாத்திரமென்றே இந்நூலைப் பெரியோர் சொல்லி வந்தனர் என்றுல், இது எவ்வளவு பெருமையும் நுட்பமும் பொருந்தியதாதல் வேண்டும்? இச்சிறு நூல் ஆறு அரிய திருப்பாடல்களை உடையது. ஆறும் தசகாரியம் கூறும். முதல் பாடல் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி கூறுகிறது; இரண்டாவது பாடல் ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி கூறுகிறது; பிந்திய நான்கும் முறையே சிவரூபம், சிவ தரிசனம், சிவயோகம், சிவபோகம் கூறுகின்றன. சித்தாந்த சாத்திரமாய்க் கொள்ளத் தக்க அருமைப்பாடு இச்சிறு நூலில் அமைந்துள்ளமையை இதன் கடைசி இரண்டு பாடல்களால் அறியலாம்:*

### சிவயோகம்

எப்பொருள் வந்துற்றிடினும் அப்பொருளைப் பார்த்திங்கு
எய்தும்உயிர் தனைக்கண்டிவ் வுயிர்க்கு மேலாம்
ஒப்பில்அருள் கண்டுசிவத் துண்மை கண்டு
உற்றதெல்லாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதும்அதுவே நினைப்பும்அது தானே
தரும்உணர்வும் பொசிப்பும்அது தானே யாகும்
எப்பொருளும் அசைவில்லை யெனஅந்தப் பொருளோடு
இசைவதுவே சிவயோகம் எனும்இறைவன் மொழியே.

### சிவபோகம்

பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள் வந்திடினும்
தனக்கெனஓர் செயலற்றுத்தான் அதுவாய் நிற்கில்
நாதன்இவன் உடல்உயிராய் உண்டுறங்கி நடந்து
நானா போகங்களையும் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி இதுவே.

*இந்நூலே முதன் முதலாகத் தசகாரியம் என்ற சாத்திரப் பொருளைத் தனிப்படுத்திக் கூறுகிறது.*

*இந்நூல் பற்றி அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் கூறியது பின்வருமாறு. "நெடுநாளாக உண்மைநெறி விளக்கம் உமாபதி சிவாசாரியர் அருளிச் செய்ததாக வழங்கி வந்திருக்கிறது. உந்தி களிறு என்ற செய்யுள் 'உண்மை நெறி' என இந்நூலை மாத்திரம் காட்டியதே யன்றி இதன் ஆசிரியர் பெயரைக் கூறுதொழிந்தது. சிவப் பிரகாசம் முதல் சங்கற்ப நிராகரணம் இறுதியாக உள்ள எட்டு நூல்களையும் சித்தாந்த அஷ்டகம் என்னும் பெய ரோடு கொ. சண்முகசுந்தர முதலியார் பதிப்பித்து, அவை*

யெல்லாம் உமாபதி சிவாசாரியர் அருளியனவாகக் கொண்டனர்.

"இனி ஆசிரியர் பெயர் உரைக்கும் 'எண்ணும் அருள்நூல்' என்னும் பாயிரச் செய்யுள் இங்குக் காணும் சிந்தனை யுரையில் மாத்திரமே யன்றி, இராசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்துள்ள சிவஞான போதவுரையிடைத் தசகாரியத்தை விளக்கும் பொருட்டுக் காட்டப்படும் இந்நூல் மூலத்திறுதியிலும் இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை திருவாரூர்-சோமசுந்தர தேசிகர் அவர்களிடத்துள்ள வேறு உரைப் பிரதியின் ஈற்றிலும் காணப்படுகிறது. சீகாழித் தத்துவநாதருக்குக் குருவாக உரைக்கப்படும் சீகாழித் தத்துவனார் சீகாழிச் சிற்றம்பலநாடிகளே யென்று துணிந்துரைத்தற்குத் தக்க ஆதாரமில்லையாயினும் உரைகாரர் இந்நூலைத் துகளறு போதத்தின் வழி வந்ததென்று குறிக்கின்றமையின், அதன் ஆசிரியராகிய சீகாழிச் சிற்றம்பல நாடிகளே இவ்வாசிரியருக்குக் குருவாவார் என்றுரைக்க வேண்டியிருக்கிறது."

பிள்ளையவர்கள் கருத்தைப் பிற்காலத்தில் மறுத்தாரும் உளர். (மறுத்தமையினாலேயே அக்கருத்து பிழை என்று பொருளாகாது. எம்மிடமுள்ள மெய்கண்டசாத்திரம் பழைய ஓலைப் பிரதியொன்றில், உமாபதியார் செய்த ஏழு நூல்களைக் குறிப்பிட்டு, உண்மைநெறி விளக்கத்தைக் குறிப்பிடாது விலக்கி, ` "சிற்றம்பல நாடியார் செய்த துகளறு போதம் 1 ஆகச் சாத்திரம் 14" என்று கணக்கிட்ட வரையறையும் காணப்படுகிறது.)

உண்மைநெறி விளக்கத்துக்குப் பல உரைகள் உள்ளன. பழைய பதிப்புக்களில் அச்சானது ஓர் உரை. சமாஜ சித்தாந்த சாத்திரப் பதிப்புக்கள் இரண்டிலும் வெளியானது ஒரு பழைய சிந்தனையுரை. இவையன்றி இக்காலத்தில் வேறு புதிய உரைகள் எழுதப்பட்டுள்ளன.

உண்மைநெறி விளக்கம் உமாபதி சிவாசாரியர் செய்ய வில்லை என்பதை அகச்சான்று கொண்டே நன்கு நிறுவ முடியும். சிவப்பிரகாசத்துள் அவர் தசகாரியம் கூறுகிறார், அங்குக்கூறிய நிலைகளுக்கும் உண்மை நெறிவிளக்கம் கூறும் நிலைகளுக்கும் நிரம்ப வேறுபாடு காணப்படுகின்றது. இது கொண்டே, பிந்திய நூல் செய்தவர் உமாபதியாக இருத் தல் இயலாது, இவர் பிறரொருவர் என்று நாம் முடிவுசெய் யலாம். சாத்திர நுணுக்கங்களை ஆராய இது இடமில்லை. ஆதலால் இவ்வளவோடு இதை நிறுத்திக் கொள்கிறோம். சிவஞான பாடியத்துள் மெய்கண்ட சாத்திரங்கள் அனைத் தையும் மேற்கோள் காட்டுகிற சிவஞானசுவாமிகள் உண்மை நெறி விளக்கத்தைக் காட்டவில்லை, துகளறு போதத்தையே காட்டுகிறார் என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கது.

இத் தத்துவ நாதர் அருணந்தி சிவாசாரியர் பாடிய இருபா இருபதுக்குச் சிறப்பான ஓர் உரை எழுதியிருக் கிறார். இது, அவ்வுரையின் இறுதியில் எழுதப் பெற்றுள்ள உரைச் சிறப்புப் பாயிர வெண்பாவால் தெளிவாகிறது.

இருபா இருபதுரை எழுதி னேன்முன்
ஒருவா விகற்பம் உணர்ந்தோன்—அருளுடம்பாம்
பண்புடைய சிற்றம் பலநாடி தாள்பணிவோன்
சண்பை நகர்த் தத்துவ நாதன்.

இதனால் தத்துவநாதர் சீகாழிப் பதியினர் (சண்பை- சீகாழி), சிற்றம்பலநாடி மாணாக்கர் என்ற வரலாறு விளங்கு கிறது. இவ்வுரை காண்டிகையுரை என்று ஏடு தெரிவிக் கிறது. இத்தத்துவநாதர், வரலாற்றின்படி சிற்றம்பல நாடி களுடன் சமாதியடைந்தவர்களான 63 சீடர்களுள் ஒருவர் அல்லாதவராய், நூல்கள் செய்த சம்பந்த முனிவர், தத்து வப் பிரகாசர் போன்ற மற்றொருவர் என்று தெரிகிறது.

இனி, மெய்கண்டசாத்திர உரைகள் அனைத்திலும் காலத்தால் மிகவும் பழமையானது இத் தத்துவநாதர்

செய்த இருபா இருபதுரையாகும். இவ்வுரையாசிரியர், இரண்டாம் பாடல் உரையில் ஒரு தொடருக்கு வேறோர் உரையைக் காட்டி, என்பாரும் உளர் என்று கூறியுள்ளமையால், இச்சாத்திர நூலுக்கு இன்னும் பழமையான உரையொன்று இருந்தது என்று நாம் எண்ண இடமிருக்கிறது. இவர் தம் உரையில் அப்பர் சம்பந்தர் தேவாரங்களையும் போற்றிப் பஃறொடையையும் மேற்கோள் காட்டுகிறார். மற்றப்படி நாலு குறட்பாக்களும் மூன்று வெண்பாக்களும் இவர் எடுத்து உதகரிக்கிறார். இப் பாடல்கள் எந்த நூலில் உள்ளவை என்பதை விளக்கவில்லை. இந்தக் குறிப்புக்களால் இவர் காலத்துக்கு முன்னமேயே வேறு பல சாத்திர நூல்களும் உரைகளும் இருந்தன என்று அறிகிறோம். அவை கிடைக்கவில்லை. தத்துவ நாதருடைய காலம் சிற்றம்பல நாடிகள் காலத்தை அடுத்தது, கி. பி. 1350-1375.

## சீகாழி - தத்துவப் பிரகாசர்

தமிழ் நூலாசிரியர் வரிசையிலும், சைவசமய நூலாசிரியர் பரம்பரையிலும், தத்துவப் பிரகாசர் என்ற பெயர் கொண்டவர்கள் அனேகர் இருந்திருக்கிறார்கள்; இருந்த காலம் பொதுவாக 14-16 நூற்றாண்டுகள். ஒருவர் சீகாழி-தத்துவப்பிரகாசர்; தத்துவப் பிரகாசம் என்ற சித்தாந்தப் பெருநூல் செய்தவர்; காலம் 14ஆம் நூற்றாண்டின் இறுதி. இரண்டாமவர், இத்தத்துவப் பிரகாசரோடு ஒருசாலை மாணாக்கராகச் சிற்றம்பல நாடிகளின் மாணாக்கருள் ஒருவராயிருந்த சம்பந்த முனிவரிடம் உபதேசம் பெற்ற சிவபுரம் ஞானப்பிரகாசரின் மாணாக்கரான சிவபுரம்-தத்துவப் பிரகாசர்; இவர் காலம் 15 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி. இவர் கும்பகோணத்தை அடுத்த சிவபுரம் என்னும் ஊரினர், இவருடைய மாணாக்கராக மூன்றாவது தலைமுறையில் தருமபுரம் ஆதீனத்தாபகரான குருஞான சம்பந்தர் தோன்றினார்; இவர் நூல் செய்ததாகத் தெரியவில்லை; ஆசாரிய

பரம்பரையை வளர்த்தார். மூன்ருமவர், விசய நகரத் தரச ரான கிருஷ்ணதேவராயரால் (1509-1530) பெரிதும் கௌர விக்கப்பெற்ற, இலக்கண இலக்கிய சமய நூல்களில் வல்ல வரான ஒரு சிவஞானி. இவர்பற்றிய பல செய்திகள் தமிழ் நாவலர் சரிதையில் கூறப்பெற்றுள்ளன; இவர் காலம் 16 ஆம் நூற்ருண்டின் முற்பகுதி. நான்காமவர் இதே நூற்ருண் டின் (16) முற்பாதியில் வாழ்ந்த கமலைஞானப் பிரகாசரின் மாணுக்கரான திருவொற்றியூர்-தத்துவப் பிரகாசர். இவர் சித்தியார் பரபக்கத்துக்கு உரை எழுதி இருக்கிருர்; காலம் 16 ஆம் நூற்ருண்டின் இறுதி. இச்செய்திகள் நூல் ஆதாரங்களைக் கொண்டு நன்கு நிறுவப்பெற்ற முடிவுகள்.[1]

இந்நால்வருள்ளும், காலத்தால் முதலாவதாக வாழ்ந்த பெரியார் சீகாழி-தத்துவப் பிரகாசர்; இவர் சிற்றம்பல நாடிகள் சீகாழியில் தங்கி ஞானேபதேசம் செய்து வந்த காலத்தில் அவரை ஆசிரயித்து அவரிடம் உபதேசம் பெற் றுப் பக்குவியானவர். குருவணக்கமாக இவர் பாடிய செய் யுள் மிகவும் சிறப்பானது:

மனநினைவில் வாக்கில்அனை வருக்கும்அறி வரிய
வள்ளல்கள் ளத்திஞன் மறுகும்அறி விலியேன்
தனைநினைவில் உட்கொண்டே அவனவளோ டதுவாம்
தன்மையில்நின் மலவடிவு தன்னை மன்னித்
தினையனைய அளவில்இரு வினைதுலை ஒப்பறிந்து
சீகாழி மன்னுசிற்றம் பலநாடி ஞன்என்
முனைவினையும் உடல்வினையும் வருவினையும் அறுத்து
முத்தி அளிப்பவன் மலர்த்தாள் சித்தமுற வைப்பாம்.

இப்பாடல் தனி வணக்கப் பாடலாகவும் ஏடுகளில் காணப்படுகிறது. இப்பாடலால் இவர் சிற்றம்பல நாடிகள்

1. செந்தமிழ்ப் பத்திரிகை தொகுதி 39 பகுதி 7. 1942 ஆம் ஆண்டு வெளிவந்த தத்துவப் பிரகாசர் காலம் என்ற எமது கட்டுரை காண்க(பக்கம் 361-366).

*மாணாக்கர் என்பது தெளிவாக ஏற்படுகிறது. மேலும், இவர் செய்த தத்துவப் பிரகாசத்தின் சிறப்புப் பாயிரச் செய்யுள் நூற்பெயரையும் இவர் ஊரையும் பெயரையும் தெரிவிக்கிறது :*

தன்னை அறிவிக்கும் தற்போதம் மாற்றுவிக்கும்
அன்னஅருள் ஆனந்தம் ஆற்றுவிக்கும் - மன்னியசீர்த்
தத்துவப்ர காசன் இயற் சண்பையார் கோன்உரைத்த
தத்துவப்ர காசநூல் தான்.

*உரையாசிரியர் செய்தனவாகக் கருதத்தக்க பின் வரும் இரு பாடல்களும் ஏடுகளில் காணப்படுகின்றன :*

ஏதுசமயம் ஏதுநெறி ஏதுநூல் என்று
திதமுறஎண் ணித்தெளிய மாட்டா—ததிகமாப்
புத்திக் கிலேசப் படவேண்டாம் போதிக்கும்
தத்துவப்ர காசநூல் தான்.

பார்க்கப்போம் முன்னூல் படிக்கப்போம் ப்ராரத்தம்
ஆர்த்துணரச் சேராதா காமியம்—சேர்த்தபுகழ்த்
தத்துவப்ர காசனியற் சண்பையர்கோன்தான்உரைத்த
தத்துவப்ர காசந் தனை.

*(சண்பை என்பது சீகாழியின் பன்னிரு பெயர்களி லொன்று.) இவர் சீகாழியினர் என்பது இதனால் தெளிவா கிறது. மதுரைச் சிவப்பிரகாசர் காலம் 1488 என்பதால் இவர் அவருக்குக் காலத்தால் முந்தியவர். நாடிகள் காலம் 1325-50 என்பதால், இவர் காலம் 1350-75 எனக் கொள் வதில் தடையில்லை.*

**தத்துவப்பிரகாசம் :** *மதுரைச் சிவப்பிரகாசர் இதைத் தம் உரையில் பிரமாண நூலாக எடுத்துக் காட்டுகிறார். தத்துவ சரிதை என்ற பெயரில் அவர் காட்டும் பாடல் இந் நூலுள் காணப்படுவதால், இதற்குத் தத்துவசரிதை என்ற பெயரும் உண்டென்று தெரிகிறது. சிவஞானசித்தியார்*

விரிவான சித்தாந்த சாத்திர நூல்; அதுபோல் விரிவான பல நூல்கள் அதையடுத்துச் செய்யப் பெற்றிருந்தன. இவற்றுள் சிறப்பானது இந்நூல். (சிவார்ச்சனு போதம் என்பதும் இதைப் போலவே ஒரு விரிந்த நூல் என்று தெரிகிறது; முழுதும் கிடைக்கவில்லை.)

இந்நூல் 337 விருத்தங்களையுடையது. முதல் 304 பாடல்கள் எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்; ஏனையவை அறுசீர் விருத்தம், பாடல்கள் பெரும்பான்மை செம்மையான எளிய நடையுடையன; இலக்கியத் தன்மை கெடாது, நிரம்ப வடமொழிச் சொற்கள் கொண்ட கிரியா பாதத்தையும் விருத்த யாப்புள் அடக்கி இது கூறுவது போற்றத்தக்கது.

சித்தாந்த சாத்திரங்கள் எனப் பெயர் வழங்கும் 14 சாத்திரங்களும் ஞானபாதம் ஒன்றையே விரித்தும் தொகுத்தும் கூறும். மற்றைய சரியை கிரியை யோகம் என்ற மூன்றும் அவற்றுள் மிகச் சுருக்கியே கூறப்பட்டுள் ளன. ஆனால் இவை வடமொழி ஆகமங்களில் மிகவும் விரி வாய்ச் சொல்லப்பட்டுள்ளன. நம்மாசிரியர் இவற்றையும் தமிழாலேயே உணர்த்த வேண்டும் என்று கருதியே இந் நூல் செய்தார் போலும். இன்றுவரை இம்மூன்று பாதங் களையும் இவ்வளவு விரிவாய்ச் சொல்கின்ற வேறு தமிழ் நூல் இல்லை. மேலும், புறச்சமய அகச்சமய பேதங்கள் 48 என்ற பாகுபாடும் அவற்றின் விளக்கமும் வேறு எந்த நூலிலும் இன்று காணப்படவில்லை. அன்றியும், கிரியையிற் கிரியை என்ற பிரிவில் இவர் சிவபூசைக் கிரியைகளை மிகவும் விரித்துத் தெளிவாகக் கூறியிருப்பது, பூசை செய் வோர் அனைவருக்கும் பயன்படும் பேருபகாரச்செயலாகும். இன்று சிவபூசை செய்வோர் வழக்கில் கொண்டுள்ள பூசைக்கிரமம் தீட்சாக்கிரமம் என்பன யாவும் இவர் வகுத் துத் தந்துள்ள கிரமங்களே.

*யோகத்தில் கிரியை என்ற பகுதியில் இவர் ஆசனங்களை மிகவும் விரித்துக் கூறியிருப்பது அருமையான பகுதி; வேறு தமிழ்நூல் எதிலும் இத்துணை விரிவாக யோகாசனங்கள் சொல்லப்பெறவில்லை. இங்குச் சொல்லியுள்ள ஆசனங்களின் தொகை 108. உரை இவற்றை நன்கு விளக்குகிறது. இதே போல ஆசிரியர் 108 வகைப் பிராணாயாமங்களை விளக்கியுரைக்கிறார்.*

*இவர் துகளறு போதத்தை முன்னூலாக வைத்து இதனுள் சித்தாந்த தசகாரியத்தை முப்பதவதரமாக விரித்துக் கூறியிருக்கிறார்.*

*தத்துவப் பிரகாசர், தம் குருவாகிய சீகாழிச் சிற்றம்பலநாடிகளையும், சந்தான ஆசாரியரோடு ஒருங்கு வைத்துச் சந்தான குரவர் என்றே கூறுகிறார்.*

நந்திசனற் குமரன்சத் தியஞானி யடிசேர்
　　நாதனும் பரஞ்சோதி மெய்கண்ட தேவன்
முந்துசண் பையர்தலைவன் கொற்றவன் குடியே
　　முதுபதியாம் உமாபதிஇம் முறைமையிலே ஆண்ட
செந்திருவின் பயன்சிற்றம் பலநாடி னன்மெய்ச்
　　சிவஞான வடிவான திருமேனி அடைவாய்த்
தந்தஇவர் சந்தான குரவர்இவர் மலர்த்தாள்
　　தப்பாமல் எம்மனத்தில் ஒப்பாக வைப்பாம்.

*இங்கு அருணந்தி சிவாசாரியரை 'சண்பையர் தலைவன்' என்று இவர் குறிப்பிடுவதும் சிறப்பாகக் கருதத் தக்கது. சந்தான குரவர் என்பதால் சிற்றம்பல நாடிகளின் பெருமையும் நன்கு புலனாகும்.*

*அடுத்து இவர் சமய குரவர் வணக்கம் என்ற பாடலில், துருவாசன், பிருகு, வியாக்கிரபாதர், ததீசி முனி, பதஞ்சலி, நாரதர், உபமன்னியு ஆகிய முனிவர்களுக்கும் சமயாசாரியர் நால்வர் என்று நாம் வழங்குகிற சம்பந்தராதி நால்வருக்கும் வணக்கம் கூறியிருப்பது குறிப்பிடத் தக்கது.*

துருவாசன் பிருகுவியாக் கிரபாதன் ததீசன்
சொல்லரிய பதஞ்சலி நாரதனெடுப மனியன்
உருவாதி முனிவர்கவு ணியநாதர் நாவுக்கு
அரசர்உயர் ஆரூரர் வாத வூரர்
கருவாதில் அழுந்தாமல் எழுந்தருளி அருளிற்
கருதுபத் தியில்நிறைந்த காத லோர்கள்
தருவார்மிக் கருள்எமக்கும் எம்போல் வார்க்கும்
சமயகுர வர்களிவர்கள் தமைஉளத்தில் தரிப்பாம்.

பின் வந்த சிவாக்கிரயோகி, தாம் செய்த சிவநெறிப் பிர காசத்துள் துருவாசர், அகத்தியர், கௌதமர், ததீசி என்னும் நால்வருக்கும் சைவ ஆசாரியர் வணக்கம் கூறி இருப்பதும், இந்நால்வரும் சந்நியாசம், வானப் பிரத்தம், காருகத்தியம், பிரமசரியம் என்னும் நான்கு ஆசிரமத்துக்கும் எடுத்துக் காட்டாவார்கள் என அதன் உரையுள் கூறி இருப்பதும், இங்கு அறியத் தகும்.

சிவப்பிரகாசத்தால் சிவம்பிரகாசிக்கும் என்ற குறிப்பு ஏற்படுவது போல, தத்துவப் பிரகாசத்தால் தத்துவம் பிரகாசிக்கும் என்ற குறிப்பு ஏற்படுகிறது: "தத்துவங்கட்கும் ஆன்மாவுக்கும் சிவனுக்கும் தத்துவம் என்றபெயராதலால், நூலின் பெயர் தத்துவப் பிரகாசம் ஆயிற்று" என்று இதன் உரை கூறுகிறது.

அளவை யிலக்கண அறிவு அக்காலத்தார் மிக முக்கியமாகக் கருதியமையால், இந்நூலும் சித்தியாரைப் பின்பற்றி ஒன்பது பாடல்களால் அந்தாதித் தொடையாக அளவை கூறுகிறது.

ஞானவரண விளக்கம் தொகுத்த குருஞான சம்பந்தர் இந்நூற் பாடலைச் சித்தியாரோடு ஒருங்கு வைத்துத் தொகுத்திருப்பது குறிப்பிடத்தக்கது. அதன் உரையாசிரியராகிய வெள்ளியம்பலவாணத் தம்பிரான் இந்நூலில் நிரம்பப் பயிற்சி யுடையவர்; கிடைக்கின்ற அவரது உரைப்

பகுதியில் மட்டும் தத்துவப் பிரகாசச் செய்யுட்கள் 56 உள்ளன.

இந்நூலுக்குத் தத்துவப் பிரகாசருடைய மாணுக்கரே சிறப்பான உரை செய்திருக்கிறார். நூலும் உரையும் சாத்திர மரபை விளக்க வேண்டும் என்ற கருத்துடனேயே செய்யப் பெற்றன என்று தெரிகிறது.

[பதிப்பு: யாழ்ப்பாணம் கந்தப் பிள்ளை பதிப்பு 1893; எமது பதிப்பு 1965.]

### துகளறு போதக் கட்டளை

இச்சிறு நூல் சைவ சித்தாந்தக் கட்டளைகளுள் முக்கிய இடம் வகிக்கிறது. சிற்றம்பலநாடிகள் அருளிய துகளறு போத நூலைக் கற்றுணர்வதற்குப் பெரிதும் துணை செய்யும் முறையில் இது எழுதப் பெற்றுள்ளது. நூலின் தொடக்கத்தில் பின்வரும் குருவணக்கச் செய்யுளைக் காணலாம்:

> ஆணவம்போம் மாயைபோம் ஆனஇருவினை போம்
> நாணவரு மாமாயை நாணமும் போம்-வேணுபுரத்
> தேசிகர்கோன் சிற்றம் பலநாடி சேவடியைப்
> பூசைசெய்ய யாம் பூண்ட போது.

இதுவன்றியும், நூலின் முடிவில் "இப்படி என்னலும் என்போல்வாராலும் வேதாகமம் முதலான பொருள்களாலும் அறியப்படாத பொருளே, அடியேன் பொருட்டாகத் திருப்படை வீடு சீகாழி என்றும், நாமம் சிற்றம்பல நாயனார் என்றும், திருமேனி மானிடம் என்றும், இவ்வாறாக எழுந்தருள வேண்டுமோ? தன்மையில் உணர்த்திலுல் ஆகாதோ?" என்று கேட்ட சீடனுக்குக் குருவானவர், "அது விஞ்ஞான கலருக்கும் பிரளயாகலருக்கும் உள் நின்று உணர்த்துவது. நீ சகலன் ஆகையால் இப்படி வேண்டிற்று எனக் கொள்க" என்று அறிவுறுத்துகிறார். இரண்டிடத்தையும் ஒரு சேர நோக்கும்போது, இதைச் செய்தவர்

சிற்றம்பல நாடியின் நேர் மாணக்கர் என்றே புலப்படு கிறது. நேர் மாணக்கர் பலர் நூல் செய்தார் உளர். அவ ருள்ளும் முப்பதவதரங்களைத் தசகாரியத்துள் அடக்கி வைத்து நூல் செய்தார் தத்துவப் பிரகாசர்; மிகவும் விரி வாக இக்கருத்தைத் தம் நூலாகிய தத்துவப் பிரகாசத்தில் விளக்கியிருக்கிறார். (சீகாழித் தத்துவ நாதர் செய்த உண்மை நெறி விளக்கம் தசகாரியம் கூறுகிறதே யன்றி, முப்பதவதர விளக்கம் கூறவில்லை.) சிற்றம்பலநாடிகள் செய்த துகளறு போதம் முப்பதவதரம் விளக்குகிறது. அதே பெயர் கொண்ட இத்துகளறு போதக் கட்டளையும் இதையே அமைத்துக் கூறியுள்ளது. ஆகவே, சிற்றம்பல நாடிகள் சீடர் பலருள்ளும் தத்துவப் பிரகாசம் செய்த சீகாழித் தத்துவப் பிரகாசரே இக்கட்டளையும் செய்தார் என்று முடிவு செய்வது தவறாகாது.

இக்கட்டளை, சீடன் வினவுவதாகவும் குரு விளக்கி யுரைப்பதாகவும் அமைந்தது. மிகவும் எளிய முறையில் ஒவ் வொரு கருத்தையும் சுவையான எடுத்துக்காட்டுக்களின் மூலம் விளக்கிச் செல்கிறது. "ஞான பாதத்துக்கு யோக் கியமான சத்திநிபாதம் பிறந்த ஆன்மாவைத் தேர்ந்த ஆசாரியன், அவனுக்குப் பதிபசுபாச உண்மைகளை அருளிச் செய்து, அவன் அறிவில் உள்ள துகளை அறுத்து இசைவிக் கப் பொருந்தின முறைமையைச் சொல்லுகையில், இக் கட்டளை துகளறு போதக் கட்டளை எனப் பேராயிற்று."

இனி, இக்கட்டளையின் எளிமையான சுவை மிகுந்த இனிய உரைநடையானது, அந்த நூற்றாண்டில் (14ஆம் நூற்றாண்டு) தமிழில் வழங்கிய வசன நடையை நாம் அறிந்து கொள்ள உதவுவதாயும் அந்நடைக்குச் சிறப்பான எடுத்துக்காட்டாயும் உள்ளது.

[பதிப்பு : வாலையானந்த சுவாமி பதிப்பு 1918. அன வரத விநாயகம் பிள்ளை பதிப்பு 1935. திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பு, 1954.]

## பரம முனிவர்

"அருளில் உயிர் கூடும் நெறி முப்பது அவதரம்" என்பது சாத்திரம். துகளறு போதம், தத்துவப் பிரகாசம் முதலான பல நூல்கள் முப்பது அவதரம் கூறுகின்றன. இவற்றுள் சித்தாந்த சாரம் என்ற சிறுநூலும் ஒன்று. இச் சிறு நூல் காப்பு வெண்பா ஒன்றும் 32 எண்சீர் ஆசிரிய விருத்தங்களையும் கொண்டது. பாடல்கள் மிகவும் அழகிய எளிய நடையில் உள்ளன. நூலின் பாடல்கள் பெரும்பான்மையும் சிவப்பிரகாசத்தின் சொற்களையும் கருத்துக்களையும் எடுத்துக் கூறுகின்றன.

இது 1888 இல் ரிப்பன் அச்சக வெளியீடாக வெளிவந்தது. அவ்வெளியீட்டில் இது பரம முனிவர் செய்தாரென்று குறிப்பிடப்பட்டுள்ளது. பின்னர் இச்சிறுநூல் அனவரத விநாயகம் பிள்ளை பரிசோதனையோடு 1933 இல் சித்தாந்த இதழில் வெளிவந்தது.

இந்த நூலானது மிகவும் திருத்தமான முறையில் முப்பதவதரம் கூறுகிறது. இந்த அவதரங்களை இந்த நூலானது தத்துவப் பிரகாசம் கூறுகின்ற முறையிலேயே கூறுகின்றது. ஆகவே இதைச் செய்த பரம முனிவர் தத்துவப் பிரகாசரின் மாணுக்கர் என்று கருதுவது பொருத்தமாக இருக்கும். தத்துவப் பிரகாசத்துக்கு அமைந்த உரையை ஆராயும்போது அது தத்துவப் பிரகாசரின் மாணுக்கரே செய்தாரென்று யூகிக்க இடமிருக்கிறது. சித்தாந்த சாரமும் தத்துவப் பிரகாச உரையும் ஒரே ஞான பரம்பரையில் எழுந்தன என்று நூலகத்திலுள்ள பல குறிப்புக்கள் தெரிவிக்கின்றன.

இவ்விரண்டுக்கும் கருத்தொற்றுமையோடு கூட சொல் ஒற்றுமையும் நிரம்பக் காணப்படுகிறது. உதாரணமாக, தத்துவப் பிரகாசம் 315 ஆம் பாடல் உரையில் "மதுவுண்ட வண்டு போலும்" என்ற தொடருக்கு,

"தேனருந்தும் வண்டு மதுவுண்டு நிறைந்தால் அப்பூவை அலையாமல் அதிலே உறைகின்றோம் என்ற தன்மை உணராமல் மயங்கிக் கிடக்கும் தன்மை போலவும்" என்று உரை எழுதியிருக்கிறார். இது சித்தாந்த சாரம் 31ஆம் பாடலில் அப்படியே எடுத்து வைக்கப்பட்டுள்ளது:

அன்றலர்ந்த பூவின்மது நிறைய வாரி
ஆவலுடன் உண்டவண்டு பூவையலை யாமல்
நின்றதிலே உறைகின்றோம் என்பதற மயங்கும்
நெறி போல.

இவ்விரிடங்களிலுமுள்ள கருத்தொற்றுமையும் சொல்லொற்றுமையும் காணும்போது, இரண்டு நூல்களையும் ஒருவரே செய்தார் என்றே கருதத் தோன்றுகிறது. பரம முனிவரும் தத்துவப் பிரகாசர் மாணக்கர், தத்துவப் பிரகாச உரைகாரரும் தத்துவப் பிரகாசருடைய மாணக்கர், என்று காணும் போது, இருவரும் ஒருவரே என்றும், இவர் பெயர் பரம முனிவர் என்றும் நாம் கருதலாம்.

சித்தாந்தசாரம் மிகச் சிறிய நூலாயிருப்பினும், மிகவும் சிறந்த சாத்திர நூல். இதன் முதல் பாட்டு சிவப்பிரகாசம் 'பலகலை' என்ற பதியிலக்கணம் கூறும் பாடற் கருத்துக் கொண்டதாகும். தொடர்கள் கூட இதிலிருந்தே வருகின்றன. ஆசிரியர் இங்கு ஆறு பாடல்களில் பதி, பசு, பாசம் மூன்றையும் விரித்துரைத்த பின் முப்பதவதரம் கூறுகிறார். இந்நூல் அச்சில் கிடைக்காமையால், அதிக வழக்காறு பெற்றிலது போலும்.

தத்துவப் பிரகாச உரையானது மிகச் சிறந்த சாத்திர உரை. பரமமுனிவர் இங்கு மேற்கோள் காட்டுகின்ற பாடல்கள் பல எந்த நூலென்று தெரியவில்லை. இந்த நூலுள், முக்கியமாக, கிரியா பாதத்தின் சிறப்பு முழுமையும் இவ்வுரை இன்றேல் அறிய வழியில்லை. அங்ஙனமே நூலாசிரியர் கூறுகின்ற நூற்றெட்டு ஆசனங்களும் நூற்றெட்டுப்

பிராணுயாமங்களும் இவ்வுரையின்றேல் விளக்கமுற மாட்டா.

## சம்பந்த முனிவர்

இவரைப் "பழுதை - கட்டி சம்பந்த பண்டாரம்" என வெள்ளியம்பலவாணத் தம்பிரான் கூறியிருப்பதை முன்னமே குறிப்பிட்டோம். பழுதைகட்டி என்ற தொடரின் கருத்தையும் அங்குக் கூறினேம். இவரைச் சம்பந்த முனிவர் என்று இவர் மாணக்கருள் ஒருவராகிய காவை அம்பல நாதத் தம்பிரான் குறிப்பிடுகிருர் :

பந்த மறுத்த சகநாதன் பார்வையென
வந்தளித்த சம்பந்த மாமுனிவன்—எந்தைபதம்
சென்னியின் மேல்வைத்துச் சிவப்பிரகா சக்கருத்தை
அன்னவயற் காவை அம்பலவன்—நன்னயத்தாற்
சொன்ஞன் எழுபிறப்பும் தொல்லேவினே யும்தீர
மன்ஞ கமத்தை மதித்து.

இது சிவப்பிரகாசக் கருத்தைக் கூறும் கலிவெண்பாப் பாட்டின் கடைசிக் கண்ணிகள். இதனல் சம்பந்த பண்டாரம் என்று பெயர் வழங்கிஞலும், இவர் சம்பந்த மாமுனிவர் என வழங்கப்பட்டார் என்றும், இவர் சீடர் களுள் காவை அம்பலநாதத் தம்பிராஜும் ஒருவர் என்றும் அறிகிருேம்.

இவ்விடத்து, அக்காலத்தில் குரு சீடர் பரம்பரையில் பெயரைக் குறிப்பிடும் முறையும் நாம் அறிந்து கொள்ள லாம். உமாபதியார்வரை சிவாசாரியர் என்னப் பெற்றனர். பின்வந்த அருள்நமசிவாயர், கங்கை மெய்கண்டார் இரு வரும் வேறு வகையில் உபசரித்துச் சொல்லப்பெற்றிருப்ப தாகத் தெரியவில்லே. அடுத்து வந்த பெரியாரான காழிச் சிற்றம்பலவர் 'நாடிகள்' எனப் பாராட்டப்பெற்றூர். பிற் காலத்தில் வேறு எவருக்கும் நாடிகள் என்ற பெயர்

அமைந்ததில்லை. வெள்ளியம்பலவாணத் தம்பிரான் இவரைச் சிற்றம்பல நாடிப்பண்டாரம் என்றும் குறிப்பிடுகிறார். அக்காலத்தில் எந்தச் சைவ ஆதீனமும் ஏற்பட்டதில்லை. சைவமடம் ஆதீனம் என்ற நிலையான ஒரு ஸ்தாபனம் ஏற்பட இன்னும் நூறு - நூற்றைம்பது ஆண்டுகளாகின்றன. பண்டாரமோ, பண்டாரச் சந்நிதிகளோ, சமயப்பெரியார் எவரையும் குறிக்கும் பெயராக இன்னும் அமையவில்லை. இந்த நிலையில் இப்பழுதை கட்டிச் சம்பந்தர், மாமுனிவர் என்று சொல்லப் பெறுகிறார். இது பதினான்காம் நூற்றாண்டின் நிலை. அடுத்த நூற்றாண்டில் மதுரைச் சிவப்பிரகாசர், தம்பிரான் என்று கூறுகிறார். அடுத்த நூற்றாண்டில் தான் குருமாரைத் தேசிகர், பண்டாரம் என்று கூறும் ஆட்சி பிறக்கிறது; பின், பண்டாரச் சந்நிதியாகிறார்.

சம்பந்த முனிவர் வாழ்க்கையைக் குறித்து நமக்கு எதுவும் தெரியவில்லை. இவர் சிற்றம்பல நாடிகளுடைய மாணாக்கர். அவருடைய சிறப்பான மாணாக்கருள் சிலர் அவர் சமாதியடைந்த பின்னும் உலகில் வாழ்ந்து சைவ நெறியை வளர்த்தார்கள். அவர்கள் அனைவருள்ளும் மிகவும் சிறப்புடையவர் இச்சம்பந்த முனிவர். இவருடைய சீடர் பரம்பரையில் ஒன்றே, ஓரிரு நூற்றாண்டுகளில், தருமபுரம் மடமாக வளர்ந்தது என்றும் சரித்திரத்தின் மூலம் நாம் அறிகிறோம்.

சம்பந்த முனிவர் பாடிய நூல்களென இன்று கிடைப்பன மூன்று. இவை சிவானந்த மாலை, சிற்றம்பல நாடிகள் சாத்திரக் கொத்திலுள்ள வெண்பா, தாலாட்டு என்பன. ஆனால் இந்நூல்களில் ஒன்றிலும், நூலை இவர் பாடியதாகப் பெயர் காணப்படவில்லை. வேறு வகையான சான்றுகளைக் கொண்டே இம்மூன்று நூல்களையும் ஒரே ஆசிரியர் பாடினார் என்றும், அவரே சிற்றம்பல நாடிகள் மாணாக்கராகிய சம்பந்த முனிவர் என்றும் நாம் முடிவு செய்கிறோம். குறிப்பிட்ட இப்பகுதியின் நூல் மரபையும் ஆசிரியர்

மரபையும் அறிவதற்குக் கிடைக்கும் சான்றுகள் சிலவே. அவைகளை வைத்தே நாம் சில முடிவுகள் செய்யவேண்டி யிருக்கிறது.

முதலாவதான சிவானந்த மாலையை மதுரைச் சிவப் பிரகாசர் மிகவும் விதந்து போற்றிக் கூறுகிறார். சிவப் பிரகாசம் 87 ஆம் பாடலுரையில் சிவசமவாதியின் கூற்றை மறுக்கு முகமாய் உதாரணம் கூறுமிடத்து, இவர் பின்வரு மாறு எழுதுகிறார்: "ஆன்மா சிவத்தோடுங்கூடி ஒன்று பட்டழிவதுமில்லை, இரண்டு பட்டு நீங்குவதுமில்லை என்ற தென அறிக. திருவருளைப் பெற்று அனுபவித்த அடி யார்கள் திருவாக்குக்களிலும் உண்டான கருத்து, சிவா னந்தமாலையில்,

> தாணுவினோ டத்துவிதம் சாதிக்கும் மாண,உனை
> ஆணவத்தோ டத்துவிதம் ஆக்கினரார்—கோணறவே
> என்றனை என்றனை என்றனை ஏகமிரண்டு
> என்றுமற் சும்மா திரு (276)

என்னும் உரைகளிலும் இப்பொருளைக் கண்டுகொள்க." இதனால் பெறுவது, சிவானந்தமாலை சிறந்த அனுபவ வாக்கு; இது காலத்தால் மதுரைச் சிவப்பிரகாசருக்கு (1488) மிகவும் முற்பட்டது. இச்சிவப்பிரகாசர் சிற்றம்பல நாடி பரம்பரையினர் என்பதும் இங்கு அறியத்தக்கது.

சிவானந்த மாலையானது தில்லையையும், காழியையும், சம்பந்தரையும் மிகுதியும் போற்றிக் கூறுகிறது. இப் போற்றுதல் முழுமையும் சிற்றம்பல நாடிகள் தொடர்பு கொண்டது. அவர் பெயரே சிற்றம்பலத்தை (தில்லையை) நாடினமையால் எழுந்தது. அவர் சீகாழியினர்; சம் பந்தரைப் பெரிதும் போற்றுபவர். இவ்வியல்புகளும், இந்த நெறியும் நாடிகளின் மாணக்கரிடம் பொருந்தி யிருத்தல் முறையேயாகும். ஆதலால் சிவானந்த மாலை செய்தார் நாடிகளின் மாணக்கருள் ஒருவர் என்று கொள்ளுதல் பொருந்தும்.

இனி, இம்மூன்று நூல்களிலும் பயிலும் "சும்மா" என்ற சொல்லாட்சி. "சும்மா இரு சொல்லற" என்று அருணகிரிநாதர் இச்சொல்லைப் பிரசித்தமாக்கிய போதிலும்கூட, அவருக்கும் நூறாண்டுகளுக்கு முன்னமே சிவானந்தமாலை இச் சொல்லைப் பலமுறை எடுத்தாளுவதால் தான் இதன் பொருளும், பழைமையும் நமக்கு விளங்குகின்றன. இந்நூல் சும்மா என்ற வினையெச்சத்தை இரண்டு முறை **சும்மாது** (ஓரிடத்தை முன்காட்டிய "தாணுவினோடு" என்ற பாடலில் காணலாம்) என்ற வடிவத்திலும், மூன்றுமுறை **சும்மா** என்ற வடிவத்திலும் பிரயோகிக்கிறது. (சும்மாது-மூச்சுவிடாது; சும்முதல்-மூச்சு விடுதல்; சும்மா யிருத்தல் - மூச்சு அடக்கி யிருத்தல்; யோகநெறி) சும்மா என்ற சொல்லுக்கு மிகவும் பழமையான இலக்கியப் பிரயோகம் இதுவே. ஏனைய இலக்கிய ஆட்சிகள் யாவும் காலத்தால் பிற்பட்டவையே.[1]

சிவானந்தமாலை யாசிரியரே, சிற்றம்பல நாடிகள் சாத்திரக்கொத்தில் காணும் வெண்பா தாலாட்டு என்ற இரு நூலுக்கும் ஆசிரியரென்பது சும்மா என்ற இச்சொற் பிரயோகத்தால் நாம் முடிவுசெய்ய இயலும்.

> **தன்னை உணர்வென்னில் தானாய்நான் நின்றிடுவேன்**
> **என்னை உணர்வென்னில் யானவன்—பின்னமறச்**
> **சும்மா இருக்கில் சுகமாவேன் தோணிபுரத்து**
> **எம்மான் சிற்றம்பலவன் என்று**

என்பது சிற்றம்பல நாடிகள் வெண்பா (பாட்டு 60). அச்சுப்பதிப்புக்கள் இரண்டிலும் 59-60 பாட்டுக்கள் அடிமாறியும் சொற்பிழை காணப்பட்டும் உள்ளன.) சும்மா என்ற சொல் இங்கு வந்துள்ளது. அடுத்த சிற்றம்பல நாடிகள் தாலாட்டில் இச்சொல் இன்னும் தெளிவாய்ச் சந்தர்ப்பத்தோடு வருகிறது.

---

1. சித்தாந்தம் 1963 அக்டோபர், பக்கம் 325-334, சும்மா என்ற தலைப்புடைய எமது கட்டுரை காண்க.

கைம்மாறு போதமறக் காசினியோர் நூலைவிட்டு
நம்மானை சும்மா இருவென்ற நாயகமோ (11).

இது சீகாழிச் சிற்றம்பல நாடிகளைப் போற்றுகின்ற தாலாட்டு. இதனுள் சிற்றம்பல நாடிகள், "சும்மாயிரு" என்று உபதேசித்தார் என்று தெளிவாகக் குறிப்பிடுகிறது.

இனி, முன்னர்க் காட்டிய சிவானந்த மாலைப் பாடல், "தாணுவினோடு அத்துவிதம் சாதிக்க வல்ல மாணாக்கனே, உன்னை ஆணவத்தோடு அத்துவிதம் ஆக்கினவர் ஆர்? கோண் அறவே, என்னானை என்னானை என்னானை, ஏகம் இரண்டு என்னாமல், நீ சும்மாது இரு" என்ற பொருளுடையது. இப்பாடல் சும்மாது இரு என்று கூறுகிறது. அந்நூல் முழுமையும் நாம் ஆராயும்போது யாவுமே நூலாசிரியர் வாக்காகவும், சில பாடல்களில் அவர்தம் ஐயங்களைக் கூறுவதாகவும், சில பாடல்களில் தமது குரு தம்மை விளித்து, "மாணவனே இதுவே பொருள். நீ இவ்வாறு உணர்வாயாக" என்று அறிவுறுத்துவதாகவும் உள்ளது. உதாரணமாகக் குறித்த பாடல் வருகிற சந்தர்ப்பத்தில், மாணாக்கர் கேட்கிறார்: தோத்திரம், சாத்திரம் முதலியன முத்தித் தடை என்றாய்; நான் உன்பால் யாது செய்வது?

தோத்திரமும் மந்திரமும் அர்ச்சனையுந் தூயநெறிச்
சாத்திரமும் முத்தித் தடைஎன்றாய்—கூர்த்த அருட்
போத அழிவிற் பொருளே, ஆனந்த பூரணனே,
ஏது செய்வதுன்பால் யான்?"

இப்படி மாணாக்கன் கேட்கும் கேள்விக்கு ஆசிரியர் ஏழு பாடல்களில் விடை கூறுகிறார். இவ்வேழில் ஒரு பாடலே முற்காட்டிய 'தாணுவினோடு' என்ற பாட்டு. வினா விடையிரண்டுமே நூலாசிரியர் பாடுவன. ஆதலால், இங்கும் சும்மாதிரு வென்று மாணாக்கனுக்குச் சிற்றம்பல நாடிகள்

சொன்னாரென்று மாணாக்கர் நூல் பாடினதாகத் தான் நாம் கொள்ளவேண்டும். எனவே, சும்மா என்ற சொற்பிரயோக முடைய இம்மூன்று நூல்களையும் - சிறப்பாக இவை 'என்னை சும்மாயிரு' என்று கூறுகின்றமையால்- சிற்றம்பல நாடிகள் மாணாக்கரான சம்பந்த முனிவரே பாடினார் என்பது பொருத்தமாகும்.

சம்பந்த முனிவருடைய மாணாக்கர் பலர். ஒருவர் சம் பந்த சரணாலயர் என்ற பெயருடையவர். இவரே தத்துவ விளக்கம் என்ற சைவநூல் செய்தார். திருஞான சம்பந்த ருடைய மாமன் ஒருவர் இருந்து பாடல்களை ஏட்டில் எழுதி வைத்தார், அவர் பெயர் சம்பந்த சரணாலயர் என்ற வரலாறு காரணமாக, சம்பந்த முனிவரின் மாணாக்கர் சம்பந்த சரணாலயர் என்ற பெயர் சூட்டப் பெற்றார் என்று நாம் கருதக் கூடும். இப்பெரியார் அனைவரும் துறவிகள். ஆகவேதான் முனிவர் என்றும் தம்பிரான் என்றும் சொல்லப் பெறுகின்றனர். துறவு பூண்ட உடனேயே பழைய இயற்பெயரை விலக்கிப் புதிய ஆசிரமத்திற்கான புதிய பெயர் சூட்டுவது வழக்கமாய் இன்றும் இருந்து வருகிறது. இந்த மரபையொட்டி அன்று சம்பந்த முனிவர் தம் முதல் மாணாக்கருக்குச் சம் பந்த சரணாலயர் என்று பெயரிட்டார் போலும்.

இச்சம்பந்த சரணாலயர், சைவ சித்தாந்தியாக இருந்து, பின்னர் ஐக்கியவாத சைவராக ஆனாரென்பதை அவர் வரலாற்றில் காண்போம்.

இவரையன்றி, சம்பந்த முனிவருக்கு வேறு பல மாணாக்கர் இருந்தனர். ஒருவர் காவை அம்பலநாதத் தம்பிரான்; ஒருவர் சிவபுரம் ஞானப்பிரகாசர்: இன்னொரு வர் பெயர் தெரியவில்லை: வரையறுத்த பாட்டியல் என்ற இலக்கண நூல் செய்தார். இவ்வரலாற்றால் நாம் அறிய இருப்பது, இவர்கள் ஞானாசாரியர் மட்டுமின்றி, சிறந்த

இலக்கிய இலக்கண ஆசிரியர்களாகவும் விளங்கியிருந் தார்கள் என்பது.

### சிவானந்த மாலை

சம்பந்த முனிவர் பாடியது என்ற செய்தி இதுவரை விளக்கிக் கூறப்பட்டது. இந்நூலை முதன் முதலில் 1910 இல் அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் ரிப்பன் அச்சுக் கூடத்தில் அச்சிட்டார்கள். அது முதல் இதுவரை இது இன்னும் மறுமுறை அச்சிடப் பெறவில்லை. மதுரைச் சிவப்பிரகாசர், போரூர் சிதம்பர சுவாமிகள், நமசிவாயத் தம்பிரான், ஒருபாவுண்மை உபதேச உரைகாரர் முதலிய பண்டைய உரையாசிரியர்கள் இதை ஒரு பிரமாண நூலாகக் காட்டியிருக்கிறார்கள். மதுரைச் சிவப்பிரகாசர் இதைத் "திருவருள் பெற்று அனுபவித்த பெரியார் வாக்கு" என்று அருமை பாராட்டிக் கூறுவார்.

சிவானந்த மாலைப் பாடல்களில் 22 பாடல்களை எடுத்து, வேதாந்த நூல் திரட்டு செய்த தத்துவராய சுவாமிகள், தாம் பாடிய பாடுதுறையுள் 29 ஆவது பிரபந்த மாக "நெஞ்சிற்கமைவுரை" என்ற தலைப்பில் அமைத்துக் கொண்டார். திருவாசக அனுபூதியுரை செய்த காழித் தாண்டவராயர், மெய்கண்ட சாத்திரங்களோடு சிவானந்த மாலையையும் ஒரு சாத்திரமாகவே சொல்லுகிறார். "தமிழிலும் வடமொழி போல வேதாகம சாத்திரம் உளதோ? உள. அவையாவன: தமிழில் வேதம்—காரைக் கால் அம்மையார் முதலியோர் அருளிய தேவாரம், திரு வாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு; சிவாகமம்—திருமந்திரம், பெரிய புராணம், கோயிற் புராணம்; சாத்திரம்—சிவஞான போதம் முதலானவை எனக் காண்க" என்கிறார். சிவ ஞான போதம் முதலானவை என்ற தொகுப்புள் அவர் சிவானந்த மாலையையும் சேர்த்துக் கூறுகிறார். அவர்

உரையுள் சாத்திரம் என்ற தலைப்பில் இந்நூற் பாடல்கள் பல வந்துள்ளன. இது இவ்வளவு அரிய நூலாயிருப்பினும் அன்று முதல் இன்று வரை இதை யாரும் அறிந்ததில்லை.

சத்தி சிவமாகிய அருள் வடிவங்கள் ஆட்கொள்ள வில்லையெனில் சைவ நெறி இல்லை என்று திருக்களிற்றுப் பாடியார் பேசுகிறது (5):

ஆகமங்கள் எங்கே அருமறைகள் தாமெங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே—பாகத்து
அருள் வடிவும் தானுமாய் ஆண்டிலரேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு.

இதையொத்த மற்றொரு பாடல் சைவ சமயிகள் அனைவரும் அறிந்தது, சொற்பொழிவாளர் அனைவர் நாவிலும் பயில்வது:

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் எம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத் தெங்கே.

இப்பாடல் சிவானந்த மாலைப் பாடல் (11) என்பதை அறிந்தவர் அரியரினும் அரியர். மெய்கண்ட சாத்திரங்களை அருளிச் செய்த ஆசாரியர் பரம்பரையில் வந்த ஆசாரியர் அனேகர் தாமும் நூல் செய்தார்கள். தத்துவப் பிரகாசம் போன்றவை சாத்திரமே; முறையாகச் சமய உண்மைகளை எடுத்து விளக்குவன. சிவானந்த மாலை போன்றன, இதே பரம்பரையில் எழுந்த அனுபவ நூல்கள்; இவற்றைப் பிர மாண நூலென்று ஆன்றோர் கூறுவர்.

இந்த நூல் ஒரு சாத்திரமாகவே கருதப் பெற்றது என்பதற்குப் பழைய ஏட்டுச் சுவடிகளும் ஆதரவு தரு கின்றன. சாத்திர ஏட்டுச் சுவடியொன்றில் பின்வரும்

சாத்திரங்கள் அடங்கியுள்ளன: மெய்கண்டசாத்திரம் 14, தத்துவப்பிரகாசம், சிவநெறிப்பிரகாசம், சிவானந்தமாலை.

சிவானந்த மாலை 414 வெண்பாக்களையுடையது. மிகச்சிறந்த சைவசித்தாந்த நூல்; பல சமய உண்மைகளைச் சுவையுடைய உவமைகளால் தெளிவாக விளக்குகின்றது. இதன் நடையும் மிகவும் எளிய இனிய இலக்கிய நடை. பின்வந்த வேதாந்த நூலாசிரியர் பலர் செய்துள்ளது போன்ற செம்பாக மில்லாத கொச்சை மொழிவழக்குடையது அன்று. மிகப் பலவான பாடல்களில் இங்கு ஆசிரியர் ஞான சம்பந்தரைப் போற்றுகிறார். வெங்குரு நாதன் என்று இவர் கூறுவது, ஞானசம்பந்தருக்கும் சிற்றம்பலநாடிக்கும் வேற்றுமை காணுத நிலை என்று கருதலாம். நூற் பெயர் சிவானந்த மாலை என்பது 16ஆம் பாடலில் சொல்லப்பட்டுள்ளது. இவர் கூறும் அவையடக்கப் பாடல் சுவையுள்ளது என்பது மட்டுமின்றி, சாத்திரக் கருத்தை அமைத்தே கூறுகிறது:

> பாசம் சிவனை அனுபவிக்கப் பாவிக்கும்
> நேசம் தனக்கு நிகராகும்—காசினிமேல்
> நன்மார்க்கம் ஒன்றுமிலா நானும் பெரியோர்முன்
> சன்மார்க்க நூல்உரைத்தல் தான்.

'பாசம் ஆன்மாவைப் பந்திக்குமே யன்றி, ஆண்டான் முன் அது இல்லை யாகிவிடும்; இது போல, தாம் நூல் உரைக்கத் துணிவது இயலாத செயல்' என்று ஆசிரியர் அடக்கத்தோடு குறிப்பிடுகிறார்.

இலக்கியச் சுவை ததும்புகின்ற பல பாடல்கள் இந் நூலுள் உள்ளன ; பின் வந்தோருக்கு வழிகாட்டிகளாகவும் உள்ளன. இரண்டு பாடல்களை இங்கே குறிப்பிடுவோம். ஆன்மா தோன்றிய அன்றே ஆணவமும் உடன்தோன்றி ஆன்மாவைப் பற்றி நிற்கிறது. ஆன்மாவையும் உணராமல், ஆணவத்தையும் உணராமல் மறைக்கிறது. ஆனல் வாராத

முத்திப்பேறனைத்தும் வந்தவிடத்து, இந்தத் தொடர்பு அற்று, "நீ யெங்கே, நானெங்கே" என்ற நிலைதான் ஆணவத்திற்கும் ஆன்மாவுக்கும் எஞ்சி நிற்கிறது. முந்தி ஏற்பட்டிருந்த உறவு - ஆன்மாவையே ஆணவம் விழுங்கி யிருந்த நிலை - அவ்வான்மா கிடைத்தற்கரிய அருளானந் தத்திலே தோய்ந்து முத்தியை அனுபவிக்கும்போது, இல்லாமற் போகிறது:

சோரா தெனை விழுங்கித் தோன்ருத ஆணவமே
நேராக நானெங்கே நீ எங்கே—தீராத
ஊனந் தனக்கடியாம் உன்னைப்போல் என்னைப்பேர்
ஆனந்தம் மேலிட்ட அன்று. (78)

அந்தமிலா ஆணவமே அன்றுமுதல் இன்றளவும்
வந்த உறவை மறந்தோமே—எந்தையருள்
ஆராத ஆனந்தத் தந்தத்தே எஞ்ஞான்றும்
வாராத முத்தி வர. (79)

இவ்விரு பாடல்களின் கருத்தை யெடுத்துப் பிற்காலப் புலவரொருவர் தமக்கும் வறுமைக்கும் உள்ள தொடர்பில் அமைத்திருக்கிருர். வறுமையால் மிகவும் துன்புற்ற ஒரு புலவர் காளத்தியப்பர் என்ற வள்ளலைக் கண்டு பரிசில் பெறும் நோக்கத்துடன் அவர் வாழ்ந்த நின்றை என்ற நின்றியூருக்குச்சென்ருர். "நாளைக் காலையில் நாம் காளத்தி யப்பனைக் காண்போம். கண்டு அவனிடத்தில் பரிசுபெறும் போது, பிறவி தொட்டு நம்மைப் பிடித்துத் துன்புறுத்தி வரும் இவ்வறுமை நோய் கழிந்தொழியும்" என்ற பெருமித உணர்ச்சி அவர் உள்ளத்திலே உதித்தது. அப்போது முதல் நாள் இரவு படுத்துறங்குமுன் இந்த எண்ணத் தோடு நல்குரவை விளித்து, "நல்குரவே, இன்றைக்கு மட்டும் நீ சற்று என்னேடு இரு. நாளை நீ இருக்கமாட் டாய் அல்லவா?" என்ற இரக்கத்தோடு பாடுகிருர்:

நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல்போல
நாளைக் கிருப்பையோ நல்குரவே !—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நானெங்கே
இன்றைக்குச் சற்றே இரு.

*குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ள வேண்டு மென்று திருமந்திரம் உபதேசிக்கிறது. மெய்த்தேசிகன் யாவன் என்று சிவானந்தமாலையும் ஓர் இலக்கணம் வகுக் கிறது:*

மந்திரப்பேய் புத்தகப்பேய் வாசனைப்பேய் பூசனைப்பேய்
தந்திரப்பேய் பாவகப்பேய் தர்க்கப்பேய்—சிந்தையினின்று
ஆர்த்தவிர தப்பேய் அனைத்துமொரு வார்த்தையிலே
தீர்த்தவனே மெய்த்தே சிகன்.

*"நாடிய சத்தி நிபாதம் நாலுபாதம்" என்ற சிவப்பிர காசம் 48 ஆம் திருவிருத்த உரையில் மதுரைச் சிவப்பிர காசர் சிவானந்தமாலைப் பாடலை எடுத்து உதாரணம் காட்டுதல் அறிந்து இன்புறத்தக்கது. நான்கும் முறையே வாழைத்தண்டு, பச்சை விறகு, உலர்ந்த விறகு, கரி என்ப வற்றுள் தீப்பற்றுவது போல என்பர் :*

நாலுவகைச் சத்தி நிபாதத்து நற்பருவம்
மூல குருவே மொழிஎனக்குக்—கோல
அரம்பைத்தண் டொண்பச்சைக் காட்ட முலர்காட்டம்
நிரம்புகரி நேரா நினை.

*இந்த நான்கு வகைச் சத்தி நிபாதமும் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்று மதுரைச் சிவப்பிரகாசர் கூறி இவற்றிற்கு அனுபோகமும் கூறுகிறார். முதலாவது கர்த்தா உண்டென்று அறிவது; இரண்டாவது அக்கர்த் தாவைப் பெறும் வழி யாது என்று ஆராய்வது; மூன்று பிரபஞ்சத்தை உவர்த்துப் புளியம் பழமும் தோடும் ஒத் திருப்பது; நான்கு ஆசாரியனே பொருள் என்று தான் அற*

நின்று வழிபடுகை. இவ்விளக்கத்தைச் சிவானந்த மாலை வேறு விதமாய்க் கூறும் :

**மந்ததரம் மெய்யாதி பொய்தோன்றல் மந்தம்கேள்**
**அந்தமிலா அச்சம் அவையறுத்தல்—பந்தமிகு**
**தீவ்ரங்கேள் மெய்ஞ்ஞானம் முன்னிரண்டுந் தீர்த்தெழுந்த**
**தீவ்ரதரம் மெய்வினையாத் தேர்.**

இவ்வகையான சாத்திர நுட்பங்கள் மிகப் பல உணர்வதற்கு இந்நூல் அருந்துணை யாயுள்ளது.

## சிற்றம்பல நாடி வெண்பா

சிற்றம்பலநாடி மாலை[1] என்றும் இது சொல்லப்பெறும். விநாயகர் வாழ்த்துடன் 66 வெண்பாக்கள் உடையது. எளிதாய இனிய பாடல்கள். மிகப்பல பாடல்கள் குருவான சிற்றம்பல நாடியை ஊரும் பெயரும் குறிப்பிட்டுச் சொல்கின்றன. 13, 4, 5, 14, 16, 41, 43, 55, 57, 58, 62 ஆகிய பாடல்கள் இவரைச் சொல்லவில்லை. 42 ஆம் பாடல் "ஆண்ட குருச் சிற்றம்பலவா" என்பது, முன் கூறியது போல, கண்ணப்பர் பாடியதாக வழங்கும். இந்தப் பன்னிரு பாடல்களையும் நீக்க, எஞ்சியுள்ளவையே சம்பந்த முனிவர் பாடிய சிற்றம்பல நாடிமாலை. பாடல்கள் முழுமையும் சித்தாந்த சாத்திரக் கருத்துத் ததும்புவன. ஆன்மாக்களில் தரம் குறைந்தோராகிய சகலருக்கு ஆண்டவன் மானிடச் சட்டை சாத்திக் குருவாக வந்து செய்யும் அருளையும் உபதேசத்தையும் இம்மாலை மிக்க சுவையோடு எடுத்தோதுகிறது. முற்கூறிய பாடல்களில் 14ஆம் பாடல் தத்துவப் பிரகாசன் என்று பெயர் கூறுகிறது. உண்மையைப் புலப்படுத்திய தம் குருவை ஆசிரியர் இவ்வாறு கூறுகிறார்.

---

1. சிற்றம்பல நாடி மாலை மறைஞான சம்பந்தர் (16 நூ.) செய்தது என்று சிலர் எழுதியது பொருந்தாது. 2. எமது பதிப்பு தத்துவப் பிரகாசம், முகவுரை பக்கம் 26, 27 பார்க்க.

என நாம் கருதுவதும் பொருத்தமாகும். 16 ஆம் பாடல் திருவேகம்பா என்று விளிக்கிறது. 55 ஆம் பாடல் மழபாடி மைந்தன் என்ற ஒருசீடனுக்கு முதல் உபதேசத்தால் பக்குவம் வராமையால், மீண்டும் ஒருமுறை உபதேசித்தமை கூறுகிறது. ஆசிரியர் சிற்றம்பல நாடியை இங்கு தோணிபுரத் தோன்றல், மெய்கண்ட நாதன் என்று கூறுவது (63, 48) அறியத்தக்கது. தோணிபுரத் தோன்றல் என்பது சிவானந்த மாலை 11 ஆம் பாடலில் வரும் தொடர்.

மதுரைச் சிவப்பிரகாசர் போன்ற பெரியார் இவ்வெண்பாக்களை எடுத்து மேற்கோள் காட்டுவதால் இதன் சிறப்பு நன்கு விளங்கும்.

## சிற்றம்பல நாடி தாலாட்டு

63 கண்ணிகள் கொண்ட ஒரு சிறு பிரபந்தம்; சாத்திரக் கொத்தில் காணப்படுகிறது. "நம்மாணை சும்மா இரு" என்ற தொடரால் (கண்ணி 11) இதுவும் சம்பந்த முனிவர் வாக்கு என்று முடிவு செய்கிறோம். அன்றியும், இந்நூல் சிற்றம்பல நாடி பெயரைப் பலமுறை குறிப்பிடுவதோடு, அவரை மெய்கண்டான் என்றும் கூறுகிறது. சிற்றம்பல நாடியின் ஊராக வேளை (வேளை நகர்) இருமுறையும், சீராசை என்ற ஊர் இருமுறையும் கூறப்பெற்றுள்ளன. இவ்விரு ஊர்களும் ஒருகால் நாடிகளுடைய பூர்வாசிரமத் தொடர்புடையன போலும். அவர் உபதேசம் பெற்றுத் திகழ்ந்தது சீகாழி ஆதலால், காழிச் சிற்றம்பல நாடிகள்; முடிவில் தங்கி முத்தியடைந்தது சித்தர்காடு, ஆதலால் சிற்றைக்கதிபதி. இவற்றால், வேளை, சீராசை சொல்லப் பெறுவது முரண் ஆகாது. வேளை அருகிலுள்ள புள்ளிருக்கு வேளூர் ஆதல் கூடும்.

இந்நூலில் ஆசிரியர் சித்தாந்த சாத்திரக் கருத்துக்களையும் தொடர்களையும் நிரம்பப் பெய்திருக்கிறார்.

வெண்பாவும் தாலாட்டும் ஒன்றையொன்று தொடர்ந்து வருகின்றன. எடுத்துக் காட்டாக ஒன்று காட்டுவோம்.

> பார்க்கிற் பரமசுகம் பாராவிடில் உலகாம்
> நீர்க்கிரதம் நின்ற நிலைபோல—ஏற்க
> உரைத்தான்சிற் றம்பலவன் ஒண்காழிக் கோமான்
> கரைத்தான் கரையாக் கனம்.

என்பது வெண்பா 54. இதனோடு தாலாட்டு 14 ஒப்பு நோக்குக.

> பார்க்கிற் சுகமதுவாய்ப் பாராவிடில் உலகாய்
> ஆர்க்கும் அளப்பரிய ஆனந்த வாரிதியே.

இவை போல்வன பல.

## சம்பந்த சரணலயர்

சிற்றம்பலநாடிகள் மாணக்கரான சம்பந்த முனிவரிடத்தில் இருந்த பல சீடருள் சம்பந்த சரணலயர் முக்கிய மாணக்கர். திருஞான சம்பந்தருக்குத் தாயுடன் பிறந்த மாமன் ஒருவர் அவருடைய தலயாத்திரையில் உடன் வந்தார் என்றும், புத்த மங்கையில் வாதிட்ட புத்த நந்தியின் தலையில் இடி விழுமாறு செய்தார் என்றும் சம்பந்தர் வரலாற்றால் நாம் அறிவோம். இவர் சம்பந்தரையே குருவாகக் கருதியமையால் சம்பந்த சரணலயர் என்று பெயர் பெற்றார். இந்த மரபை யொட்டியே சம்பந்த முனிவரும் தம்மிடம் சீடராய் உபதேசம் பெற்ற முதல் மாணக்கருக்கு, சம்பந்த சரணலயர் என்று தீட்சா நாமம் அளித்தார் என்று நாம் அறிகிறோம்.

சம்பந்த சரணலயரிடத்தில் ஒரு மாணக்கர் கல்வி பயின்று வந்தார். இவர் செய்த நூல் **திருநெறி விளக்கம்** என்பது. இதனுள் பின்வரும் பாடலால் சம்பந்த சரணலயரைத் துதிக்கின்றார்:

எம்பந்த பாசமறக் காழி வந்த
 என்துணைவன் எழுதுமறை எழுதும் பேறு
நம்பன்தன் அருளதனாற் பெற்ற ஞான
 நன்முனிதத் துவவிளக்கம் நவின்ற நாவன்
வம்பின்கட் கதறிவரும் புத்த நந்தி
 மௌலியினில் இடிவிழவண் தமிழ்நூல் பாடும்
சம்பந்த சரணாலயன்தன் பாதம்
 சந்ததமும் நைந்துருகிச் சிந்தை செய்வாம்.

*இப்பாடலில் குறிக்கப்பட்ட பொருள்கள் இரண்டு. ஒன்று, சீகாழி சம்பந்த சரணாலயருக்கு வணக்கம், மற்றது இவர் தத்துவ விளக்கம் பாடினார் என்பது. சீகாழி என்ற மாத்திரத்தில் பின் வந்தோர் அனைவரும் திருஞான சம்பந்தராகப் பரம்பொருளே வந்தார் என்றும் கருதிப் பாடிய பாடல்கள் பல. இது சைவ மரபே யாகும். இம்மரபை யொட்டியே, குரு ஆவார் சம்பந்த சரணாலயர் என்ற மாத்திரத்தில், இவரே சம்பந்தருக்கு மாமன், அற்புதங்கள் செய்தவர் என்றெல்லாம் புகழ்ந்துரைப்பது இலக்கிய மரபும் சைவ சமய மரபும் ஆகும். ஆகவே, இவரே தத்துவ விளக்கம் செய்தார் என்பது, உபசாரமாகச் சொல்லப்பட்ட சொல்லத்தனையேயன்றி, இதைக் கொண்டு ஏழாம் நூற்றாண்டில் இருந்த சம்பந்த சரணாலயர் இந்நூல் செய்தார் என்று முடிவு கட்டுவது பொருந்தாது; இவ்வாறு சிலர் கூறி இருப்பது பொருந்தாத கருத்து. பின்வந்த நூலாசிரியர் அப்பெயரைத் தரித்திருந்தார் என்ற அளவுக்கே இது பொருந்துவதாகும்.*

**தத்துவ விளக்கம் :** *இது 51 கட்டளைக் கலித்துறைகள் கொண்ட சிறு நூல். ஆசிரியர் இந்த நூலில் பாடல் தோறும் திருஞான சம்பந்தரைக் குறிப்பிடுகின்றார். சம்பந்தரை எப்போதும் குறிப்பிடுபவர் கண்ணுடைய வள்ளல் ஆனமையால், இந்நூல் கண்ணுடைய வள்ளல் செய்தார் என்று இதுவரை எல்லோருக்கும் கூறிவந்திருக்கிறார்கள்.*

இக் கருத்து பொருந்தாது. முற்காட்டிய பாடலில் "**தத்துவ விளக்கம்** நவின்ற நாவன் சம்பந்த சரணலயன்" என்று வருவதால், இந்நூலை இவர் பாடினர் என்று கூறுவதே பொருத்தமாகும். (எனினும், இரண்டு கருத்துக்குமுள்ள தொடர்பு பின்னர் விளக்கப் பெறும்.)

15 ஆம் நூற்றண்டின் இறுதியில் வாழ்ந்த களந்தை ஞானப் பிரகாச பண்டாரம் என்பவர் செய்த சந்தான அகவல் என்ற ஓர் அகவற்பாவில், முத்தியில் சிவனுக்கும், ஆன்மாவுக்கும் பேதம் காட்ட வேண்டி, அகோர சிவாசாரியர் செய்த சர்வ ஞானேத்தர விருத்தி, அருணந்தியின் சிவஞான சித்தி, உமாபதியின் சிவப்பிரகாசம் ஆகிய நூற்பாடல்களைக் குறிப்பிடுமிடத்து, அடுத்துத் தத்துவ விளக்கப் பாடலைக் கூறுகிறர்:

> 'இல்லாதன பிறந்து' என்னும் பாட்டின்
> நல்லசம் பந்தசர ணலயன் உரைத்தனன்

என்று எடுத்துக் காட்டுகிறர். இது தத்துவ விளக்கம் 49ஆம் பாடல். இதனலும், தத்துவ விளக்கம் செய்தவர் சம்பந்த சரணலயரே என்பது திட்டமாகப் பெறப்படுகின்றது.

இந்நூலுக்கு ஆசிரியர் வைத்த பெயர் **தத்துவ விளக்கம்** என்பது. மூன்றும் பாடலில், 'பெருமான் திருவாய் மலர்ந்த சிவாகமம் கற்பது வடசொல் அறிந்தவருக்கே எளிது. வடசொல் அறியாதவர்களுக்காக நான் இந்த நூலைத் தமிழில் செய்கிறேன்' என்று இவர் கூறுகிறர்:

> சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமம் கற்று
> ஆராய்வது வடசொற் பயின்றர்க்கெளிது அம்மொழியைச்
> சாரா தவரும் அத்தத்துவ ஞானம் தலைப்படுதற்கு
> ஏரார் தமிழ்ச் செய்யு ளால் மயல் தீர எழுதுவனே

என்பது அப்பாடல். (பிழையாக இதை அருணந்தி பாடல் என்று எழுதினவரும் உண்டு.)

இந்நூல் அந்தாதித் தொடையாய் மண்டலித்து வருவது. சாத்திர உரையாசிரியர் அனைவரும் இந்நூலைப் பிரமாண நூலாக எடுத்துக் காட்டுவார்கள். இந்நூலானது **உண்மை விளக்கம்** போலத் தத்துவங்களின் தோற்ற ஒடுக்கங்களைத் தெளிவாகக் கூறுகிறது.

இந்நூலை மேற்கோளாக எடுத்துக் காட்டினவர்கள் மதுரைச் சிவப்பிரகாசர், பெருந்திரட்டுத் தொகுத்த தத்துவ ராயர், வெள்ளியம்பலவாணத் தம்பிரான், சித்தியார் உரையில் மறைஞான சம்பந்தர், நிரம்ப அழகிய தேசிகர் ஆகியோர். மதுரைச் சிவப்பிரகாசர் சிறந்த சைவ சித்தாந்தப் பேராசிரியர். சித்தாந்த நூல்களையன்றி பிற நூல்களை அவர் ஆளமாட்டார். இந்நூலை அவர் எடுத்துக் காட்டுவதால் இது சிறந்த சைவ சித்தாந்த நூல் என்பது அவர் கருத்தாகிறது. காழிக் கண்ணுடைய வள்ளல் செய்த நூல்களில் மிகவும் விரிவானது, சிறப்பானது **ஒழிவில் ஒடுக்கம்.** கண்ணுடைய வள்ளல் ஐக்கியவாத சைவர் என்பது ஆன்றோர் கருத்து. இவர் கொள்கை சித்தாந்தத்துக்கு உடன்பாடன்று. எனவேதான், இவ்வள்ளல் எவ்வளவு கற்றவராயிருந்தும் சிறந்த ஆசாரியராயிருந்தும், இவர் நூலைச் சிவப்பிரகாசர் தொடவில்லை.

ஆனால், பொதுவாக கண்ணுடைய வள்ளலே இதைச் செய்தார் என்ற கருத்து நெடுங்காலமாக உலவுகிறது. திருநெறி விளக்க ஆசிரியரோ, சம்பந்த சரணலையர் **தத்துவ விளக்கம்** செய்தார் என்று குறிப்பிடுகிறார். இவ் வேற்றுமையை ஒற்றுமைப்படுத்த நமக்கு ஒரு குறிப்பும் கிடைக்கிறது. முதலாவது நாட்டில் வழங்கும் கதை. வள்ளலாதீனத்தவர்கள் இரண்டு கைகளிலும் திருநீற்றைத் திரிபுண்டரமாக இட்டு உடனே அழித்து விடுவது வழக்கம் என்று சொல்லுவார்கள். இதற்குச் சிற்றம்பலநாடிகள் வரலாற்றில் ஓர் ஆதரவையும் கண்டோம். புலவர் புராணமுடையார் கண்ணுடைய வள்ளல் என்பவர் தமக்கு மூத்தவராய்த்

தமக்கு தீட்சை செய்வித்த ஆசாரியரிடம் கோபித்துக் கொண்டு, அவர் உபதேசத்தையும் கைவிட்டு, தம் கைகளி லிருந்த திருநீற்றுக் குறிகளையும் அழித்து விட்டுச் சென்ருர் என்று கூறுகிருர். இவ்வள்ளல் ஆதீன சம்பிரதாயத்துக்கு இது ஒருபுடை ஒத்திருக்கிறது. இந்த அளவுக்கு மட்டும் இக் கதைப் பகுதி உண்மையாயிருக்கக்கூடும்.

**திருநெறி விளக்கமுடையார்** தம் ஞான குருவாக இவருக்கு வணக்கம் சொல்லுகிருர். முன்னமே கூறிய வாறு சம்பந்த சரணுலயரை (9) அவர் முதலில் வணங்கு கிருர். ஆனல் அடுத்து 11 ஆம் பாடலில் தேவாரத் திரட்டை "தென்பொதியில் திருமுனிபால் பெற்ற எங்கள் சிவாலய மாமுனி பாதம் சிந்தை செய்வாம்" என்று கூறுகிருர். இவ் வாறு சிறந்த சித்தாந்தியாகிய திருநெறி விளக்க ஆசிரியர் இரு குருமாரைக் கொண்டதில் ஒரு பொருள் இருக்க வேண்டும். ஒருவாறு நாம் இதை யூகிக்க முடியும். சம்பந்த முனிவருடைய மாணக்கரான சம்பந்த சரணுலயரிடம் திரு நெறி விளக்க ஆசிரியர் உபதேசம் பெற்ருர். அந்த நிலை யில் சம்பந்த முனிவர் காலமானுர். சரணுலயரும் காலத்தின் கோளாற்ருல் தாம் கைக்கொண்டிருந்த சித்தாந்த நெறி யைக் கைவிட்டார். சுழித்து, அடித்து, ஆர்த்து, மிண்டிய மாயாவாதம் என்னும் சண்ட மாருதம் அவரைக் கலக் கிற்று. முத்தி நிலையில் சிவத்தோடு ஆன்மா இரண்டறக் கலக்கிறது என்ற கொள்கையை இவர் கை விட்டு, ஆன்மா சிவத்தோடு ஒன்ருகிறது என்று இவர் கூறலானுர். சிறப்பு வாய்ந்த ஞானசிரியராக இருந்த இவருக்கு, பேச் சால் எதுவும் நிறுவுதல் சாத்தியம். ஆனல் இவர் மாணக் கருக்கு இது ஏற்புடையதாயில்லை. ஒரு நெறியில் சென்ற தாம் நெறி பிறழ்தல் தகாது என்று அவர் கருதினர் போலும்.

இந்த நிலையில் சரணுலயர் வள்ளல் ஆதீனம் என்ற ஒரு புது மரபைத் தாமாகவே ஏற்படுத்தினுர். அப்போது

திருநெறி விளக்கமுடையார் அவரை விட்டுப் பிரிந்தார். அச்சமயம் தென்னுட்டில், பொதிய முனியின் அருளால் சிவாலய முனி என்பவருக்குத் தேவாரம் தொகுத்துக் கொடுக்கப் பெற்ற செய்தி பரவியிருந்தது. அவரைத் திருவருள் விளக்கம் பெற்ற ஆசாரியர் என்று கருதி, திருநெறி விளக்கக்காரர் அவரை யடுத்துத் தம்முடைய ஞான வாழ்வை நடத்தி வந்தார். எனவே, தாம் சிவப்பிரகாசத்தில் ஈடுபட்டு அச்சாத்திரக் கருத்தை மேலும் திருநெறி விளக்கம் என்ற பெயரால் ஒரு புது நூலாக எழுத இவ்வாசிரியர் முற்பட்டபோது, தம்முடைய பண்டைய ஞானசாரியராகிய சம்பந்த சரணுலயரை மறக்க முடியவில்லை. புதிய பெயர் தாங்கிய கண்ணுடைய வள்ளலை அவர் நினைத்தபோது, சம்பந்த சரணுலயர் என்ற அவருடைய பழைய நினைவும் சிறப்பும், முழுமையும் அவருக்கு மனக்கண் முன் வந்து நின்றன. ஆகவேதான் அவர் இந்தக் குருவை பழைய சம்பந்த சரணுலயராகவே கொண்டு, மிகவும் சிறப்பாகக் குரு வணக்கம் பாடினர்.

இப்பெரியார் சம்பந்த சரணுலயராக இத்தத்துவ விளக்கம் ஒன்றுதான் பாடியதாக நாம் அறிகிறோம். கண்ணுடைய வள்ளல் என்ற பெயரில் இவர் தனி ஆசாரியர் ஆகிவிட்டபடியால் அந்த வரலாற்றை இனித் தனியாகவே பார்ப்போம். வள்ளல் மரபு ஏற்படுத்திய பின் இவர் செய்த நூல்கள் பல. (15 ஆம் நூற்றுண்டு வரலாறு பார்க்க.)

(இவ்வாறு கொள்கையை மாற்றிக்கொண்டு, வேறு மரபில் ஆசாரியராக இருப்பதை பிந்திய நூற்றுண்டில் திருவாவடுதுறையிலிருந்து வேலூர் சென்று பின் துறையூர் வீர சைவ மடத்தை நிறுவிய சிவப்பிரகாசர் வரலாற்றுலும் நாம் அறிகிறோம். காலம 17 ஆம் நூற்றுண்டு.)

[பதிப்பு. சென்ற நூற்றுண்டின் இறுதியில் செந்தி நாதையர் பதிப்பு வெளிவந்தது. பின்னர் செந்தமிழ்ச் செல்வி இதழில் ஒருபகுதி (23 பாட்டு) வெளியாயிற்று. அதன் பின்னர், சித்தாந்த இதழில் மேற்கோள் குறிப்புக் களோடு சித்தாந்தம் 1959, தொகுதி 32, பக்கம் 97-107) வெளியாயிற்று.]

அத்தியாயம் 8

# சைவ இலக்கியம்-4 பிற சைவ ஆசிரியர்

## முன்னுரை

இதுவரை கூறிய வரலாறுகள் மெய்கண்டாருக்குப் பின் சைவசித்தாந்த ஞானபரம்பரை எவ்வாறு வளர்ந்து வந்தது என்பதைத் தெளிவுபடுத்தும். இவ்வகைத் தெளிவுடைய பரம்பரையல்லாத முறையில் சில ஆசிரியர்கள் இக்காலத்தில் இருந்தார்கள், சில நூல்கள் எழுந்தன என்றும் அறிகிறோம். இவர்களை இங்கு நாம் ஆராய்வோம். சிவாலய முனிவர் என்ற அடியவர் வாழ்ந்து, பொதிகை யடைந்து அகத்திய முனிவரைக் குறையிரந்து, தேவாரத்தைச் சுருக்கித் தரப்பெற்றார் என்ற வரலாறு இக் காலத்தே எழுந்தது. சிவார்ச்சனை போதம் மெய்ஞ்ஞான விளக்கம் என்ற இரு சித்தாந்த நூல்கள் முழுமையும் கிடைக்கவில்லை; கிடைக்காமையால் இவற்றின் பரம்பரை விளங்கவில்லை. வடமொழியில் 'உத்தரம்' என்ற முடிபுடைய காலோத்தரம் ஞானோத்தரம் என்ற நூல்கள் மிகப் பல தோன்றியிருந்தன; உபாகமங்கள் வரிசையில் சேர்ந்துள்ளன. இவற்றுள் தேவிகாலோத்தரம் சர்வஞானோத்தரம் என இரு நூல்கள் தமிழில் பழமையாகவே வழங்குகின்றன. இவை இங்கு ஆராயப்பெறும். பூரணமாய்ச் சைவ சித்தாந்தம் அல்லாத சைவநூல்களும் இக்காலத்தே தோன்றத் தொடங்குகின்றன. அவற்றுட் சிலவும் இவ் வத்தியாயத்துட் காண்போம்.

வேறுபல சைவ நூல்களின் பெயர்கள் நமக்குத் தெரிய வருகின்றன. பல பண்டைக் காலத்தேயே இருந்தன போலும். பாடல்களோ ஆசிரியரோ தெரியவராமையால் அவைபற்றி இங்கு ஒன்றும் கூறுவதற்கில்லை.

## குறுமுனியடிகள்

சிவாலய முனிவருக்காக, பொதிகையிலிருந்த அகத்திய முனிவர், அடங்கன்முறை முழுமையும் தினசரி பாராயணம் செய்வது அருமையாக இருத்தல்பற்றி, அதை இருபத்தைந்து பதிகங்களாகச் சுருக்கி அவற்றின் கருத்தையும் தொகுத்து உரைத்தார் என்பது வரலாறு. இவ்வரலாற்றின் விளக்கத்தை அடுத்துவரும் சிவாலய முனிவர் வரலாற்றில் நன்கு காணலாம். அகத்தியர் பலர் பலவேறு காலங்களில் இருந்தனர் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். எங்ஙனமாயினும், சிவாலய முனிவர் காலத்தில் பொதிகை மலையில் பெரியார் ஒருவர் வாழ்ந்தார், அவர் தேவாரங்களைத் தொகுத்தார் என்பது உண்மை.

" இனி, திருமெய்ஞ்ஞானத் திருநெறித் தமிழாகிய தேவாரத்துக்குக் குறுமுனியடிகள் சிவாலய மகாமுனிக்கு 'குருவுருவம்' முதலாக வகைப் பொருளாக அகத்தியத் திரட்டென்று இருபத்தைந்து பதிகங்கள் திருவுளம்பற்றினார்கள்" என்று காழித் தாண்டவராயர் தாம் எழுதிய திருவாசக அனுபூதியுரையில் குறிப்பிடுகிறார். இதனால், பொதிகையில் வாழ்ந்து தேவாரத் திரட்டுத் திரட்டியவர் பெயர் குறுமுனி அடிகள் என்பதும், தம் திரட்டுக்கு அகத்தியத்திரட்டு என்று அவர் பெயர் வைத்தார் என்பதும் விளங்குகின்றன.

இப் பெரியாரே திருவாசகக் கருத்தைத் தொகுத்து, திருவாசகத் திருவுள்ளக்கிடை என்று பெயர் வைத்தார்; இது அகத்தியர் திருவுள்ளக்கிடை என வழங்குகிறது.

இதுவும் சிவாலய முனிவருக்காகவே செய்யப் பெற்றிருத்தல் கூடும். திருவாசகப் பதிகம் ஒவ்வொன்றின் தலைப்பிலும் அப்பதிகத்தின் கருத்தாக ஒரு தொடர் பெய்யப் பெற்றிருப்பதை அச்சிட்ட புத்தகங்களில் காணலாம்: அத்தொடரைவிட, இத்திருவுள்ளக்கிடையே பதிகத்தின் கருத்துக்கு மிக்க பொருத்தமுடையதா யிருக்கிறது.

ஆத்திசூடித் திறவுகோல் என்ற ஒரு சிறுநூல் குறுமுனியடிகள்[1] செய்ததாக வெளியிடப்பட்டுள்ளது. ஆத்திசூடி, அறஞ்செய விரும்பு தொடங்கி, அஃகம் சுருக்கேல் வரையுள்ள 13 வரிகளும் 13 விருத்தப்பாக்களில் அமைய இந்நூல் செய்யப்பட்டுள்ளது. நடை மிகவும் சாமானிய நடை; யோகம் மந்திர தந்திரங்களைக் கூறுகிறது. நாம் இங்குக் கருதுகின்ற குறுமுனி இதைச் செய்தாரா என்பது சொல்ல முடியவில்லை. தேவாரத்திரட்டு தொகுக்கவும் திருவாசகத் திருவுள்ளக்கிடை உணர்த்தவும் பக்குவம் பெற்றிருந்த குறுமுனியடிகள் இந்நூல் செய்தாரென்பது பொருந்தாது. அப்பெயர் தரித்த பிற்காலத்தாரொருவர் செய்ததாகலாம்.

## சிவாலய முனிவர்

தேவாரப் பதிகங்களின் தொகுப்பு அடங்கன்முறை எனப்படும். இவற்றிலிருந்து திரட்டப்பட்ட ஒரு சிறு திரட்டை உமாபதி சிவாசாரியர் வரலாற்றில் கண்டோம். ஏறக்குறைய அதே காலத்தில் மற்றொரு திரட்டுத் திரட்டப் பெற்றிருந்தது. இது அகத்தியர் தேவாரத் திரட்டு என்று பெயர்பெறும். பல ஏட்டுப்பிரதிகளில் இத்திரட்டு காணப் படுகிறது.

---

1. காசிமடம் வெளியீடான இப்புத்தகத்தில் குருமுனி என்று அச்சிட்டிருப்பது பிழையாதல் வேண்டும்; வேறுபல தொடர்புகளாலும் பொருளமைதியாலும் குறுமுனி என்று இப்பெயர் இருத்தலே பொருத்தம்.

அருட்பா என்ற பெயரால் ஆறுமுக நாவலரவர்கள் சென்ற நூற்றாண்டில் அகத்தியர் தேவாரத்திரட்டு, திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணச் செய்யுட்டிரட்டு[1] ஆகிய ஐந்தையும் ஒரு தொகுப்பாகப் பதிப்பித்தார். இதன் தொடக்கத்தில் அகத்தியர் தேவாரத் திரட்டு தோன்றிய பழைய வரலாற்றை அவர் குறிப்பிட்டிருக்கிறார். அது பின்வருவதாகும்.

"கல்வி யறிவொழுக்கங்களில் சிறப்புற்று விளங்கிய சிவாலய முனிவர் அவ்வடங்கன் முறையினது மகிமையையும் அதனை நாடோறும் விதிப்படி சிரத்தையோடு பாராயணம் செய்யின் முத்தி சித்திக்கும் என்பதனையும் அறிந்து, தாம் அப்படிப் பாராயணம் செய்ய ஆசைகொண்டார். அது நிறைவேறுதல் கூடாமையால் வருத்தமுற்று, சிதம்பரத்தையடைந்து ஆனந்தத்தாண்டவம் செய்தருளும் சபாநாதரை வணங்கித் தமது கருத்து முற்றும் பொருட்டு நெடுங்காலம் அருந்தவம் செய்தார். அப்பொழுது சபாநாதருடைய திருவருளினாலே, "சிவாலய முனிவனே, நீ பொதியமலையில் இருக்கின்ற அகத்திய முனிவனிடத்தே போவாயாயின் உன் கருத்து நிறைவேறும்" என்று ஓர் அசரீரி வாக்குத் தோன்றிற்று. அது கேட்ட சிவாலய முனிவர் மனமகிழ்ந்து, சபாநாதரை வணங்கி, விடைபெற்றுக் கொண்டு சென்று பொதிய மலையை அடைந்து, அகத்திய மகாமுனிவரைச் சந்திக்க, மூன்று வருடகாலம் அருந்தவஞ் செய்தார். அகத்திய மகாமுனிவர் அவருக்கு வெளிப்பட்டு, அடங்கன்முறை முழுவதையும் அவருக்கு உபதேசித்து, அதனின்றும் குருவடிவம், விபூதி, பஞ்சாக்கரம், கோயிற்றிறம்,

1. தேவாரம் முதலான இவ்வைந்தும் பிற்காலத்தில் பஞ்சபுராணம் என்ற பெயரால் சிவபெருமான் சந்நிதியில் ஓதுவாமூர்த்திகள் திருப்பதிகம் விண்ணப்பிக்கும் மரபு ஏற்பட்டிருக்கிறது. இராமலிங்க சுவாமி பாடல்களுக்கு அருட்பா என்ற பெயர் பொருந்தாது என்று நாவலர் கருதியமையால் இப் 'போலியருட்பா'வுக்கு மாறாக, மெய்-அருட்பா யாதென்று காட்ட இத்தொகுப்பு வெளியிட்டார் போலும்.

சிவரூபம், திருவடி, அருச்சனை, அடிமை என்பவைகளின் உண்மைகளைத் தெரிக்கா நிற்கும் இருபத்தைந்து திருப்பதி கங்களை எடுத்துத் திரட்டி, 'இவைகளை நாடோறும் பாராயணஞ் செய்பவர்கள் அடங்கன்முறை முழுதையும் பாராயணஞ் செய்பவர்களாவார்கள்' என்று திருவாய் மலர்ந்து, மறைந்தருளினர். சிவாலயமுனிவர் அப்படியே இவ்விருபத்தைந்து திருப்பதிகங்களையும் நெடுங்காலம் பாராயணஞ்செய்து சிவபெருமானுடைய திருவருளைப் பெற்ருர்.''

குருவுருவும் வெண்ணீறு எழுத்தஞ்சும் கோயில்
அரனுருவும் என்தலை மேலாக்கும்—திருவடியும்
சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்று
இட்டார் அகத்தியனுர் எட்டு.

இவ்வாறு திரட்டுத் தொகுக்கப்பட்ட செய்தியையும், இப்பாடல் திரட்டின் பொருளையும் சொல்கிற இப்பாடல் கூறுகிற எட்டு நிலைகளும் - குருவருள், வெண்ணீறு. அஞ் செழுத்து, கோயில், அரனுருவு, திருவடி, அர்ச்சனை, தொண்டு என்ற எட்டும் - சீவன் முத்தர்நிலை என்றும் சொல்லப் பெறும்.

இவ்வரலாறே யன்றி திருவாசகவுரை எழுதிய காழித் தாண்டவராயர், "திருமெய்ஞ்ஞானத் திருநெறித் தமி ழாகிய தேவாரத்துக்குக் குறுமுனி அடிகள் சிவாலய மாமு னிக்கு குருவுருவு முதலாக வகைப்பொருளாக அகத்தியத் திரட்டு என்று 25 பதிகங்கள் திருவுளம் பற்றினர்கள்" என்று கூறுவதும் இங்கு அறியத்தக்கது.

அகத்தியர் தேவாரத் திரட்டைப்பற்றிய கதை ஐதிகக் கதை என்ற எண்ணமே இதுவரையில் இருந்து வந்தது. ஆனல் திருநெறி விளக்கம் என்ற நூலால் இது உண்மை யான வரலாறு என்பது புலப்படுகிறது. திருநெறி விளக்க மானது மதுரைச் சிவப்பிரகாசர் மேற்கோள் காட்டுகின்ற

*ஒரு சித்தாந்த சாத்திரநூல். அதன் காலம் 1400-1425 என்று திட்டமாகத் தெரிகின்றது.*

*திருநெறி விளக்கம் பாடிய ஆசிரியர் சிவாலய முனிவருக்குக் குரு வணக்கம் கூறுகிறார் :*

அன்புநிறை குருவுருவும் நீறும் உண்மை
    அஞ்செழுத்தும் ஆலயமும் அறிவுக் கெட்டா
இன்பமிகும் சிவனுருவும் சென்னி மீதே
    இருந்து மலர்ச்சேவடியும் இறைவன் தன்னைத்
துன்பமற அர்ச்சிக்கும் தொழிலும் தொண்டர்
    தொண்டரடித் தொண்டனெனும் தொண்டில் வீடும்
தென்பொதியில் திருமுனிபாற் பெற்ற எங்கள்
    சிவாலயமா முனிபாதம் சிந்தை செய்வாம்.

*இங்கு இந்நூலாசிரியர் சிவாலய மாமுனிவரைக் குறிப்பிடுவதோடு, அவர் தென் பொதியில் குறுமுனிபால் தேவாரத்திரட்டையும் பெற்றுக்கொண்டார், அத்திரட்டின் கருத்து மேற்கூறிய எட்டும் என்றும் கூறுகின்றார். எனவே, சிவாலயமுனிவர் என்ற பெரியார் முன் குறித்த காலத்துக்கு முன்னதாக வாழ்ந்தார். அவர் பொதியிலிலிருந்த குறுமுனியின் மாணக்கர். அவர் தேவாரத் திரட்டைப் பெற்றார் என்று நாம் அறிகிறோம்.*

*பொதியிலில் வாழ்ந்தவர் குறுமுனி அடிகள் என்று தாண்டவராயர் கூறுகின்றார். திருநெறி விளக்கமும் அப்படியே கூறுகின்றது. ஆகவே பொதியிலில் இருப்பவர் அகத்தியர் என்பது தமிழ் மரபு ஆதலால், குறுமுனி அடிகள் அகத்தியரே என்று பிற்காலத்தில் எண்ணிவிட்டார்கள் போலும். பொதிகையில் தேவாரம் வல்ல அனுபூதிமானான பெரியவர் ஒருவர் வாழ்ந்தார், அவர் சிவாலய முனிவரின் குரு, பொதிகை வாசம் காரணமாக அவரைப் பின் வந்தோர் அகத்தியர் என்றே கருதி விட்டார்கள் என்ற அளவுக்கு இவ் வரலாறு உண்மையேயாகும்.*

*பின்வரும் ஆசிரியப்பா 25 தேவாரப் பதிகங்களின் முதல் குறிப்பையும் கருத்தையும் கூறுகிறது. 'அகத்திய முனிவன் சிவாலய முனிவனுக்கு அகத்தியத் திரட்டினை அருள் செய்தனன்' என்ற செய்தியை இங்குக் காண்கிறோம்.*

தோடு கூற்றுப் பித்தா மூன்றும்
பீடுடைத் தேசிகன் பேரருளாகும்.
நீற்றுப் பதிகம் நிகழ்த்துங்காலை
மாற்றுப் பறையின் வரலாறாகும்.
துஞ்சல் காதல் சொற்றுணை மற்றும்
அஞ்செழுத் துண்மை யருளிய தாகும்.
ஆரூர் தில்லை காட்டூர் மூன்றும்
சீரார் கோயில் திறமையதாகும்.
ஒருரு வரிய பாளை வடிவே
மருவா ரென்ற வண்டமிழ் ஐந்தும்
திருவார் மேனிச் செய்திய தாகும்.
பொடியுடை அரவணை அந்த ணாளன்
அடியிணை தந்த அருளே யாகும்.
பந்து வேற்று கொன்றிவை மூன்றும்
நந்தலில் அருச்சனை நாட்டிய தாகும்.
வேய்குலந் தில்லை யெனுமிவை மூன்றும்
நாயனு மடிமையும் நாட்டியதாகும்.
இப்பரி சகத்திய முனிவன் இருநிலத்திது
ஒப்பரும் மூவர் ஓது தேவாரம்
முழுதையும் சிவாலய முனிக்கறி வித்துப்
பழுதிலா அவையுட் பரிந்தெடுத் திருபத்து
ஐந்துயர் பதிகமும் அறிவுறத் திரட்டி
எண்ணரும் அடங்கல் யாவையும் உணரும்
புண்ணியம் இவைகொடு பொருந்தும் என்றவன்
தனக்கருள் செய்தனன் தகவுற அதனால்
தீதலா அகத்தியத் திரட்டினை உலகில்
ஓதினர் அடங்கலும் ஓதினர் ஆவரே.

இனி இதே பெரியார் திருவாசகப் பதிகங்களுக்குக் கருத்துரை செய்தார் என்றும், அதையும் சிவாலய முனிவருக்காகவே செய்தார் என்றும் நாம் யூகிக்க இடமிருக்கிறது.

அகத்தியர் திருவுள்ளக்கிடை என்ற பெயரில் 109 வரிகள் உடைய ஆசிரியப்பா ஒன்று ஏட்டுப் பிரதிகளில் இருப்பதைக் கண்டு காலம் சென்ற அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் அதை ஒரு திருவாசகப் பதிப்பில் வெளியிடச் செய்தார்கள். இத் திருவுள்ளக் கிடையானது ஒவ்வொரு பதிகத்துக்கும் உரிய கருத்தைத் தலைப்பாக எடுத்துக் கூறுகின்றது. இத்தலைப்பே இன்று சம்பிரதாயமாக அச்சாகியுள்ள திருவாசகப் பதிப்புக்களில் காணப்படுகிறது. திருவாசக அனுபூதியுரை எழுதிய காழித் தாண்டவராயர் இத்திருவுள்ளக் கிடையை எடுத்து அகத்தியர் அனுபவச் சூத்திரம் என்ற பெயரில் ஒவ்வொரு பதிகத்தின் தலைப்பிலும் அமைத்திருக்கிருர்.

இத்திருவுள்ளக் கிடைக்கும் முற்கூறிய "தோடு கூற்று" என்ற அகவலுக்கும் நிரம்பிய ஒற்றுமை காணப்படுகிறது. அது எவ்வாறு பதிகக் கருத்தோ அதே போல இதுவும் பதிகக் கருத்து. இறுதி மூன்று பதிகக் கருத்துக் களை எடுத்துக் காட்டாக இங்கும் பார்க்கலாம்.

கருப்படை மாறும் திருப்படை யாட்சி
பரசிவ உபாதி பாவகம் ஒழித்தல்.
மின்னே ரனைய விரிபா மாலை
மன்னு நின்செயல் வழக்கழி வென்றது.
நிச்சய முணர்த்தும் அச்சோப் பத்து
அனுபவம் வந்த வழியறி யாமை.

மேலும், இதன் பின்னுள்ள வரிகள் அகத்தியர் இத்திருவுள்ளக் கிடையைத் தொகுத்தார் என்று கூறுகின்றன.

ஆணிப் பொன்னூர் மிளிர் அணிமதில் தில்லையுள்
அழகிய திருச்சிற் றம்பல முடையார்
எழுதிய திருவா சகத்தனு பூதியை
மிகத் தரு ஞான விநோத குகருடி
அகத்துணர் ஞான அகத்தியன் தொகுத்தனன்
செகத்தறிவு டையோர் தெளிதரற் பொருட்டே.

*இதனுல், இது திருவாசகத் தனுபூதி, இதை அகத்தியர் தொகுத்தார் என்று ஏற்படுகிறது. மிகப் பழமையான திரு வாசக ஏடுகளிலும் இக் கருத்துரையின் திருவுள்ளக்கிடை காணப்படுகிறது. தேவாரத் திரட்டுத் தொகுத்துக் கருத் துரை செய்த அகத்தியர் என்னும் குறுமுனி அடிகளே இவ்வாறு ஒரு கருத்துரை தொகுத்தவர் என்றும், இரண் டும் சிவாலய முனிவருக்காகத் தொகுக்கப் பெற்றன என் றும் நாம் கருதுவது தவருகாது.*

## சிவார்ச்சஞ போதம்

*சிவப்பிரகாசத்துக்கு மதுரைச் சிவப்பிரகாசர் எழு திய பேருரையானது மிகப் பெரிய சைவ சித்தாந்தக் கருவூலமாயுள்ளது. அதிலிருந்து கிடைக்கின்ற சைவ சித் தாந்த நூற் செய்திகள் பல. சிவார்ச்சஞ போதம் என்ற நூலை அவர் குறிப்பிடுகின்றூர். விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் என்ற மூவகை உயிர்களுக்கும் இறைவன் அருள் புரிகின்ற முறையைக் கூறுகிற "மூவகை ஆருயிர் வர்க்கம்" என்ற சிவப்பிரகாசம் எட்டாம் பாடலின் உரை யில் இவ்வுரைகாரர் விளக்கம் எழுதும் போது, முதலில் சிவஞான சித்தியார் திருவிருத்தம் ஒன்றை எழுதி, அடுத் துச் சிவார்ச்சஞ போதப் பாடலைக் கூறுகின்றூர். கூறும் முதல் பாடல் பின் வருமாறு :*

வைத்தமலம் மலங்கன்மம் மலங்கன்மம் மாயை
  மருவுவிஞ் ஞான கலர் பிரளயாகலர் சகலர்
இத்தகைமை யிவர்க்கீசன் இவையகல அருளால்
  இயற்றுவதோர் செய்தி இரண் டாகும் தீவிரநற்

சத்தியினுல் முன்னிருவர்க் காசான் மூர்த்தி
தரியாதே தான் பண்ணும் நிராதாரந் தரித்து
வித்தகமாம் மந்தத்தீ விரத்தாற் பின்னர்
விளம்புமிவர்க் குச்செய்யும் சாதாரம் அன்றே.

*உரைகாரர், விஞ்ஞான கலரையும், பிரளயாகலரையும் இறைவன் நிராதாரமாக நின்று அருள் செய்வான் என்றும், சகலரைச் சாதாரமாக வந்து, அதாவது குரு வடிவில் மறைந்து நின்று, அருள் செய்வான் என்றும் கூறு தற்கு இப்பாடலை மேற்கோள் காட்டுகிருர். இப்பாட லானது சித்தியார் 254 ஆம் பாடலுக்குப் பொழிப்புரை போல் அமைந்துள்ளது. அந்தச் சித்தியார் பாடல் பின் வருமாறு:*

உரைதரும் இப் பசுவர்க்கம் உணரின் மூன்ரும்
உயரும்விஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர்
நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்மம் மாயை
நிற்கும்முத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையில் அருட்பரன் துவிதா சத்தி நிபா தத்தால்
கழிப்பன் மலம் சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையில்ஆ சான் மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப் பன்மலம் சதுர்த்தா சத்திநி
பாதத்தால்.

*இரண்டையும் ஒப்பு நோக்கும்போது, சித்தியார் பாடற் கருத்தையே சிவார்ச்சஞ போதப் பாடல் வேறு சொற் களால் சொல்வது தெளிவாகும். மற்ருெரு பாடல் பின் வருமாறு :*

செய்யும்வகை இரண்டுபடி யாகும் தேரில்
திகழ்ஞான வதிகிரியா வதியென்று செப்பி
உய்யும்வகை உவந்துமஞே பாவகத்தால் மலங்கள்
ஓட்டுவது ஞானவதி ஒண்கிரியா வதிதான்

வையம்நிகழ் குண்டமண் டலமிட்டு மற்றும்
மருவுதிரு மேற்கட்டி கட்டிவளர் தருப்பை
கொய்யுமல ராற்செய்த மாலைகளும் தூக்கிக்
கும்பகல சங்களுங் கொண் டியற்றுவன குறித்தே.

*இப்பாடல் ஔத்திரி தீக்ஷையின் முறையைக் கூறுவது. ஏழாவது தீக்ஷையாகிய இது அபக்குவர்க்குச் செய்வது. இஃது இரண்டு வகை: ஞானவதி, கிரியாவதி என. இப்பாடலானது பின்வரும் சித்தியார் திருவிருத்தத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளமை புலனாகும் (சித்தியார் 255):*

பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகம்மா னதமும்
அலகில் சாத்திரம் யோகம் ஔத்தி ராதி
அனேகமுள; அவற்றின் ஔத்திரி இரண்டு திறனும்
இலகுஞா னங்கிரியைஎன ஞானம் மனத்தால்
இயற்றுவது; கிரியைஎழிற் குண்டமண்ட லாதி
நிலவுவித்துச் செய்தல்; கிரி யாவதிதான் இன்னும்
நிர்ப்பீசம் சபீசமென இரண்டாகி நிகழும்.

*சிவப்பிரகாசர் இவ்விரு பாடல்களையும் சிவார்ச்சனா போதம் என்று குறிப்பிட்டிருக்கிறார். இவ்விரண்டினுள், முதற் பாடலாகிய "வைத்தமலம் மலங்கன்மம்" என்ற பாடல், குருமொழி என்ற வேறு சிறு நூலினும் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இச்சிறு நூல் முதலில் மதுரைச் செந்தமிழ்ப் பிரசுரமாக வெளி வந்தது. பின் சித்தாந்தம் இதழில் அனவரத விநாயகம் பிள்ளையால் உரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. குருமொழியின் உரையானது பூசைக் கிரியைகளின் தத்துவத்தை உணர்த்துவது. சிவபெருமான் குருமூர்த்தமாய் எழுந்தருளிச் சகலருக்கு அனுக்கிரகம் செய்வதற்கு இப்பாடலை அவ்வுரைகாரர் மேற்கோள் காட்டுகிறார். காட்டுமிடத்து நூலின்*

பெயரைக் கூறாமல், "என்றார் உமாபதி சிவன்" என்கிறார். இவர் இப்பாடல் அடங்கிய நூலின் பெயரைக் குறிப்பிடாத போதிலும் கூட, இவர் கருத்துப்படி இந்நூலை உமாபதி சிவன் செய்தார் என்றாகிறது. எனவே, சிவார்ச்சனா போதம் உமாபதி சிவன் செய்த நூல்; மதுரைச் சிவப்பிர காசர் உரையில் சித்தியாரை அடுத்துச் சிவார்ச்சனா போத மேற்கோள் வந்துள்ள அமைப்பை ஊன்றி நோக்கும் போது, இந்நூலும் பெருமை மிக்கது என்று கொள்ள வேண்டியிருக்கிறது. மேலும், சிவார்ச்சனா போதச் செய் யுட்கள் இரண்டையும் ஆராயும்போது, இது ஒரு விரிந்த நூலாயிருக்க வேண்டுமென்றும் தோன்றுகிறது.

மெய்கண்ட சாத்திரங்களுள் மிகவும் விரிந்த நூல் சிவ ஞான சித்தியார்; சுபக்கம் மட்டும் 328 திருவிருத்தங்கள் உடையது. சிவார்ச்சனா போதத்திலிருந்து மதுரைச் சிவப் பிரகாசர் மேற்கோள் காட்டும் இரு செய்யுட்களைக் கொண்டு இந்நூலும் மிக விரிந்த சாத்திர நூலாயிருக்கலா மென்று நாம் யூகிக்க இடமுண்டு. சிவஞான சித்தியார் போல விரிவுடைய பண்டைய சித்தாந்த நூல் இன்று கிடைப்பது தத்துவப் பிரகாச மொன்றுதான். இது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் முந்திய நூல்களின் வழியே விரித்துக் கூறும் சாத்திர நூல். சித்தாந்த சாத்திரம் பயில்வாருக்கும் பயின்று அங் குக் கூறிய நான்கு பாதங்களின் வழியே நிற்க விரும்பு வார்க்கும் பயில்வதற்குரிய நூல்கள், சித்தாந்த சாத்திரங் களும், பின்வந்த பல்வேறு கருவி நூல்களும் ஆகும். இக் கருவி நூல்களுள் சிறந்தன பல உள்ளன. அவற்றின் வரிசையில் பழமையான ஒன்று இச்சிவார்ச்சனா போதம் என நாம் கருதலாம்.

சிவார்ச்சனா போதமானது சிவபூசையைக் கூறுகின்ற ஆகமங்கள், சோமசம்பு சிவாசாரியர், ஞான சிவாசாரியர் முதலிய பூர்வாசாரியர் சிவாகமத்தின் வழிவிதித்த

பத்ததிகள் ஆகியவற்றை மொழி பெயர்த்துச் செய்த நூல்களில் ஒன்று என்று சிவஞான சுவாமி சித்தாந்த மரபு கண்டன கண்டனத்தில் கூறுகின்றார். உமாபதி சிவன் இந்நூலைச் செய்தார் என்ற கூற்று ஆராய்தற்குரியது.

உமாபதியார் சந்தான ஆசாரியருள் நான்காமவர்; சிவப்பிரகாசம் முதலான ஏழு சாத்திர நூல்கள் செய்தவர்; அன்றியும் சேக்கிழார் புராணம், திருமுறை கண்ட புராணம், கோயிற் புராணம், திருத்தொண்டர் புராண சாரம் முதலிய நூல்களும் இவர் செய்தன என்பர். பௌஷ்கர வியாக்கியானம் என்ற வடமொழி நூலும் இவர் செய்தது என்பர். இவருடைய வரலாறு பிரசித்தமாய் எல்லோரும் அறிந்தது. இனி, சிவார்ச்சனா போதம் உமாபதி சிவம் செய்தது என்று குருமொழியுரையால் அறிகிறோம். இந்நூல் இன்று கிடைக்கவில்லை. இரு பாடல்களே கிடைத்துள்ளன. பாட்டின் அமைப்பைக் கொண்டு நூலின் போக்கை நாம் யூகிக்க முடியும். முதல் நூலாகிய சிவஞான போதத்தை அருணந்தி வழிநூலாகிய சித்தியாரில் விரித்துரைத்தார். இவற்றின் சார்பு நூலாக உமாபதிசிவம் இரண்டிலும் விடுபட்ட நுட்பங்களை விளக்கவேண்டிச் சிவப்பிரகாசம் செய்தார். இவ்வளவும் சைவ உலகம் அறிந்த செய்தி. இவற்றுக்கும் மேலாக இதுகாறும் கூறியவற்றால் நாம் அறிவது, உமாபதிசிவம், சிவஞான சித்தியாருக்குச் சார்பு நூலாகச் சிவப்பிரகாசத்தினும் விரிவாக, சிவார்ச்சனா போதம் என்ற நூல் செய்தார் என்ற செய்தி. இந்நூல் முழுவதும் இன்று கிடையாமையால், இது குறித்து நாம் இப்போது மேலும் எதுவும் சொல்ல இயலவில்லை. ஏட்டு வடிவில் இது கிடைக்குமா என்று தேடுதற்குரியது.

## மெய்ஞ்ஞான விளக்கம்

சாத்திரக் கருத்துக்களில் ஒவ்வொரு சிறு பகுதியை மட்டும் எடுத்து, விளக்கம் என்று பெயரிட்டுக் கூறும் பல

கருவி நூல்கள் தோன்றின; அவற்றுக்கெல்லாம் தோற்று வாய் செய்தது மனவாசகங்கடந்தார் செய்த உண்மை விளக்கம். அவ்விளக்க நூல் வரிசையில் மெய்ஞ்ஞான விளக்கம் ஒன்று. இப்படியொரு நூல் இருந்ததென்று தெரிகிறதேயொழிய, நூல் முழுவதும் கிடைக்கவில்லை. மதுரைச் சிவப்பிரகாசரும் வெள்ளியம்பலவாணத் தம்பிரானும் இந் நூற்பாடல்களை எடுத்து மேற்கோள் காட்டுகிருர்கள்.

சிவப்பிரகாசம் 60 ஆம் திருவிருத்தவுரையில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்து அவத்தைகளிலும் கருவிகள் எத்தனை என்று விளக்குமிடத்தில் மெய்ஞ்ஞான விளக்கப் பாடல் ஒன்று மேற்கோளாக வருகிறது:

> நனவு தனிற்கருவி முப்பத்தைந் தாகும்
> கனவிருபத் தோரைந்தாம் காணில்—முனிசுழுத்தி
> மூன்ருகும் காலே முழுத்துரியம் ஓரிரண்டே
> ஊன்றுமதீ தந்தருமா ஞென்று.

திருமந்திரம், சித்தியார், மெய்ஞ்ஞான விளக்கம் என்ற மூன்றையும் காட்டி, "எனவரும் ஏதுக்களைக் கண்டு கொள்க" என்று சிவப்பிரகாசர் எழுதுவதால், அவர் கருத்துப்படி இதுவும் ஒரு சிறந்த பிரமாண நூல் ஆகும். இந் நூல், உண்மை விளக்கம்போல, தத்துவங்களை விளக்கிக் கூறுவதென்றும், வெண்பாவினுல் ஆனதென்றும் நாம் யூகிக்கலாம்.

பின்வரும் இரண்டு பாடல்களையும் சிவப்பிரகாசர் மேற்கோளாகக் காட்டுகிருர். ஆன்மா விடயத்தைப் புசிக்குமிடத்துப் பதினெட்டுக் கருவிகள் கூடிப் புசிக்குமென்று கூறி, அவை ஒன்றினுலொன்று காரியப்படும் முறைமையைக் கூறும்போது, இவ்விரு பாடல்களையும் பிரமாணமாய்க் காட்டுகிருர். இவற்றின் அமைப்பை ஆராய்கையில்

*இவையும் மெய்ஞ்ஞான விளக்கம் என்று கொள்ள இடமாகிறது.*

இச்சை நடத்தியிடும் ஈச்சுர தத்துவத்தை
மெய்ச்சத்தி சாதாக்கியம் மேவியிடும்—நிச்சயமே
ஏன்ற கிரியை நடத்தியிடும் மெய்ஞ்ஞானம்
ஆன்றசிவம் சுத்தவித்தை யாம்.

காலம் நியதி கலைசத்தி தான்நடத்தும்
ஏலும் வித்தை வித்தை அராகம்சேர்—சாலவே
மாயை சிவம்புருடன் சாதாக்கிய மேவி
நேய முடனடுத்து நின்று.

*இனி, சுமார் கி. பி. 1700 இல் வாழ்ந்த வெள்ளியம்பல வாணத் தம்பிரான் என்பவர் மெய்ஞ்ஞான விளக்கப் பாடல்கள் பலவற்றைத் தாம் எழுதிய சிவஞான சித்தியார் விளக்கமாகிய ஞானவரண விளக்கவுரை என்ற உரையில் மேற்கோளாக எடுத்தாளுகிறார். அப்பாடல்களையும் இங்கு அறிதல் தகும்.*

இறைஞானத் தாலே இயற்றும் சிவத்தை
அறைசுத்த வித்தை யதனை—நிறைகிரியை
தன்னாலே சத்தி சதாசிவத்தை இச்சையால்
எந்நாளும் ஈசுவரத்தை யே.

சிவமாயையைச் செலுத்தும் சேர்ந்த சத்திகாலம்
அவமில் நியதிகலையாமூன்—றுவமை இலாச்
சுத்த வித்தை வித்தைதனைச் சூழும் மகேசுரந்தான்
அத்த அராகத்தை அறிந்து

மாயை பகுதிதனை வந்திடு மெங்குங் காலம்
ஏயும் நியதி சிந்தையை யியற்றும்—மாயக்
கலையகந்தை வித்தைபுத்தி காண்மனத்தை ராக
மலை புருட னலைந்து மாம்.

*இம் மூன்று பாடல்களும் இரண்டிடங்களில் தொடர்பாய்க் காட்டப்பட்டுள்ளன.*

மூன்று மலங்களையும் நெல்லுக்குரிய தவிடு, உமி, முளை என்னும் மூன்றுக்கும் ஒப்பிட்டுச் சொல்வது சைவ சித்தாந்த மரபு. சிவஞான போதம் முதல் எல்லாச் சாத்திர நூல்களிலும் இம்முறையைக் காணலாம். இம்முறையை விளக்கும் செய்யுட்கள் இரண்டு இந்நூலுள் காணப்படுகின்றன :

சகச மலந்தவிடு சாரும் உமியின்
றகலிடத்து நெல்முளையா வாற்ருல்—மிகவும்
வினையின்றேல் மாயையின்ரும் என்றவ்விரண்டும்
அனைய உமிமுளைகள் ஆகும்.

மூலமலத் தோடுவினை மோகினியாய் இம்மூன்றும்
சாலஉயிர்ப் பந்தமெனத் தக்கதுகேள்—ஞாலத்துத்
தண்டுலத்தின் உள்ள தவிடுமியும் போமுன்னர்க்
கண்ட முளையும் மோப்பக் காண்.

சித்தாந்த நெறியில் தசகாரியம் கூறும் முதல் நூல் உண்மைநெறி விளக்கம். தத்துவரூபம், தரிசனம், சுத்தி, ஆன்மரூபம், தரிசனம், சுத்தி, சிவரூபம், தரிசனம், யோகம், போகம் என்பன இப்பத்தாகும். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருளுக்கும் தனித்தனியே பத்துத் தன்மைகள்கூறும் புது மரபானது, காவை-அம்பலநாதத் தம்பிரான் காலம் முதல் வழங்கத் தொடங்கிற்று; தத்துவப் பிரகாசத்திலும், இப்பத்தையும் மிக விரிவாய்க் காணலாம். இவை தசகாரியம், தசக்கிரமம் என்றும் பெயர் பெறும். மெய்ஞ்ஞான விளக்கமானது, பஞ்சமல தசகாரியம் கூறுவது இங்கு அறியத்தக்கது.

பாசமைந்தின் காரியங்கள் பத்தும் மொழியின்உயிர்
ஆசுறவேதான் மறைத்த லாமுருவம்—பேசு
சொருவமுயிர் கட்கெல்லாந் தோன்றிவெவ் வேருக
வருதல் சடஞ்சுபாவ மாம்.

வியாத்தியியைந்தாய் வியாபகந்தான் சேரு
......வின்றிச் செறிவான வரஞ்சாரு...முயி
ரீசன் வழியாதல் விசேடம் இருங்குணந்தான்
ஆசறு காலத் தொழிதலாம்.

பலவுயிரும் தாமயங்கப் பன்னிறமு மைந்து
(மல)வியல்பி னோடும் வகுத்தல்—புலனுடனே
காண்பதுதான் காட்சி கருதியிவை நீங்குதல்
மாண்புடைய சுத்தியா மாறு.

*மற்றோரிடத்தில், அவ்வுரையில் பின்வரும் தொடர் காணப்படுகிறது. "அகடணையாய் மனமூன்றும் தேகத்தி... ரைந்துமேயுங்காற் கூறயவயங்கு பத்து நாடிகளுமண–" இப்பாடலின் உண்மை வடிவம் புலப்படவில்லை.*

*வெள்ளியம்பலவாணத் தம்பிரானுடைய ஞாநாவரண விளக்கவுரை முழுதும் கிடைத்திலது. சிறு பகுதி தான் துண்டு துண்டாய்க்கிடைத்து, ஒரு சேர வெளியிடப் பட்டுள்ளது. முழுநூல் கிடைத்தால், இன்னும் பல மெய்ஞ் ஞான விளக்கப் பாடல்கள் வெளியாதல் கூடும்.*

*இதுகாறும் கூறியவற்றால், தத்துவங்களை விளக்கிக் கூறும் நூல் ஒன்று வெண்பா யாப்பில் "மெய்ஞ்ஞான விளக்கம்" என்ற பெயரில் இருந்ததென்று அறிகிறோம். நூல் கிடைப்பதாகத் தெரியவில்லை. மேற்குறிப்பிட்ட பாட்டுக்களே இன்று கிடைப்பன.*

அறியார்களும் அறியார் மிக அறிவார்களும் அறியார்
அறியார்களும் அறிவார்களும் ஒன்றேதமில் அன்றும்
அறியார்களும் பசுபாச மென் னிருளான் மறைந்தறியார்
அறிவார்களும் பரமானந்த ஒளியால் நிறைந்தறியார்

*என்ற பாடலைச் சிவப்பிரகாசர் மெய்ஞ்ஞான விளக்கம் என்று காட்டுகிறார். இது வெண்பாப் பாட்டு அன்று. ஆதலால் அந்நூல் முடிவில் நூலைச் சேர்ந்துள்ள அல்லது தனியாகவுள்ள ஒரு பாடல் என்று நாம் இதைக் கருதக்கூடும்.*

முழுநூலுமே கிடைக்காத போது இதன் ஆசிரியரும் காலமும் குறித்து ஏதும் சொல்வதற்கில்லை. எனினும் இது பஞ்ச மல தசகாரியம் போன்ற விரிவுகளைக் கூறுவதால் அவ்விரிவைக் கூறுகிற முதல் நூலாகிய தத்துவப் பிரகாசத்தின் பின் தோன்றியதாகும். காலம் கி. பி. 1400.

மெய், ஞானம், விளக்கம் என்ற மூன்று சொற்களும் பலவேறு வடிவங்களில் மெய்கண்ட சாத்திரங்களின் பின் பல சைவநூல்களுக்குப் பெயராய் வந்துள்ளன. மெய்ஞ் ஞான விளக்கம் என்ற முழுத்தொடர் மிகவும் கவர்ச்சிகரமான ஒரு பெயர். அனேக ஆசிரியர்கள் இப்பெயரைப் பயன்படுத்தி யிருக்கிறார்கள். 1683 இல் காலமான மாதைத் திருவேங்கட நாதருடைய பிரசித்திபெற்ற நூலான பிரபோத சந்திரோதயத்தின் மறுபெயர் மெய்ஞ்ஞான விளக்கம்.[1]

தத்துவராயர் பாடுதுறையில் 133 ஆம் பகுதி மெய்ஞ் ஞான விளக்கம் என்ற தலைப்புடையது. இரட்டைக்குறள் வெண்செந்துறை யாப்பில் 10 பாடல் கொண்டது. கலி விருத்தமாகவும் அறுசீர் விருத்தமாகவும் அனேக பாடல்கள் இப்பெயரோடு பெருந்திரட்டில் உள்ளன. இவை யாவும் வேறு நூற்பாடல்கள்; அல்லது தத்துவராயர் தாமே செய்த பாடல்கள்.

வள்ளலார் சாத்திரம் என்ற தொகுப்பில் ஏழாம் நூல் ஞான விளக்கம் என்பது. 101 வெண்பாக்கள் கொண்டது. நயம் பொருந்திய அழகிய பாடல்கள். இவை வேதாந்தம் கூறும். இச்சாத்திர நூலின் அதிகார அடைவு கூறும்

1. இந்நூல் செம்பாகமான சிறந்த நடையில் 2019 விருத்தங்களுடையது. சென்ற நூற்றாண்டிலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் இது பி. ஏ., எம். ஏ. தமிழ் வகுப்புப் பாடமாக இருந்தது. இந்நூலில் சைவ சித்தாந்தச் சுருக்கம் என்ற பகுதியில் 22 விருத்தங்கள் மிகவும் அழகானமுறையில் சைவசித்தாந்தக் கொள்கையைத் திருத்தமாய்க் கூறுகின்றன.

நான்கு பாடல்களில் முதல் பாடல், இப் பகுதியை மெய்ஞ் ஞான விளக்க மென்றே கூறுகிறது.

இவை யாவும் நாம் இங்குக் கருதும் மெய்ஞ்ஞான விளக்கத்தின் வேருனவை.

## காலோத்தர ஆசிரியர்

வடமொழியில் உள்ள உபாகம சாத்திர நூல்களுள், தேவி காலோத்தர ஆகமம், சர்வ ஞானோத்தர ஆகமம், கந்த காலோத்தர ஆகமம் என்பன சில. அவற்றுள், முதல் இரண்டும் கி. பி. 1400 ஐ ஒட்டித் தமிழில் மொழி பெயர்க் கப்பெற்று, அக்காலத்தில் சிறந்த சைவசாத்திரப் பிரமாண நூல்களாய் வழங்கின வென்று தெரிகிறது. இரண்டையும் ஒரே ஆசிரியர் செய்தார் என்பதும் விளங்குகிறது. ஆனல் ஆசிரியர் பெயரோ அவர் வரலாரே எதுவும் புலப்பட வில்லை.

**தேவிகாலோத்தரம் :** இந்நூல் தேவிகாலோத்தர ஆகமம் என்றும் பெயர் வழங்கும். ஸ்ரீ கண்டபரமேசுவரன் உமா தேவியாருக்கு இதை உபதேசித்தார் என்பது வர லாறு. பதமுத்தி பரமுத்தி என்ற இருவகை முத்திகளுள், மேலான பதவியும் மீண்டு வாரா நெறியும் ஆகிய பரமுத்தி யைப் பெறுதற்குரிய தீவிரதரப் பக்குவ ஆன்மாக்களின் செயலைக் கூறுவது இவ்வாகமம். இது சிவாகமங்களின் சாரம் என்பர் பெரியோர்.

இந்நூற்பெயர், தேவி-காலம்-உத்தரம் என மூன்று சொற்களாய்ப் பிரியும். காலம் என்பது உயிர்களின் தீவிர தர பக்குவ காலத்தையும், உத்தரம் என்பது அக்காலத்தில் உபதேசிக்கத் தக்க சித்தாந்தத்தையும் குறிப்பன ; உமா தேவியாருக்குச் சிவபிரான் உபதேசித்த காரணம்பற்றி தேவி காலோத்தரம் எனப் பெயர் பெற்றது. உத்தரம் என்ற சொல் சித்தாந்தம் என்னும் பொருளது.

வடமொழித் தேவி காலோத்தரம், 85 சுலோகங்களும் விருத்தியுரையும் உடையது. இது 1903ல் யாழ்ப்பாணத்தில் அச்சிடப்பெற்றது. ஞானம் ஞானாசாரம் என இரு பகுதிகளை உடையது.[1] ஞான இயலில், ஞானத்தை அனுட்டித்தற்குரிய அதிகாரி இலக்கணம், அதிகாரியின் பெருமை, முத்திநெறி, சீவன்முத்தி, சீவன் முத்தர் இயல்பு முதலியனவும், ஞானசார இயலில், ஞான சாதகன் சிவஞானத்தைத் தவிர வேறு எதுவும் பயிலுதல் கூடாதென்பதும் கூறப்படுகின்றன.

தேவி காலோத்தரம் சர்வ ஞானோத்தரம் ஆகிய இரண்டு வடமொழி நூல்களும், சிவாக்கிர யோகிகள் பரம்பரையாகிய சூரியனார் கோயில் ஆதீனத்தின் பிரமாண நூல்கள். தேவி காலோத்தரத்துக்குச் சிவாக்கிரயோகி தமிழ் உரைசெய்தார். அது வெளியானதாகத் தெரியவில்லை; நூல் இருப்பதாகவும் தெரியவில்லை. அவ்வுரையின் காலம் 16 ஆம் நூற்றாண்டு. அந்நூல் சைவ சித்தாந்திகளிடையே பயிலப் பெறவில்லை. பல காரணங்களுள் அது வேதாந்த பரமானது என்ற தவறான கருத்தும் ஒன்று. இக்கருத்தை ஆதரிக்க அனேகத் தொடர்புகளும் ஏற்பட்டிருந்தன. ஒன்று, பின் வந்த சிவஞான வள்ளல் செய்த வேதாந்த பரமான வள்ளலார் சாத்திரத்தில் இதற்குத் தரப்பட்டுள்ள சிறப்பு. அந்நூலில் பதி பசு பாச விளக்கம் என்ற பகுதியின் கொல்லா விரதம் என்ற தலைப்பில் இரண்டாம் பாடல் பின் வருவது:

> அரிய யாக்கையின் மானுட யாக்கையே யாக்கை
> விரியு நோன்பினில் உயிர்கொலா விரதமே விரதம்
> கருதில் தெய்வதம் கண்ணுதற் றெய்வமே தெய்வம்
> தெரியில் தேவிகா லோத்தரத் தேற்றமே தேற்றம்.

1. தேவி காலோத்தரம் ஞானசார விசாரப்படலம் என்ற நூல் வடமொழி மூலத்துக்குத் தமிழில் ஒவ்வொரு வெண்பாவாக 85 பாடல்களுடன் 1913 இலும் 1924 இலும் வெளியாயிற்று. பிந்திய பதிப்பில் இது ரமண மகரிஷி இயற்றியதாகக் காணப்படுகிறது.

வள்ளலார் நூல் வேதாந்தம் ஆனபடியினாலே அந் நூல் பாராட்டும் தேவி காலோத்தரமும் வேதாந்த நூலென்று சைவ சித்தாந்திகளால் இது ஒதுக்கப்பெற் றது போலும்; இது சிறப்பான சைவ சித்தாந்த சாத்திரம் என்பதைச் சைவர் மறந்துவிட்டார்கள்.

இனி, வடமொழித் தேவி காலோத்தரத்துக்கு மிகப் பழைய காலத்திலேயே ஒரு தமிழ்மொழி பெயர்ப்பு செய் யப்பெற்றிருந்தது. விநாயகர் வணக்கமாய்க் கூறப்பட்ட காப்புச் செய்யுளோடு, இதன் 1848 ஆம் வருஷப்பதிப்பில் 73 விருத்தங்கள் காணப்படுகின்றன. இவற்றின் 13 ஆம் பாடல் "பொற்புறும் அதீதம்" என்ற சிவப்பிரகாச 50 ஆம் பாடல். பின்வந்த பதிப்புக்களில் இது நீக்கப்பெற் றுள்ளது; நீக்க, நூல் 72 பாடல் கொண்டுள்ளது.

முதல் மூன்று பாடல்கள் கடவுள் வணக்கம். முதல் பாடலில் மதுரைச் சித்தி விநாயகரையும், இரண்டாம் பாடலில் "அணி மதுரையதனுள் எண்ணெண் திரு விளை யாட்டுடைய பிரான் செங்கமலப் பொற்பாதம்" என்று சோமசுந்தரக் கடவுளையும், அடுத்த பாடலில் "பிரான் அணி வெள்ளி அம்பலத்துட் புரியாநின்ற ஆடல் கண்டு வந்த அங்கயற் கண்ணம்மை பதம்" என்று மீனாட்சியம் மையையும் வழிபடுவதால், இந்நூலாசிரியர் மதுரை நகரி னர் என்று தெரிகிறது. இவரைப்பற்றி வேறு குறிப்புக்கள் தெரிந்தில.

வானவர் தலைவா இந்த மன்னுயிர் முத்தி எய்த
ஞானஆ சார ஞானம் அருளினால் அருளென் றேத்தி
மானமர் அயில்வேல் ஒண்கண் மணமலிகுமுதச்செவ்வாய்த்
தேனமர் குழலாள் தேவன் திருந்தடி பணிந்து சொன்னாள்.

என்னும் முதற் செய்யுளாலும்,

உத்தம குணத்தாய், ஞான ஒழுங்கெனும் இரண்டி னாலே
மெய்த்தவர் முத்தி எய்தும் விதியினை வகுத்து ரைப்பன்

என்னும் இரண்டாவது செய்யுளாலும், நூற்பெயருக்குக் கூறப்பட்ட காரணம் பொருந்துவது விளங்குகின்றது. இங்குக் கூறும் ஞானம் ஒழுங்கு என்பன ஞான இயல் ஞாஞசார இயல் என்ற இரு பகுதிகளைக் குறிப்பிடும். பக்தி, ஞானம் முதலியன உடையோராகி, காலோத்தரத்தின் வழி ஒழுகுபவர் பெரியோராவார் என்று 6 ஆம் பாடல் கூறுகிறது. ஞானம் வேண்டுபவர் இந்த நூலைப் பயில வேண்டும் என்று கூறுவது அக்கால மரபு போலும். இவ்வாறு, 'இந்த நூலின் வழி ஒழுகவேண்டும்' என்று உரைக்கும் பாடல்கள் ஞானசாத்திர பஞ்சகம் என்ற தொகுப்பினுள்ளும் காணப்படுகின்றன.

தேவி காலோத்தரத்தில் எவ்விடத்தும் மெய்கண்ட சாத்திரக் கருத்துக்கள் விரவிக் கிடத்தல் இயல்பு. எடுத்துக் காட்டாக ஒன்றைக் கூறுவோம். சிவஞானிக்குப் பகிர் யாகப்பூசை வேண்டுவதன்று; ஒருகால் செய்ய விரும்பினல் புட்பவிதி நூல்களில் கூறியவாறு, உதிராத மலரைச் செடியிலிருந்தே எடுக்கவேண்டும் என்பதெல்லாம் அவசியமில்லை :

புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டில்
பூமரத்தின்கீழ் உதிர்ந்த போதுகளும் கொண்டு
சிறந்தாரும் சீர்ச்சிவனை ஞானத்தால் அங்குச்
சிந்திக்கும்படி இங்குச் சிந்தித்துப் போற்றி......

என்பது சித்தியார் பாடல் (302). இதை அப்படியே தேவி காலோத்தரம் விரித்துக் கூறுகிறது.

நடுங்காமல் எவ்வுயிரும் நறுக்காமல் துரும்பனைத்தும்
பிடுங்காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது
விடுங்காலால் ஊழ்த்துதிர்ந்த விரைமலர்களவை ஏந்திக்
கடுங்காலன் தனையட்ட அம்புயங்கள் அருச்சிப்பான்.

இந்நூலின் செய்யுள் நடை சாமானிய நடை. இந்நூலின் உரையொன்று சென்ற நூற்றுண்டில் பல

முறையும், பின் 1906 இலும் அச்சாகியிருந்தது. அவ்வுரை மாயாவாதம் என்ற காரணத்தால், சைவசித்தாந்தப் பேரா சிரியராயிருந்த பொ. முத்தையப் பிள்ளையவர்கள் தாம் சைவசித்தாந்த பரமாகப் புதிய விருத்தியுரையொன்று சித்தாந்தஇரத்னம் என்ற பெயரோடு (1935) எழுதி வெளியிட்டார். தமிழ்நூலின் பாடல்களை மதுரைச் சிவப் பிரகாசரும், திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளும் எடுத்து மேற்கோள் காட்டுகிறார்கள். மூன்றிடங்களில் சிவப்பிர காசர் இந்நூலைக் கூறுகிறார். இரண்டு பாடல்கள் முன் கூறிய 'பொற்புறும் அதீதம்' என்ற பாடலின் உரையில் வருகின்றன. இதனால் ஒரு கருத்து தெளிவாகின்றது; இச் சிவப்பிரகாசர் சித்தாந்த மல்லாத எந்த நூலின் பெயரையும் உச்சரிக்கமாட்டார்; ஆகவே, இந்நூலை அவர் சித்தாந்த நூல் எனவே கொண்டாரென்பது தெளிவு.

அச்சில் வராத வேறுரையும் இதற்குண்டு. மேற்கூறிய வற்றால் இந்நூல் சிவப்பிரகாசத்துக்குப் பின்னும் மதுரைச் சிவப்பிரகாசர் காலத்துக்கு முன்னும் தமிழில் மொழி பெயர்க்கப் பெற்றது என்று நாம் கருதலாம். அதாவது கி. பி. 1306-1488 ஆண்டுகளுக்கிடையில்; சிவப்பிரகாசர் இதை எடுத்து மேற்கோள் காட்ட ஒரு நூறு ஆண்டு காலம் இடைவெளி விடுவோமானால், இதன் காலம் 1375-1400 ஆகக் கொள்ளுதல் பொருந்தும்.

**சர்வஞானோத்தரம்:** முந்தியதை யொப்ப இதுவும் ஒரு சிறப்பான சைவ சித்தாந்த நூல். வடமொழியில் சர்வ ஞானோத்தர ஆகமம் வித்தியாபாதம் என்ற பெய ரோடு 7 பிரகரணங்களையும் 240 சுலோகங்களையும் உடை யது; "எல்லா ஆகமங்களிலும் இது சிறந்ததென்பது தோன்ற சர்வஞானோத்தரம் எனப் பெயருமிட்டருளிச் செய்த சீகண்ட உருத்திரனார்" என்பது சிவஞான சுவாமி கள் உரைக்குறிப்பு. வாயு சங்கிதையில் சர்வாகமம் என இது கூறப்பட்டுள்ளதாயும் தெரிகிறது. மெய்கண்ட

சந்தானத்துக்குச் சிவஞானபோதம்போல வாமதேவ சந் தானத்துக்குச்சர்வஞானேத்தரம் மூலசாத்திரம். ஸ்ரீ கண்ட பரமசிவனிடத்தில் உபதேசம் பெற்ற ஸ்கந்த மூர்த்தி வாம தேவ மகரிஷிக்கு உபதேசிக்க, அவர் தாம் பெற்ற பிரண வார்த்தத்தையும் சர்வஞானேத்தரம் என்னும் ஆகமத் தையும் நீலகண்ட சிவாசாரியருக்கு உபதேசிக்க, இந்த முறையே வந்தது சூரியனர் கோவில் ஆதீனம். சர்வ ஞானேத்தரத்துக்குத் தமிழில் சிவாக்கிரயோகி உரை செய்தார்; அது இன்று கிடைப்பதாகத் தெரிய வில்லை.

சர்வ ஞானேத்தரத்தின் சிறப்பை மற்ெருரு வகை யிலும் நாம் உணர்தல் கூடும். சிவாக்கிரயோகிகள் செய்த வடமொழிச் சிவஞான போத பாடியத்தை நன்கு ஆராய்ந்து சிவஞான சுவாமிகள் தம் தமிழ்ச் சிவஞான பாடியத்தைச் செய்தார் என்பது வரலாறு. இச் சிவஞான பாடியத்துள் ஆரும் சூத்திர வுரையில், சர்வ ஞானேத்தர ஆகமத்தின் கருத்து முழுமையும் அவர் தொகுத்து உரைத் திருக்கிருர். "அத்துவித பாவனையுடையோன் ஞானக் கண்ணுல் சிவனை ஆன்மாவிற் கண்டு, முழுவதும் வியாபக மாய் நின்று அறிவதாகிய முற்றுணர்வுடையனுய், அவ்வப் பொருளியல் பெல்லாம் அறிந்து மல வாசனை நீங்கிக் கேவல மாய் நின்று முடிவு காணகில்லாப் பேரின்பத்தைப் பெறு வன் என முடிந்தது முடித்துக் காட்டி, இங்ஙனம் சீகண்ட உருத்திர நாயனர் ஆறுமுகக் கடவுளுக்குச் சர்வ ஞானேத் தரத்தின் ஞானபாதம் செவியறிவுறுத்தருளினர்" என்ற பகுதியைக் காண்க.

இதுகாறும் கூறியவற்றுல் இந்நூல் சிறந்த சைவ சித் தாந்தப் பிரமாண நூல் என்பது தெளிவாகும். இவ் வாகமத்தை முருகப் பெருமானுக்குச் சிவபெருமான் உபதே சித்தார் என்பது வரலாறு.

இதன் தமிழ் மொழிபெயர்ப்பு ஒரு பழமையான நூல். 9 பிரகரணங்களையும் 71 விருத்தங்களையும் கொண்டது.[1]

இதன் காப்புச் செய்யுள், தேவி காலோத்தரக் காப்புச் செய்யுளாகிய மதுரைச் சித்தி விநாயகர் பாடலாகவே காணப்படுகிறது. எனவே, இரண்டையும் ஒருவரே செய்தார் என்றும், ஒரு காப்புச் செய்யுளையே இரண்டுக்கும் கொண்டார் என்றும் கருத இடம் தருகிறது. தேவிகால உத்தரம் சர்வ ஞான உத்தரம் என்ற இரு சாத்திரங்களும் ஒரே நூலின் இரு பிரிவுகள் என்று கருதி ஒரே ஆசிரியர் மொழி பெயர்த்து ஒரே காப்புச் செய்யுளை அமைத்துக் கொண்டார் போலும். சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் என இரு பிரிவுகளாகச் செய்த ஆசிரியர் அருணந்தி சிவாசாரியர், இரண்டுக்கும் "ஒரு கோட்டன் இரு செவியன்" என்ற ஒரே விநாயக வணக்கப் பாடலை அமைத்திருப்பது இங்கு நினைவு கூரத் தக்கது. தமிழில் இதை ஞான பாதம் என்று தமிழ் மொழி பெயர்ப்பும் சிவ ஞான சுவாமிகளும் கருதியபோதிலுங்கூட, வடமொழி மரபின்படி வித்தியாபாதம் என்றே பெயர் காணப்படுகிறது. இதன் 60ஆம் பாடல் பின் வருவது:

ஒருவசன மாகவே முடிந்தபொருள் உரைத்தோம்
ஒன்ருகக் காண்பதுவே காட்சி, இன்னும்
பெருவசன மாகநீ பலபடக்கேட் டாலும்
பின்னும் நாம் நிகழ்த்துவதும் இந்தஉப தேசம்

---

1. ஓர் ஏட்டுப் பிரதியில் இந்நூலின் பாயிரமாகப் பல செய்யுட்கள் உள்ளனவென்றும் அவை யாவும் எழுத்துக்களின் சொரூபம் தெரியா வண்ணம் சிதலால் சிதைக்கப்பட்டிருந்தவாதலின் அப்பாயிரங்களை அச்சிட முடியவில்லை என்றும் முத்தைய பிள்ளை தம் பதிப்பில் குறிப்பிட்டிருக்கிறார். ஏடுகள் பல கிடைப்பின் இப்பாயிரப் பகுதி திருத்தமாகக் கிடைத்து, இங்குக் கூறியுள்ள கருத்து இன்னும் தெளிவுபெறக்கூடும்.

தருவசன சமுதாயம் பலபொருளும் விளக்கும்
தடுமாறு தேகமாய்த் தானேதான் ஆகி
நிருவசனமாய் ஞானமோனம் ஒன்று மின்றி
நில்லாத நிலையின்றி நின்றநிலை நிலையே.

இவ்விருத்தத்தின் முதல் அடியின் பிற்பாதியாகிய 'ஒன்றா கக் காண்பதுவே காட்சி' என்ற பகுதி அதே தொடக்க முடைய அவ்வையின் தனிப்பாடலை நினைவூட்டுகிறது. அது வருமாறு :

ஒன்றாகக் காண்பதே காட்சி, புலனைந்தும்
வென்றான்தன் வீரமே வீரமாம்,—என்றும்தான்
சாவாமற் கற்பதே கல்வி, தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே ஊண்.

ஞானக்குறள் பாடிய அவ்வையே இத்தனிப் பாடலையும் செய்தவர் என்பது பொதுவாய் வழங்கும் கருத்து. இவ் அவ்வையார் காலம் கி. பி. 1350 என்று வரைறை செய்யப் பெற்றுள்ளது. தமிழ்ச் சர்வஞானோத்தர முடையார் அவ் வைப் பாடலின் வரியை அப்படியே எடுத்தமைத்துக் கொண்டிருப்பது கண்கூடு. ஆகவே, அவர் அவ்வைக்குப் பிற்பட்டவர் என்பதும் தெளிவு. சர்வ ஞானோத்தரத்துக் கும், தேவி காலோத்தரத்துக்கும் காப்புச் செய்யுள் ஒன்றா யிருத்தல் பற்றி, இரண்டு நூல்களையும் ஒருவரே செய்தார் என்ற கருத்துப் பொருந்துமாறுல், உத்தேசம் கி. பி. 1375-1400 ஆகிய காலமே இரண்டுக்கு முரிய காலம் என் பதும் பொருந்தும்.

இந்நூலின் செய்யுட்களில் வடசொற்கள் மிக அதிக மாய்ப் பயின்றுள்ளன. மொழி பெயர்ப்பு என்ற காரணத் தாலும், பொருள் காரணத்தாலும், வடசொல் மிகுதி என நாம் கருதலாம். நடை மெய்கண்ட சாத்திரங்கள் போல் அத்துணைச் சிறப்பான ஓசை நயமுடைய நடையன்று; சொல்லாட்சிகள், இது ஒரு வேதாந்த நூலோ என்று ஐயுறுவதற்கு இடமாயிருத்தல் உண்மை.

......சுயம் பிரகாசமாய் எங்கும் நிறைவாய்த்
தத்துவா தீதமாய்த் தனையறிதல் முத்தி
சர்வஞ்ஞானோத்தரம் சம்பூர்ணம் சமாப்தி.

என்ற கடைசித் திருவிருத்தமும், அதன் பின்னுள்ள

சருவஞா னோத்தரத்தைச் சந்ததமும் பார்த்தால்
வருமோ பிறவி மறித்திங்கு—அரிதான
பேரின்ப வெள்ளம் பெருகுமே பற்றொழிந்த
தீரருக்கீ தாமென்றே செப்பு.

என்ற வெண்பாவும் இங்குக் கருதத் தக்கன.

தமிழ்ச் சருவ ஞானோத்தர மூலம் 1904இல் அச்சாயிற்று. பின்னர் ஒருவர் இதற்கு வேதாந்த பரமாக உரை எழுதி வெளியிட்டு, இந்நூல் மாயாவாத நூல் என்றமையால், பொ. முத்தையப் பிள்ளையவர்கள் சைவ சித்தாந்த பரமாக முத்திரத்ன விருத்தி என்ற பெயரோடு புதிய உரையொன்று எழுதி 1923இல் வெளியிட்டார்கள். பிரும்மானந்த சுவாமிகள் உரை 1933இல் வெளிவந்தது. செய்யுளின் வரிசை பதிப்புக்களில் வேறுபட்டுள்ளது.

இவற்றால் கூறியது, கி. பி. 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழில் மொழி பெயர்க்கப் பெற்ற தேவி காலோத்தரம் சர்வஞானோத்தரம் இரண்டும் சிறப்பான சைவ சித்தாந்த நூல்களாவன என்பதே; ஆகமம் என்ற பெயருடைய இந்நூல்கள் வேதாந்தத்துக்குப் பொருந்துவன அல்ல.

## மெய்ம்மொழிச் சரிதை

தத்துவராயர் தொகுத்த பெருந்திரட்டில் மெய்ம்மொழி—மெய்ம்மொழிச் சரிதை என்ற பெயரமைந்த ஒரு நூலிலிருந்து 120 பாடல்கள் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. இப்படியொரு நூல் உண்மையாகவே உண்டா என்பதே தெரிய வழியில்லாதிருந்தது. ஆனால் வேலம்பாளையம்

வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் தம்மிடம் இந்நூல் ஏடு ஒன்றிருப்பதாகத் தெரிவித்தார்கள். அதனால் இது பற்றிய செய்திகள் சில தெரிய வந்துள்ளன. இவ்வேடு மூலமும் உரையுமாயுள்ளது. உரை ஆசிரியரே செய்ததா அல்லது மாணக்கர் செய்ததா என்பது விளங்கவில்லை.

இந்நூல் இளங்காரிகுடி மெய்ம்மொழித் தேவர் என்பவர் பாடியது. அவர் தம் பெயரையே நூலுக்குச் சூட்டினார் போலும். சுபக்கத்தின் ஐந்தாம் பகுதியாகிய தத்துவ சிருட்டிப் பகுதியின் இறுதியிலுள்ள வெண்பா வொன்றினால் ஆசிரியர் பெயர் தெரிகிறது:

> எண்ணிலாப் புத்தாதி எப்பொருட்கும் தட்டறுத்து
> விண்ணில்ஆர்க் கும்மரிய வீட்டின்பம்—பண்ணி
> விளங்கும்இளங் காரிகுடி மெய்ம்மொழித் தேவன்
> களங்க மறுத்தான் இந்நூல் கண்டு.

மெய்ம் மொழிச் சரிதை என்ற இந்நூல் பரபக்கம், சுபக்கம் என்ற இருபகுதிகளுடையது; இவ்வமைப்பு நமக்குச் சிவ ஞான சித்தியாரை நினைவூட்டும். இந்நூல் சித்தியாருக்குப் பின் வந்தது என்று கருதுவது பிழையாகாது. பரபக்கச் செய்யுட்கள் 124 இருந்தன. குறித்த ஏட்டில் 82 பாடல்கள் சிதைந்தன; 42 பாடல்களே இன்று உள்ளன. இவற்றுள் 14 பாடல்கள் பெருந்திரட்டில் வந்துள்ளன. இனி சுபக்கத்தில் மொத்தப் பாடல்கள் 362. இவற்றுள் சிதைவு இல்லை. 106 பாடல்கள் பெருந்திரட்டில் காட்டப்பட்டிருக்கின்றன. சில பாடல்களை திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளும் தம் உரைகளில் எடுத்தாளுகிறார்.

நூல் மெய்ம்மொழி, மெய்ம்மொழிச் சரிதை என்ற இரு பெயர்களாலும் வழங்கும் போலும்; பெருந்திரட்டில் நடராச நிலையம் என்ற தலைப்பில் வரத்தக்க பாடல்கள் சில மெய்ம்மொழி என்று தவறாக அச்சிடப்பட்டுள்ளன

என்று தெரிகிறது. இந்நூல் சித்தியாருக்குப் பின் வந்தது, தத்துவராயருக்கு முன் வந்தது என்ற குறிப்புக்களால், இதன்காலம் சுமார் கி. பி. 1400 என்று வரையறை செய்தல் பொருந்தும்.

இதன் சுபக்கப் பகுதி 362 செய்யுட்களையுடையது என்ற குறிப்பு மிக்க பொருளுடையது. சிவஞான சித்தியார் சுபக்கம் 327 திரு விருத்தங்களையுடையது. தத்துவப் பிரகாசம் (கி. பி. 1350) 337 திருவிருத்தங்கள். இப்போது கிடைக்காமல் இருக்கிற சிவார்ச்சனு போதம் என்ற சிறப்பான சைவ சித்தாந்தநூல் முந்நூறுக்கு மேற்பட்ட பாடல்களையுடையதாகலாம் என்று குறிப்பிட்டோம். அதன் காலமும் 1350 ஆகலாம். இந்த வரிசையில் சற்றுப் பின்வந்த மெய்ம்மொழிச் சரிதையும் முந்நூறுக்கு மேற்பட்ட பாடல்கள் பெற்றிருப்பது சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கது. இதுவும் சமய உண்மைகளை எடுத்துப் பேசுவதாகும். நூல் முழுமையும் நன்கு ஆராய்ந்து இந்நூல் நன்முறையில் பரிசோதித்து அச்சுக்கு வந்தால்தான் இதுபற்றி விளக்கம் கூறுவது இயலும். ஆராய்ந்தால் ஆசிரியரைப்பற்றிய குறிப்புக்கள் பின்னும் எவையேனும் கிடைக்கக்கூடும்.

பொதுவாக, சைவசித்தாந்த மரபில் சாத்திர நூல் செய்தார் அனைவரும், உமாபதி சிவாசாரியருக்குப் பின்வந்த ஆசாரியர்கள் வழியில் உபதேசம் பெற்ற துறவிகளாகவே இருந்து வந்திருக்கிறார்கள். இவ்வாசிரியரைப்பற்றி அத்தகைய தொடர்பு எதுவும் தெரியவில்லை. எனினும், தேவர் என்றமையால் இவரும் துறவி என்றே எண்ணத்தோன்றுகிறது.

பெருந்திரட்டில் வந்த பாடல்கள் முழுமையும் அறுசீர் விருத்தங்களாயுள்ளன. கொல்லாமை, அட்டாங்கயோகம், அட்டமாசித்தி போன்றன விரிவாய்ச் சொல்லப்பட்டுள்ளன. நூலின் நடை சித்தாந்த சாத்திரங்கள் போன்ற

சிறப்பான நடையன்று; எனினும், பின்வந்த வேதாந்த நூல்கள் போன்ற இலக்கணம் பிறழ்ந்த நடையுமன்று. நூலில் பயிலும் சமயச் சொற்கள் சித்தாந்த மரபுக்குரியன வல்ல; வேதாந்த மரபுக்குரிய சொற்களும் இந்நூலுள் நிரம்பக் காணப்படுகின்றன. எனவே, இந்நூலாசிரியர் ஓரளவு சித்தாந்தம் கற்றவராய் வேதாந்தம் உணர்ந்து நூல் செய்தார் என்று கருதுதல் பொருந்தும்.

பின்வந்த வேதாந்தத்திரட்டுக்களான 'பல சாத்திரத் திரட்டு' போன்றன, பெருந்திரட்டிலிருந்து இந்நூற்பாடல்களைத் தொகுத்துக் கொண்டன போலும்; மூல நூல்களைக் கண்டு அவை இப்பாடல்களைத் தொகுக்கவில்லையென்று தெரிகிறது.

## பிற நூல்கள்

வெள்ளி யம்பலவாணத் தம்பிரான் தம் உரைகளில் மிகப் பலவான வடமொழி நூல்களையும் தமிழ் நூல்களையும் மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார். தெரிந்தன போக, தெரியாதவை பல உள்ளன. முற்பகுதியில் ஆராய்ந்த நவலிங்கலீலை இவற்றுள் ஒன்றான வீர சைவநூல். அது போலவே, இவரால் குறிப்பிடப்பெற்று முழுமையும் தெரியாமல் சில குறிப்புகளும் மேற்கோளும் மட்டுமே தெரிய வந்து, இக்காலப் பகுதிக்கு உரியன என்று கருதற்குரிய தமிழ் நூல்கள் சில பின்வருவனவாகும்: ஞானதீபிகை, நிராமயதேவர் நூல், பரிபூரணசித்தி, யோகசாரம், வைஷ்ணவம், ஜனன கருவிமாலை என்பன.

வல்லூர்-தேவராசப் பிள்ளை செய்ததாக வழங்கும் சூத சங்கிதைக்கு முந்தியதான ஒரு சூத சங்கிதையைச் சிவஞான சுவாமிகள் பாடியத்தில் குறிப்பிடுகிறார்; இந்நூல் கிடைப்பதாகத் தெரியவில்லை.

மொழி பாஞ்ச ராத்திரம்கா பாலம் காளா
முகம்சாத்தம் பவுத்தம்ஆ ருகதம் தன்னில்
கழிபாசு பதநூல்சாம் பவத்தில் தீக்கை
காதலிப்பீர் வேதியரிற் கடையர் காணீர்.

என்று, அவருடைய சிறப்புப்பாயிரம்-சைவாகமப் பிரமாணியம் என்ற பாடியப்பகுதியில் வரும் குறிப்புக் காண்க.

இந்நூல்கள் முழுமையும் கிடைத்து, பிற விவரங்களும் தெரிந்தால்தான் இவைபற்றித் திட்டமாய்க் கூறமுடியும். அது வரையில் இவை 15ஆம் நூற்றாண்டில் எழுந்தன என்று மட்டும் கூறலாம். இவற்றுள் நிராமய தேவர் நூல் என்பது மட்டும் வேதாந்த நூல் போலும்.

## அத்தியாயம் 8

# வைணவ இலக்கியம்

## முன்னுரை

தமிழ்நாட்டில் முருக வழிபாடும் திருமால் வழிபாடும் மிகப் பழைய காலந்தொடங்கியே இருந்து வந்தன என்று பண்டைத் தமிழ் இலக்கியங்கள் நன்கு தெரிவிக்கின்றன. வாக்கு மனங்கடந்த ஒரு முழுமுதற்பொருள் உண்டு என்று தமிழ் மக்கள் கருதினார்கள். அப்பொருள் சிவம் என்ற பெயரால் நிலை பெறுவதாயிற்று. வாக்கு மனங்கடந்த பொருளை அவர்கள் பாட்டால் அதிகம் போற்றியதாகத் தெரியவில்லை. இந்த நிர்க்குணப் பொருளை விட்டு, சகுணப் பொருளையே போற்றினார்கள். நிலப் பாகுபாடு ஐந்தாகக் கொண்ட காலத்தில், ஐந்துக்கும் தெய்வங்களைக் கொண்டார்கள். இவர்கள் உருவமுடைய மூர்த்திகள். முதலிரு நிலப்பகுதிகளான குறிஞ்சிக்கும் முல்லைக்கும் முருகனையும் திருமாலையும் தெய்வங்களாகக் கொண்டு, இவர்களைப் பாட்டாலும் ஆட்டத்தாலும் மக்கள் கொண்டாடி வந்தார்கள். இவ்விரு வழிபாட்டினுள், முருகவழிபாடு, காலப்போக்கில் சிவ வழிபாட்டுடன் ஒன்றிவிட, திருமால் வழிபாடு மட்டும் தனித்து வளர்ந்தது. திருமால் வழிபாட்டின் சிகரமாக 6-9 நூற்றாண்டுகளில் ஆழ்வார்கள் தோன்றித் தங்கள் அருட்பாசுரங்களான திவ்வியப் பிரபந்தங்களைப் பாடினார்கள். இவற்றின் பக்திப் பெருக்கு, திருமால் சமயம் என்ற ஒரு தனிச் சமயப் பிரிவையே வகுத்துத் தந்தது. சில நூற்றாண்டுகளில் எப்படியோ இப்பாசுரங்களை மக்கள் மறக்க நேரிட, திருவருள் துணை கொண்டு நாதமுனிகள் மீண்டும் இவற்றை வெளிப்படுத்தி ஆட்சிக்குக் கொண்டுவந்தார்.

அடுத்து வந்த ஆசாரியர் இராமானுசரால், வைணவ சமயம் என்ற தனிச் சமயமும் அதற்கென்று தனியான சித்தாந்தமும் ஏற்பட்டு, நாடெங்கும் இச்சமயம் வளர்ந்தது. உபதேச முறைகள் நெறிப்பட்டன. திருமால் ஆலயங்கள் விளக்கம் பெறலாயின. வழிபாடுகள் முறைப்பட்டன. மக்கள் ஆற்றுப்படுத்தப் பட்டனர்.

இந்தச் சூழ்நிலையில் பதின்மூன்றும் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றி 14 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதிவரை இரு பேராசிரியர்கள் விளங்கினார்கள். இவர்களுள் வேதாந்த தேசிகர் கவிதார்க்கிக சிம்மம் என்று பெயர் பெற்றதோடு உண்மையிலே சிம்மமாகவே திகழ்ந்தார். வைணவ சமயத்தில் ஒரு பெரும் பிரிவாகிய வடகலை என்பது இவர் வழியாகவே வளர்ந்தது. இவர் செய்த வடநூல்கள் தென்மொழி நூல்கள் மிகப்பல. தமிழ் நாட்டில் இச்சமயத்தாரிடையில் தெய்வத்துக்குச் சமமான சிறப்பு இவருக்கு நடைபெறுகிறது. திருவகீந்திரபுரத்தில் இதை இன்னும் காணலாம்.

இவருக்குச் சமகாலத்தவரான பிள்ளை லோகாசாரியர் மூலமும் அவர் தம்பி அழகியமணவாளப் பெருமாள் நாயனார் மூலமும் பின்னர் அப்பரம்பரையில் மணவாள மாமுனிகள் மூலமும் வளர்ந்த வைணவ சம்பிரதாயம் தென்கலைச் சம்பிரதாயம் என்று பெயர் பெறுவதாயிற்று.

வைணவ சம்பிரதாய நூல்கள் 12ஆம் நூற்றாண்டு தொடங்கி விரிவடையலாயின. இச்சமய ஆசாரியர்களே தமிழில் வடமொழியை அதிகமாய்க் கலந்து நூல் செய்தார்கள். மணிப்பிரவாள நடை என்ற இருமொழிக் கலப்பான நடை இக்காலத்தில் மிகவும் அதிகமாக ஆட்சியிலிருந்தது.

இச்சம்பிரதாயங்களின் வழிவந்து இக்காலப் பகுதியில் நூல் செய்தார் வரலாறுகளை இவ்வத்தியாயத்துள் காண்போம்.

## வேதாந்த தேசிகர்

வைணவம் செய்த தவப்பயனுய் காஞ்சிபுரத்தில் தூப்புல் என்ற இடத்தில் வேதாந்த தேசிகர் சகம் 1191க்குச் சரியான கி. பி. 1268 செப்டம்பர் விபவ வருஷம் புரட்டாசி மாதம் திருவோண நாளில் பிறந்தார். தந்தையார் அனந்த சூரி. தாயார் தோதாத்திரி அம்மை. திருவேங்கட முடையான் அருளால் பிறந்த பிள்ளேயாதலால் வேங்கட நாதன் என்று பெயர் வைத்தார்கள். இவர் இராமானுசர் ஏற்படுத்திய 74 சிம்மாசனுதிபதிகளில் ஒருவரின் பரம்பரையில் வந்தார். பூர்வ புண்ணிய வசத்தால் இவருக்கு எல்லாத் திறமைகளும் கல்வித்திறமையும் பிறவியிலேயே கைகூடியிருந்தன. இளம் வயதில் ஒரு நாள் தம்மாதுலர் அப்புள்ளாரோடுகூட அவர் ஆசாரியரான வரதாசாரி என்னும் நடாதூர் அம்மாள் செய்த பிரசங்கம் கேட்கச் சென்றிருந்த போது அவர் இக் குழந்தையின் திருமுக ஒளியிலே மனம் பறிகொடுத்து, விட்ட இடம் தெரியாமல் திகைக்க, இவர் அவ்விடத்தை எடுத்துரைத்தார். இவ்வாறு இளமை முதலே இவருடைய கல்விச்சிறப்பை எல்லோரும் பாராட்டலாயினர். முறைப்படியும் வடமொழி தென்மொழிச் சாத்திரங்களே ஓதி உணர்ந்தார்.

பின்னர் உரிய காலத்தில் திருமங்கை என்ற பெண்ணே மணந்தார். இருபது வயதுக்குள் சகல சாத்திர விற்பன்னரானுர்.

பின்னர் திருப்பாதிரிப்புலியூர் அருகிலுள்ள திருவகீந்திரபுரம் சென்று தாம் கற்ற கருட மந்திரத்தைச் செபித்துக் கொண்டிருந்தார். கருடாழ்வார் இவர் முன்பு தோன்றி அயக்கிரீவ மந்திரத்தை இவருக்கு உபதேசித்தார். அப்போது இவர் முதல் முதலாக கருட பஞ்சாசத்து என்ற பெயருள்ள ஐம்பது சுலோகம் கொண்ட வடமொழி நூலேப் பாடினுர். அதன்மேல், திருமாலே

அயக்கிரீவராகத் தியானித்து வந்த காலத்தில், இவருக்கு அப்பெருமானுடைய தரிசனமும் அருளும் கிடைத்தது. அயக்கிரீவ தோத்திரமும் தேவ நாயக தோத்திரமும் அச்சுத தோத்திரமும் வடமொழியில் பாடினர். வடமொழியில் பாடல் பாடும் ஆற்றல் ஏற்பட்டவுடனேயே அனேக வடமொழி நூல்களும் தமிழ்ப் பிரபந்தங்களும் பாடத் தொடங்கினர். மும்மணிக்கோவை முதலான பல தமிழ் நூல்களைப் பாடினர்.

இவருடைய புகழும் வாதத் திறமையும் எங்கும் பரவின. பதினொரு சமயத்தவரும் வந்து இவருடன் சமயப் பூசல் நடத்தித் தோல்வியுற்றார்கள். பரசமய கண்டனமாகம் பரமத பங்கம் என்ற வடமொழி நூல் பாடினர். ரகுவீரகத்தியம் என்ற உரைநடை நூலும் கோபால விம்சதி என்ற உருக்கமான கண்ணன் தோத்திரமும் பாடினர். சகலகலா வல்லவராக இவர் விளங்கியதைக் கண்டு அழுக்காறு கொண்ட சிலர் இவரிடம் கட்டிடக்கலை இல்லை என்று நிரூபிக்க எண்ணி, ஒரு கொத்தனை ஏவிக் கட்டிட வேலையில் போட்டியிடுமாறு செய்தார்கள். அவ்வாறே கிணறு கட்டுவதாக ஏற்பாடு செய்து கொண்டு கட்டிய போது இவர் கட்டும் திறமையைக் கண்டு அவன் இவர் காலில் விழுந்து வணங்கிப் பிழை பொறுக்குமாறு வேண்டினன் என்ற ஒரு கதை உண்டு. பின்னர் திருக்கோவலூரிலும் காஞ்சியிலும் வடமொழித் தோத்திர நூல்கள் பாடினர். குளிர் காய்ச்சலால் வருந்தியவர்களைக் காக்கவேண்டி, சுதர்சன அட்டகம் பாடினர். பின்னர் சோழ சிங்கபுரம் வணங்கிப் பாடித் திருமலையடைந்து வேங்கடாசலப் பெருமானை வணங்கித் தயாசதகம் பாடினர்.

இதன் பின் இவர் காசி நோக்கி யாத்திரை செய்த போது, வழியில் துங்கபத்திரை நதிக்கரையில், தம்மோடு இளம் பருவத்தில் படித்த மாதவர் என்பவர் வித்தியாரணியர் என்ற பெயரோடு துறவியாகி யாத்திரை செய்துவரக்

கண்டார். இருவரும் அளவளாவிக் கொண்டிருந்தபோது, அங்கிருந்த புக்கராயன் என்ற அரசன் தன் பெண்ணைப் பிடித்திருந்த பிரமராக்கதனை ஓட்டுமாறு இவர்களை வேண்டிப் பெரும் பொருள் தருவதாகச் சொன்னான். இறைவன் செய்யவேண்டிய காரியத்தை நாம் செய்யலாகாது என்று கூறி இவர் மறுத்து விட்டார். ஆனால் துறவியாயிருந்த வித்தியாரணியரோ பொருள் வேட்கை கொண்டு பிசாசை ஓட்டிப் பொருளும் சிறப்பும் பெற்றுப் பின்னர் விசயநகரம் அடைந்து அமைச்சராகவும் அமர்ந்திருந்தார். அதன் பின் இவர் காசி சென்று வழிபட்டுப் பதரிகாசிரமம் அயோத்தி முதலான பதிகளைப் பணிந்து மீண்டு பூரி அகோபிலம் முதலான பதிகளை வணங்கிக் கொண்டு திருப்பதிக்கு வந்தார். சில நாள் கழித்து அங்கிருந்து புறப்பட்டுப் பல தலங்களையும் பணிந்து ஸ்ரீபெரும்புதூர் அடைந்து இராமானுசர் சந்நிதியை வணங்கிக் காஞ்சிக்கு வந்தார்.

இங்கிருந்த காலத்தில் மந்திர சித்தி பெற்ற ஒரு வேதாந்தத் துறவி இவரோடு வந்து வாதிட்டுத் தோல்வியடைந்தார். ஆனால் இவரைத் துன்புறுத்த எண்ணித் தாம் குடிக்கும் நீர்முழுமையும் மந்திர சக்தியால் இவர் வயிற்றினுள் செல்லுமாறு செய்து அத்துறவி ஒரு குளத்தில் இறங்கி நீர் குடித்துக் கொண்டே இருந்தார். மந்திரத்தினால் தம் வயிறு துன்புறுவதைக் கண்ட தேசிகர் உண்மையை உணர்ந்து எதிரில் இருந்த ஒரு தூணைக்கீறி அதில் தண்ணீர் முழுமையும் வெளிப்படுமாறு செய்தார். கண்ட மந்திரவாதி வெட்கி ஓட்டம் பிடித்தார்.

தேசிகருக்கு எந்த நாளிலும் பொருளில் நாட்டம் சென்றதில்லை. இவர் எளிய நிலையை உணர்ந்த வித்தியாரண்யர், தம் அரசரிடம் வந்து பொருள் பெறுமாறு இவருக்குக் கடிதம் அனுப்ப, அவருக்கு மறுமொழியாக இவர் வைராக்கிய பஞ்சகம் என்ற ஐந்து சுலோகம் எழுதி விடுத்தார். பின்னர் திருவரங்கத்தில் வைணவர்களை அடக்கி

வந்த ஒரு வடநாட்டுப் புலவனை வெல்லவேண்டுமென்று அங்குள்ளோர் இவருக்கு வேண்டுகோள் அனுப்ப, இவர் அதை ஏற்றுத் திருவரங்கம் சென்றார். தேசிகர் வடிவம் சிறியதாகையால் இவரைக் கண்ட அப்புலவன் "ஐயா, உம்முடைய கீர்த்தி பெரிது. ஆனால் ஆகாரம் குறுகியிருக்கிறதே!" என்று கூறக் கேட்ட இவர் "ஆகாரம் நெடிலாயிருக்க அதைக் குறுகியது என்று எவ்வாறு சொன்னீர்?" என்று மடக்கிக் கேட்டு அதுகொண்டே விவாதத்தைத் தொடங்கினார். பல நாள் வாதம் நடந்தபின் அப்புலவன் தன் தோல்வியை ஒப்புக்கொண்டான். அந்த வாதமே வேதாந்த தேசிகர் செய்த சததூஷணி என்ற நூல். எனினும், அப்புலவனுடைய கர்வம் அடங்கவில்லை. "இங்கு உமக்கு முதல் மரியாதை நடக்கட்டும். ஏனையோர் அனைவருக்கும் நானே பெரியவனாகையால் எனக்கு இரண்டாவது மரியாதை நடக்கவேண்டும்" என்று அப்புலவன் திட்டம் செய்தான். ஆனால் திருவரங்கத்தார் அனைவருக்கும் இது பிடிக்கவில்லை. தேசிகரோ இதைக் கவனித்து, நயமாக ஏற்பாடு செய்தார். இவருடைய வாழ்க்கையில் அடக்கமும் பணிவுமே சிறந்த குணங்களாக விளங்கின; ஆகையால், இந்தச் சந்தர்ப்பத்தில் இவர் தம்மை அனைவருக்கும் அடியவராகப் பாவித்து, ஆலயத்திலிருந்த அடியவர் அனைவருக்கும் பிரசாத மரியாதைகளை முதலில் வழங்கச்செய்து, பிறகு மரியாதைகளைத் தாம் பெற்று, தமக்குப் பின் அப்புலவன் கேட்டபடி அவருக்கு மரியாதை வழங்கச் செய்தார். புலவனுக்குப் பிறகு மரியாதை பெறுவோர் யாருமிலர். கண்ட புலவன் நாணித் தலைகுனிந்தான்.

இங்கு பெரிய பெருமாளான திருவரங்கநாதன் பாஷ்ய உபன்னியாசம் செய்யும்படி இவருக்குக் கட்டளையிட்டார். அப்படியே இவர் செய்தார். அதுவே அதிகரண சாராவளி என்ற நூலாயிற்று. பெருமாளும் பிராட்டியாரும் இவருக்கு உபய வேதாந்தாசாரியர், சர்வ தந்திர சுதந்திரர் என்று

பெயர் சூட்டினார்கள். வேதாந்த மார்க்கத்துக்கு இவரே சிறந்த ஆசாரியராய் விளங்கியமையால் அது முதல் இவர் வேதாந்த தேசிகர் என்று பெயர் பெற்று விளங்கலானார். திருவரங்கத்தில் இவர் சமய தோத்திர நூல்கள் பல பாடினார். திருவரங்கக் கோயிலைப்பற்றிய பாடல்களில் ஒன்று பின் வருவது:

ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்தி மன்னர்க்களித்தகோயில்
தோராத தனிவீரன் தொழுத கோயில்
துணையான வீடணற்குத் துணையாங் கோயில்
சேராத பயனெல்லாம் சேர்க்கும் கோயில்
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்தகோயில்
தீராத வினையனைத்தும் தீர்க்குங் கோயில்
திருவரங்கம் எனத்திகழுங் கோயில் தானே.

இதே சமயத்தில் இவர் எண்ணற்ற வடமொழி நூல்களையும் இயற்றினார். பின்னர் வித்தியாரணியர் அழைப்பிற்கிணங்கி இவர் மதுரை வந்து அங்கு அட்சோப்பிய முனிவர் என்ற துவைதமத ஆசாரியருக்கும் அவருக்கும் ஏற்பட்ட வாதத்தில் மத்தியஸ்தம் செய்வதாக ஒப்புக்கொண்டு, வாதத்தைக் கேட்டு முனிவரே வெற்றிபெற்றதாக எடுத்துரைத்தார். இதில் தம் நண்பருடைய கோபம் ஏற்பட்டதையும் இவர் பொருட்படுத்தியிலர். பின்னர் கிருட்டின மிச்சிரரை வென்று சங்கற்ப சூரியோதயம் என்ற நாடகம் எழுதினார். டிண்டிமனை வென்று யாதவாப்யுதயம் என்ற காவியம் பாடினார். பிறகு தென்னாட்டுத் திருப்பதிகள் தோறும் சென்று பணிந்தார். ஆண்டாள் சந்நிதியில் கோதாஷஷ்டி பாடினார்.

பின் காஞ்சி திரும்பியபோது, அழுக்காறு உடையவர்கள் ஒரு பாம்பாட்டியை இவர்மீது ஏவ, அவனுடைய பாம்புகள் இவர்மீது எதுவும் செய்ய இயலாது போயின. சங்க பாலன் என்ற கொடிய நச்சுப்பாம்பு ஒன்று மட்டும்

இவரிடம் நெருங்கி வரவும் இவர் கருடதியானம் செய்தார். கருடன் பிரசன்னமாகிப் பாம்பைத் தூக்கிக்கொண்டுபோய் விட்டான். கண்ட பாம்பாட்டி நடுநடுங்கி இவர் காலில் விழுந்து வணங்கி சங்க பாலன் இல்லாவிட்டால் தன்னுடைய வாழ்க்கையே பாழ் என்று விண்ணப்பிக்க, தேசிகர் மனமிரங்கி, கருடாழ்வார்மீது கருட தண்டகம் பாடிச் சங்கபாலனை மீட்டுக்கொடுத்தார்.

காஞ்சியிலிருந்து மீண்டும் திருவரங்கம் நடந்தே சென்றார். செல்லும் வழியில் உணவுக்கு வசதியின்றி உபவாசம் இருக்க நேர்ந்தது. அப்போது இவரது வழிபடு மூர்த்தியாகிய அயக்கிரீவர் (குதிரை முகமுடைய திருமால் வடிவம்) ஒரு வெள்ளைக் குதிரை வடிவெடுத்து ஒரு வணிகன் கடையில் சென்று தானியங்களை உண்ணலானார். எப்படி விரட்டியும் குதிரை போகாமையால் வணிகன் இவரிடம் வந்து முறையிட்டான். இவர் நிகழ்ந்ததை யூகித்து உணர்ந்து, அயக்கிரீவருக்கு நிவேதனம் செய்யாமையால் இவ்வாறு நிகழ்ந்தது என்று துணிந்து, அவ்வணிகனிடம் கொஞ்சம் பால் வாங்கி நிவேதனம் செய்து தாமும் உட்கொண்டார். குதிரையும் மறைந்துவிட்டது. பொழுது விடிந்துபார்த்தால் குதிரை வாய் வைத்த இடமெல்லாம் கடையில் பொன்னாக மாறியிருப்பதை வணிகன் கண்டான். பிறகு தேசிகர் நடந்து சென்று திருவரங்கம் அடைந்தார். அங்கு மணிப் பிரவாள நூல்கள் பல செய்தார்.

தினந்தோறும் விடிய ஒரு சாமம் முதல் இரவு துயிலச் செல்லும் வரையில் உள்ள நேரத்தை ஒழுங்குபடுத்தி இவர் அமைத்திருந்த வேலைத்திட்டம் தினசரியை எனப்பெறும். அது வைணவருக்கு மட்டுமின்றி அனைவருக்குமே நித்திய கருமங்களுக்கான ஒரு சிறப்புமிக்க வழிகாட்டியாகும்.

இவரிடத்தில் பிரவாக ஜீயர், வெண்ணெய்க் கூத்தர் ஜீயர், பேரருளாளர் ஆகியோர் மாணாக்கராயிருந்தார்கள். மாணாக்கருள் தலைவராயிருந்தவர் பேரருளாளர்.

தேசிகரின் பெருமையைக் கண்டு பொறாமை கொண்ட வைணவர் பலர் இவரை வாதத்துக்கு அழைத்தனர். இவரோ பாகவதர்களின் திருவடிகளைச் சிரமேல் தாங்குகின்றேன் என்று பாடி யிருந்தமையால், அவர்களோடு இவர் வாதம் செய்யப்போகவில்லை. அவர்கள் இதைப் பழித்ததோடல்லாமல், ஓர் இரவில் இவருடைய திருமாளிகையின் வாயிலில் இவர் வெளிவந்ததும் தலையில் படும்படியாகச் சில பாதரட்சைகளை வரிசையாகக் கட்டித் தொங்கவிட்டிருந்தார்கள். கதவைத் திறந்தவுடன் தேசிகர் தலையில் இவை பட்டபோது, இவர் சிறிதும் கோபமோ மனக்கலக்கமோ கொள்ளாமல், "பரமபதநாதன் சந்நிதி அடைதற்குச் சிலர் கர்மத்தைத் தஞ்சமாகப் பிடிக்கிறார்கள். சிலர் ஞானத்தைப் பின்பற்றுகிறார்கள். நாம் பாகவத பாதரட்சையைப் பற்றுகிறோம்" என்று அர்த்தங்கொள்ளுமாறு ஒரு சுலோகத்தைச் செய்தருளினர்.

அந்நாளில் இவருக்கு ஒரு புதல்வன் பிறந்தான். பெருமாள் கட்டளைப்படிக் குழந்தைக்கு வரதன் என்று பெயரிட்டார். அப்போது ஒரு சமயம் இவருடைய தந்தையின் சிராத்த நாளில் அதிதிபோஜனத்துக்குத் திட்டமிடப்பட்டிருந்த வைணவர்கள், பொறாமைக்காரர்களின் சூழ்ச்சியினால் வராது நின்றுவிட, அப்போது அயக்கிரீவரும் பேரருளாளப் பெருமாளும் தோன்றி உணவுகொண்டு இவருடைய பெருமையைப் பலருக்கும் புலப்படுத்தினர்கள்.

தேசிகர் வாழ்க்கையில் மிகவும் கடுமையான நெறியுடையவர். சாதத்தில் அயக்கிரீவர் சிந்திய அமுதை தாம் வேண்டும்போது பின்னர் கொடுக்கும்படி இவர் தம் மனைவியாரிடம் கொடுத்து வைத்திருக்க, இவருடைய இரண்டு வயதுக் குழந்தை அதை எடுத்துக் குடித்துவிட்டான். அதைக் கண்ட இவர் 'சந்ததி இல்லாமல் போகக்கடவது' என்று தம் குமாரனுக்குச் சாபம் கொடுத்தார். மணம் செய்ய விரும்பி யாசித்து வந்த ஒரு வைணவனைப்

பொறாமைக்காரர்கள் இவரை இழிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு இவரிடம் சென்று யாசிக்கும்படி அனுப்பினார்கள். இவர் திருமகளை வேண்டிக் கனகதாராஸ்தவம் பாடினார். பொன் மழை பொழிய, அந்த வைணவன் வேண்டிய பொன்னை அள்ளிக்கொண்டு சென்றான். ஒருநாள், இவருடைய ஏகாதசி விரதத்தைப் பங்கம்செய்ய எண்ணின பகைவர், பெருமானுடைய பிரசாதமாகிய ததி அன்னத்தை உண்ணுமாறு அர்ச்சகரைக் கொண்டு இவரை நிர்ப்பந்தித்தார்கள். இது பெருமாள் கட்டளையானால் ஏற்றுக்கொள்கிறேன் என்று இவர் சொல்லி ஏற்றபோது, பெருமாள் அர்ச்சகர்மீது ஆவேசித்து, 'இது நம்முடைய நியமனமில்லை' என்று சொல்லி, அன்னத்தைப் பறித்து விட்டார்.

தேசிகர் எப்பொழுதும் பொருளில் பற்றின்றியே வாழ்ந்தவர். இவரைச் சோதிக்க எண்ணிய சிலர், இவர் அமுது படைக்கக் கையேந்திய சமயம், பொன் வெள்ளி நாணயங்களையும் சேர்த்துக் கையில் இட, இவர் அவற்றையெல்லாம் ஏற்றுக் குப்பையில் போட்டு வந்தார்.

திருவரங்கத்தில் அப்போதிருந்த அழகியமணவாளப் பெருமாள் நாயனார் கவிபாடுவதில் வல்லவர். அவருக்குத் தேசிகர் பெற்றிருந்த கவிதார்க்கிக சிம்மம் என்ற விருது பற்றி மிகுந்த பொறாமை. ஒருநாள் அவர் பெருமாள் சந்நிதியில் தேசிகர் இருந்தபோது இவரைப் பார்த்து, "இன்றிரவுக்குள் யார் ஆயிரம் பாடல் பாடுகிறார்களோ அவரே கவிதார்க்கிக சிம்மம் என்ற விருதுக்கு உரியவர்" என்று சூள் உரைத்தார். தேசிகரும் அதை ஏற்றுக்கொண்டார். இரவு அயக்கிரீவருடைய கருணையினால், விடிய ஒருசாமம் முன்னதாகவே தேசிகர் **பாதுகா சகஸ்ரம்** என்ற ஆயிரம் பாடல்களைப் பாடி முடித்தார். நாயனாரோ இரவு முழுதும் விழித்திருந்து எழுதியும் தாம் தொடங்கிய பாதகமல சகஸ்ரத்தில் ஐந்நூறு பாடல்களுக்குமேல் பாட முடியவில்லை.

பொழுது விடிந்து தேசிகர் எம்பெருமான் சந்நிதியில் ஆயிரம் பாடல்களையும் வாசித்து, 'கவிதார்க்கிக சிம்மம் என்ற பெயர் உமக்கே தகும்' என்ற பாராட்டையும் அழகிய மணவாளப் பெருமாளிடத்தில் பெற்றார். நாயனாரும் பிறகு தம் பகைமை நீங்கித் தேசிகரிடத்தில் அன்போடு ஒழுகி வரலாயினர்.

யாருடைய மனத்தையும் நோவச்செய்வது தேசிகருடைய இயல்பன்று. பாடி முடிக்கத் தவறிய நாயனாரைத் தேற்ற எண்ணி ஒரு சுலோகம்பாடினார். 'ஒரு பன்றி அருவருக்குமாறு நூறு குட்டிகளை விரைவில் பெற்று விடுகிறது. ஆனால் யானையோ வெகுநாள் கழித்து அரசனும் கொண்டாடத்தக்க ஒரு குட்டியைப் பெறுகிறது.' இவ்வாறு இவர், தம்மைத் தாழ்த்தி நாயனாரை உயர்த்திப் பாடியதைக் கேட்டபோது அவருடைய பொறாமை விலகி, இவருடைய பெருந்தன்மை அவருக்கு விளங்கிற்று.

இந்தக் காலத்தில், இவருக்கு வடக்குத் திருவீதிப் பிள்ளை செய்த மூவாயிரப்படி கிடைக்காமையால், தாமே புதிதாக நிகம பரிமளம் என்ற ஒரு பேருரை திருவாய்மொழிக்குச் செய்தார். பின்னர் திவ்வியப் பிரபந்த சாரமாக இரண்டு வடமொழி நூல்களும் அமலனாதிபிரான் என்ற பாணாழ்வார் பிரபந்தத்துக்கு மணிப்பிரவாள வுரையும் செய்தார். பிரபந்தசாரம் ஆகார நியமம் முதலிய தமிழ் நூல்களையும் பாடினார்.

ராசமகேந்திர பட்டணத்திலிருந்த அரசருக்கு இராமானுச சித்தாந்தத்தை நன்கு புகட்டினார். பின்னர் ஒருநாள் இவர் தம் திருமாளிகையின் திண்ணையில் உட்கார்ந்து நூல் எழுதிக்கொண்டிருந்த சமயம், வீதியில் கந்தாடைத் தோழப்பர் இலக்குமணாசாரியர் பல்லக்கில் சென்றார். அதைப் பார்க்காமையால் இவர் எழுந்து வணக்கம் செய்யவில்லை. அலட்சியம் செய்தார் என எண்ணிய இலக்குமணா

சாரியரின் சீடர்கள் இவர் காலைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளிப் போட்டுப் போய்விட்டார்கள். இவர் எழுந்து சிறிதுதூரம் பல்லக்கின் பின்னேயே மிகவும் பணிவோடு சென்று திரும்பி வந்தார். பிறகு இனி இவ்வூரில் இருப்பது, எவ்விதத்திலும் பாகவதர்களுக்குத் தவறுசெய்யநேரும் என்று அஞ்சி, இவர் கோயமுத்தூர் ஜில்லாவிலுள்ள சத்திய மங்கலம் என்ற ஊரில் காவேரித்தீரத்தில் தங்கி, பகவத் காலக்ஷேபத்தில் ஈடுபட்டிருந்தார். ஆனால் இப்பால் இலக்குமணாசாரியருக்கு உடலில் வெண்குட்ட நோய் தோன்றிற்று. அவருடைய மனைவி இது கண்டு, இந்நோய் அவருடைய மாணாக்கர் தேசிகருக்குச் செய்த அபராதத்தால் விளைந்தது என்றும், இவரை வழிபட்டாலன்றித் தீராது என்றும் கூறவே, இலக்குமணாசாரியர் இதை ஒப்புக்கொண்டு சத்திய மங்கலம் சென்றார். தேசிகர் அவரை வரவேற்று உபசரித்தார். அவரும் தேசிகரை ஆசாரியராகக்கொண்டு வழிபாடு செய்யவே நோய் நீங்கிற்று. சில நாளைக்கெல்லாம் இலக்குமணாசாரியர் மனைவி பெற்ற குழந்தை தேசிகருடைய தீர்த்த விசேடத்தால் பிறந்தான் என்று கருதி, தீர்த்தப் பிள்ளை என்றும் அவனுக்குப் பெயரிட்டார்கள்.

தேசிகர் மீண்டும் அரங்கநாதன் சேவையை விரும்பித் தாம் மட்டும் திருவரங்கம் வந்தார். அப்போது முகம்மதியர் கலகம். அவர்கள் திருவரங்கத்தைச் சூறையாடினார்கள். கோயிலார், நள்ளிரவில் பெருமாளையும் தாயாரையும் ஒரு பெட்டியில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, ஓடிவிட்டார்கள். பிள்ளை லோகாசாரியரும் உடன் சென்றார் என்பர். அப்போது திருவரங்கத்திலிருந்த சுருதப்பிரகாசபட்டர் என்பவர் வேதவியாசபட்டர் பராசரபட்டர் என்ற தம் இரு பிள்ளைகளையும் தாம் எழுதிய சுருதப்பிரகாசிகை என்ற ஸ்ரீ பாஷ்ய விரிவுரையையும்தேசிகரிடம் ஒப்புவித்துப் பாதுகாக்கும்படி வேண்டிக்கொண்டார். தாம் முதியவராயிருந்தமை

யால் ஓடமுடியாமல், முகம்மதியருடைய வாளுக்கு இரை ஆயினர். தேசிகர் பின்னர் தம்மையும் இப்பிள்ளைகளையும் பிணங்களுக்கிடையில் பிணமாக ஒளித்துக்கொண்டு தந்திரமாகத் தப்பிப் பிழைத்துத் தென்னாட்டுக்கு ஓடிவிட்டார். சென்ற இடத்தில் அப்பிள்ளைகளுக்கு நன்முறையில் கல்வி கற்பித்து வந்தார். நெடுநாள் கழித்து திருவரங்கம் கலகம் அடங்கி நல்ல நிலைமைக்கு வந்ததென்று கேள்வியுற்று, மீண்டும் இங்கு வந்து, கோயில் வழிபாடுகளைக் குறைவற நடத்திப் பாடல் பாடிக்கொண்டு தங்கியிருந்தார்.

கடைசி வரையில் தேசிகருடைய வாழ்க்கையில் பகைவருடைய தொந்தரவு ஓயவில்லை. ஒரு சிற்பி ஒருநாள் இவரது சிற்பக்கலைத் திறனைச் சோதிக்க வந்தான். இவரைப் போலவே ஓர் உருவம் இவர் செய்யவேண்டுமென்று சொல்ல, இவரும் சம்மதித்து அவ்வாறே மெழுகினால் சிலை அமைத்துக் கொடுத்து அதைப் பீடத்தில் இணைத்து வைக்கும்படி அச்சிற்பிக்குக் கட்டளையிட்டார். அவன் இணைத்து வைக்க வழியறியாமல், உருவத்திற்குக் கண் சரியாக இல்லை என்று தன்னாயுதத்தால் கன்னத்தைச் சிறிது கீற, தேசிகருடைய கன்னத்தில் இரத்தம் கசிந்தது. பார்த்தோர் அவனைப்பழித்தனர். தேசிகர், பீடத்தை வாங்கி அதில் சிலையை இணைத்து வைத்துக் காட்டினார். சிற்பியோ தன் அறியாமைக்கு நாணி அங்கிருந்து ஓடிவிட்டான். தேசிகர் வடித்த வடிவமே சிலை உருவமாக இன்றும் கோயிலில் சீரங்க நாச்சியார் சந்நிதியில் வைக்கப்பெற்றிருக்கிறது என்று சொல்வர். இச்சமயத்தில் தேசிகர் சிற்பார்த்த சாரம் என்ற ஒரு நூலும் செய்தாராம்.

இவ்வாறு திருவரங்கத்திலேயே பகவத் தியானத்தில் தம் வாழ்நாளைக் கழித்துக்கொண்டிருந்த தேசிகர் தமது 102 ஆம் வயதில் (1369) பரமபதம் அடைந்தார்.

தேசிகர் வாழ்க்கை வரலாற்றைக் குருபரம்பரைகள் விரித்துக் கூறும். தேசிகன் என்ற சொல்லுக்கு ஆசாரியன்

என்பது பொருள். இவர் தோன்றிய பிறகு இவருக்கே யுரிய சிறப்புப் பெயராக இச்சொல் அமைந்துவிட்டது. வேதாந்த தேசிகன் நிகமாந்த மகாதேசிகன் (நிகமம்-வேதம்) என இவரைப் பெரியோர் வழங்குவர். வடமொழியில் இவர் பாடிய சாத்திரங்கள், தோத்திரங்கள் முதலியன 82 என்பர். தமிழில் இவர் பாடிய பிரபந்தங்கள் அமிர்தரஞ்சனி முதலான 24. இவை தேசிகப் பிரபந்தம் என வழங்கும். தமிழுக்குப் பெருமையளித்து, ஆழ்வார்கள் பாடியருளிய நாலாயிரப் பிரபந்தங்கள் வடமொழி வேதத்துக்குச் சமமாகும், தமிழ் வடமொழிக்குச் சமமாகும் என்று இவரே நிலைநாட்டினர். இதனாலேயே உபய வேதாந்த ஆசாரியர் என்ற பட்டமும் இவர் பெற்றார். ஆலயங்களில் ஆழ்வார் பாசுரங்களைச் சேவிக்கும் முறையை இவர் பாதுகாத்தார். இவரே சரணாகதிதத்துவத்தை நிலைநாட்டினவர். இவர் கொள்கைகளை முழுமையும் பின்பற்றுவோர் வடகலை வைணவர் என்போர். வைணவ சமயத்தில், ஆண்டவனைத் தேடுவதில் மர்க்கட நியாயம் மார்ஜால நியாயம் என இரு நெறிகள் சொல்லப்பெறும். இவற்றுள் வடகலை நெறியானது, ஆண்டவனை நாமே சென்று பற்றவேண்டும் (குரங்குக்குட்டி போல) என்று சொல்லுகிற மர்க்கடநெறியாகும். அதுவே இவருடைய நெறி. தென்கலையானது ஆண்டவனே வந்து உயிர்களைக் காப்பான், பூனை தன் குட்டியைத் தூக்கிச் செல்வதுபோல (மார்ஜாலம்-பூனை) என்று கூறும். ஸ்ரீ பாஷ்யத்தையே பிரதானமாகக் கூறியது வடகலை நெறி.

தேசிகப் பிரபந்தத்துள் அடங்கிய பாடல்களின் தொகை 405. மொத்தம் 24 பிரபந்தங்களுள், பந்து கழல் அம்மானை ஊசல் ஏசல் என்பனவும் மும்மணிக்கோவையுள் 20 பாடல்களும் இறந்துபோயின. அமிருதரஞ்சனி என்ற முதல் பிரபந்தம் (39 பாடல்) எல்லா யாப்பு விசேடங்களும் கொண்டது. திருமால் திருவடியைச் சேர்க என்ற

உபதேசம். அடுத்தது **அதிகார சங்கிரகம்** கட்டளைக்கலித் துறையும் விருத்தம் பலவும் கொண்டது. 55 பாடல்; 8-40 வரையுள்ள கலித்துறைப் பாடல்கள் அந்தாதித் தொடை. கலம்பகத்துள் புயவகுப்பு என்ற உறுப்புப்போல, திருவடிப் பெருமை கூறும் 51 ஆம் பாடல் சிறப்பானது. இந் நூலின் இறுதிப் பாடல் (56) இவருடைய வாழ்க்கைத் தத்துவத்தையே சுருக்கிக் கூறுவதுபோல் அருமையாக அமைந்துள்ளது. "யாம் எழுதிய நூல்களை உலகம் கொண்டாலும் சரி, கோதென்று இகழ்ந்தாலும் சரி, அதுபற்றி எமக்குச் சிந்தனையில்லை. ஏனெனில், எம் தெய்வமான ஹயக்கிரீவர் எமது உள்ளத்தில் எழுதியதையே யாம் ஓலையில் இட்டோம்."

வெள்ளைப் பரிமுகர் தேசிக ராய்விர காலடியோம்
உள்ளத் தெழுதியது ஓலையி லிட்டனம் யாம்இதற்கென்
கொள்ளத் துணியினும் கோதென் றிகழினும் கூர்மதியீர்
எள்ளத் தனையும்உக வாதிக ழாதெம் எழில்மதியே.

**அம்ருதாஸ்வாதினி** 37 பாடல்கள். கலித்துறையும் விருத்தமும். கடைசி மூன்று பாடல்கள் சிறப்பாகத் திருப்பாணாழ்வாரைப் போற்றுவன. **பரமபத சோபானம்** என்பது முன்னையவை போலவே 21 பாடல்கள். **பரமதபங்கம்** 54 பாடல்கள். கடைசிப் பாடல் புய வகுப்பு. **அத்திகிரி மகாத்மியம்** என்பது காஞ்சி அத்திகிரி வரதராசப் பெருமானைப் புகழ்வது, 29 பாடல். **அடைக்கலப் பத்து** அத்திகிரியருளாளர் அடைக்கலமாக 11 பாடல். **அர்த்த பஞ்சகம்** உறுதிப்பொருள் ஐந்தும்பற்றி அத்திகிரிப் பெருமாள் பெயரால் 11 பாடல். **வைணவ தினசரி** என்பது குறிலெழுத்தேயுள்ள கலிவிருத்தம், 10 பாடல். **திருச்சின்ன மாலை** வரதன் வரும் திருச்சின்னவுரையைக் கூறுகிற 11 பாடல். **பன்னிரு நாமம்** என்பது திருமாலின் துவாதச நாமங்களைச் சொல்லித் துதிக்கிற 13 பாடல்கள். **திருமந்திரச்சுருக்கு** (10) **துவயச் சுருக்கு** (12) என்பன மந்திரப்

பொருளைச் சுருக்கியுரைப்பன. **சரம சுலோகச் சுருக்கு** என்பது பார்த்தசாரதியாகத் தேர்த்தட்டில் நின்ற கண்ணபிரான் எல்லாச் செயல்களையும் விட்டு என்னைச் சரண் புகுவாயாக என்று அருச்சுனனுக்குக் கூறிய உபதேசத்தைச் சுருக்கி 10 பாடல்களில் கூறுவது. **கீதார்த்த சங்கிரகம்** 21 பாடல்களில் கீதையின் சாரத்தைச் சுருக்கிக் கூறுவது. **மும்மணிக் கோவை** 10 பாடல்களில் நாராயணனைப் புகழ்கிறது. **நவரத்தின மாலை** திருவகீந்திரபுரத் தோத்திரம், 10 பாடல். **ஆகார நியமம்** என்பது ஸ்ரீவைஷ்ணவனாயிருப்பவன் உணவில் கொள்ளவேண்டிய முறைகளையும் தள்ளவேண்டியவைகளையும் 21 பாடல்களால் கூறுவது; எல்லோரும் படித்தறிய வேண்டிய நல்ல சிறுநூல். **பிரபந்தசாரம்** என்பது திவ்வியப் பிரபந்தம் பாடியருளிய ஆழ்வார்கள் பெயர், அவதரித்த நாள், திங்கள், ஊர், பாடிய பாடல் தொகை முதலியன தொகுத்துரைப்பது, பாடல்கள் 20.

தேசிகருடைய தமிழ்ப் பாடல்கள் எளிமையான நடையுடையன. எடுத்துக்காட்டாக அதிகார சங்கிரகம் 43ஆம் பாடலை இங்குக் குறிப்பிடலாம்.

கண்ணனடி யிணைஎமக்குக் காட்டும் வெற்பு
கருதுமவர் இருவினையும் கடியும் வெற்பு
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு
தெளிந்த பெருந்தீர்த்தங்கள் தெரிந்த வெற்பு
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்பு
பொன்னுலகிற் போகமெலாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே.

இவருடைய மகனார் நயினாராசாரியர் எனப்படுவார். இவர் மீது அவர் **பிள்ளையந்தாதி** பாடினார். வேறு மிகப் பலவான தனியன்கள் வாழித் திருநாமம் திருவோலக்கப் பாட்டு நூற்றந்தாதி முதலான நூல்கள் இவர் மீது

*செய்யப்பெற்றுள்ளன. இவரைப் போற்றும் பாடல்களில் ஒன்று:*

நானிலமும் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின் மாறன் மறைவாழ—ஞானியர்கள்
சென்னியடி சேர்தூப்புல் வேதாந்த தேசிகனே
இன்னமொரு நூற்றாண் டிரும்.

*இவரைக் குறித்த வடமொழித் தனியன் பின்வருவது:*

ஸ்ரீராமானுஜ தயாபாத்ரம் ஜ்ஞானவை ராக்யபூஷணம்
ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்.

*தேசிகர் காலமாகி இரண்டாண்டுகளுக்குப் பின்னர் இவர் சோபனார்யாவைப் புகழ்ந்து பாடிய இரு வட மொழிச் சுலோகங்கள் திருவரங்கம் பெரிய கோயிலில் (கி. பி. 1371 இல்) பொறிக்கப்பட்டுள்ளன. தேசிகர் சிறப்பைக் கூறும் பாடலும் வாழித் திருநாமமும் பின்வருவன :*

வாழி இராமா நுசப்புள்ளான் மாதகவால்
வாழு மணிநிக மாந்தகுரு—வாழியவன்
மாறன் மறையுமிரா மாநுசன் பாடியமும்
தேறும் படியுரைக்குஞ் சீர்.

வஞ்சப் பலசமயம் மாற்றவந்தோன் வாழியே
மன்னுபுகழ்ப் பூதூரான் மனமுகப்போன் வாழியே
கஞ்சத் திருமங்கை யுகக்கவந்தோன் வாழியே
கலியனுரை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே
செஞ்சொல் தமிழ்மறைகள் தெளிந்துரைப்போன் வாழியே
திருமலைமால் திருமணியாய்ச் சிறக்கவந்தோன் வாழியே
தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே
செந்தமிழ்த் தூப்புல் திரு வேங்கடவன் வாழியே.

*வேதாந்த தேசிகர், காஞ்சியில் வாழ்ந்த காரணத்தால், வடகலையாருக்குத் தலைநகர் காஞ்சியாயிற்று; தென்கலையாருக்கு வழக்கம்போல் திருவரங்கமே தலைநகரமாகும். அமைப்பால் இந்நகரங்கள் தமிழ் நாட்டின் வடக்கிலும் தெற்கிலும் உள்ளன.*

பெரியவாச்சான்பிள்ளை சரித்திரம் கூறுகின்ற குருபரம் பரை மூவாயிரப்படியானது வேதாந்த தேசிகரைக் குறித்த சம்பவமொன்றும் கூறும்; அதையும் இங்குக் கூறுதல் பொருந்தும். தேசிகர் புதுச் சம்பிரதாயத்தைப் படைத் துக் கொண்டார் என்று பிறர் கருதியதற்கு ஒரு காரணம், சாதிபற்றி இவர் கொண்டிருந்த கருத்து. பிராமணனாய்ப் பிறந்தவனே முத்தியடையும் தகுதி பெற்றவன், ஏனை யோர் பிராமணனாய்ப் பிறந்தே முத்தியடைய வேண்டிய வர்கள் என்பது இவர் கொள்கை. இது இராமானுச சித் தாந்தத்துக்கு முரணானது; பாகவதர்களுக்குச் சாதியில்லை என்பதே தென்கலையார் சித்தாந்தம். 'ஆழ்வார்களைப் போன்ற பரம பக்தர்களுக்கும் சாதி கழியுமோ கழி யாதோ?' என்ற ஐயம் இவருக்குண்டு. இதுபற்றியே பின் வரும் வரலாறு சொல்லப்படும். தமக்குத் திருவாராதன மூர்த்தி சாதிக்க வேண்டுமென்று இவர் பெரியவாச்சான் பிள்ளையை வேண்ட, அவர் "தம்முடைய கோயிலாழ்வார் திருக்காப்பை நீக்கச் சொல்லி, தூப்புல் பிள்ளையைப் பார்த்து, 'நீர் போய்க் கண்ணைக் கட்டிக்கொண்டு ஒருவரை எழுந்தருளப் பண்ணிக்கொள்ளும்' என்று நியமித்தார். தூப்புல் பிள்ளையும் எழுந்திருந்து சந்நிதி யிலே போய்த் தண்டன் சமர்ப்பித்துத் திருக்கண்களைக் கட்டிக்கொண்டு ஒருவரை எழுந்தருளிப் பண்ணிக் கொண்டு பார்க்குமிடத்தில், அந்தத் திருக்கோலம் திருப் பாணாழ்வாராயிருந்தார். அவரைக் கொண்டு தூப்புல் பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை சந்நிதியிலே வந்து காட் டினார். பெரிய வாச்சான் பிள்ளையும், 'உம்முடைய நெஞ் சைச் சோதிக்கைக்காக எம்பெருமான் இப்படி க்ருபை பண்ணினான். ஆகையாலே இவரை நித்தியமாக ஆராதித் துக் கொண்டு இவருடைய பிரபந்தமான அமலனாதிபிரா னுக்கு ஒரு வியாக்கியானமிடும். சாதி நிரூபணம் அடியாக வந்த அபசாரங்களையெல்லாம் பொறுத்தருளுவர்' என்று அருளிச் செய்தார்.........தூப்புல் பிள்ளையும் அத்தைப்

பெற்றுச் சந்துஷ்டராய் அமலனாதிபிரானுக்கு வியாக்கியானஞ் செய்து பெரிய வாச்சான் பிள்ளை சந்நிதியிலே விண்ணப்பஞ் செய்தார். பெரிய வாச்சான் பிள்ளையும் அத்தைக் கேட்டு மிகவும் உகந்தருளினார்." குருபரம்பரைக் கதைகளுள் பல, தென்கலை வடகலைப் பூசலால் எழுந்தன.

தேசிகர் செய்த அமலனாதிபிரான் வியாக்கியானம் **முனிவாகன போகம்** என்று பெயர் பெறும்; திருப்பாணாழ்வார் திருவரங்கநாதன் ஆஞ்ஞைப்படி லோகசாரங்க முனிவர் தோளில் எழுந்தருளி வரப்பெற்ற காரணம்பற்றி முனிவாகனர் என்ற பெயருடையவராதலால். தேசிகர் நாலாயிரப் பிரபந்தத்துள் இவ்வொன்றுக்குமே வியாக்கியானமெழுதியுள்ளார் என்பதும் இங்குக் கருதத்தக்கது.

## நயினாராசாரியர்

வேதாந்த தேசிகருடைய புதல்வரான வரதாசாரியர் நயினாராசாரியர் என வழங்கலானார். இவர் பிறந்தது கி.பி. 1316 என்று குருபரம்பரைகள் கூறும். இவருடைய சீடர் பிரதிவாதி பயங்கரம் அண்ணன். இவரும் தம் தந்தையைப் போல் அனேகரிடம் வாதம்செய்து சுவமதஸ்தபானம் செய்தவர். திவ்யதேச யாத்திரை செய்தார். கேரள தேசம் சென்றபோது மடைப்பள்ளிப் பரிசனங்களுக்குத் தலைச் சுமையாய்க் கீழ்வர்க்கத்தார் ஏவிய கல்லை அவர்களுக்கே திருப்பிவிட்டார். பின் அவர்கள் வேண்ட அதைப் போக்கினார். பல அற்புதங்கள் நிகழ்த்தினார் என்று சொல்வர். சாகல்லிய மல்லன் என்பவன் விட்ட பூதத்தைப் பல்லக்குச் சுமப்பித்தார். தாசராசா என்ற பிராமணனை ஸ்ரீவைஷ்ணவனாக்கினார். அத்வைத மதத்தைப் பின்பற்றிய மாயாவாதத் துறவியொருவர் தம்மிடம் சமயவாதம் புரியவந்தபோது அவரைத் தம் சீடரான அண்ணனைக்கொண்டு வெல்வித்தார். வைணவமதப் பிரசாரம் செய்துகொண்டிருந்து 69ஆம் வயதில் பரமபதம்

அடைந்தார். ஆசார்ய மங்களம் முதலான வடமொழி நூல்கள் இவர் செய்தவை.

தமிழில் இவர் செய்த நூல் பிள்ளையந்தாதி. இது தந்தையும் ஆசாரியருமாகிய வேதாந்த தேசிகர் புகழைக் கூறுவது. 20 கட்டளைக் கலித்துறை கொண்டது. பின்வருவது அதன் 6ஆம் பாடல்:

**வித்தகன் வேதியன் வேதாந்த தேசிகன் எங்கள்தூப்புல்**
**மெய்த்தவன் உத்தமன் வேங்கட நாதன் வியன்கலைகள்**
**மொய்த்திடு நாவின் முழக்கொடு வாதியர் மூலமறக்**
**கற்றவன் என்றுரைத் தேன்கண்டி லேனென் கடுவினையே.**

## பிள்ளை லோகாசாரியர்

இவர் காலம் 1264—1369 என்பது வைணவ சம்பிரதாயம். இவர் வாழ்க்கையின் பிற்பகுதி 14ஆம் நூற்றாண்டு. ஆகையால் இவர் வரலாற்றை இங்குக் கூறுவது பொருத்தமாகும். இவர் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் மூத்த புதல்வர். வடக்குத் திருவீதிப் பிள்ளை இம்மூத்த முதல்வருக்குத் தம் ஆசிரியரான நம்பிள்ளையின் பெயர்களில் ஒன்றான உலகாசாரியன் என்பதையே இட்டார். வரலாற்றை அடுத்த அழகிய மணவாளப் பெருமான் வரலாற்றில் காண்க. தென்னாட்டில் முடும்பை என்னும் ஊரில் ஐப்பசித் திருவோணத்தில் பிறந்தார். தாயார் பெயர் சீரங்கநாச்சியார். இவர் வடமொழி தமிழ் இரண்டிலும் மிக்க தேர்ச்சி பெற்றவர். திருமாலுக்குரிய திருவோண நாளில் பிறந்தமையாலும், வைணவ சமய ஞான விசேடத்தினாலும், இவரைத் திருமாலின் அம்சம் என்றே சொல்வர்.

முகம்மதியர் ஸ்ரீரங்கம் கோயிலைப் பிடித்துத் தீங்கு செய்ய முற்பட்டபோது, இவர் மூலவருக்குக் கல் காப்பிட்டு வைத்து உற்சவரோடு வெளிப்போந்து, சோதிடக்குடி என்னும் கிராமத்தில் அவரை வைத்துப் பூசித்துக் காத்து

வந்தார். சம்பிரதாயமாக இவர் 105 திருநட்சத்திரம் வாழ்ந்திருந்தார் என்பர். ஆகவே மேலே குறிப்பிட்ட காலமே இவர் வாழ்ந்த காலம் என்பது பொருந்தும். (இவர் தந்தையான வடக்குத் திருவீதிப் பிள்ளை 13ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்.)

இவர் திருவரங்கத்தில் வாழ்ந்தார். இவர் சீடர் அனேகர். விளாஞ்சோலைப் பிள்ளை, திருவாய் மொழிப் பிள்ளை, கூரகுலோத்தமதாசர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர், கோயில் அண்ணன் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். பெண்களும் பேதையரும் உய்யவேண்டும் என்ற பெருநோக்கோடு, இவர் அட்டாதச ரகசியங்கள் என்னும் 18 சாத்திரங்களை வடமொழியும் தென்மொழியும் கலந்த மணிப் பிரவாள நடையில் மிகவும் அழகாக எழுதியிருக்கிருர்.

அப்பதினெட்டு நூல்களாவன: 1. **முமூக்ஷுப்படி**. இது மந்திரப் பகுதி துவயப் பகுதி சரமசுலோகப் பகுதி என்ற மூன்று பிரிவுகளுடையது. மோட்சத்தில் இச்சை உடையவன் முமூக்ஷு; அவன் அறியவேண்டிய ஸ்வரூபம் உபாயம் புருஷார்த்தம் என்னும் மூன்று ரகசியங்களைக் கூறுவதால் இந்த நூலுக்கு இப்பெயர் வந்தது. 2. **தத்துவத்ரயம்**. சித்து அசித்து ஈசுவரன் என்ற தத்துவங்கள் மூன்று-இவற்றை இந்நூல் சொல்கிறது. தத்துவம்-உண்மைப் பொருள் 3. **அர்த்த பஞ்சகம்**. இவை ஸ்வஸ்வரூபம் (உயிரின் இயல்பு-தன் நிலை), பரஸ்வரூபம் (இறைவன் நிலை) விரோதி ஸ்வரூபம் (உயிர் இறைவனை அடையாது தடை செய்து நிற்கும் வினையின் இயல்பு), புருஷார்த்த ரூபம் (புருஷனுல் வேண்டப்படும் பேற்றின் நிலை), உபாய ஸ்வரூபம் (பேற்றிற்குத் தடையைப் போக்கி இறைவனை அடைதற்குரிய உபாயத்தின் நிலை). இவ்வர்த்த பஞ்சகஞானம் நம்மாழ்வார் திருவாய் மொழியால் ஏற்படுகிறது என்று பட்டர் பின்வருமாறு கூறுகிருர்:

மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்

4. **ஸ்ரீவசன பூஷணம்:** *இந்நூல் தென்கலை* வைணவ *ஆசாரிய சம்பிரதாயங்களை மிகத் தெளிவாக* விளக்கி *உரைக்கும். இதன் சிறப்பை மணவாளமாமுனிகள்* உபதேச *ரத்தின மாலையில் 7 பாடல்களில் போற்றுகிறார்.* 5. **அர்ச்சிராதி:** *அக்கினியை ஆதியாக உடைய வழி என்ற பொருள். சேதனன் பிறவியிலிருந்து பரமபதம் அடைந்து வைகுந்த நாதன் தாளில் சேர்ந்து பல்லாண்டுபாடி இன்புற்றிருப்பது வரை கூறும்.* 6. **பிரமேய சேகரம்:** *சேதனன் உலக வாழ்க்கையை அனுபவித்து அதனைவிட்டு முறையே திவ்விய நகரம் சேர்ந்து சர்வேசுவரனைத் தரிசித்து எல்லாக் கைங்கரியமும் பண்ணுதலைக் கூறும்.* 7. **பிரபந்நபரித்ராணம்:** *சர்வேசுவரனைத் தவிர வேறு ரக்ஷகர் இல்லை என்று அறிந்து நம் காரியத்திற்கு நாம் கடவோமல்லோம் என்றிருந்து ஈசுவரன் பக்கல் பாரத்தைப் போட்டிருத்தல்.* 8. **சாரசங்கிரகம்.** *த்வயம் என்ற இரு வாக்கியங்களிலுள்ள பத்து அர்த்தம் கூறுவது (ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாயநம: என்பன அவ்விரு வாக்கியங்கள்).* 9. **சம்சார சாம்ராஜ்யம்.** 10. **நவரத்தினமாலை:** *சரணாகதன் செய்யத்தக்க ஒன்பது நினைவுகள்.* 11. **நவவித சம்பந்தம்.** 12. **யாத்ருச்சிகப்படி.** 13. **பரந்தபடி.** 14. **ஸ்ரீயப் பதிப்படி.** 15. **தத்துவ சேகரம்.** 16. **தனித்வயம்.** 17. **தனிச் சரமம்.** 18. **தனிப்ரணவம்.** *இவையன்றி தத்துவ விவேகம் நாலு வார்த்தை என்பனவும் இவர் செய்தார். இவருடைய முக்கியமான நூல்களுக்கு மணவாள மாமுனிகளே வியாக்கியானம் எழுதி இருப்பது இவர் நூல்களின் சிறப்பைக் காட்டும்.*

*இவர், சாதியினால் உயர்வு தாழ்வு இல்லை, ஞானத்தினாலும் பக்தியாலுமே உயர்வு தாழ்வு ஏற்படுகின்றது*

*என்ற கொள்கை உடையவர். ஆசாரிய கைங்கரியமும் பாகவத கைங்கரியமும் வைகுந்தம் தரும் என்பது இவர் கருத்து. இவரைப் புகழ்ந்து வாழித்திருநாமம் முதலிய பல பாடல்கள் ஏற்பட்டுள்ளன. பின்வரும் பாடல் எடுத்துக் காட்டாகச் சொல்லலாம்.*

வாழியுல காசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழி முடும்பைஎனும் மாநகரம்—வாழி
மனஞ்சூழ்ந்த பேரின்பம் மல்குமிகு நல்லார்
இனஞ்சூழ்ந் திருக்கும் இருப்பு.

ஆரணநூல் வாழ்க அருளிச் செயல்வாழ்க
தாரணியும் விண்ணுலகும் தான்வாழ்க—பூரணமாய்
பின்னுமுள்ளோர் தாம்வாழ்க பிள்ளை உலகாரியனே
இன்னமொரு நூற்றுண் டிரும்

*இவர் வேதாந்த தேசிகருக்கு உடன் காலத்தவர் என்று சொல்வர். இருவரும் பரமபதம் அடைந்த காலம் சம்பிர தாயப்படி 1369. பின் வருவது இவருடைய வாழித் திரு நாமம் கூறும் பாடல் :*

அத்திகிரி யருளாளன் அனுமதியோன் வாழியே
ஐப்பசியில் திருவோணத் தவதரித்தான் வாழியே
முத்திநெறி மறைத்தமிழால் மொழிந்தருள்வோன் வாழியே
மூதரிய மணவாளன் முன்புதித்தான் வாழியே
நித்தியம்நம் பிள்ளைபதம் நெஞ்சில்வைப்போன் வாழியே
நீள்வசன பூடணத்தால் நியமித்தான் வாழியே
உத்தமமா முடும்பைநகர் உதித்தவள்ளல் வாழியே
உலகாரி யன்பதங்கள் ஊழிதொறும் வாழியே.

## அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர்

*இவர் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் புதல்வரும் பிள்ளை லோகாசாரியரின் தம்பியும் ஆவர். நம்பிள்ளை பெருஞ் சிறப்போடு வாழ்ந்திருந்த காலத்தில் ஒருநாள்*

வடக்குத் திருவீதிப் பிள்ளையின் தாயான அம்மி என்பவள் நம்பிள்ளையை அடைந்து வணங்கி அவர் சேமம் விசாரித்த போது, "யான் பெற்ற பிள்ளை ஒரு பேயாயிருக்கிறது" என்று கூறினாள். "அதேன்" என்று பிள்ளை கேட்க, "நான் என் பிள்ளைக்கு ஒரு பெண்ணை மணம் புரிவித்தேன். அவன் அவளோடு வாழ மறுக்கிறான். அப் பெண்ணைக் கண்டு இது ஒரு ஆடுகிற பாம்பாயிருந்தது என்கிறான். பலநாள் இப்படியே ஆயிற்று. தாங்கள் அவன் மனைவியோடு கூடிவாழ உத்தரவிட வேண்டும்" என்று வேண்டினாள். கேட்ட பிள்ளை, "அப்படியே" என்று அருளி, நீராடி வருகின்ற மணைட்டிப் பெண்ணாகிய சீரங்கநாச்சியாரை அழைத்து, தமக்கு இஷ்ட தெய்வமான பெரிய பெருமாளை மனத்திலே நினைத்து, "சற்புத்திரனைப் பெற்றிடுவாய்" என்று அனுக்கிரகம் செய்து, அனுப்பினார். பின்னர் வடக்குத் திருவீதிப் பிள்ளையை அழைத்து, "நீ இன்று லோக மரியாதைக்காக மனைவியோடு கூடியிருப்பாயாக" என்று உத்தரவிட்டார். உரிய காலத்தில் சீரங்க நாச்சியார் ஓர் ஆண் பிள்ளை பெற, அப் பிள்ளைக்கு இவர் தம் ஆசாரியரான நம்பிள்ளைக்குத் தோழப்பர் இட்ட பெயராகிய உலகாசாரியர் என்பதையே சாத்தி வழங்கினார்.

பின்னர் இக் குழந்தையின் முதலாண்டு நிறைவில், இவர்கள் திருவரங்கம் பெருமாள் சன்னிதியில் சேவித்து நின்றபொழுது, திருமால் மகிழ்ந்து அர்ச்சக முகமாக, "நம் பிள்ளை பெயரால் ஒரு பிள்ளை இருக்கிறான். இனி நம் பெயரால் மற்றொரு பிள்ளை பிறக்கக் கடவன்" என உத்தரவிட்டார். இப்படி இரண்டாவது பிள்ளையாக அழகிய மணவாளப் பெருமாள் என்று பெயர் சூட்டப்பெற்ற குழந்தை, மார்கழி அவிட்டத்தில் பிறந்தார். இவர் பிறப்பிலேயே மிக்க ஞானமுடையவராய், பிதாவிடத்திலும் தம் தமையனான பிள்ளை லோகாசாரியரிடமும் சகல ரகசியார்த்தங்களையும் கேட்டார். இவர் துறவு பூண்டவர். திருப்பாவை

ஆறுயிரப்படி, திருவந்தாதி, அமலனாதிபிரான், கண்ணி நுண் சிறுத்தாம்பு ஆகியவற்றிற்கு வியாக்கியானம், மாணிக்கமாலை, அருளிச்செயல் ரகசியம் ஆகிய சமய நூல்களைச் செய்தார்.

இவர் செய்த நூல்களில் மிகவும் முக்கியமானது ஆசாரிய ஹிருதயம் என்ற பெருஞ்சிறப்புடைய சமயநூல். இதுபற்றிய வரலாறும் உண்டு. இவர் வடகலை ஆசாரியராகிய வேதாந்த தேசிகருக்கு எப்போதும் மறுப்புக் கூறுபவர். ஒரு சமயம் இருவருக்கும் ஏற்பட்ட பூசல் முற்றி, இவர், "நம் தமையனார் செய்த ஸ்ரீ வசனபூஷணத்திற்கு விளக்கமாக நாம் ஒரு புதுநூல் செய்வோம். அது வேதாந்த தேசிகர் சம்பிரதாயத்திற்கு மறுப்பாக இருக்கும். எம்முடைய கருத்தைப் பெருமாள் உகந்து வேதாந்த தேசிகரை வெறுப்பாரானால் யாம் சொல்லும்போது பெருமாள் தம்முடைய திருமாலையையே நெகிழ்த்துக் காட்டுவார்" என்று கூறி, அவ்விதமே பெருமாள் உற்சவம் கொண்டருளி நாலு வீதியிலும் வந்த காலத்து, நாலு வீதிக்கும் நாலுபிரகரணமாக ஆசாரிய ஹிருதயம் செய்தருளினார். அப்போது பெருமாள் தம் திருமாலையை நெகிழ்த்து நாலுவீதியிலும் இவருக்குப் பிரசாதம் அருளிச் செய்தார். பெற்று இவர் மகிழ்ச்சியோடிருக்க, வேதாந்த தேசிகர் மனம் உடைந்து திருவகீந்திரபுரம் சென்று அங்கேயே பன்னிரண்டு வருஷ காலம் தங்கிவிட்டார் என்று தென்கலையார் வரலாறு கூறுகிறது.

ஆசார்ய ஹிருதயம் சிறப்பாக ஆசாரியரான நம்மாழ்வாருடைய சிறப்பையும் அவர் செய்த நூல்களின் பொருளையும் எடுத்து விளக்குகின்ற ஆராய்ச்சிநூல் என்று ஆன்றோர் கூறுவர்.

பின்னர் சிலகாலம் உலகை வாழ்வித்திருந்து, முடிவில் தம் தமையனார் முதலியோர் வருந்த, அவர் மடியிலேயே தலையை வைத்தவாறு திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

# வாதிகேசரி - அழகிய மணவாளப் பெருமாள் ஜீயர்

இவருடைய வரலாறு விசித்திரமானது. இவர் பெரிய வாச்சான் பிள்ளையிடம் தளிகை செய்பவராய் (சமையல் காரராய்) இருந்தார். ஒரு சமயம் அவருடைய சீடர்கள் ஓரிடத்தில் இருந்து பாடம் படித்துக்கொண்டிருந்தபோது, இவர் அந்தப் பக்கம் வர நேர்ந்தது. "என்ன படிக்கிறீர்கள்?" என்று கேட்டார். இவருக்குக் கொஞ்சமும் படிப்பில்லை; அதுபற்றிச் சீடர்கள் இவரை எப்போதும் பரிகசிப்பதுண்டு. அங்கிருந்தோரில் ஒருவர் ஏளனமாக, "முசலகிசலயம்" என்று விடைகூறினர். (முசலம் - உலக்கை; கிசலயம்-கொழுந்து.) ஒன்றும் அறியாத இவர் அதை மெய்தான் என்று நம்பினார். பின்னர் பெரியவாச்சான் பிள்ளை முன்பு இவர் சென்றபோது, அவர், "மாணாக்கர் என்ன செய்கிறார்கள்?" என்று கேட்டார். இவர், "முசல கிசலயம் படிக்கிறார்கள்" என்று பதில் சொன்னார். கேட்ட அவர் சிரித்துவிட்டு, இவருடைய அறியாமைக்கிரங்கி, "அப்பா, உனக்குக் கல்வி அறிவு இல்லாமையாலே மற்றவர்கள் உன்னைப் பரிகசித்தார்கள். முசல கிசலயம் என்றால் உலக்கைக் கொழுந்து என்று பொருள்" என்று சொன்னார். கேட்ட இவர் மிக்க வெட்கமடைந்து, அவர் காலிலே விழுந்து வணங்கி, "அடியேன் வித்துவானாகும்படி கடாட்சித் தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்போது இவர் வயது 32. அபயப்பிரதராசர் என்ற பெயருடைய பெரிய வாச்சான் பிள்ளை இவர் கேட்டதற்கு மிகவும் மகிழ்ந்து, அட்சராப்பியாசம் தொடங்கி, காவிய நாடகாலங்கார சப்ததர்க்க பூர்வோத்தர மீமாம்சாதி சகல சாத்திர வித்தகராம்படி சிட்சித்தருளினார். அதன்மேல் இவர் சகல சாத்திரங்களிலும் வல்லவராகி, முசலகிசலயம் என்ற பெயரிலேயே ஒரு வடமொழிக் காவியம்செய்து,

தம்மை ஏளனம் செய்தவர்கள் கையிலே கொடுத்து அவர் கள் வாய்மூடித் தலைகுனிந்து வெட்கமடையும்படி செய் தார்.

இவர் ஊர் சொட்டை, இவர் இயற்பெயர் மணவாளர். இதன்பின் இவருக்குச் சொட்டை-அழகிய மணவாள முனி என்ற பெயரும் வழங்கிற்று. பரவாதிகளை வென்ற நிபுண ராய் இருந்தபடியால் இவருக்கு வாதி கேசரி-அழகிய மண வாள ஜீயர் என்ற பெயர் வந்தது. இவர் துறவி. திருவரங் கத்திலேயே வாழ்ந்து பல நூல்கள் செய்தார். முந்தை யோர் வியாக்கியானங்களை நன்கு பயின்று திருவாய்மொழி பன்னீராயிரப்படி உரைசெய்தார்.

அன்போ டழகிய மணவாளச் சீயர்
பின்போரும் கற்றறிருந்து பேசுக்கைகா—தம்பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்தது
ஏதமில்பன் னீரா யிரம்

என்ற உபதேச ரத்தினமாலைப் பாடல் இதைக் குறிப்பிடும். மேலும் தத்துவதீபம், தீபப் பிரகாசிகை, தத்துவ நிரூபணம், தத்துவ சங்கிரகம், தத்துவ பூஷணம், ஞானார்ணவம் முத லான அனேக வடமொழி மணிப்பிரவாள நூல்கள் செய் தருளினார். திருவாய் மொழிக்கு சங்கதி, தமிழ்க் கவிப் பிர பந்தம் முதலானவை பிற நூல்கள். இவருக்கு வரதராசர் முதலான பெயர்களும் வழங்கின.

இவர் செய்த நூலென்று **பகவத்கீதை வெண்பா** என்ற தமிழ்நூல் 1906 இல், எஸ். சாமிநாதையர் பி. ஆர். கிருஷ்ணமாசாரியர் ஆகியோர் எழுதிய குறிப்புரை களோடு, ஸ்ரீரங்கம் வாணிவிலாசம் அச்சகத்தில் அச்சாகி வெளி வந்தது. ஆறு அத்தியாயம் கொண்ட ஷட்கம் என்ற பெயருடைய மூன்று பாகமாக நூல் வெளியாயிற்று. பாயிரம் 13 பாடல். நூல் 223 வெண்பா. வடமொழிக் கீதை யில் யோகம் என்று அமைந்திருந்த அத்தியாயப் பெயரே

இதிலும் அமைக்கப்பெற்றிருப்பினும், ஆசிரியர் ஓத்து என்றே கூறுகிருர். [மூன்று ஷட்கமான பாகுபாடு பட்டர் கீதை மொழி பெயர்ப்பிலும் துவம்பதார்த்தம், தத்பதார்த்தம், அஸிபதார்த்த நிரூபணம் என்ற தலைப்புக்களுடன் காணப்படுகிறது.]

இதனுள் ஒவ்வோர் அத்தியாயத்தின் முதலிலும் முடிவிலும் நூலுக்குப்புறம்பாக ஒவ்வொரு வெண்பா அமைக்கப் பெற்றுள்ளது. இந்த ஓத்து இன்ன பாடலைக் கூறுகின்றது என்று வெண்பா கூறும். இப்படியே ஆரும் ஓத்து முடிந்த இடத்தில் தொகுப்புரையாக ஒரு வெண்பாவும், ஏழாம் ஓத்தின் தொடக்கத்தில் அவதாரிகையாக ஒரு வெண்பாவும் உள்ளன; இப்படியே பன்னிரண்டு முடிவிலும் பதின்மூன்று தொடக்கத்திலும் முடிவிலும். நூல் எளிய நடையில் உள்ளது. வடமொழி மூலத்தை அடியொற்றி விசிஷ்டாத்வைதபரமாக அவசியமான இடங்களில் மட்டும் சில விளக்கங்களோடு ஆசிரியர் இதைப் பாடியிருக்கிருர். இராமானுச பாடியத்தைப் பின்பற்றித் தாம் பாடியதாக இவர் கூறுகிருர்:

வேதப் பொருளை விசயற்குத் தேர்மீது
போதப் புகன்ற புகழ்மாயன்—கீதைப்
பொருள்விரித்த பூதூர்மன் பொன்னருளால் வந்த
தெருள்விரிப்பன் நந்தமிழால் தேர்ந்து.

18 ஓத்து என்றே பாயிரத்தில் கூறுகிருர்:

பாரதத்தே காட்டும் பதினெட்டோத் தும்பகர்வார்
சீர்தழைத்த வெண்பாத் தெரிந்து

என்பது பாயிரம் 3. 7, 8, 9 பாடல்கள் முறையே அவ் வாறு அத்தியாயங்களின் கருத்தைக் கூறுகின்றன. 10, 11, 12 பாடல்கள் முறையே கரும, பக்தி, ஞானயோகங்களைக் கூறுகின்றன.

மாய னருள்கீதை மன்னு பொருள்தன்னைத்
தூய பெரும்பூதூர்த் தூமுனிவன்—மேய
தகையான் மணவாள மாமுனிவன் சொன்னான்
தொகையாரும் வெண்பாச் சுரந்து

என்பது நூல் முடிவிலுள்ள பாட்டு.

சொட்டை மணவாளத் தூமுனிவன் சொற்செறிந்த
சிட்ட மருவும் தமிழ்ப்பாவால்—கட்டெழில்சீர்க்
கோமான் அருள்கீதை கூறும் பொருள்உணர்வோர்
சீமான் அடிசேர்வர் சென்று

என்ற சிறப்புப் பாயிரம் ஆசிரியர் ஊரும் பேரும் கூறுகின்றது. 4 ஆம் பாடலில் இவர் இராமானுசர் வழியே மொழி பெயர்த்ததாகக் கூறியமையால், பட்டர் சங்கர பாடியத்தின் வழியேசெய்த மொழிபெயர்ப்பு இவருக்கு முன்பு ஏற்பட்டிருந்ததென்று கொள்ள இடமாயிருக்கிறது. இவர் விசிஷ்டாத்வைத பரமாக நூல் செய்திருப்பினும், இப் பகவத்கீதை வெண்பா வைணவ ஆசாரியர்களாலோ, பிறராலோ, பிரமாண நூலாக அல்லது ஆதார நூலாகக் கொள்ளப்பெற்றிருப்பதாய்த் தெரியவில்லை. இவ்வாசிரியரே தம் வெண்பாப் பொருளையமைத்து மணிப்பிரவாள நடையிலும் கீதையை எழுதியுள்ளாரென்று தெரியவருகிறது. செந்தமிழ் தொகுதி 4, பக்கம் 693.

## கூரகுலோத்தமதாசர்

இவர் அந்தண மரபினர், வடக்குத் திருவீதிப் பிள்ளையிடமும் அவர் குமாரர் இருவரிடமும் சாத்திரபாடம் கேட்டவர். சிறு நல்லூரில் பிறந்தவர். ஸ்ரீ வசன பூஷணப் பிரவசனத்தால் புகழ் பெற்றவர்.

## விளாஞ்சோலைப்பிள்ளை

பிள்ளை லோகாசாரியரின் சீடர். திருவனந்தபுரத்தில் வாழ்ந்தவர். இவர் செய்த நூல் **சப்தகாதை** என்ற ஏழு பாடல். திருமலையாழ்வான் இவரிடம் வந்து ரகசிய கிரந்தங்களைக் கேட்டு உபதேசிக்கப்பெற்று திருவாய்மொழிப்

பிள்ளை என்று பிரசித்தி அடைந்தவர். இவருக்குப் பிறகு அவர் பிள்ளை லோகாசாரியரின் திருவடி சம்பந்தம் பெற்றார். விளாஞ்சோலைப் பிள்ளை தாழ்ந்த வருணத்தில் பிறந்து உயர்ந்த நிலைக்கு வந்தவர்.

தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தமையால் இவர் திருவனந்தபுரம் கோயிலுக்குள் செல்லாமல் தடையிருந்ததென்றும், அதனாலேயே இவர் ஒரு விளாமரச் சோலையில் தங்கியிருந்தாரென்றும், தம் ஞான முதிர்ச்சியினாலே பிறரால் பெரிதும் மதிக்கப்பெறும் தகுதி பெற்றாரென்றும் சொல்வர். இவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரிடம் ரகஸ்ய கிரந்தார்த்தங்கள் உபதேசம் பெற்றார். இவர் இயற்பெயர் தெரியவில்லை; விளாஞ்சோலையில் தங்கியமையால் விளாஞ்சோலைப் பிள்ளை.

**சப்தகாதை** என்ற நூல் தனியன் ஒன்றும் ஏழு வெண்பாக்களும் உடையது. தனியன், பிள்ளை லோகாசாரியரை (உலகாரியன்) வாழ்த்துவது, குருவின் இயல்பை யுரைப்பது:

> அம்பொன் அரங்கர்க்கும் ஆவிக்கும் அந்தரங்க
> சம்பந்தங் காட்டித் தடைகாட்டி—உம்பர்
> திவமென்னும் வாழ்வுக்குச் சேர்ந்தநெறி காட்டும்
> அவனன்றோ ஆசாரியன்

என்பது இந்நூலின் முதல் பாட்டு. இந்நூல் தென்கலை நித்தியானுசந்தானத்துக்குரியது; எனவே, தாழ்ந்த குலத்தினராயினும் இவரைத் தென்கலையார் எவ்வளவு உயர்வாய்க் கொண்டிருந்தார்கள் என்பதை உணரலாம்.

## திருவாய்மொழிப்பிள்ளை

மணவாள மாமுனிகளின் குருவென்று பிரசித்திபெற்ற வைணவ ஆசாரியர். காலம் கி. பி. 1300-1405 என்று குரு பரம்பரை கூறும். உடையவர் மருமானாகிய அண்ணன் திருக்குமாரர். இயற்பெயர் திருமலை யாழ்வான்; வேறு

சைலேசர் முதலான பெயர்களும் இவருக்கு வழங்கும். முகம்மதியர் கலகத்தால் பிள்ளை லோகாசாரியர் சீரங்கத்தைவிட்டு வெளியேறியபோது, துயரம் பொறுக்காது இவரது தாய் உயிர் விட்டாள். அப்போது இவரைச் சிறிய தாய் வளர்த்து வந்தாள். திருநகரில் காடுவெட்டி நாடாக்கி நம்மாழ்வாரைப் பிரதிட்டை செய்வித்தார்; இதனால் சடகோபதாசர் எனப் பெற்றார். சதுர்வேத மங்கலம் என்னும் ஊரை அங்கு உண்டாக்கி அங்கு உடையவருக்குக் கோயில் கட்டி வைத்து, காடு வெட்டிஐயன் என்னவும் பெற்றார். கூரகுலோத்தமதாசர் இவருக்குத் திருவிருத்தம் பொருள் சொல்ல மறுத்தபோது, தாம் பிள்ளை லோகாசாரியரை இளமையில் ஆசிரயித்தவர் என்பதைச் சிறிய தாயால் அறிந்து, பின்னர் அவரிடமும் ஏனையோரிடமும் ரகசிய விஷயங்களைக் கற்றார். அவர் குறிப்பின்படியே திருவனந்தபுரத்தில் இருந்த விளாஞ்சோலைப் பிள்ளையிடத்துத் திருவாய்மொழியைக் கற்றார். பிள்ளையிடம் ரகசிய விஷயங்களைக் கேட்டுணர்ந்து திருவாய் மொழியில் வல்லவராகித் திருவாய்மொழிப் பிள்ளை என்ற பெயர் பெற்றார். பிற்காலத்தில் இவரே மணவாளமாமுனிக்குப் பஞ்ச சம்ஸ்காரம் செய்தார். இவர் திரு நட்சத்திரம் வைகாசி விசாகம்.

இவர் செய்த நூல்கள் பெரியாழ்வார் திருமொழிக்கு ஸ்வாபதேச வியாக்கியானம், ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம், வ்யாப்தியனுசந்தானம் ஆகியன. இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்தார் என்பர்.

வையகமெண் சடகோபர் மறைவளர்த்தோன் வாழியே
  வைகாசி விசாகத்தில் வந்துதித்தோன் வாழியே
ஐயன்அருள் மாரிகலை ஆய்ந்துரைப்போன் வாழியே
  அழகாரும் எதிராசர் அடிபணிவோன் வாழியே
துய்யஉல காரியன்தன் துணைப்பதத்தோன் வாழியே
  தொல்குருகா புரியதனைத் துலக்கினேன் வாழியே
தெய்வநகர் குந்திதன்னில் சிறக்கவந்தோன் வாழியே
  திருவாய் மொழிப்பிள்ளை திருவடிகள் வாழியே.

அத்தியாயம் 10

# சைன இலக்கியம்

## முன்னுரை

தமிழ் தோன்றிய நாளாக, சமண சமயத்தாரும் சிறப்பான தமிழ் இலக்கண இலக்கியம் செய்திருக்கிறார்கள். சங்க நூல்களிலும் திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் சமண நெறியின் ஒழுகலாறுகள் நிரம்பக் காணக் கிடக்கின்றன. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் பல, சமணர் செய்தவை. காப்பியத்துறையில் சிலப்பதிகாரம், சிந்தாமணி, சூளாமணி, பெருங்கதை முதலான நூல்கள் சமணர் செய்தவை. இலக்கணங்களும் மிகப் பல : அவிநயம், யாப்பருங்கலம், நேமிநாதம், வச்சணந்தி மாலை, நம்பி அகப்பொருள், நன்னூல் போன்றன. பிரபந்தங்கள் செய்தோர், உரையாசிரியர், பின்னும் பலர்.

இவ்வாறு மிகப் பழங்கால முதல் சமணர்களால் விளைந்த தமிழ் வளம், 14-15ஆம் நூற்றாண்டுகளிலும் சிறிது விரிந்து, அடுத்து 16ஆம் நூற்றாண்டு முதல் அடியோடு சுருங்கிவிட்டது. சூடாமணி நிகண்டு ஒன்றே பின் வந்த சிறப்பான சமண நூல்; வேறு நூல்கள் இல்லை.

நாம் குறிப்பிடும் காலப் பகுதியில் வாமனமுனிவர் வாழ்ந்து மேரு மந்தர புராணமும் நீலகேசியுரையும் செய்தார். திரு நூற்றந்தாதி திருக்கலம்பகம் என்ற பிரபந்தங்கள் எழுந்தன: வேறு சிறப்புப் பெயர் சுட்டாமல் **திரு** என்ற அடை மட்டும் கொண்டு இவ்விரு நூல்களும் இயன்றிருப்பது மிகவும் சிறப்பு. இவ்வந்தாதி பாடிய ஆசிரியர் ஆழ்வார் எனவே சிறப்பிக்கப் படுகிறார். சிறு காவியமாகிய உதயண குமார காவியமும் இக் காலத்தே தோன்றிய

தென்று அறிகிறோம். இப்போது திட்டமாக வரையறை செய்ய இயலாவிடினும், ஆதிநாதர் பிள்ளைத் தமிழ் என்ற பிரபந்தமும் இக்காலப் பகுதியின் இறுதியில் பாடப்பெற்ற தாகும். இவை யனைத்திலும் சிறப்பான பெருநூல், ஸ்ரீபுராணம். மணிப்பிரவாள நடையில் அமைந்த இவ்வுரை நடை நூல், இருபத்து நாலு தீர்த்தங்கரர் சரித்திரத்தை உரைப்பதாய், இது தோன்றிய நாளாகச் சைனமக்களுக்கு வாழ்க்கையில் வழிகாட்டும் தமிழ்வேதம்போல் இருந்து வந்திருக்கிறது. இந்நூலாசிரியரும் இக்காலத்தில் வாழ்ந்த வராவார். ஸ்ரீபுராணம் வசன நூல். ஸ்ரீபுராணத்தால் அறி கின்ற ஒரு சிறப்பான சைன நூல் சைன ராமாயணம்; இந் நூல் கிடைக்கவில்லை. இதன் கதைப்போக்கும் விசித்திர மானது. 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் எழுந்தது என்று கருதத்தக்க ஜீவசம்போதனை என்ற நூல், செய்யுளும் உரைநடையும் கொண்டது; மிகவும் சிறப்பானது. இது இலக்கிய உலகில் இன்று அதிகம் பயிலப் பெறாவிட்டாலும் கூட, சாத்திரப் பொருளால் இது ஒரு முக்கியமான சைன நூலாகும்; இன்னும் சிறப்புப் பெறுதற்குரியது.

## சைன ராமாயணம்

ஸ்ரீபுராணம் என்ற சைன வசனகாவியத்தில் இராமன் சரித்திரத்தைக் குறிக்கும் சில பகுதிகள் மேற்கோளாக எடுத்துத் தரப்பட்டுள்ளன. அவை **சைன ராமாயணம்** என்ற ஒரு காவியத்திலிருந்து எடுக்கப்பெற்றன என்று அறிஞர் கருதுகிறார்கள். ஸ்ரீ புராணம் விரிவாக எடுத்துக் காட்டுகின்ற இந்த இராமாயணத்தின் காலம் அதற்கு ஒரு நூற்றாண்டு முந்தியதாக இருக்கவேண்டும்; அதாவது சுமார் கி.பி. 1325 ஆகலாம்.

இந்த இராமாயணம் இன்று கிடைக்கவில்லை. எனி னும், கன்னட மொழியில் சைனர் ஓர் இராமாயணம் செய் துள்ளனர். அதிலிருந்து இச் சைன ராமாயணத்தின்

கதைப்போக்கு நன்கு தெரிகிறது. இது பொதுவாக இந்தியாவில் வழங்கும் இராம கதைக்கு முற்றிலும் மாறுபட்டது. சருக்கம் பின்வருவது: காசியிலும் அயோத்தியிலும் ஆண்ட தசரத மன்னன் புதல்வர் நால்வர். ஜனகர் யாகத்திற்கு இராமன் சென்று சீதையை மணம் புரிகின்ருன். இராமன் காசியில் வாழ்ந்து பின் இலக்குவனேடும் சீதையோடும் சித்திர கூடத்திற்குச் சென்று தங்குகிருன். அங்கு வந்த நாரதரை இராமன் நன்கு உபசரிக்காமல் போகவே, அவர் இராவணனிடம் கோள்மூட்ட, இராவணன் மாரீசனேடு வந்து சீதையைத் தூக்கிச் செல்கிருன். இதை அறிந்து தசரதன் இராமனுக்குத் தேறுதல் தெரிவிக்கிருன். அனுமானைத் தூது அனுப்பி, இலக்குவனல் வாலியைக் கொல்வித்து, விபீஷணனது அடைக்கலம் ஏற்று, இலக்குவனல் இராவணனையும் கொல்வித்து, சீதையை மீட்டு, முடிவில் இராமன் மோட்சம் அடைய, இலக்குவன் நரகம் புகுகின்ருன் ; இராமன் எந்த வதமும் செய்யவில்லை.[1]

இக்கதை விசித்திரமாய் இருப்பினும், பாடல் நயம்பட உள்ளது. ஆசிரியப்பாவும் பிற பாவினங்களும் காணப்படுகின்றன. பின்வரும் பாடற்பகுதி, இராமனை விட்டுப் பிரித்து இராவணனல் சிறைப்படுத்தப்பட்ட சீதையின் சோகத்தைத் தெரிவிப்பது :

உருமிடிப் புண்ட அருமணி நாகமெனத்
திருமணி நிலத்தில் தேவி சோர்ந்து,
செய்த பாவையின் மெய்திரி பின்றி
மையலின் உயிர்த்து மடிந்துடன் கிடப்ப
விம்முறு துயரிற் கொம்மென உயிரா
விளைந்த தெல்லாம் உளங்கொள உணரா
எழுதுகண்ணருவி இனைந்தினைந் திரங்கலின்
ஒழுகுபு பொழிய முழுகிய மேனியள்
அழுதழு தலறி ஆ!ஓ! என்னும்;
இணைபிரி அன்றிலின் ஏங்கி நீங்காத்

1. வையாபுரிப் பிள்ளை, காவியகாலம், பக்கம் 19.

துணைவனை நினைத்துச் சோகமீ தூர்தர,
வான்பழி சுமந்துநின் வனமலர்ச் சேவடி
யான்பிரிந் தேதிலன் இடவயின் இடர்ப்பட
மான்பின் ஏகிய மன்னவ னேயெனும்;
மாயோன் செய்த மாய மானிடை
மாயவன் செய்த மகிழ்ச்சி கண்டருளி
ஆவதொான் றின்றி அதன்வழி யொழுகிய
நாயக னே,எனை நணுகாய் வந்தெனும்;
கொற்றவன் துணையே, குலவிளங் களிறே,
செற்றவர்ச் செருக்குங் சினத்தீ யுருமே,
மைத்துன மலையே, மன்னவ னேயெனும்;
நாற்கடற் பரந்தன வேற்படைத் தானையொடு
கூற்றுறழ் மொய்ம்பிற் கொடுஞ்சிலைத் தடக்கைத்
தம்பித் துணைவனின் தனிப்படப் பிரித்திட்டு
எம்பெரு மானை என்வயின் நிறுவி
மாற்றவன் செய்த மாய மானினை
நோற்றி லாதேன் நோக்கிய நோக்கின்
அருவினை யேனை அருளிய மனத்தால்
மருவிய மாய உருவுதரற் கெழுந்த
வரிசிலைக் குரிசில மன்னர் பெருமானை
மான்மறி தொடர்ந்துசெல் வாளரி போலக்
கானெறி விடுத்துக் கடுவனம் புகுத்தி
மாயப் புணர்ப்பின் மன்னனை நினைந்து
ஆயமுந் தாயருந் தோழியு மின்றியோர்
நொதுமலாளன் விதிவழி யொழுகிய
இடனிடை யிட்ட சேய்மைத் தன்றியும்
கடலிடை யிட்ட காப்பிற் றாகிய
இலங்கை மூதூர் இடுசிறைப் பட்டு
மலங்கு விழிமான் வழிதொடர்ந் தருளிய
மன்னவர்க் குற்றதும் இன்னதென் றறியாது
இன்னற் படவெனை இன்னணம் இழைத்த
வினையே வலிதே!

என்ற பகுதியைக் காண்க.

இவ்வாறு கிடைக்கின்ற மேற்கோள் பகுதிகள் அன்றி, நூல் இன்று கிடைக்கவில்லை. ஆசிரியர் பெயரோ நூல் பற்றிய பிற செய்திகளோ புலப்படவில்லை. இராமகதையின் சிறப்பை யுணர்ந்த சமண்புலவர் அக்கதையைத் தம் அகிம்சை நெறிப்படுத்தியிருக்கும் பான்மை வியத்தற்குரியது.

## அவிரோதி நாதர்

சோழ சாம்ராஜ்யம் சிதைவடைந்த பின்னர், தமிழ் நாட்டில் ஆங்காங்கு பல்வேறு சமயத்தவர் சிறு பிரபந்தங்களும் சாத்திரங்களும் செய்து வாழ்ந்தனர். அவர்களுள் சைன சமயப் பிரபந்தம் செய்தவர் அவிரோதி நாதர் என்ற பெரியார். இவர் செய்த **திருநூற்றந்தாதி** என்ற ஒரு சிறு பிரபந்தம் கொண்டே இன்று இவரை நாம் நினைவு கூர்கிறோம். அவிரோதி என்பது அருகதேவனுக்குரிய பெயர்களுள் ஒன்று. இவர் அப்பெயரைத் தரித்து வாழ்ந்த சைன சமயத் துறவியாவார். **அவிரோதியாழ்வார்** என்றும் இவர் வழங்கப் பெறுகின்றார். அந்தாதி 19ஆம் பாடல் உரையில் உரைகாரர், "பிறர் போலே ஆழ்வார் வீடு வேண்டியதாம்" என்று கூறுவதால் இவ்வாசிரியரும் ஆழ்வார் எனப் பெற்றார் போலும். நேமிநாத உரையாசிரியர் 89ஆம் சூத்திரவுரையில் "முத்தனென்கோ" என்ற இந்நூற் பாடலை (31) எடுத்துக்காட்டி, "என்றார் அவிரோதி யாழ்வார்" என்று கூறுகிறார்.

இவ்வாசிரியரைக் குறித்து யாதும் தெரியவில்லை. அந்தாதியைப் பதிப்பித்த ரா. ராகவையங்காரவர்கள் தம் முகவுரையில் சில செய்திகள் குறிப்பிட்டுள்ளார். முதலில் இவ்வாசிரியர் வைணவ சமயத்தவர். மயிலையில் வாழ்ந்தார். அங்கிருந்த சினாலயத்தில் நேமிசந்திரசுவாமி சந்நிதியில் சைன சமய ஆசிரியர் ஒருவர் மாணக்கருக்குச் சமயத் தத்துவங்களை உபதேசித்துக் கொண்டிருந்தார். அவிரோதி

நாதர் அங்குச் சென்று அவர் கூறிய அறவுரைகளைக்கேட்டு அவற்றில் தம் நெஞ்சைப் பறிகொடுத்து மீட்க அறியாது நின்றார். அப்பொழுது அவ்வாசிரியர்,

**மோக்ஷ மார்கஸ்ய நேதாரம் பேதாரம் கர்மபூப்ருதாம் |**
**ஜ்ஞாதாரம் விச்வதத்வாநாம் வந்தேதத் குணலப்தயே||**

என்ற ஒரு சுலோகத்தை மொழியக் கேட்டார். (இது சர்வார்த்த சித்தி என்ற வடமொழிச் சைன சாத்திரத்தின் காப்புச் செய்யுளாக உள்ளது). இதில் வரும் 'தத்குண லப்தயே' என்ற தொடரின் ரகசியார்த்தம் உணரவேண்டி அவ்வாசாரியரைக் கேட்டார். அவர், "நம் சமயத்தவர்க் கன்றி ஏனையோர்க்கு இவ்வாறு சமய நுணுக்கங்கள் உப தேசிப்பதற்கில்லை" எனக் கூறினார். கேட்ட அவிரோதி நாதர், அக்கணமே சைன சமயத்தினுட் புகுந்து, நேமி நாதர் கோயிலை ஒருமுறை வலம் வந்து, வலம் வருவதற் குள்ளேயே இத்திருநூற்றந்தாதி பாடி முடித்தார். இவ் வரிய சாதனையைக் கண்ட அவ்வாசாரியர் மகிழ்ந்து, இவருக்கு உபதேசம் செய்தார். இது சைனர் கூறும் வரலாறு.

இது செவியாறலாக வழங்கும் செய்தியேயன்றி, இதன் உண்மை தெரிய வழியில்லை. எனினும், அவிரோதி என்பது இவரது இயற்பெயரல்லவென்றும் சைன சமயத் துக்கு இவர் வந்த பின் ஏற்பட்ட பெயரென்றும் கருதலாம். அங்ஙனமே, ஆழ்வார் என்ற பெயர்கூட இவர் வைணவ ராய் இருந்தமையால் வந்ததோ என்று ஐயுறுவதற்கு இட மாயுள்ளது.

மயிலையில் 300 ஆண்டுகளுக்கு முன்னிருந்த நேமி நாதர் கோயிலைக் கடல்கொண்டது என்றும், இவ்வாறு நிகழும் என்பதை சைனப் பெரியார் முன்கூட்டியே ஞான தரிசனத்தால் உணர்ந்து நேமீசன் உருவச் சிலையைச்சிற் றாமூர்க்கண் உள்ள தங்கள் மடத்தில் கொண்டுபோய்ப்

பிரதிட்டை செய்தார்கள் என்றும் கூறுவார்கள். இம் மயிலைக் கோயிலை அவிரோதி நாதர் குறிப்பிடுகிறார் :

> மறமே புரிந்து மயிலா புரிநின்று மன்னுயிர்கட்கு
> அறமே புரியும் அருட் கொண்டலே.

என்பது திருநூற்றந்தாதியிலுள்ள நேமீசர் துதி. இதனால் இந்நூல் கி. பி. 1600க்கு முற்பட்டதாக இருக்கிறது.

மேலும் இந்நூலின் 5ஆம் பாடலாகிய "அருளோடு எழும் அறவாழியப்பா" என்ற பாடலைத் தத்துவராயர் தமது பெருந்திரட்டில் எடுத்துச் சேர்த்திருக்கிறார். இப் பெருந்திரட்டென்பது 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் 2871 பாடல்கள் கொண்ட பெரும் வேதாந்த நூல் திரட்டாகத் தத்துவராயர் தொகுத்தது. இதனுள் அவர் தேவாரம் முதலிய திருமுறைகள், நாலாயிரப் பிரபந்தங்கள், திருக்களிற்றுப் படியார், சில வேதாந்த சாத்திரங்கள், பின் வந்த சமயநூல்கள் முதலிய பல நூல்களின் பாடல்களைத் தொகுத்துள்ளார்; பல பாடல்களைத் தாமே பாடியும் சேர்த்திருக்கிறார். இத்தகைய திரட்டில் இங்குக் குறித்த பாடல், 2ஆம் பிரிவு அனுபவக்கட்டளை, 20 இறையியற் பணை, 9 ஆட்சிய தருமை என்ற பகுதியில் 8ஆம் பாடலாகக் காணப்படுகிறது. தத்துவராயர் மத விகற்பமின்றித் தம் கருத்துக்கு ஒத்த பாடல்களைப் பல சமய நூல்களிலிருந்தும் திரட்டியிருக்கிறார். அவர் காலம் 15ஆம் நூற்றாண்டின் இறுதி. எனவே, அவர் கூறும் திருநூற்றந்தாதியாகிய வேறு சமயநூல், அவரது ஆட்சிக்கு வரும் அளவு ஆட்சி பெறுவதற்குக் குறைந்தது ஒரு நூற்றாண்டாவது சென்றிருக்கலாம் என்று கொண்டால், அந்தாதியின் காலம் 14ஆம் நூற்றாண்டின் இறுதியாகலாம்.

**திரு நூற்றந்தாதி.** கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் நூறு அந்தாதியாக வருமாறு பாடப்பட்ட நூல். அருகக் கடவுள் துதியாக அமைந்தது. சொல் நயமும்

தொடைநயமும், பொருள் நயமும் மிகச் சிறந்தது. இனிமையான பாக்கள். சைனர்களால் சிறப்பாய்க் கொள்ளப்படும் நூல். இதுபற்றிய செய்திகள் பல முன்னமே கூறினோம். மயிலை நேமீசர் துதியாகக் காப்புச் செய்யுள் ஒன்றும், அந்தாதி 100 பாடல்களும், நூற்சிறப்புப்பாயிரமாக வேறு இரு கலித்துறைகளும் உடையது. 99ஆம் பாடலில் நூலாசிரியர் தாம் அந்தாதி பாடிப் பிண்டியார் திருப்பாதத்திற் சேர்த்தமையைத் தெரிவிக்கிறார். சிறப்புப்பாயிரச் செய்யுட்கள், "நாக்கொண்ட செஞ்சொல் அவிரோதி நாதன் நவின்ற மெய்ந்நூல்" என்றும், "அந்தாதியாக அவிரோதி ஓதிய ஆகமம்" என்றும் கூறும்.

இந்நூல் பழைய உரையுடன் ரா. ராகவையங்காரவர்களால் செந்தமிழ்ப் பிரசுரமாக மிகச் சிறந்த முறையில் இருமுறை பதிக்கப்பெற்று இருக்கிறது. இவ்வுரையாசிரியர் பெயர் காலம் விளங்கவில்லை எனினும், இவர் ஆசிரியருடைய மாணாக்கரோ அல்லது அடுத்து வாழ்ந்தவரோ என்று எண்ணுவதற்கு இடமாயுள்ளவர். இவ்வுரை பாடல்களின் சொல் நயம் பொருள் நயங்களை எடுத்துக்காட்டி, நுணுக்கங்களை விரித்து விளக்கி, மறைபொருளான சைன சமயக் கொள்கைகளைத் தெள்ளிதிற் புலப்படுத்தி, ஆசிரியரைப் பெரிதும் பாராட்டிச் செல்வது. தம் உரை மேற்கோளாக இவர் திருக்குறளையும், நாலடி, அறநெறிச்சாரம், அருங்கலச் செப்பு, சிந்தாமணி, யசோதர காவியம் ஆகிய சைன நூல்களையும் மட்டுமே எடுத்துக் காட்டுகிறார்.

**திரு எம்பாவை:** இப்பெயர் கொண்ட சிறு நூலொன்று அவிரோதி நாதர் செய்ததாக வழங்குகிறது. இதனுள் பாவைப்பாட்டுக்கள் இருபதும் மிகைப்பாடல்கள் இரண்டும் காணப்படுகின்றன. மூன்றுமுறை இது அச்சிடப் பெற்றுள்ளது.

இச் சிறுநூலின் 15ஆம் செய்யுளில்,

இருளார்ந்த பூங்குழலீர் இசையார் அவிரோதி
பரிசார்ந்த பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.

என வருவது கொண்டு, அவிரோதி என்ற சொல் ஆசிரியர் அவிரோதி நாதரைக் குறிப்பதென்றும், அவர்தம் பெயர் தோன்ற இந்நூலுள் இச் சொல்லைப் பெய்து பாடினர் என்றும் கருதுகிறார்கள். அவிரோதி என்ற சொல் பகை கடந்தவன் என்ற பொருளில் அருகக் கடவுளின் பெயராகவே இவ்விடத்துக் கொள்ளுதல் பொருந்தும்; ஆசிரியரைக் குறிக்க நியாயமில்லை.

இந்நூலின் 16ஆம் பாடல் நேமிநாத தீர்த்தங்கரரையும் அவர் வீடு பேறுற்ற ஊராகிய சயந்தி மலையையும் குறிப்பிடுகிறது. திருநூற்றந்தாதியும் இத்தீர்த்தங்கரரைக் குறிப்பிடும். இதனாலும் இரண்டையும் ஒருவரே செய்தாரென்று கொள்ளுவார்கள். வேறு இந்நூலுள் கூறப்பட்டவை, தீபங்குடி, கச்சி, இருபத்து மூன்றும் தீர்த்தங்கரராகிய பார்சுவநாதர்.

இந்நூல் சைன சமயத்தாரிடையே மார்கழி மாதத்தில் பாராயணம் செய்யப்பெற்று வருகிறது. மேலெழுந்தவாரியாகப் பார்த்தாலும் இதன் பாடல்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு திருவாசகத் திருவெம்பாவைப் பாடலின் சொல்லையும், தொடரையும் கருத்தையும் அப்படியே எடுத்து அமைத்திருப்பது தெரிகிறது. எனினும் பாடல்கள் சிறப்பாக இல்லை. தொடையாலும் பொருளாலும் மிகச் சிறப்புடைய திருநூற்றந்தாதி பாடிய ஆசிரியரே இதைப் பாடினர் என்று கூற யாரும் மறுப்பர். இந்நூல் அவர் பாடியதன்று, மிகவும் பிற்பட்ட காலத்தது என்பது தெளிவு. (17 நூ. ?)

## வாமன முனிவர்

சைன சமய முனிவரான இவ்வாசிரியர் மேருமந்தர புராணம் என்ற பெரு நூலொன்று செய்திருக்கிறார். இவர்

வடமொழியிலும் பாகதம் தென்மொழிகளிலும் வல்லவர். பல சமய சாத்திரங்களை நன்கு கற்றறிந்தவர். காஞ்சிக்கு அருகிலுள்ள திருப்பருத்திக் குன்றம் என்னும் ஊரினர். இது சைனர் வாழும் பகுதி. இங்குள்ள சினலயத்தில் இவர் பற்றிய குறிப்புக்கள் கிடைக்கின்றன. இங்குள்ள தொரு மரத்தடியில் குரு சிஷ்யரான மல்லிசேன முனிவர் புஷ்பசேன முனிவர் ஆகிய இருவரின் பாதங்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. இதனடியிலுள்ள கல்வெட்டாலும் கோயில் கல்வெட்டாலும் (இவை வடமொழியில் உள்ளன) மல்லிசேனர் வாமன முனிவர் என்பார், இவரது மாணுக்கரே புஷ்பசேனர் என்பதும் தெளிவாகின்றன. "வந்தேகம் வாமனசார்யம் மல்லிஷேண முநீச்வரம்" என்றுள்ள தொடரால், இவருக்கு வாமனசாரியர் என்ற பெயர் உண்டென்றும் தெரிகிறது. இவ்வாசிரியர் இம் மேருமந்தர புராணமன்றி, தமிழ் ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றுகிய நீலகேசி (நீலகேசித்திரட்டு அல்லது நீலகேசித் தெருட்டு) என்ற நூலுக்குச் சமயதிவாகர விருத்தி என்ற பெயருடைய உரையும் செய்திருக்கிருர். வடமொழிச் சைன மதக் கிரந்தங்களான பஞ்சாஸ்திகாயம், பிரவசனசாரம், சமயாசாரம், ஸ்யாத்வசன மஞ்சரி என்ற நூல்களுக்கும் உரை எழுதியிருக்கிருர். இருமொழிப் புலமைபற்றி இவருக்கு உபயபாஷா சக்கரவர்த்தி என்ற பட்டமும் உண்டு.

இவ்வூர்க்கோயிலிலுள்ள சாசனமொன்று "துந்துபி வருஷம் கார்த்திகை மாதத்தில் ஹரிஹர ராஜகுமாரன் புக்கராஜன் தர்மமாக, வைசயதண்டநாத புத்திரன், ஜைனுேத்தமன், இருசப்ப மகாப்பிரதானி திருப்பருத்திக் குன்று நாயனுர், திரைலோக்கிய வல்லபற்குப் பூசைக்கு சாலைக்கும் திருப்பணிக்கும், மாவண்டூர்ப் பற்றில் மகேந்திர மங்கலம் நாற்பால் எல்லையும் இறையிலிச் சந்தமாக அளித்தார்" என்று கூறுகிறது. அடுத்துள்ள சாசன வடமொழிச் சுலோகங்கள் இரண்டு, புக்கராச சேனுதிபதியான

இருசப்பன் (வைசயநாதபுத்திரன்) குருவான புஷ்பசேனர் ஆஞ்ஞைப்படி காஞ்சி சினாலயத்தில் சில பணிகள் செய்தான் என்று உள்ளது. புஷ்பசேனர் மல்லிசேனர் வாமனர் சீடர் ஆனபடியால், இவ்வாமனர் இருசப்பனுக்குச் சற்று முன்னதாகவும் சமகாலத்திலும் இருந்திருக்கலாம். சாசன காலம் கி.பி. 1382. எனவே, இதுவே இம்முனிவர்கள் காலமும் ஆகும். வாமனமுனி கி. பி. 1375-1400 இல் இருந்திருக்கக்கூடும்.

**மேருமந்தர புராணம்**[1]: இது 13 சருக்கங்களில் 1405 பாடல்கள் கொண்டது. இறுதி வெண்பா ஒன்று, ஆசிரியர் பெயரையும் பாடல் ஒன்றையும் குறிப்பிடும் :

> ஆயிரத்து நானூற்றின் மேலும் இருமூன்றும்
> பாயபுகழ் மேருக்கள் மந்தரர்பால்—தூய
> தவராச ராசன் குறுமுனிவன் தந்த
> பவரோக மந்திரமாம் பாட்டு.

(குறுமுனிவன்-வாமனமுனிவன் ; உடலால் இவர் குறுகிய வடிவினர் போலும் ; பாட்டு-மேருமந்தர புராணம்.) இப்புராணமானது மேரு மந்தரர் என்ற இரு அரச குமாரர்களின் பல முற்பிறவிகளின் வரலாறுகளைக் கூறி இறுதியாக அவ்விருவரும் முத்திபெற்ற கதையைக் கூறுகிறது. இடையில் உலகியல்பற்றிப் பல நல்லொழுக்கங்களையும் நீதிகளையும் உபதேசிக்கிறது. சமயத்துறையில் ஜைன சித்தாந்தம் முழுவதையும் தெளிவு படுத்துகிறது.

கதை என்ற அளவில் மேருமந்தர புராணத்தில் சுவை ஏதும் இராத போதிலும்கூட, உலகநீதி இதனுள் சிறப்பாய்ச் சொல்லப்பட்டது. அவையடக்கமே மிக்க சுவையுடையது :

---

1. வீடூர் அப்பாசாமி சாஸ்திரியார் இயற்றிய புதிய உரையோடு, அ. சக்கரவர்த்தி நயினார் இதை அழகாகப் பதிப்பித்திருக்கிறார். கதைச்சுருக்கம், மணிப்பிரவாள ஸ்ரீ புராணத்திலுள்ள மேரு மந்தர புராணம் முதலியனவும் இதனுள் சேர்க்கப் பெற்றுள்ளன.

நல்லோர்கள் போயவழி நாலடிப் போயினுலும்
பொல்லாங்கு நீங்கிப் புகழாய்ப்புண் ணியமு மாகும்.

*உறுதி உபதேசமாகிய நூலின் இறுதிப் பாடல்கள் குறிப்பிடத்தக்கன :*

அறமலது உறுதிசெய் வார்கள் தாம்இலே
மறமலது இடர்செய வருவ தும்மிலே
நெறிஇவை இரண்டையும் நினைந்து நித்தமும்
குறுகுமின் அறநெறி குற்றம் நீங்கவே.

ஆக்குவ தேதெனில் அறத்தை யாக்குக
போக்குவ தேதெனில் வெகுளி போக்குக
நோக்குவ தேதெனில் ஞானம் நோக்குக
காக்குவ தேதெனில் விரதம் காக்கவே.

*ஆக்குவது என்ற இறுதிப்பாட்டு திருத்தக்கத் தேவர் பாடிய நரிவிருத்தத்தின் இறுதியிலும் காணப்படுகிறது. "தத்ஜன்மத்தில் ஸ்திரீகளுக்கு மோட்சமில்லை" என்பது சைனசமயக் கருத்து. இதை மேரு மந்தர புராணமும் கூறுகிறது.*

விதியினுற் கதிகள் நான்கில் மேவிநின்ருர்கள் தம்முள்
மதியினுற் பெரிய நீரார் மக்களாய் வந்து தோன்றி
விதியினுல் தானம்பூசை மெய்த்தவம் செய்துவீட்டைக்
கதிகளைக் கடந்துசெல்வர், காரிகையார்கள் செல்லார்.

*மேருமந்தர புராணத்தைச் சுருக்கி மேருமந்தர மாலை என்ற பெயரால் அம்மானை யாப்பில் அமைந்த ஒருநூல் அரசாங்கத் தொன்னூல் நிலையத்தில் உள்ளது. இது அல்லியரசாணி மாலை போன்ற வரிகள் கொண்ட நூல். இது ஒரு கந்தியார் பாடலாகும். சைன மக்களிடையே தங்கள் புராணக்கதைகளை நன்கு நினைவில் வைத்துக்கொள்வதற்கு இப்பாடல் மிகவும் பயன்பட்டிருக்கும். இதனேடு, பெரு நூல்களைச் சுருக்கிச் சிறுநூலாகப் பாடும் மரபு இருந்து வந்தது என்பதற்கு இதுவும் மற்ருெரு சான்று.*

**நீலகேசி விருத்தியுரை :** ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றான நீலகேசிக்கு விருத்தியுரை ஒன்று சக்கரவர்த்தி நயினாரவர்களால் சிறப்பாக அச்சிடப்பட்டுள்ளது. இவ்வுரைசெய்தார் சமய திவாகர வாமனமுனிவர் ; உரை சமய திவாகர விருத்தி எனவும் வழங்கும். இவ்வுரை மிகவும் சிறப்பான உரை. இதனுள் இறந்துபோன பெருங் காப்பியமாகிய குண்டலகேசியின் பாடல்கள் இருபதுவரை தெரிகின்றன. இன்று கிடைக்கப் பெறாத பல இலக்கண சூத்திரங்கள், புத்த சமய நூல்களான பிம்பசார கதை, மானவூர்ப் பதிகம் முதலியன இதனுள் காணப்படுகின்றன.

ஆசிரியர், பொருள் வெளிப்படையான பல பாடல்களுக்கு உரை எழுதுவதில்லை. சமயக் கருத்துக்களை மட்டும் நன்கு விளக்கிச் செல்கிறார். வடமொழி நூல்கள் காட்டப்பெற்றன பல; உபநிடதங்களும் சில; தொல்காப்பியம் நன்னூல் ஆகிய இலக்கண நூல்கள், அறநெறிச்சாரம், அருங்கலச் செப்பு என்ற சைன நூல்கள், பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் பல. காப்பியங்களான சிந்தாமணி மணிமேகலை என்பன இங்கு காட்டப்பெற்றுள்ளன. முத்தொள்ளாயிரத்தையும் இங்குக் காண்கிறோம். கொலை மறுத்தல் கூறும் வெண்பா நூலொன்று விரிவாக மேற்கோள் காட்டப்பட்டுள்ளது. போதி சத்துவர் ஒருவரைக் குறிப்பிடும்போது, "ஈழமடிப்படுத்த தாடை யாழ்வார் என்னும் போதி சத்துவர்" என்கிறார்.

மருவிய வினைகள் மாற்ற மாசினைக் கழுவி வீட்டைத்
தருதலாற் புனித னுக்குந் தன்மையாற் புண்ணிய மாமே

என்ற மேருமந்தர புராணப் பாடலைக் (95) காட்டி, "என்பது எம்மோத்தாகலின்" என்கிறார். வேறு சில இடங்களில் "என்பது எம் மோத்து" என்று குறிப்பிடும் பாட்டுக்கள் மேருமந்தர புராணத்தில் காணப் பெறவில்லை. அவை ஒருகால் சாந்தி புராணத்துள் இருக்கக்கூடும்.

அப்புராணம் இன்று இல்லை. உரையை இவர் சிறிது வட மொழி கலந்த மணிப்பிரவாள நடையிலே எழுதுகிறுர். பின்வரும் உரைச்சிறப்புப் பாயிரப் பாடல்கள் இங்குக் கருதத்தக்கன.

மெய்ந்நூல் நெறியை விளக்கி விளங்காப் பிடகமுதற்
பொய்ந்நூல் நெறிகளைப் போகத் துரந்தது பூதலத்தில்
எந்நூலும் வல்லவர் ஏத்து சமயத் திறைவன்கண்ட
செந்நீல கேசி விருத்தி சமய திவாகரமே.

அருகன் திருவறத் தன்புசெய்வாரும் அழிவழக்கால்
பெருகுந் துருநெறிப் பீடழிப் பாருமிப் பேருலகில்
பொருவின்றி நின்ற தமிழ்ப்புல வோர்க்குப் பொருளை
[யெல்லாம்
திரிவின்றிக் காட்டும் சமய திவாகரம் சேவிக்கவே.

புராணமும் இவ்விருத்தியும் செய்த வாமன முனிவர் ஒருவரே என்பது எம் கருத்து. (வேருனவர் என்பாரு முளர்.)

## சீவ சம்போதனை

இது சிறப்பான சைன சமய நூல்களில் ஒன்று. அச் சமயக் கொள்கைகள் சிலவற்றைத் தெளிவாக விளக்கிக் கூறுகின்றது. இது 550 பாடல்களையுடையது. பாடல் களில் விருத்தம் 5, கலிப்பா 4, அகவல் 3, மற்ற யாவும் வெண்பாக்கள், பாடல்களின் இடையே, சில பாடல் களுக்கு உரையாகவும், சில பாடல்களில் சொல்லப் பெருத செய்திகளைப் புதிதாக விரித்தும் சுருக்கியும் உரைப்பதாக வும் உள்ள உரைநடைப் பகுதி காணப்படுகிறது. இவ்வுரை நடை மணிப்பிரவாள நடை; முழுமையும் வடமொழி பெய்து எழுதப்பட்டுள்ளது. உரைநடைப் பகுதியும் ஆசிரியர் செய்ததே யாகும்.

உயிர்கட்கு (சீவனுக்கு) நன்மை பயப்பனவாகிய பன்னிரு அனுப்ரேக்ஷை அல்லது சிந்தனைகளை விளக்கு

வதால் அல்லது போதிப்பதால் இந்நூல் சீவசம்போதனை எனப் பெயர் பெற்றது. அனுப்ரேக்ஷை-அடிக்கடி சிந்திக்க வேண்டியவை. இவை சைனர்களுக்கு இகலோக பரலோக வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. இவை அநித்தியம் (நிலையாமை), அசரணம் (புகலின்மை), ஏகத்துவம் (தனித்தன்மை), அன்னியத்துவம் (உறவற்ற தன்மை), சம்சாரம் (பிறவி மாறுதல்), உலகம், அசுசித்துவம் (அழுக்கு), ஆசிரவம் (வினை ஊற்று), சம்வரை (வினையைத் தடுத்தல்), நிர்ஜரை (வினையை உதிர்த்தல்) தருமம், போதி துர்லபம் (அறிவு பெறற்கு அருமை) என்னும் பன்னிரண்டாகும். இப் பன்னிரண்டு சிந்தனைகளையும் சாதித்து முத்தி பெற்ற புண்ணியக் கதைகளை இந்நூல் கூறுகிறது. சகரன், முண்டகௌசிகன், வராங்கன், இராவணன், வசந்த திலகை, சுகுமாரன், சுகௌமன், துவிபாயண குமாரன், பாகுபலிகுமாரன், புஷ்ப தந்தை, பூமிபாலன், படகஸ்தன், வேளாளன், பிரபாவதி, நாகதத்தன், கன்யகுமாரன் ஆகியோர் கதைகளை இந்நூல் இவ்வனுப்ரேக்ஷைகளுக்கு விளக்கமாக எடுத்துக் கூறுகிறது. இவை அருக பரமேசுவரன் திருமுகத்தில் உற்பவித்தன என்றும், சிரேணிக மகா மண்டலேசுவரன் கேட்பக் கௌதம கணதர சுவாமிகள் உபதேசித்தார் என்றும் இந்நூல் கூறும்.

சைன சித்தாந்தத்திற்கு இது ஒரு சிறப்பான நூல் என்பது தெளிவு. இந்நூல் முடிவில் உள்ள பாடல் (500) ஆசிரியர் பெயர் தேவேந்திர மாமுனிவர் என்று தெரிவிக்கிறது :

தேவேந்த்ர மாமுனிவர் சீவசம் போதனையைப்
பாவேந்தர் நற்றமிழாற் பாடினார்—நாவேந்தர்
சொல்லாற் பொருளால் தொகுத் துரைப்பார் சிந்திப்பார்
புல்லார்கள் நாற்கதியிற் புக்கு.

இம்மாமுனிவரைக் குறித்து வேறு எந்த வரலாறும் தெரியவில்லை. எனினும் பொதுவாகச் சில கருத்துக்கள்

இங்குக் கூறுதல் கூடும். 14-15 ஆம் நூற்றாண்டுகள் தமிழ் நாட்டில் எல்லாத் துறையிலும் ஒரு புதிய கிளர்ச்சி ஏற்பட்ட காலம். சைவம், வைணவம் இரண்டிலும் மிக்க எழுச்சி ஏற்பட்டு, சாத்திர நூல்களும் உரைகளும் ஆசாரிய பீடங்களும் தோன்றின. மணிப்பிரவாள நடையில் வைணவ உரைநடை நூல்கள் தோன்றி வளர்ந்தன. சைன சமயத்திலும் இக்காலத்தில் நூற்பெருக்கம் ஏற்பட்டமை திருநூற்றந்தாதி, மேருமந்தர புராணம், ஸ்ரீபுராணம், திருக் கலம்பகம் முதலான நூல்களின் வரலாற்றால் நன்கு விளங் கும். மணிப்பிரவாள நடையும் பாட்டும் உரையும்கொண்ட இந்நூல், இக்காலத்தே தோன்றியது என்பது பொருந்துவ தாகும். இதற்குப் பின்னும் ஒரு சான்று உண்டு.

சீவசம்போதனைச் செய்யுட்கள் அனைத்தையும் பல முறை நன்கு ஆராய்ந்தவர் எவரும் ஒரே முடிவுக்கு வர முடியும்; பாடல்களின் ஓசை, செய்யுளமைப்பு, வினைமுடிபு சொல்முடிபு, கருத்தமைதி, எதுகை மோனை அமைப் புக்கள் ஆகிய யாவும் நளவெண்பாவை நினைவூட்டு கின்றன. இதனால் பெறுவது யாதெனின், இந்நூல் நள வெண்பாவுக்குப் பிற்பட்டுத் தோன்றியது என்பதாகும். நளவெண்பா 13ஆம் நூற்றாண்டில் எழுந்தது என்பது அறிஞர் கருத்தாதலின், இந்நூல் 14ஆம் நூற்றாண்டில் தோன்றிய நூல் என்று கருதுவது எல்லா வகையாலும் பொருந்துவதாகிறது. நூல் செய்த தேவேந்திர முனிவர், நளவெண்பாவை நன்கு பயின்று அதன் எளிமையான கவிதைச் சுவையில் பெரிதும் ஈடுபட்டிருக்கிறார். அந் நூலையே தமக்கு முன் மாதிரியாகக் கொண்டு தம் சமய நூல் செய்தார் என்று நாம் கருதலாம். இதன் அவை யடக்கப் பாடல், 'மட்டவிழும் பங்கயங்கள் பூத்த மருவ கத்தே—கொட்டிகளும் தோடவிழ்ந்தாற் போலவே' என்பது; 'கோகனகப் பூக் கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில' என்ற புகழேந்தி கதையில் வரும் பாடலையும்

'மன்னர் விழித் தாமரை பூத்த மண்டபத்தே—பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்' என்ற நளவெண்பாப் பாடலையும் (114) இது நினைவூட்டுகிறது; 'வேல் வேந்தன்—பொன் திகழும் மண்டபத்தே போய்ப்புக்கான்' என்ற இந் நூல் 33ஆம் பாடலையும் காண்க.

காலத்தை அறுதியிடுவதற்கு மற்ருெரு குறிப்பும் நமக்குக் கிடைக்கிறது. நன்னூலின் சிறப்புப்பாயிரமானது, சீயகங்கன் வேண்டுகோளின்படி பவணந்தி முனிவர் நன்னூல் செய்தார் என்று கூறுகிறது. சீயகங்கன் கி. பி. 1178 - 1216 வரை அரசுபுரிந்த மூன்ரும் குலோத்துங்க சோழமன்னர் காலத்தில் இருந்தவன். இதுவே நன்னூலின் காலமாகும். சீவசம்போதனையாசிரியர் இரண்டு பாடல்கள் முழுமையும் நன்னூலைத் தழுவிப் பாடி இருக்கிருர். நூல் கேட்கும் உரிமையல்லாதோர் யாவர் என்று கூறுகிருர்:

பிள்ளைபேய் பித்தன் பிணியாளன் பொன்ஞேக்கி
வெள்ளைக் களிவிடமன் வேட்கையான்—தெள்ளிப்
புரைக்கப் பொருளுணர்வார் என்றிவரே நூலை
உரைத்தற் குரிமை யிலாதார்.

இது ஓரளவு நன்னூல் பொதுப்பாயிரம் 39ஆம் சூத்திரத்தைத் தழுவியதென்பது புலப்படும்.

களிமடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் தறுகணன் பாவி
படிறன் இன்ஞேர்க்குப் பகரார் நூலே.

இதே போல, தலை இடை கடை மாணக்கரைக் கூறும் நன்னூல் சூத்திரமும் குறிப்பிடத் தக்கது (38):

அன்னம் ஆவே மண்ஞேடு கிளியே
இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணக்கர்.

இங்கு கடை மாணக்கர் 'இல்லிக்குடம் ஆடு, எருமை, நெய்யரி அன்னர்' என்று சூத்திரம் கூறுகிறது. இக் கருத்தைப் பெரிதும் விரித்து, சீவசம்போதனையுடையார், தரும சிரவணம் கேட்டதற்குரிய சீவவகை இன்னது என்று ஒரு வெண்பாவால் கூறுகிறார்:

அட்டைக்கிளி வெருகு ஆடெருமை வல்லூறு
குட்டற் குடங்கல் லொடுமண்ணு—மட்டக்கள்
நெய்வடிநார்ப் போல்வாரை நீத்தன்ன மேபோலும்
மெய்யுணர்வார் கேட்டல் விதி.

நன்னூலார் கூறிய இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி என்ற நான்கினுடன் இவர் அட்டை கிளி வெருகு வல் லூறு கல் மண் என்னும் ஆறையும் சேர்த்துக் கூறுகிறார்; (மண்ணும் கிளியும் இடை மாணக்கர் தன்மைக்கு எடுத் துக்காட்டாக நன்னூல்கூறுகிறது.) எனவே, இவர் நன்னூ லாருக்குப் பின் வந்தவர் என்பது தெளிவு. சீவசம்போதனை 14ஆம் நூற்றாண்டுக்குரியதாகும் என்ற கருத்து இதனை லும் வலியுறுகின்றது.

சிலர் நன்னூற் பாயிரச் சூத்திரங்கள் பழமையானவை, பவணந்தி செய்தனவல்ல, அவர் இவற்றைத் தம் நூலில் எடுத்து வைத்துக்கொண்டார் என்பர். இதனாலும் முந்திய முடிவு பாதிக்கப்பெறாது. பாயிரச் சூத்திரங்கள் யாவும் ஒரு தொகுப்பாக நமக்குக் கிடைப்பது நன்னூலில் தானே யொழிய, இன்று வேறு நூலில் அல்ல. சீவசம்போதனை யுடையார் இக்கருத்துக்கள் நன்னூற் சூத்திரங்களில் கண்டு எடுத்துக்கொண்டார் என்று நாம் சொல்ல வேண்டுமே யன்றி வேறு வகையாகச் சொல்ல இடமில்லை.

14ஆம் நூற்றாண்டிலேயே நன்னூல் உரை செய்த மயிலை நாதரும், மிகவும் பிற்பட்டவராகிய சங்கர நமசி வாயரும் (18) மாணக்கர் தன்மை கூறிய பாடலுக்கு "இவர் இயல்பு விரித்துரைத்துக் கொள்க" என்று மட்டும் சொல் லிப் போயினர். ஆனல் சீவசம்போதனையார் இவ்

உவமைத் திறமும் பொருள் திறமும் நன்கு விளக்கியிருப்பது உணர்ந்து மகிழத்தக்கது :

"அட்டை ஊனமுள்ள விடத்தைப் பற்றினாற்போல, தோஷக்கிராகியா யிருப்பாரும்; கிளியும், சொல்லிற்றே சொல்லுமதல்லது தன்னாலொன்றும் தேர்ந்துரைக்கமாட்டாது : அதுபோலப் பரீக்ஷை யில்லாதாரும்; வெருகும், அடங்கி ஒடுங்கிப் பார்த்திருந்து வந்துற்ற ஜீவனைப்பிடித்து பக்ஷிக்கு மதுபோல, பார்த்தார்க்குச் சாதுக்களைப் போன்றிருந்து இம்சாதிகளை நிகழ்த்துவாரும், ஆடு, எல்லாக் குளகும் தின்னுமது போல, எல்லாத் தெய்வமும் எல்லாத் தர்மமும் ஒக்கு மென்றிருந்து நன்று தீதென்று பரீக்ஷையறியாதாரும்; எருமைகளும், தெளிந்த நீர் குடித்துச் சாணகமும் நீருமிட்டு அந்நீரைக் கலக்கிப் போகுமதுபோல, தர்ம சிரவணங் கேட்கப் புக்கு ஏதேனும் குற்றம் நாடிச் செல்வாரும்; வல்லூறு பிடித்தது விடாமல் பற்றினாற்போல, சர்வ ஜீவ தயாபரமே தர்மமென்பதோர் பரீக்ஷையின்றிப் பற்றித்து விடேனென்றிருக்கும் அஞ்ஞானியும் பின்னப் பாசனத்தட்டின் ஜலம்போல எத்தனை நாள் தர்மத்தைக் கேட்டும் கொள்ளமாட்டாத சூனிய ஹிருதயரும்; கல் எத்தனை நாள் நீரிற் கிடப்பினும் மெத்தென்னாதவாறுபோல, எத்தனைநாள் தர்மம் கேட்பினும் உட்புகாத மனமுடையாரும்; பூமியும், நீர் கண்டபோது நெகிழ்ந்து அல்லாத பொழுது நயங்கெட்டு வலிக்கு மதுவேபோல, தர்ம சிரவணங்கேட்டபொழுது நெகிழ்ந்து அல்லாதபொழுது வலித்திருக்கும் மனமுடையோரும்; நெய்வடிநார், சாரமான வஸ்துவைவிட்டு துஸ்ஸாரத்தைச் சங்கிரகித்தாற்போல தோஷம் பிடித்திருக்கும் மனமுடையோரும்- இச் சொல்லப்பட்ட சுபாவங்களை யுடையாரன்றி க்ஷீரோதகத்தில் நீர் ஒழியப் பால்நுகரும் ஹம்ஸம்போலத் தோஷத்தைவிட்டுக் குணக்கிராகியா யிருப்பார் தர்மசிரவணங் கேட்டற்கு உரியர்" (36).

பண்டைய இலக்கியங்களை நினைவூட்டும் சொல் தொடர் ஆட்சிகள் இதனுள் மிகப் பல. காப்புச் செய்யுள் சீவக சிந்தாமணிப் பாடலைத் தழுவியது. பொறி வாயிலைந் தவித்த புனிதன் (27), பொறி வாயிலைந் தவித்தான் (473), 'வேண்டிய வேண்டியாங் கெய்தும் வினையறத்தை ஈண்ட முயல்வாயேல்'(45),'நாற்றம் சுவையொளி ஊறு ஓசை(346)' என்பன திருக்குறள் தொடர்கள். 'விளக்குப் புக இருள் வீயும் (309)' என்பது நாலடியார்க் கருத்து. மேலும், பொருள் தேடுதலால் வரும் துன்பத்தை ஒரு பாடல் கூறுகிறது:

பொருளாசை யாலீட்டல் துன்பமே போகந்
தெருளாசை யாவதுவுந் தீதே—மருளாகி
ஈட்டுதலுந் துன்பம் கெடில்துன்பம் துன்பமே
ஊட்டுந் திறனில்லை உற்று.

இது நாலடி 280 ஆம் பாடலை எடுத்து அமைத்தது என்பது வெளிப்படை:

ஈட்டலும் துன்பம்மற்று ஈட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்—காத்த
குறைபடில் துன்பம் கெடில்துன்பம் துன்பக்கு
உறைபதி மற்றப் பொருள்.

'முன் பயந்த தாய்மார் முடிவில்லை' (188) என்பது 'அன்னை எத்தனை எத்தனை அன்னையோ' என்ற சாமானியமான பட்டினத்தார் பாடலை நினைவூட்டுகிறது. இப்பட்டினத்தார் 14 ஆம் நூற்றுண்டுக்குரியவர். இராவணனைக் குறிப்பிட்டுப் பாடும்போது (212), 'கைலாசம் எடுப்பித்த வீரியமும் ஏவிய வண்ணம் செய்யும் ஆழியும் விஞ்சைகளும் சாதுரங்க பலமும் தன்னை யோம்பியதில்லை', என்ற சொற்கள் 'வாரணம் பொருத மார்பும்' என்ற இராமாயணப் பாடலை நினைப்பிக்கின்றன.

அருஞ்சொற் பிரயோகங்கள் பல இந்நூலுள் உள்ளன. விரதம் என்ற சொல் பாகதமாகிப் பல இடங்களிலும் வதம் என்றே வழங்குகிறது. சூளாமணி இவ்வடிவத்

தைக் குறிப்பிடுகிறது. வகூரி (44) நாத்தூண் (240) பேழ் கணித்து (235) திட்டிவிடம் (192) என்பன சில. அண்ணன் மார் (513) சிற்றப்பா (240) என்ற வழக்குச் சொற்களையும் காண்கிறோம். 'பவ்விய ஜீவன்' என்ற தொடர், உரை நடைப் பகுதி ஒவ்வொன்றின் இறுதியிலும் 'கேளாய் பவ்யஜீவனே' என்று விளித்துக் கூறுவதாக அமைந்துள் ளது; பவ்வியர் என்றும் தனியே வருகிறது. பவ்வியஜீவன் என்ற தொடர் சிந்தாமணி உரையிலும் திருவாய் மொழி உரையிலும் பயில்கின்ற அரிய தொடர்.

வடமொழிப் பாடல்கள் மூன்று வருகின்றன. இரண்டு சமவசரண வருணனையாக உரை நடைப் பகுதியின் இடையே (24) வருகின்றன. மற்றொன்று 458 என்ற எண் தரப்பட்டு நூற்பாடலாகவே கணக்கிடப்பட்டுள்ளது. தொடர்ந்து, 'என்னும் சூத்திரத்தை நினைத்து' என்று உரைப்பகுதியில் வருவதால் இவ்வடமொழிப் பாடல் மேற் கோள் எனக் கருதத் தக்கது. இதன் பொருள், 'நூறு பிராமணரைவிட ஒரு வேதபாரகர்மேல், இவர் ஆயிரம் பேரைவிட ஒரு ரிதுகாமினர் மேல், இவர் ஆயிரம் பேரை விட ஒரு பிரமசாரிமேல், இவர் ஆயிரம் பேரைவிட ஜிதேந் தரியர் மேல்' என்பது.

ஐந்து பாடல்கள் (27-31) அருகக் கடவுள் துதியாக வுள்ளன. இவை மட்டும் 'ஸ்ரீ வர்த்தமானன் எனும் தீர்த்தன் நீயே' என்பதை மகுடமாகவுடைய எண்சீர் விருத்தங்கள்.

பாடல்கள் யாவும் நல்ல தமிழில் உள்ளன; செந்தமிழ் நடையாகவேயுள்ளன. உரைநடைப் பகுதி மட்டுமே வட மொழிக் கலப்புடையது. சில இடங்களில், ஆசிரியர் முழு மையும் வடமொழியாகவே பெய்திருக்கிறார். காரணம் வெளிப்படை. அக்காலத்தில் சமயநூல் வடமொழியில் இருந்தால்தான் சமயநூற் பண்டிதர் ஏற்பர்; இல்லை எனின், நல்ல தமிழில் பாடல் எழுதும் இவ்வாசிரியர் மணிப்

பிரவாளம் மிகுதியாக எழுத நியாயமில்லை. எனினும், இவர் எழுதும் உரைநடை சொல்லாலும், பொருளாலும், கருத்தாலும், சிறப்பாகவே உள்ளது. 'திரு நின்ற பக்கல் திறலுடைத்து, அருள் நின்ற பக்கல் அறிவுடைத்து என்னும் காரியமும் புத்தியும் குணமும் கண்டு' (498); 'வஞ்சிக் கொம்பன்னார் பஞ்சி மெல்லடிப் பாவையர்கள் வெயிலும் பணியும் காணா மேனி யின்புடையார்கள், உள்ளமுடையார்க்கு ஒன்று அரியதுண்டோ என்னும் உரையினை நேரே காட்டுவார்போல' (304); 'நம் நம்பிக்கு வியாதி ஒன்றுமில்லை. நந்தவனத்தில் தண் பொய்கையில் தாமரைப் பூவில் முன்னை நாள் பொதிந்து பின்னை நாள் வாங்கின அரிசியின் அடிசில் அல்லது உண்டறியான். இங்ஙனம் எம் பெருமானாகிய தாங்கள் எழுந்தருளியவாறே அவ்வரிசி இருவருக்கும் போதாமையால் மற்றும் சில அரிசி மிஸ்ரமித்தமையால் அந்த அவிழ்து மிருது வல்லமையின் உமிழ்ந்துண்டான்; அன்றியும், மங்கலப் பெண்கள் எம்பெருமானுக்குச் சேஷையிட்ட ஸித்தார்த்த மென்னும் வெண்சிறு கடுகு ஊன்ற ஆஸநத்து ஸ்திரமாயிருந்திலன். அன்றியும் தூய மாணிக்க விளக்கல்லது விளக்கொளி கண்டறியாமையின் இங்ஙனம் எம்பெருமானுக்குத் தீபம் ஏற்றின புகை மிஸ்ர ஒளியால் நயனத்தினிடத்து நீர்ததும்பியது (292)' என்ற பகுதிகள் காண்க.

கலிப்பாக்களும் அகவற்பாக்களும் நூலின் பகுதியாகவே எண்ணப்பட்டுக் காண்கின்றன. இப்பகுதிகள் பெரும்பான்மையும் வருணனைகள்; யாவும் சிறப்பாயுள்ளன. பாடல் 12—கலிப்பா, 37 அடிகள் கொண்டது. மகதநாட்டு வளம் கூறுகின்றது. நாட்டுவளம் என ஒரு வெண்பா (11) பாடி, உரைநடை எழுதவந்த ஆசிரியர், இக்கருத்தை இங்குக் கலிப்பாவால் எழுதிவிட்டார் போலும். பாடலானது சொற்சுவையும் பொருட்சுவையும் தொடை நயமும் மிக்கது :

பரவையின்நற் புனல்முகந்து மிசையெழுந்து பயோதரங்கள்
இரவிமிகு விபுலகிரி மிசையின்மிகப் புயல் பொழிய
காரகிலின் குறடுக்கிக் கருமாவின் எயிறுவாரி
வேரிமிகு மதுப்போது மேன்மேலுங் கொண்டெழுந்து
சந்தனத்தை முறித்தெறிந்து தமனியத்தின் தழைவாரிச்
சிந்தூரம் இலவங்கம் திமிசுதெறுங் கற்பூரம்
கறையடியின் கொடியினொடு கணமயிற் பீலியும்வாரி
துறைதுறையன் புகத்தள்ளிச் சுரும்பரெழுந் திசையார்ப்ப
அங்குநின்று போந்திழிந் தரும்பாலை புறக்கிட்டு
கொங்குலவு மலர்முல்லை கோவலர்கள் இடங்குறுகிக்
கொன்றைமலர்ப் பொன்காட்டக் கோபமது வாய்காட்ட
மன்றலருங் காந்தள்மலர் கைகாட்ட வளம்பெருகி
வயங்கியொளி வளர்கின்ற மருதத்தி னிடைசென்று
இயங்கியமா யமுனையது எழிலாக வேயெய்தி
மாதவியின் பொழில்நுழைந்து மலர்தொகுத்துச்
சினைமுறித்துத்
தாதவிழும் சண்பகத்தைத் தடிந்தீர்த்துத் தலைக்கொண்டு
உற்பலத்தைப் பறித்தெறிந்தங்கு ஓடைகளிற் புகமண்டிப்
பூக்த்தின் பொழில்நுழைந்து புன்னைக் கோடிறுத்து
நாகத்தின் மலர்பறித்து நாளிகேரத் திடைப்புக்கு
வரம்பேறித் தரங்கொண்டு மதிப்பரிய வயல்மண்டிக்
கரும்போடு பெருஞ்செந்நெற் குலையுந்திக் கமலத்திற்
புள்ளெழுந்து புறம்பாயப் புனல்பாயக் கருமேதி
மன்னர்க ளுடன்பாய வயலின்மிசைக் கயல்பாயத்
தேன்பாய நீலத்தின் மலர்பாயச் சிறைவண்டு
தான்பாயச் செங்குடையில் தண்காவி சிறக்கணிப்பச்
சங்கீன்ற வெண்முத்தும் சலஞ்சலமும் பசும்பொன்னும்
அங்கங்கே உழவர்களுக் களித்தினிது திரைக்கரத்தால்
எங்கெங்குஞ் சென்றெய்தி இருமருங்கும் பொருதலைத்து
மங்கையர்கள் மனம்போன்று வருகலுழி நுரைசுமந்து
அறவோர்தம் பொருள்போன்றங் ககலிடத்திற் பொருள்
பெருக்கி
நிறைவாகத் தெளித்தெங்கும் நிரம்பித்தன் வளம்பெருக்கி
அன்னமது சூழ்வளநாட் டளப்பரிய காட்சியது

**தன்னுடைய பெயரேந்தித் தராதலத்திற் குபகரித்து**
**மன்னியதொல் குணத்தின்மிகு மகதவள மாநாடே.**

*இவ்வாறு பாட்டையே உரை நடையாக எழுதியிருப்பதை 38 ஆம் பாடலுரையிலும் காணலாம்.*

*இங்ஙனமே நிலையாமை (44-19 அடி), காலன் உயிர் கவரும் முறை (55-20 அடி) நவநிதிகள் அளிக்கும் செல்வம் (77-37 அடி) என்பன சிறப்புடையன. காலனைக் குறித்த பாடல் கபிலரகவலுடன் ஒப்பு நோக்கத் தக்கது. ஜீவ ரத்தினம் அஜீவரத்தினம் என்னும் இருவகைக்குமுரிய ஈரேழு ரத்தினங்களும் அளிக்கும் செல்வச் சிறப்பை 79 ஆம் பாடல் (கலிப்பா) உரைக்கிறது (அடி 42). சிரேணிக மகாராஜன் கூறுகின்ற அறிவுரை (அகவற்பா 88-14 வரி) மிகவும் சிறப்பானது.*

அறிவெனப் படுவது துன்பந் துடைத்தல்
செறிவெனப் படுவது மும்மையும் செறிதல்
ஆண்மை யெனப்படுவது ஐம்புலன் வெல்லல்
கேண்மை யெனப்படுவ கெட்டிடத்து தவல்
அருமை யெனப்படுவது அறநெறி வழுவாமை
பெருமை யெனப்படுவது பிறனில் விழையாமை
அறமெனப் படுவது உற்றுழி நிற்றல்
வாய்மை யெனப்படுவ வருந்தா துரைத்தல்
தூய்மை யெனப்படுவது உள்ளத் தூய்மை
இன்பமெனப் படுவது ஈறில் இன்பம்
அன்பெனப் படுவது ஆர்வம் உடைமை
தவமெனப் படுவது ஐம்புலன் வெறுத்தல்
வதமெனப் படுவது கொல்லா விரதம்.

*உரைப் பகுதியில் சுவையான கதைகள் பல உவமை முறைமையில் பயில்கின்றன. "ஆட்டைக் காட்டகத் துய்த்துக் கொல்லக் கத்தி காணுதிருப்ப, ஆடு தன் காலாலே புரண்டிக் கிளப்பப் பண்டு புதைத்துக் கிடந்த கத்தி தோன்றலும் அது கொண்டு அதை வதை செய்தான்*

போல, நீயும் உன்னைக் கொல்வதற்குத் தேடித் திரியுங் காலனுக்குப் பாவத்தைப் போக்கினால் எமராஜன் கொல் லாது தவறுமோ?" என்பது ஓர் எடுத்துக்காட்டு. பதின் மூன்று கொடிகளை (74) குறிப்பிடுகிறார்.

புத்தருக்குப் பணிவிடை செய்த பெண் சுஜாதை என் பவள் தன் பிள்ளை இறந்து போகவும் அதை யெழுப்பித்தர வேண்டுமென அவரைக் கேட்க அவர் சாவறியாத வீட்டி லிருந்து கடுகு கொண்டு வரச் சொல்லி அவள் முடியாது போகவே அவளுக்குத் 'தோற்றம் உண்டேல் மரணம் உண்டு' என்ற உண்மையை உபதேசித்தார் என்பது வர லாறு. இது போன்ற வரலாறு ஒன்று இந்நூல் கூறுகிறது. இறந்து போன தன் மகனை எழுப்பித்தர வேண்டுமென்று கேட்ட பிராமணனுக்குச் சிரேணிக மகாராஜன் கூறு கிறான்: ஓமம் பண்ணினாலல்லது உன் மகனை எழ வைக்கமுடி யாது. ஓமத்துக்கு அரியவும் பெரியவுமாகிய வஸ்துக்களெல் லாம் எம் பக்கலிலேயுள. இனி வெளியவா யிருப்பன இரண்டு வஸ்துக்கள். அவை யுன்னாலன்றித் தரவராது. அவை யாவை யென்பாயாகில் தம் வம்ஸத்திலே யாரும் எக்காலத்தும் சாவாதாருடைய மனையிற் புல்லும் நெருப்பும் கொண்டு வரவல்லை யாகில், உன் மகனை ஓமத்திலே எழ வைப்போம்'' என்றுரைப்ப, வேதியனும் போய் நகர முற்றுந் திரிந்து எங்கும் அவை பெற்றிலேனென்று சொல்ல, அரசன் சொல்லுவான்: "முன்பு பல சக்கரவர்த்திகள் இப் பூமியாண்டார். அவர் தாம் மிருத்தியு கொண்ட சீவனைப் பேர்த்தாரென்று கேட்டறிவதுண்டோ? பிறந் தார் யாவரும் இறவாதாரின்மையும், போன சீவனையும் மீட்கவொண்ணாமையும் அறிந்து, அறியாது அழுவ தென்னோ? கூற்றுக்கு அழுது கண் குருடாயிற்று என்று தேற்றமுடையார் சொற்கேளாதே திகைப்பதோ?

சீவசம்போதனை என்ற இதே பெயருள்ள ஒரு நூல் கன்னட மொழியிலும் உள்ளது; அதைச் செய்தவர்

பந்துவர்மன் என்னும் புலவர்: இரண்டு நூல்களும் ஒன்றே, சொல்லும் பொருளும் ஒன்ருகவே இருத்தலினுல் இரண்டையும் ஒருவரே செய்திருக்க வேண்டுமென்று கன்னட பண்டிதர் சேஷையங்கார் அவர்கள் குறிப்பிட்டு, சில ஒற்றுமைப் பகுதிகளையும் எடுத்துக் காட்டியிருக் கிருர். அன்றியும், சிரேணிக மகாராஜனுக்குக் கண தரர் இந்நூலை உபதேசித்தார் என்ற பீடிகை கன்னட நூலில் இல்லை யென்று தமிழில் வழங்குகின்றன. "வளைபயில் கீழ் கடல் நின்றிட மேல்கடல் வானுகத்தின் தொளை வழி நேர் வழி கோத்தன" என்னும் விஷயம் தமிழ் நூலில் காணப் படாமல் கன்னட நூலில் மட்டும் காணப்படுகிறது என்றும் அவர் குறிப்பிட்டு இருக்கிருர். பன்னிரண்டாம் நூற்றுண்டு தொடங்கிக் கன்னட மொழியில் வீர சைவ சமயம் ஏற் பட்டு, கன்னட மொழிக்கும் தமிழுக்கும் தொடர்பு பெரு கிற்று. அதையொட்டிப் பின் வந்த காலத்தில் சைன சம யத்திலும் இரு மொழிகளின் தொடர்பு வளர்ந்தது என்று நாம் கருதலாம்.

பந்துவர்மன் செய்த கன்னட நூலும் தமிழ் நூலை யொப்ப 558 பாடல்கள்; செய்யுளும் உரைநடையும் கொண்டது. செய்த பந்து வர்மர் இந்நூலன்றியும் 22 ஆம் தீர்த்தங்கரராகிய நேமி நாதர் சரிதத்தை ஹரிவம்சம் என்ற சரித்திரமாகவும் கன்னடத்தில் பாடி இருக்கிருர். இவர் சைனர். வைசிய வகுப்பினர். 1235 இல் வாழ்ந்து சாந்தீ சுவர புராணம் செய்த கமலபவர் என்பவர் அந் நாளில் பந்து வர்மனைப் புகழ்வதால் பந்துவர்மன் கி. பி. 1200 ஐ ஒட்டி வாழ்ந்தவனுகலாம் என்பது ஐயங்கார் கருத்து. அந் நூல் பாமர மக்கள் வழங்கும் ஹல கன்னட மொழியில் செய்யப் பெற்றது. பேச்சு வழக்கான சொல்லாட்சி அதில் நிரம்ப உண்டு. அன்றியும் 1600 இல் சாளுவர் என்ற கன்னடப் புலவர் அந்நூல் பாடலொன்றை எடுத்தாளு கிருர் என்று அவர் எழுதி இருக்கிருர்; கன்னட நூலில்

காணாத கருத்து தமிழ் நூலிலும், தமிழ் நூலில் காணாத கருத்து கன்னட நூலிலும் காணப்படுகின்றன என்றும் அவரே கூறுகிறார்.

அவர் குறிப்பின்படி கமலபவர் (1235) குறிப்பிடும் பந்துவர்மர் இக் கன்னட நூலாசிரியரே ஆயின், இவரே காலத்தால் முந்தியவர் என்றும் தமிழ் நூல் பின்னர் ஏற்பட்டதென்றும் திட்டமாக நாம் கொள்ளவேண்டும்; ஆனால் தொடக்கத்தில் கூறிய குறிப்புக்களால் இத்தமிழ் நூல் 14ஆம் நூற்றாண்டுக்குரியது என்பது தெளிவு.

[பதிப்பு: சீவசம்போதனை முதல் இரு அத்தியாயங்கள் மட்டும், சுபானு வருஷம் கார்த்திகை மாதம் (1883) சைன பண்டிதர்களால் சஞ்சிகையாக அச்சிட்டு வெளியிடப்பட்டது. அதனுள் தேவேந்திர மகா முனிவர் எழுதியதாகத் தலைப்பு. சிறு உரைக் குறிப்பும் உண்டு. பின், வையாபுரிப் பிள்ளையவர்கள் இதைச் சென்னை சர்வ கலாசாலைச் சஞ்சிகையில் வெளியிட ஏற்பாடு செய்து ஆறு அத்தியாயங்கள் அச்சிடப் பெற்றன. அவர்கள் ஓய்வு பெற்றவுடனே அச்சு தடைப்பட்டு, பின் வந்தோருக்கு இந் நூல் செய்தியே தெரியாமல் நூல் மறைந்து போயிற்று. முடிவில் சென்னை-சைன சித்தாந்த நூல் நிலையத்தார் விரிவான தமிழ் ஆங்கில முன்னுரைக் குறிப்புக்களோடு 1957 இல் முழு நூலும் வெளியிட்டார்கள். பக்கம் 80+344. கதைச் சுருக்கமும் இதில் தொடக்கத்தில் சேர்க்கப்பட்டுள்ளது.]

அத்தியாயம் 11

# பிரபந்த இலக்கியம்

## முன்னுரை

சிவந்தெழுந்த பல்லவராயன் உலா என்ற 17 ஆம் நூற்றாண்டுப் பிரபந்தம் 'தொண்ணூற்றாறு கோலப் பிரபந்தங் கொண்ட பிரான்' என்று கூறுகிறது. எனினும், பிரபந்தங்கள் 96 என்ற வழக்காறு இன்னும் பிற்காலத்தில் 18 ஆம் நூற்றாண்டில்தான் ஏற்பட்டது. பிரபந்த இலக்கணம் கூறும் நூல்கள் பல 12-13 ஆம் நூற்றாண்டுகளிலும் தோன்றின. பெரும்பாலான பிரபந்த வகைகள், இலக்கணம் எழு முன்னமேயே தோன்றியிருந்தன. இதுவே இயல்புங் கூட. பத்துப் பாட்டுள் ஐந்து, ஆற்றுப்படைப் பிரபந்தமாகும். அங்க மாலை எழு கூற்றிருக்கை என்ற பிரபந்தங்கள் தேவாரங்களுள் காணப்படுகின்றன. திருக்கோவையாரே ஒரு பிரபந்தம். திருவாசகத்துள் தசாங்கப் பிரபந்தம், பள்ளி எழுச்சி, ஊசல், சதகம், பதிகம் போன்றன பயில்கின்றன. 11 ஆம் திருமுறையோ மிகப் பலவான பிரபந்த வகைகளைத் தன்னகத்துக் கொண்டுள்ளது. அந்தாதி, இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, நான்மணிமாலை, கலம்பகம், உலா, ஆற்றுப் படை, ஒருபா ஒருபது, எழுபது, எழு கூற்றிருக்கை ஆகியன இங்குள்ளன. எனவே, 14-15 நூற்றாண்டுகளில் பிரபந்தங்கள் மிகப் பல தோன்றியிருத்தல் இயல்பே. ஆனால் இவற்றுள் இன்று தெரிந்தன, கிடைப்பன, மிகச் சிலவே.

முந்திய அத்தியாயங்களில் பல இடத்திலும் பிரபந்தங்களைப் பார்த்தோம். சைனப் பிரபந்தங்கள் அவ் விலக்கியப் பகுதியில் பல; வைணவப் பிரபந்தங்கள் பல.

இரட்டையர் காளமேகம் நூல்கள் யாவுமே பிரபந்தங்கள். பிறர் அனைவரையும் விட மிகவும் அதிகமான பிரபந்தங்களைத் தத்துவராயரே பாடியிருக்கிறார். உதாரணமாக, சின்னப் பூ என்ற பிரபந்த வகை தசாங்கங் கூறுவது என்று பாட்டியல் நூல்களால் அறிகிறோம். இவ்விலக்கணத்துக்கு இலக்கியம் எங்குமே இல்லை; தத்துவராயர் அடங்கன்முறையுள் மட்டுமே உள்ளது. பரணி இரண்டு அவர் பாடியுள்ளார். உமாபதியார் பாடிய நெஞ்சு விடுதூது போல, சாத்திரங்களில் பிரபந்தங்களாயுள்ளனவும் சில; இருபா இருபது காண்க.

இனி, தனிப் பிரபந்தங்களாயும் இக்காலப் பகுதியில் சில தோன்றியிருக்கின்றன. அவற்றுள் கலம்பகம், கோவை, மடல், பிள்ளைத் தமிழ் என்பன காணப்படுகின்றன. இப் பகுதியில் அவை சொல்லப் பெறும்; பரணிப் பிரபந்தங்கள் இதற்கு முந்திய நூற்றாண்டுகளிலும் இக் காலப் பகுதியிலும் தோன்றி இருக்கின்றன.

அகப் பொருள் இலக்கியங்களாக மிகப் பலவான நூல்கள் தோன்றின. சில கோவை நூல்களைக் குறிப்பிட்டுள்ளோம். பல்சந்த மாலையும் ஓர் அகப் பொருள் நூலே. இறந்து போனவை பல.

நாடோடிப் பாடல் என்ற பெயரில் இன்று கூறிவரும் பாடல்களைப் போன்ற கபிலரகவல் பாய்ச்சலூர்ப் பதிகம் என்பனவும் இக்காலப் பகுதிக்குரியன போலும்.

## கருமாணிக்கன் கப்பல் கோவை

இக் கோவை சமீப காலம் வரை அச்சாகாமலிருந்தது. இதன் பாடல்கள் பல ஆங்காங்கு வழங்குகின்றன. (தனிப்பாடல் திரட்டு, இரண்டாம் பாகம், பாடல் 345-348.) இதன் பாடல்கள் இலக்கண விளக்கத்திலும் (10 பாடல்கள்) கோவைக்கொத்து என்ற ஒரு திரட்டு நூலிலும் தொகுக்கப்

பெற்றுள்ளன. இதன் பிரதியொன்று மதுரைத் தமிழ்ச் சங்க நூல் நிலையத்திலிருந்து எரிவாய்ப்பட்டு அழிந்து போயிற்று என்று மு. ராகவையங்கார் எழுதியிருக்கிருர்; ஆனுல், இதன் ஏட்டுப் பிரதிகள் இரண்டு டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையத்தில் உள்ளன; இதுவே அரசாங்க உதவியோடு 1958இல் அச்சாயிற்று.

இந்நூல் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆனுல் பாட்டுடைத் தலைவன் கருமாணிக்கன் என்ற பெயருடையவன். இவன் பாண்டியனுடைய படைத் தலைவனுக அமர்ந்து, இப்போது திருச்சி ஜில்லாவிலுள்ள கப்பலூர், துவரை (துவரங் குறிச்சி) ஆகிய இடங்களில் அதிபதியாக விளங்கினுன். ''கருமாணிக்கன் கைதவர்க்குப் பாராளும் வீரர் பரிவீர நாராயணன்'' (261) என்பது காண்க. இவன் தொண்டைமான் யாதவராயன் என்ற பட்டங்கள் பெற்றிருப்பதால், யாதவ குலத்தவன் என்று அறிகிறேும். தொண்டைமான் என்றமையால், இவன் முன்னேர் தொண்டை நாட்டினர் போலும்.

மாறவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டியன் ஆட்சியின் ஏழாம் ஆண்டாகிய கி. பி. 1341 இல் எழுந்த சாசனம் ஒன்று கருமாணிக்கத் தேவனைக் குறிப்பிடுகிறது. "பாண்டி மண்டலத்து முத்தூற்றுக் கூற்றத்துக் கப்பலூரான உலகளந்த சோழ நல்லூர் கரிய மாணிக்க ஆழ்வான் திருவுடை நாயகரான வீரபாண்டியக் காளிங்கராயர்'' என்ற தொடரினுல் இவன் கப்பற் கோவை கொண்டவனுகிய கப்பலூர் உடையான் யாதவராயன் காளிங்கராயரான கருமாணிக்கத்தேவன் என்று கருதலாம். இவன் நடு நாட்டில் திருக்கோவலூர்த் தாலுக்காவிலுள்ள இராசேந்திர சிங்க நல்லூராகிய மாரீங்கூர்த் திருவிராமீசுவரமுடைய நாயனுருக்கு நாள்தோறும் வழிபாடு நடத்தும் பொருட்டுத் தன் பெயரால் ஒரு கட்டளை அமைத்து அதற்கு நிலம் வழங்கினுன் என்று அவ்வூர்க் கல்வெட்டு

ஒன்று உணர்த்துகின்றது. (6-10-1341) இதனை ஆராய்ந்து சதாசிவ பண்டாரத்தார் கருமாணிக்கர் இருவர் இருந்தனர் என்றும், ஒருவன் தொண்டைமான், மற்றவன் அவன் சகோதரனாகிய காளிங்கராயன் என்றும், தொண்டைமானே கப்பலூர்க் கோவையின் பாட்டுடைத் தலைவன் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இக்கோவை நானூறு பாடல்கள் கொண்டதாகும்; ஆசிரியர் "உயர்பூந் திருவும் எமையாளும் மாயனும் போலிருப்பீர்" என்று கூறுவதால் அவர் திருமால் பக்தியில் சிறந்தவர் என அறிகிறோம்; துளவம் புனைபுயன்-152. கோவல் அமர் முனிகொண்டு வந்து ஏத்தும் முத்தூர்த் துவரை காவலன் (391) என்று ஆசிரியர் கூறுவதால் திருக்கோவலூரில் இருந்த வைணவ ஆசாரியர் ஒருவரைக் கருமாணிக்கன் கப்பலூருக்கு அழைத்துச் சென்று சிறப்புச் செய்தான் என்று அறிகிறோம். இந்நூற் பாடல்கள் சிறந்த இலக்கியச் சுவை பொருந்தியன. பின்வரும் பாடல்கள் எடுத்துக் காட்டாகும்:

நாடாது நாடினையோ கல்விகேள்வி நலமிலர்பால்
ஊடாடி நெஞ்சந் தளர்ந்தனை யோஒன் னலரையெல்லாம்
காடாள வைத்தவன் மால்கரு மாணிக்கன் கப்பல்வெற்பில்
வாடாது வாடினதேன் மன்னவா நின் வரைப்புயமே.

சொல்லிய சொல்வழுவாத் தொண்டை வேந்தன்
துவரைவெற்பிற்
புல்லி யருஞ்சுரம் போனவர் வார்த்தையிற்
பொய்மைஎன்றும்
இல்லை யெனுங்கொடி யேயது போக
இதுவும்பொய்யோ
மல்லிகை முல்லை செருந்திவிற் பார்சொல்லும்
வார்த்தைகளே.

இவ்விரண்டு பாடல்களுள் முதல் பாடலாகிய "நாடாது நாடினையோ" என்பது அச்சிட்ட கோவையில் காணப்படவில்லை. இது அச்சிட்டு வழங்கும் தனிப்பாடல்

*திரட்டில் காணப்படுகிறது. இது பாங்கன் வினுதல் என்னும் துறைக்கு உரியது. 'சிறைவான் புனல் தில்லை' என்ற திருக்கோவை 20 ஆம் பாடலை இது நினைவூட்டுகிறது. அச்சிட்ட கப்பற் கோவையில் 398 பாடல்களே உள்ளன. அவற்றுள்ளும் 'போற்றும் புலவர்' என்ற 44 ஆம் பாடல் ஏடுகளில் காணப் பெறுமல் கோவைக் கொத்து என்ற பெயர் அமைந்த ஒரு திரட்டு நூலின் பிரதியில் காணப் பட்டது என்ற குறிப்பையும் காண்கின்றேம். இது போலப் பின்னும் பல பாடல்கள் இருத்தல் கூடும். அவற்றுள் 'நாடாது நாடினையோ' என்ற இப்பாடலும் ஒன்ருகலாம்.*

*இப்பாடலையன்றி, காரைப் பழித்த கையான், தடந்திசை யெட்டை என்ற தொடக்கமுடைய வேறிரு பாடல்கள் தனிப்பாடல் திரட்டில் காணப்படுகின்றன. இவை கருமாணிக்கன் கப்பல் வெற்பு என்று குறிப்பிடுவதால் இக் கோவைக்குரிய பாடல்களாக இருத்தல் கூடும்; அல்லது கருமாணிக்கனைப் போற்றும் உடன் காலத்துத் தனிப் பாடல்களாக இருத்தலும் கூடும். 'ககரம் பிறந்த சொல்லான்' என்ற மற்றொரு பாடலும் கருதத் தக்கது:*

காரைப் பழித்தகை யான்கரு மாணிக்கன் கப்பல்வெற்பின்
ஆரைச் சுடாதிந்தக் காமச்செந் தீயத ஞலல்லவோ
வாரிக்குள் மாய ஞெளித்தான் அயனும் மலர்புகுந்தான்
நீரைச் சுமந்துநின் ருன்கொன்றை சூடிய நின்மலனே.

தடந்திசை எட்டை மகமேரு வெற்பினைத் தாண்டியப்பால்
கடந்த பெரும்புக ழான்கரு மாணிக்கன் கப்பல்வெற்பில்
அடர்ந்து படர்ந்த குவிமுகை யாள்தந்த ஆசை யின்னும்
படர்ந்து படர்ந்து கொழுந்தோடு தென்மனப் பந்தலிலே.

ககரம் பிறந்தசொல் லான்கரு மாணிக்கன் கப்பல்வெற்பில்
உகரம் படைத்திருந் தோமில்லையே யுன்னைப் பெற்றபின்பு
வகரம் பிடித்தும் வந் தாரிலை யேயென்ன மாயஞ்செய்தாய்
அகர இகரந் தனமாக்கி வைத்த அருமகவே.

இச் செய்யுள் பாலனைப் பழித்தல் என்னும் துறை.

ககரமென்பது, தமிழ் எண்ணில் ஒன்றைக் குறிக்குமாத லால், ஒன்றேயன்றி மாறுபாடுஅவன் சொல்லிலில்லை யென் பதை விளக்கி நின்றது. உகரம் படைத்திருந்தோமில்லை— இரண்டு பட்டிருந்ததில்லை (உகரம் எண்ணில் இரண்டின் வரிவடிவு.) வகரம் பிடித்து—காலைப் பிடித்து (வகரம்- எண்ணில் கால்.) அகர இகரந் தனமாக்கி–நாலும் தனம்; அல்லது அரையை யெட்டிய தனம் (அகர இகரம்- எட்டரை என்ற எண் வடிவம்.)

கப்பல் என்ற சொல் தமிழ் மொழியில் 14 ஆம் நூற்றாண்டு வரையில் ஆட்சிக்கு வந்ததாகத் தெரியவில்லை. இந்நூற்றாண்டின் பின் கண்ணுடைய வள்ளல் செய்த ஒழிவிலொடுக்கமே இச்சொல்லை முதன் முதலில் குறிப்பிடு கிறது. அன்றியும் ஒழிவிலொடுக்கத்திற்கும் இக் கோவைக் கும் உரிய மற்றொரு தொடர் ஒற்றுமையும் இங்குக் கருதத் தக்கது. பொருள் வயிற் பிரிந்த தலைவன் வராமை கண்டு கார்ப் பருவம் வந்த போது தலைவி இரங்குவதை, "பார்க் கும் இருக்கும் கிடக்கும் என்பாவை பதைக்கும் அங்கம்- வேர்க்கும் வெதும்பும் ததும்பும் கண்ணீர் வண்ணம் வேறு பட்டே" என்று பாங்கி புலம்புவதாகக் கோவை 248 கூறு கிறது. ஒழிவிலொடுக்கம் ஆசாரியனைத் தேடும் சீடன் மெய்ப்பாட்டை, 'வேர்க்கும் கண்ணீர் ததும்பும் கம்பிக்கும் மெய்ந் நடுங்கும், வார்த்தை நழுவும் மனம் பதறும்' என்று கூறுவதை ஒப்பிடுக (73).

இது காறும் கூறியவற்றால் கப்பலூரில் வாழ்ந்த சிறப் புடைய தலைவனை கருமாணிக்கன் என்ற யாதவ குல வள்ளல் மீது சுவை பொருந்திய இக் கோவையை 14 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் புலவர் பாடினர் என்று அறிகிறோம். காலத்தால் இது மிகவும் பழைய கோவை நூல்களுள் ஒன்றாகிறது.

## நிம்பை - சங்கரநாரணர்

நிம்பம் என்பது வேம்பு; நிம்பை என்பது வேப்பற்றூர்; வேப்பத்தூர் என்று சொல்லப்படுகின்ற இவ்வூரைக் குலசேகர பாண்டியன் தானம் செய்தமையால் இது குலசேகரச் சதுர்வேதி மங்கலமென்றும் பெயர் பெறும். சங்க காலம் முதல் இங்குப் பல புலவர் வாழ்ந்துள்ளனர். இவர்கள் சோழியப் பிராமண வகுப்பினர். வேம்பற்றூர்க் குமரனூர் ஒரு சங்கப் புலவர். நம்பி திருவிளையாடல் பாடிய செல்விநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி வேம்பத்தூரினர். வேம்பையர் கோன் நாராயணன் என்பவர் பாடிய சிராமலையந்தாதி சிராமலைக் கோயிலில் கல்லில் வெட்டி வைக்கப் பெற்றுள்ளது.

இவ்வாறு புலவர்களால் சிறப்புப் பெற்ற இவ்வூரில் பிறந்தவர் சங்கரநாராயணர் என்பவர். இவர் பாடியது மதுரைக் கோவை. இந் நூலின் சிறப்புப் பாயிரம் இதைக் கூறும்:

**தேவுக் கரசு திருவால வாய்க்கொரு தீபமென்னும்**
**கோவுக் கருந்தமிழ்க் கோவைசெய் தான்கொண்டெழு [மொருசொற்**
**காவிற் படிதடஞ் சூழ்நிம்பை காவலன் கற்றுணர்ந்தோர்**
**நாவுக் கினியனன் சொற்பாடற் சங்கர நாரணனே.**

'நிம்பை காவலன் கற்றுணர்ந்தோர் நாவுக்கினியன்' என்ற சொற்களால் இவருடைய செல்வச் சிறப்பும் கல்விச் சிறப்பும் நன்கு விளங்கும்.

தமிழில் முதலில் தோன்றிய கோவை பாண்டிக் கோவை; அடுத்து வந்தது திருக் கோவையார். பின்னர்த் தோன்றியவை காலத்தால் முறையே குலோத்துங்க சோழன் கோவையும் தஞ்சை வாணன் கோவையும் அம்பிகாபதி கோவையும்; ஒட்டக்கூத்தர் செய்தாரென வழங்கும் நாலாயிரக் கோவை இன்று கிடைத்திலது.

இவ்வாறு வரும் கோவைப் பிரபந்த வரிசையில் மிகவும் பழமையான கோவைகளில் இம்மதுரைக் கோவையும் ஒன்று. இது மதுரையிற் கோயில் கொண்டெழுந்தருளி யுள்ள சொக்கேசப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது. இதன் செய்யுள் தொகை 403.

ஆசிரியர் இந்நூலினுள் தம்மூரினராகிய நம்பி பாடிய திருவிளையாடற் புராண சரிதங்கள் பலவற்றைச் சுட்டிப் பாடியிருக்கிறார். 25 வரலாறுகள் இங்குச் சொல்லப் பட்டுள்ளன.

17 ஆம் நூற்றாண்டில் இலக்கண விளக்கம் பாடிய வைத்தியநாத தேசிகர் மதுரைக் கோவைப் பாடல்கள் பதி னொன்றை மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார். இலக் கண விளக்கப் பொருளதிகாரத்தில் மேற்கோள் காட்டப் பட்ட நூல்கள் பெரும் பகுதி சங்க நூல்களும் பதினெண் கீழ்க் கணக்கும். அகப்பொருள் இலக்கியங்களாக அவர் காட்டும் கோவை நூல்கள் பின்வருவன : திருக் கோவை யார், தஞ்சை வாணன் கோவை, அம்பிகாபதி கோவை, கப்பற்கோவை, மதுரைக் கோவை என்பன. அத்தியூர்க் கோவை நெல்லைக்கோவை என்பவற்றுள் ஒவ்வொரு பாடல் மட்டும் வருகிறது. நெல்லைக்கோவை 16 ஆம் நூற் றாண்டு ; அத்தியூர்க் கோவை கிடைக்கவில்லை ; அது 15 ஆம் நூற்றாண்டாகலாம். இங்குக் குறிப்பிட்டவற்றுள் முதல் மூன்றும் 14 ஆம் நூற்றாண்டுக்கு முந்தியவை. மற்ற இரண்டும் 14-ஆகிய இந்த நூற்றாண்டுக்குரியன என்று நாம் கருதலாம்.

இலக்கண விளக்கவுரை மேற்கோள் அமைப்பை நன்கு ஆராயும்போது, ஆசிரியர் பண்டை நூல்கள் என்று தாம் கருதியவற்றை மட்டுமே உதகரிக்கிறார் என்று புலப்படு கிறது. அவர் காலத்துக்குச் சற்று முந்திய நூல் எதையும் பொதுவாக அவர் கூறவில்லை. (நெல்லைக் கோவை ஒன்று

*மட்டுமே இதற்கு விலக்கு.) இவ்வாறு கருதும்போது மதுரைக் கோவை காலத்தால் மிகவும் முந்திய தென்பது அவர் கருத்தாகும். இதன்படி பார்த்தால், நம்பி திருவிளையாடலின் காலமாகிய 13 ஆம் நூற்றாண்டுக்கு அடுத்து இக்கோவை செய்யப்பெற்றிருத்தல் கூடும்; அதாவது 14ஆம் நூற்றாண்டு.*

*மதுரைக் கோவைக்குரியதென்று கருதக்கூடிய பின் வரும் தனிப்பாடல் ஏடுகளில் கிடைக்கிறது.*

**ஆவேறில் ஏறிய சொக்கர்தென் கூடல் அணிவரைமேல்**
**காவே றியகுரு கேஅன்ன மேவரிக் காதலரும்**
**பூவேறு பாயலின் மீதேயுறப் புல்கிப் போனஅன்பர்**
**நாவேறு பட்டதன் றேஅன்பர் தானவர் நாட்சென்றதே.**

## பல்சந்த மாலை

*பல்சந்த மாலை என்பது 96 பிரபந்தங்களுள் ஒன்று. கலம்பக உறுப்பு வகையை நீக்கி, 10 முதல் 100 அளவாகப் பாடுவது என்று பன்னிரு பாட்டியலும், பத்துப்பாட்டு ஒரு சந்தமாக நூறு பாடுவது என்று பிற பாட்டியல்களும் கூறும். ஆனால் இங்குக் கூறப் பெறுகின்ற நூலானது களவியற் காரிகை உரையில் மேற்கோளாக வந்துள்ள தனி நூல். முன்கூறிய பாட்டியல் இலக்கணம் இதற்குப் பொருந்தவில்லை. இங்கு எட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. நூல் இப்போது இல்லை. வேறு எங்கும் இதன் பாடல்கள் சொல்லப் பெறவும் இல்லை. கிடைக்கின்ற பாடல்கள் கட்டளைக் கலித்துறையில் அமைந்தவை. கிடைத்தற்கு அருமைபற்றி அவற்றை இங்கு ஒருசேரத் தருகின்றோம். களவியற்காரிகை உரையில் இவற்றிற்குத் தரப்பட்டுள்ள துறையும் இங்கே காணலாம்.*

### 1. உயிரென வியத்தல்

**கலைமதி வாய்மைக் கலுயா வழிவருங் கற்பமைந்த**
**தலைமைய ரேழ்பெருந் தேரங்க மும்பெற்ற நந்தகைசால்**

[மலையன]¹ மாமதில் வச்சிரநாடன்ன வாணுதல்தன்
முலையிணை தோய்ந்த தெல்லாம்களவே என்றுமுன்னுவனே.

## 2. கண் புதைத்தாளுக்குத் தலைமகன் கூறுதல்

நாட்டம் புதைக்கின்ற தென்நீ மடந்தை நவகண்டமேல்
ஈட்டம் புகழ்வின்னன் மேவார் என இங்ஙன் யான்வருந்த
வாட்டம் பயின்றுங் ககிலின் குழம்பணிந் தாகமெங்கும்
வேட்டந் தெரிகின்ற கொங்கைகள் என்னைமிகைசெய்தவே.

## 3. தழைகொண்டு இரந்து நிற்றல்

நகுதா மரைமலர் சூழ்வாவிசூழ் வச்ர நாடர்தங்கள்
வகுதா புரியன்ன வாணுதலீர் மற்ற வார்தழையும்
மிகுநாண் மலர்களும் கொண்மின்கள் கொள்ளாவிடின்
[மதுவந்
தொகுகாமன் ஐங்கணை யால்எம தாவி துவக்குணுமே.

## 4. வேழம் வினுதல்

செம்முக மானதர் செங்குங்கு மப்புயர் சீர்சிறந்த
மைம்மலி வாசப் பொழில்வாய் மதியன்ன வாணுதலீர்
மும்மத மாரி பொழியப் பொழிமுகில் போல்முழங்கிக்
கைம்மலை தான்வரக் கண்டதுண் டோநும் கடிபுனத்தே.

## 5. தினை முதிர்வுரைத்தல்

இயவண ராசன் கலுபதி தாமுதல் எண்ணவந்தோர்
அயன்மிகு தானையர் அஞ்சுவன் னத்தவர் அஞ்சலென்னுக்
கயவர்கள் வாழ்பதி போலத் தினைப்புனங் காய்கொய்து
[போம்
பயன்விளை வாம்படி பூத்தது வேங்கை பணிமொழியே.

## 6. ஆறு பார்த்துற்ற அச்சக்கிளவி

பிறையார் நறுநுதற் பேதைதன் காரணத் தாற்பெரும
மறைநா ளிரவில் வருவது நீயொழி வச்சிரநாட்
டிறையா கியகலு பாமுத லானவர் யானைகணின்
றுறைவாரும் விஞ்சத் தடவிகள் சூழுமணிவரையே.

---

1. *பிரதி விளக்கமாயில்லை.*

## 7. இயற் பழித்தல்: புள்ளொடு புலம்பல்

வானது நாணக் கொடையா லுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழும் செழும்பொழில் சூழ்அந்து பார்அனையார்
தானணி வாணுதல் கண்டும் பகலே தனித்தனியே
மானமி லாதிரை தேரும் பறவைக டாமழிந்தே.

## 8. பதியளவுரைத்தல்

வில்லார் நுதலியும் நீயுமின் றேசென்று மேவுதிர்சூது
எல்லாம் உணர்ந்தவர் ஏழ்பெருந் தரங்கத் தியவனர்கள்
அல்லா வெனவந்து சாற்றியும் நாதரைக் கைதொழுஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரு நாட்டகமே.

*இப்பாடல்களை ஆராயும்போது சில செய்திகள் புலனாகின்றன. வச்சிரநாடு (1, 3, 6) வகுதாபுரி (3) கலுபா (1, 6) கலுபதி (5) வின்னன் (2) அஞ்சு வன்னத்தவர் (5) அந்துபார் (7) யவன ராசன் (5) யவனர் தொழும் அல்லா (8) என்ற பெயர்கள் இங்குக் காணப்படுகின்றன. இவற்றால் நாம் அறிவது, வச்சிர நாட்டில் வகுதாபுரியில் அந்நிய நாட்டிலிருந்து கலிபாமரபில் வந்த வின்னன் என்பவன் பெருந்தலைவனாக விளங்கினான்; இவன் அஞ்சு வன்னத்தவன் குலத்தான்; இவன் யவனராசன் எனவும் பெறுகிறான்; யவனர் அல்லாவைத் தொழுபவர்கள்; வகுதாபுரி அந்துபார் என்றும் பெயர் பெறும். இங்கு சோனகர் வாழ்கிறார்கள் (சோனகராவார் அயல் நாட்டினர்; சிறப்பாக அராபியர்)-என்ற செய்திகள். ஏழ்பெறும் தேரங்கம் (1, 8) என்ற தொடர் வருகிறது. இதன் பொருள் விளக்கமாய் இல்லை. இது வின்னனுக்குரிய சிறப்புப் போலும். இவன் அயல் நாட்டிலிருந்து வந்தமையால் யவனன் எனப் பெறுகிறான். இவன் முகம்மதியன்.*

*வகுதாபுரி என்பது பாண்டிய நாட்டில் தென்கீழ்க் கடற்கரையின் ஓரமாக உள்ள காயல் பட்டினம் என்ற ஊர். இங்கு முகம்மதியர்கள் சிறப்பாக வாழ்ந்தனர்.*

இவ்வூரில் சுமார் 1690 இல் வாழ்ந்த சீதக்காதி என்ற முகம்மதிய வள்ளலைத் தமிழ்ப் புலவர்கள் அனேகர் பாடியிருக்கிறார்கள். இது பிற்காலம். பல்சந்தமாலை பாடப்பெற்ற காலத்தில்தான் இவ்வூர் முதன் முதலாக ஏற்பட்டதென்று நாம் கருத இடமுண்டு.

அஞ்சு வன்னத்தவர் என்ற தொடரின் பொருளும் இங்கு அறியத்தக்கது. கி. பி. 1220 இல் சடையவர்மன் வீரபாண்டியன் ஆட்சியில் பொறிக்கப்பட்ட திருவாடானைத் தாலுக்கா தீத்தாண்டதானபுரக் கல்வெட்டு, 'அஞ்சுவண்ணமும் மணிக்கிராமமும்...கோயில் திருமுன்பிலே நிறைவுறக் கூடியிருந்து' என்பது முதலான தொடர்களால் இதைக் குறிப்பிடுகிறது. சேரநாட்டுக்குரிய கோட்டயச் செப்பேடுகளும் இத்தொடரைப் பலமுறை கூறுகின்றன. இவை பத்தாம் நூற்றாண்டுக்குரியன. கோட்டயம் மேல் கடற்கரை, தீத்தாண்ட தானபுரம் கீழ்கடற்கரை. இரண்டு ஊர்களும் பண்டைக்காலத்தில் சிறந்த துறைமுகப்பட்டினங்களாக இருந்தன. அங்கு, கடல் கடந்து வாணிபம் செய்யும் வணிகர் பலர். இத்தொடர் ஒரு வணிகர் குழுவைக் குறிக்கும்போலும். தஞ்சைச் சரசுவதி மகால் பழம் பாடல் திரட்டொன்றில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :

குடக்கினிற் றுரங்கமும் வடக்கினிற்க லிங்கமும்
  குணக்கினிற் பசும்பொனும் குளித்ததெற்கி லாரமும்
அடிப்பரப் புடைக்கலத் தனேகவண்ண மாக வந்து
  அஞ்சுவண்ண முந்தழைத் தறத்தின் வண்ண மானவூர்
கடற்கரைக் குவித்திடும் சந்தனத்தை யிந்துடன்
  கலந்திறைக்கு மந்தியைக் கனன்றுடன் முசுக்குலம்
புடைப்பதற் கெழுந்துகை முறுக்கலு மிழுக்கிவாய்
  புக்கமுத்தை விட்டெறிந்து பூகமேறு நாகையே.

இதனால் நாகையிலும் அஞ்சுவண்ணத்தர் இருந்தனர் என்றுதெரிகிறது. இதுவும் ஒரு கடற்கரைப்பட்டினம். இவர்கள் முகம்மதிய வணிகர். இவர்கள் அஞ்சு வண்ணத்தர்

எனப்பெயர் பெற்றதற்குக் காரணம், இவர்கள் வாழ்க்கையில் தங்கள் சமயவேதம் விதித்த ஐந்து கொள்கைகளை உடையவர்களாயிருத்தலினால் போலும். (சதாசிவ பண்டாரத்தார், செந்தமிழ் தொகுதி 45 பக்கம் 65.)

களவியற்காரிகையின் உரையையும் அதன் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள நூல்களையும் நன்கு ஆராயும்போது, அது மிகவும் பழமையான நூல் என்றே உணரக் கிடக்கின்றது. அதனுள் காட்டப்பட்ட நூல்களுள் காலத்தால் பிற்பட்டது பல்சந்தமாலை என்றே கருதுவோம். இந்நூல் வகுதாபுரி வின்னனைப் பாடுகின்றதென்று குறிப்பிட்டோம். மதுரையை முகம்மதியர் கைப்பற்றி அங்கு முகம்மதிய ஆட்சியை நிறுவியகாலம் 1310-1325 என்பது சரித்திர ஆராய்ச்சியாளருடைய கருத்து. வின்னனென்பவன் மதுரையைப் பிடித்த மாலிக் காபூரின் படையில் ஒரு தலைவனாய் இருந்திருக்கலாம்; அல்லது ஒருதலைவன் புதல்வனாய் இருந்திருக்கலாம். யவனன் என்று கூறுவதால் நாம் இவ்வாறு கருதுகிறோம். இவனுடைய காலம் 1325-50 ஆக இருத்தல் கூடும். இதே காலத்தில் வாழ்ந்த ஒரு புலவர் அவனுடைய புகழாக இந்த நூலைப் பாடியிருக்கிறார். அக்காலத்தில் முகம்மதியர்கள் வெற்றிகொண்ட இடங்களில் கோயில்களை எரித்துச் சூறையாடினார்கள் என்று சரித்திரங்களில் கேள்விப்பட்டிருக்கிறோம். இந்தப் புலவர் அவ்வாறு செய்யத் துணிந்திருந்த இத்தலைவனைப் பாடித் தம்மூர்க் கோயிலை மீட்க எண்ணினாரா என்பது விளங்கவில்லை. பரிசிலுக்காக அவனை இவர் பாடியிருக்க நியாயமில்லை. ஏனென்றால் அவன் அன்னிய நாட்டினன்; தமிழ் நாட்டிற்குப் புதியவன். ஆதலால் அவனிடம் பரிசில் பெறப் பாடினார் என்று கருதுவதைவிட, அவனிடம் தப்பிப் பிழைக்கப் பாடினார் என்று கருதுவதே ஏற்புடையதாகும். பல்சந்தமாலையின் காலம் சுமார் கி. பி. 1350 என்பது பொருந்துவதே.

பெயர் பல்சந்தமாலை என்று இருந்தபோதிலும் கூட, கிடைக்கின்ற எட்டுப் பாடல்களையும் வைத்து நூலின் தன்மையை அறிய வழியில்லை. இதில் யாப்பு வேறுபாடுகள் உண்டா, அகப்பொருளைத் தவிர வேறுபொருள் அமைதிகள் உள்ளனவா என்பது தெரியவில்லை. எட்டுப் பாடல்களும் கலித்துறையாய் இருக்கிறபடியாலும், அகப்பொருளையே கொண்டிருக்கிறபடியாலும், கோவைபோன்ற ஒரு நூலோ என்ற ஐயம் உண்டாகிறது.

களவியற் காரிகை உரைகாரர் தம் மேற்கோள்களை எடுத்தாளும்போது, ஒரு வரன்முறையைக் கையாள்கிறார். எட்டு இடங்களிலும் முதலில் திருக்கோவையார், இரண்டாவது பாண்டிக்கோவை, மூன்றாவது பல்சந்த மாலை என்று அவர் அமைத்து இருப்பதால், இதுவும் கோவையாகலா மென்ற எண்ணம் வலியுறுகிறது.

## தொல்காப்பியத் தேவர்

இலக்கணம் செய்த தொல்காப்பியர் பெயரைத் தாங்கிய ஒரு புலவர் கி. பி. 14 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தார். அவர் திருப்பாதிரிப்புலியூர் பாடலேசுவரத்தில் எழுந்தருளியிருக்கின்ற தோன்றாத்துணை நாதர்மீது ஒரு கலம்பகம் பாடியிருக்கிறார்.

> வேதம் மொழிவிசும்பு மேனி சுடர்விழி மண்
> பாதம் திருப்பா திரிப் புலியூர்—நாதர்
> பரமாம் பரமாம் படுகடல் எண்திக்கும்
> கரமாம் அவர்க்கு உயிர்ப்பாம் கால்.

(பரம அம்பரமாம்-மேலான ஆடையாம்.) கேட்ட சைவர் இவர் கவிதா சக்தியையும் பாடலின் பொருட் சிறப்பையும் பக்திப் பொலிவையும் நன்குணர்ந்தார்கள். இவ்வளவு அருமையான வாக்குடையவர் தங்கள் ஆண்டவன் மீது ஒரு கலம்பகம் பாடவேண்டும் என்று அவரை வேண்டிக்கொண்டார்கள். அவரும் இதற்கிசைந்து ஒரு கலம்பகம்

பாடிமுடித்தார். அதனுள் "வேதம் மொழி" என்ற இப் பாடலை இரண்டாம் பாடலாக அமைத்தார். இதனால் மகிழ்ச்சி அடைந்த மக்கள் கலம்பக அரங்கேற்றத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். சைவமக்களுக்குத் தில்லை புண்ணியத் தலமாதலாலும் அத்தலம் அருகில் இருந்தமையாலும் அரங்கேற்ற விழா அங்கு நடத்தத் திட்டமாயிற்று. ஆனால், அரங்கேற்றும்போது தடை நிகழ்ந்ததென்று தெரிகிறது. இவர் சைன சமயத்தினருக்குமுன் உதவி செய்திருந்த காரணத்தால் தடைகள் எழுந்திருக்கக்கூடும். அப்போது நடராசப் பெருமானுடைய திருவுள்ளக் குறிப்புத் தான் என்ன என்று அறியவேண்டி, இவரே கலம்பகத்தில் கயிறு போட்டுப் பார்க்கச் செய்தார். 'பாடுவார் பாடும் பரிசில்' என்ற 16 ஆம் பாடல் கிடைத்தது :

பாடுவார் பாடும் பரிசில் வரிசையெலாம்
ஆடுவார் அன்றி அயலார் அறிவரோ
தோடுவார் காதன்றே தோன்ருத் துணைஐயர்
பாடுவார் ஓரிருவர்க் கிட்ட படைவீடே.

கண்டோர், இது பெருமானுடைய சம்மதத்தைக் குறித்தது என்று கண்டு அரங்கேற்றத்தை நடத்தி முடித்தனர்.

'கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்று பின்னல் பிரசித்திபெற்ற இரட்டைப் புலவர் சிறிதுநாள் கழித்துத் திருவாமாத்தூர் வந்தார்கள். அவர்களை அவ்வூரினர் ஆமாத்தூர்ப் பெருமான்மீது ஒரு கலம்பகம் பாடும்படி வேண்ட, அப்புலவர்கள் பின்வரும் பாடலைச் சொல்லி முதலில் மறுத்தார்கள்.

தொல்காப் பியத் தேவர் சொன்ன தமிழ்ப் பாடலன்றி
நல்காத்திருச் செவிக்கு நாமுரைப்ப தேறுமோ
மல்காப் புனல்ததும்ப மாநிலத்துக் கண்பிசைந்து
பல்காற் பொருளழற்குப் பாற்கடலொன் நீந்தார்க்கே.

"தொல்காப்பியத் தேவர் கலம்பகப் பாடல் கேட்ட திருச்செவிகள் தங்கள் பாடலை ஏற்கா" என்பது அவர்கள் கூற்று. ஊரார் மேலும் வேண்டிய பின்னரே அவர்கள் கலம்பகம் பாடினார்கள்.

திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் காப்பு உள்பட 103 பாடல்கள் கொண்டது. ஆசிரியர், பண்டைய நூல்களிலும் திருமுறைகளிலும் சாத்திரங்களிலும் பயிற்சி மிக்கவர். எதுகை மோனைத் தொடைகள் இவர் வாக்கில் மிக்க நயமாக அமைந்து வரும். பல பாடல்கள் சந்தத்தில் பாடியிருக்கிறார். தல விருட்சமாகிய பாதிரிக்கு ஒரு காப்புச் செய்யுள் பாடியபோது, தல வரலாற்றின்படி இது பன்னிரு மலர்களையும் பூத்ததென்று நயமாய்ப் பாடி யிருக்கிறார். பின்வரும் பாடல் பக்திச்சுவை ததும்பப் பாடிய பாடல்களுக்கு எடுத்துக்காட்டு:

தன்னையான் நினைப்பத் தந்து தலையளிப் பதற்கு நாயேன்
பின்னையான் செய்யும் கைம்மா றறிகிலேன் பெருமையாலே
முன்னை ஆரணங்கள் ஓதும் பாதிரிப் புலியூர் மூர்த்திக்கு
என்னை ஆட்கொடுப்பதன்றி ஏழையேன் என்செய்கேனே.

பெருமானுடைய தாண்டவத்தைக் கூறும் பாடல் (75) காரைக்காலம்மையாருடைய 'அடி பேரிற் பாதாளம் பேரும்' என்ற திரு வெண்பாவை நினைப்பிக்கிறது. சிறப்பான இக் கலம்பகம் இரட்டையருக்கு மட்டும் அன்றி, ஏனையோருக்கும் ஒரு முன் மாதிரிபோல இருந்திருக்கிறதென்று அறிகிறோம்.

ஆசிரியரைக் குறித்த வேறு செய்திகளோ, இவர் செய்த வேறு நூல்களோ, தெரியவில்லை.

## அத்தியாயம் 12

# சித்தர் பாடல்

## முன்னுரை

*தமிழ் இலக்கியத்தின் சரித்திரத்தில் சித்தர் நூலுக்குச் சிறப்பான இடமுண்டு. சித்தர் பாடல்களைப் பாடி ஆடாத குழந்தைகள் தமிழ்நாட்டில் இல்லை. சென்ற தலைமுறையில்,*

மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்பார்க்குத்
தேங்காய்ப் பால் ஏதுக்கடி—குதம்பாய்
தேங்காய்ப் பால் ஏதுக்கடி ?

தாவார மில்லை தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடி—குதம்பாய்
தேவார மேதுக்கடி ?

*என்ற குதம்பைச் சித்தர் பாடல்களைப் பாடாத இசைக் கச்சேரிகள் இல்லை. இன்றுங்கூட,*

நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே
பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே
பாடிப்பாடி நின்றுவிளை யாடு பாம்பே

*என்ற பாம்பாட்டிச் சித்தர் பாடலைப் பாடி யாடாத அரங்கு இல்லை. புரட்சிக் கவிஞரான பாரதியார் சித்தர் பாடல் களில் மிகவும் ஈடுபட்டிருக்கிறார். எனவே, சித்தர்கள் யார், அவர்களுடைய வரலாறு யாது, அவர்கள் என்ன பாடினர் கள், அவர்களுடைய கடவுட்கொள்கை யாது, எக்காலத் தில் அவர்கள் வாழ்ந்து பாடல் பாடினார்கள்—என்று அறிவது மிகவும் பயனுடையது.*

தமிழ் இலக்கியத்தில் சித்தர் பாடல்கள் பல. இவை அனைத்தும் தொகுக்கப்பட்ட நூலுக்குப் பதினெண் சித்தர் ஞானக்கோவை என்ற பெயர் வைக்கப்பட்டுள்ளது. இக் கோவையுள் காணப்படுவன அனைத்தும் சித்தர் பாடல்கள் அல்ல. 1900 ஐ ஒட்டி எழுதப்பட்ட சில நூல்களும், சித்தர் அல்லாதார் நூல்களும், இதனுள் தொகுக்கப்பட்டுள்ளன. தொகுத்த காலம் மிக்க சமீபமான காலம். 18 நூ. இறுதி அல்லது 19 நூ. தொடக்கம்.

எனினும், சிறப்பான சில சித்தர்களுடைய பாடல்கள் இன்று நமக்குக் கிடைக்கின்றன. தமிழ் இலக்கியத்தில் சித்தர்களுடைய நிலை இன்னும் விளங்காத ஒரு புதிராகவே இருக்கிறது. சித்தி எய்தியவர்கள், பேரின்பம் சித்திக்கப் பெற்றவர்கள், சித்தர்கள். ஆனால், இவர்கள் ஏன் நிலவுலகில் மீண்டும் வந்து நூல் செய்கிறார்கள்? இது விடை காணமுடியாத ஒரு கேள்வி. சீவன் முத்தர்கள் அனைவரும் சித்தர்களல்லர்.

கடவுளைக் காண முயல்பவர் பக்தர்; கண்ட மாத்திரத்தில் முத்தி பெறுகிறார்கள். ஆனால், பக்திநெறி அன்றி வேறு நெறியால் கடவுளைக் கண்டு தெளிந்து, இருவினை ஒப்பு நிகழுங்காறும் உடலோடு உலாவுவோர் சித்தர் என்பது ஒரு கருத்து. "பத்தர் சித்தர் பலர் ஏத்தும் பரமன் பழையனூர் மேய, அத்தன் ஆலங்காடன்" என்ற சுந்தரர் தேவாரம் இக்கருத்துக்கு அரண் செய்யும். "திண்டிறற் சித்தர்களே, கடைக்கூழைச் செல்மின்கள்" என்பது திருவாசகம்.

சித்தர்கள் என்றால் சித்தி அடைந்தவர்கள். கடவுளைக் காணமுடியுமென்று கண்டு அல்லது அறிந்து தெளிந்தவர்கள் சித்தர்கள். இவர்கள் சிவானுபூதி பெற்றவர்கள். பொதுவாக இவர்கள் சமயங்கடந்த மோன சமரச நன்னிலையில் நிற்பவர்கள். ஓரளவுக்கு இவர்கள் மதம் சமரச சன்மார்க்கம். இது பொதுவான ஒரு கருத்து.

அட்டமாசித்தி கைவந்தவர்கள் சித்தர்கள்; இரசவாத வித்தை வல்லவர்கள் சித்தர்கள்; யோகசித்தி பெற்ற வர்கள் சித்தர்கள்—என்ற வெவ்வேறுன கருத்துக்களும் வழங்கும். அட்டமாசித்திகள் திருமந்திரத்திலும் தேவா ரத்திலும் சொல்லப்பெறுகின்றன; மதுரையில் சோமசுந் தரக்கடவுள் எல்லாம் வல்லசித்தராக வந்து கல்லானைக்குக் கரும்பு அருத்தியது இங்குக்கூறிய மூன்றினுள் முதல்வகை; இங்கு அட்டமா சித்திகளின் விளக்கம் தெரிகிறது. இவ் வாறு இன்று சில சித்திகள் கைவரப்பெற்றோர் நாட்டில் இருப்பதாக நாம் கேள்வியுறுகிறோம். இனி திருப்பூவணத் தில் பொன்னனையாளுக்காகச் சிவபெருமான் வந்து இரச வாதம் செய்த திருவிளையாடல் இரண்டாவது வகையின் பாற்படும். இந்தியநாட்டில் மட்டுமன்றி உலகெங்குமே இன்றைய விஞ்ஞான அறிவு தோன்றுவதற்கு முன் இரச வாத வித்தை மக்கள் மனத்தைக் கவர்ந்துவந்தது. உண்மை இரசவாதிகள் இன்று இருப்பார்களா என்பது தெரியாது. இன்று இருந்தால் அவர்கள் தங்களை வெளிப்படத் தெரி வித்துக்கொள்வதில்லை; நாம் அவர்களை எவ்வகையாலும் அறிவதற்கும் இயலாது.

அவர்கள் மூச்சையடக்கி ரேசகப் பூரக கும்பகத்தால் பிராணவாயுவை உட்செலுத்தி மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்களிலும் மனத்தை நிறுத்தி வெற்றி பெற்றவர்கள்.

தமிழ்நாட்டில் சித்தர்மரபு திருமூலரோடு தொடங்கு கிறது. மூலருக்கு முன்பிருந்தோரை நாம் அறியோம். இவருடைய காலம் 5-6 ஆம் நூற்றுண்டாகும். இங்கு சித்தர் என்று இவரைச்சொல்வது, திருமூலர் யோக சமாதியில் மூவாயிரம் ஆண்டுகள் இருந்து ஆண்டுக்கொரு மந்திரம் பாடினுர் என்ற மனித இயல்பைக் கடந்த செய லைக் கருதியேயாகும். கவிதை பாடினுர் என்பதற்காக அன்று. இது போலவே, காலத்தால் பின்வந்து பாடல் பாடிய அடியார் யாவரும் சித்தர் ஆகார்.

இனி வடநாட்டில் நவநாத சித்தர் என்ற ஒன்பதுபேர் இருந்ததாகக் கொண்டு, அவர்களுடைய சமாதிகளையும் காட்டுகிறார்கள். அவர்கள் நாதர் என்று முடிகின்ற பெயர் அமைந்த சத்திய நாதர், சதோக நாதர், ஆதிநாதர், அனாதி நாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந் திரநாதர், கோரக்கநாதர் என்ற ஒன்பதின்மர். நவநாதர் என்று தாயுமானவரும் குறிப்பிடுகின்றார். இவர்களுள், கோரக்கர், மச்சேந்திரர் வரலாறுகள் தமிழ் நாட்டிலும் நெடுங்காலமாக வழங்குவதுண்டு.

திருமூலர் சொல்லுகின்ற சித்தர்கள்—நந்தி அருள் பெற்ற நாதர்கள்—சனகர், சனந்தனர், சனாதனர், சனற் குமாரர், சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்கிரபாதர், திருமூலர் ஆகிய எண்மராவர்(பாடல் 67, குருபாரம்பரியம்).

தமிழில் பதினெண்சித்தர் என்பது பழமையான வழக்கு. அகத்தியர் முதலே இந்தச் சித்தர் பட்டியல் தொடங்குகிறது. இவர்கள் அகத்தியர், இடைக்காடர், உரோமமாமுனி, கமலமுனி, கூன்கண்ணர், கூர்மமுனி, கயிலாயநாதர், கொங்கணர், கோரக்கர், சட்டைமுனி, சுந்தரானந்தர், திருமூலர், நந்தி, பிரமமுனி, பிண்ணாக்கீசர், போகர், மச்சமுனி, வாசமுனி என்போர் என்று சொல்வது ஒரு வரிசை. இவற்றுள் பல பெயர்களை நீக்கிச் சண்டேசர், கருவூர்ச் சித்தர், திருவள்ளுவர், சிவவாக்கியர், மார்க்கண்டர், வால்மீகி, இராமதேவர், காகபுசுண்டர், சுப்பிரமணியர், சூரியானந்தர், பட்டினத்தார், பத்திரகிரி, சகதீசர், தேரையர், யூகி, தருமமுனி முதலான பல பெயர் கள் சொல்வதுமுண்டு. இந்த வரிசையில் பல பெயர்கள் பிற்காலச் சேர்க்கை. காலத்தால் பின்வந்த தலைமுறையினர் முன்வந்தோர் பெயரை வைத்துக் கொள்வதுண்டு. அகத்தியர், திருமூலர், திருவள்ளுவர் என்ற பெயர்களை இவ்வாறு நாம் கருதவேண்டும். மற்றப்படி இவர்களை இங் குச் சேர்க்க நியாயமில்லை. இந்த சித்தர்கள் பெயரால்

யோகம், ஞானம், வைத்தியம், சோதிடம்,மந்திரம், தந்திரம் இவையெல்லாம் சேர்த்து வழங்கப்படும். ஏறுதிச்சித்தர், காளைச் சித்தர், கம்பளிச் சித்தர், சடாதாரச்சித்தர் என்றெல்லாம் இப் பட்டியல் வளர்ந்துகொண்டே போவதையும் காண்கிறோம்.

இவர்களில் பாடல் பாடினோரும் உளர், பாடாதோரும் உளர். இவர்கள் தங்கள் கருத்துக்களைச் சாதாரண நடையில் வெளியிடாமல் ஒரு குழூஉக் குறியைப் படைத்துக் கொண்டு அதில் பாடிவந்தார்கள். இது காரணமாக, இவர்கள் கருத்தைப் பாமர மக்கள் அறிவது அருமையாகி விட்டது.

தாயுமானவர் நவநாத சித்தரைக் குறிப்பிட்டதுமட்டுமன்றி, வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர் கணமே என்று வியந்து போற்றுவதையும் காண்கிறோம். எனினும், மேற்குறிப்பிட்ட வரிசையில் இன்று தங்கள் பாடல்களால் பிரசித்தமாக விளங்குகிற பல சித்தர்களுள், இடைக்காட்டுச் சித்தர் ஒருவரேயன்றி, ஏனைய அகப்பேய், கடுவெளி, குதம்பை, அழுகுணி, பாம்பாட்டிச் சித்தர் ஆகியோர் பெயர்கள் அந்த வரிசையில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சித்தர்கள் முயற்சியில் முக்கியமானது ஒன்று, காய சித்தி பெறுவது. அதாவது, இந்த உடல் அழியாது பாதுகாத்து மரணத்தை வெல்வதாகும். "கூற்றம் குதித்தலும் கைகூடும்—நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு" என்ற திருக்குறள் இங்குக் கருதத் தக்கது. இப்படிப்பட்ட முயற்சி தமிழ் நாட்டில் மட்டுமன்றி உலகெங்குமே நிகழ்ந்து வந்திருக்கிறது. சென்ற நூற்றாண்டில் நம்மிடையே வாழ்ந்த இராமலிங்க சுவாமிகளும் இந்த முயற்சியில் ஈடுபட்டிருந்தார். அவருடைய மறைவும் இந்த முயற்சியில் ஓர் அங்கமே என்று பெரியோர் கருதுகிறார்கள். காய கற்பம் தேடிய ஒருவரை, ஆங்கிலக் கவிஞரான ராபர்ட்

பிரௌனிங், தம் கவிதையில் பாடியிருக்கிறார். "அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்த பேரும்—நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர், நெடு நாளிருந்த பேரும்—நிலை யாகவே இனும் காயகற்பந் தேடி நெஞ்சுபுண்ணுவர்" என் பது தாயுமானவர் வாக்கு.

இனி, இந்தச் சித்தர்கள் ஞானம் ரசவாதம் வைத்தியம் மந்திரம் என்பவற்றிலும் வல்லவர்கள் என்ற ஒரு கருத்து இருக்கிறது. இந்த நெறிகள் ஒன்றுக்கொன்று சம்பந்த மில்லாவிடினும், எல்லாமே உடலை அழியாது காப்பதாகிய காயகற்பம் தேடுவது என்ற பொது முயற்சியைக் குறித் தன. சித்தர் எதையும் செய்யலாம், அட்டாங்கயோக நெறியில் நின்று அட்டமாசித்தி கைவரப் பெற்றமையால் இவர்கள் செய்வது அமானுஷிகமானது என்ற கொள்கை யும் உண்டு. இக் கொள்கையால் விளைந்த கேடே கஞ்சா புகை மது முதலான தீமைகள். இக் கேட்டைக் கண்டித்த பிற்காலச் சித்தரும் உளர்.

கூடு விட்டுக் கூடு பாய்தல் என்பது சித்தர் செயல் களுள் ஒன்று. அருணகிரி நாதர் மனிதக் கூட்டைவிட்டுக் கிளிக்கூட்டினுள் புகுந்தார் என்ற ஒரு வரலாறு உண்டு. ஆனால் சித்தர் பெயர்களுள் இவர் பெயரை யாரும் சேர்த்த தில்லை. இதனால் சித்தர்கள் என்ற தொகை வழக்கு இவர் காலமாகிய 15ஆம் நூற்றாண்டுக்கு முன்னமே அமைந்து விட்டது என்று நாம் கருதலாம். போலியாகப் பின்னால் சேர்க்கப்பெற்ற சித்தர் பாடல்கள் நீங்கலாக, ஏனையவை யாவும் 15ஆம் நூற்றாண்டுக்கு முன்னமே எழுந்துள என்பது தெளிவாகிறது.

பதினெண் சித்தர் ஞானக் கோவையுள், பிற்காலத் தில் செய்யப்பட்ட பல பாடல்களும், வசனங்களும் தொகுக் கப் பெற்றிருக்கக் காண்கிறோம். பின்னே வந்தோர் இப் பாடல்களைச் செய்திருந்தார்கள். அல்லது பலர் செய்த

பாடல்களைக் கண்டபோது நூலாசிரியர் தெரியாமையால் அகத்தியர் என்றும் திருமூலரென்றும் திருவள்ளுவரென்றும் பெயர் வைத்து விட்டார்கள் என்றே நாம் கருதத் தோன்றுகிறது. இவ்வாறு பெயர் சூட்டப்பெற்ற பலவகைப் பாடல்கள் இங்கு சேர்ந்திருக்கின்றன. ஞானம் பாடியவர்களான அகத்தியர், உரோமரிஷி, காகபுசுண்டர், சட்டைமுனி, சுப்பிரமணியர், திருமூலர், திருவள்ளுவர், வால்மீகி; பூசாவிதி பாடியவர்களான இராமதேவர் கருவூரார் நந்தீசுவரர் சூரியானந்தர் முதலியோர்—இவர்கள் பெயரால் பாடல்கள் இங்கு சேர்ந்துள்ளன. இவற்றில் திருவள்ளுவர் ஞானம் என்ற 20 பாடலும் ஞானவெட்டி என்ற நூலில் காணப்படுகிறது. 19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகளையும் சித்தர் என்று பெயரிட்டு அவர் பாடல்களில் 250 பாடல்கள் இங்குச் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றால் சித்தர் கோவை ஆதார பூர்வமான ஒரு நூலாய்க் கொள்ளத்தக்கதன்று என்பது தெளிவாகும். இத் தொகுப்பில் காண்போர் அனைவரும் சித்தராகார். இத் தொகுப்பின் காலம் 1875-1900 என்றும் கருதவேண்டும். அச்சில் வாராத சித்தர் பாடல்களும் ஏட்டில் பல உள்ளன.

ஓரளவு ஏட்டிலிருந்தே இவை எழுதப்பெற்றன என்பது உண்மை. ஆனால் மிகவும் பிற்காலத்துப் பாடலும் 20ஆம் நூற்றுண்டு உரைநடையும் இதனுள் அமைந்திருக்கின்றன. எது சித்தர் பாடல், எது பொய்த்தோர் பாடல் என்று காணவியலாதபடி கலந்துள்ளன. இதற்கு நல்ல பதிப்பும் இல்லை. குஜிலிப் பதிப்பு என்று சொல்லப் பெறும் பதிப்பொன்றுதான் உண்டு. இது புலவர்கள்-ஆராய்ச்சியாளர் பார்வையில்லாமல், மீண்டும் மீண்டும் பிழைகளையே அச்சிட்டு வருவதாயுள்ளது. ஆயினும் நூல் இறந்து போகாமல் பாமர மக்களுக்காக வேண்டி எப்படியோ அச்சிட்டு வைத்தார்களே என்று அச்சிட்டோருக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டு இருக்கிறோம். மற்றொரு புறம்

பண்டிதர் என்போர் இந்நூல்களை விரலாலும் இதுவரை தொட்டுப் பார்த்ததில்லை என்பதையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டும்.

மேலும் இக் கோவையுள் பதினெண் சித்தரும் தொகுக்கப் பெறவில்லை; தொகுக்கப் பெற்றுள்ளோர் அனைவருமே சித்தர் வரிசைக்குரியோரல்லர்.

சித்தர் பெயர்கள் பலவாக விரிவடைந்ததற்கு ஒரு காரணம் சொல்ல முடியும். 19ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் தஞ்சையிலிருந்த சரபோசி என்ற மராட்டிய மன்னன் பெருந்தமிழ்ப் புலவராகிய சிவக்கொழுந்து தேசிகரை வைத்துத் தமிழ் நூல்கள் தேடித் தொகுத்துவைத்தான். அவர் வைத்திய நூல்களையும் நிரம்பத் தொகுத்தார். அச்சமயம் இருந்த நூல்களுக்கு நல்ல அரச மதிப்புக் கிடைப்பதை அறிந்த போலிகள் பலர், பாடல் எழுதித் திருமூலர் ஞானம், போகர் ஞானம், கருவூரார் பூசை என்று பெயர் சூட்டிக் கொடுத்திருப்பார்களென்று தோன்றுகிறது. பொருளுக்காகவும் தந்திருக்கலாம், பெருமைக்கும் கொடுத்திருக்கலாம். இவ்வாறு செய்தமைத்த பாடல்களும் கொடுத்துவைத்த பாடல்களும் இன்று சித்தர்பாடல் என்று மயங்கக் கிடைக்கின்றன. இவ்வாறு போலி நூல்கள் எழுமா என்ற ஐயம் வேண்டுவதில்லை. இன்னிலை, மூவடி முப்பது, செங்கோன்றரைச் செலவு, இளம் பூரணர் தொல்காப்பியப் பொருளதிகார உரை ஏட்டுப் பிரதி வரலாறு என்பன அறிந்தவர்கள் இதை நன்கு ஒப்புக்கொள்வர்.

இவ்வாறு மலிந்த நூல்கள் மிகப் பல. இவற்றை இங்கு நாம் கருதவில்லை.

நாம் கருதும் காலப் பகுதிக்குரியோர் என்று திட்டமாகத் தெரிந்து பிரசித்தமான பாடல்கள் பாடிய சில சித்தர்கள் வாழ்க்கையையும் நூல்களையும் மட்டும் நாம் இங்கு ஆராய்கிறோம். கேளப்பா, ஆளப்பா என்று அடுக்காக

இலக்கிய இலக்கண வரம்பு கடந்து பாடியவர்களையும் நாம் பார்க்கவில்லை. ஒரு குழூஉக்குறி படைத்துக் கொண்டு பிறருக்கு விளங்காமலும் இலக்கியச் சுவையில்லாமலும் பாடியவர்களையும் இவ்வாராய்ச்சியில் விலக்கி விடுகிறோம்.

சிவ வாக்கியர் இக்காலப் பகுதிக்குரியவர். அவ்வையாருள் ஒருவர் சித்தர் என்று சொல்லத் தக்க நிலைக்கு உரியார், இக்காலப் பகுதியினர். பட்டினத்தாருள் பிந்தியவரே, பத்திரகிரியாரைத் தம் மாணாக்கராக உடையவர்; இவ்விருவரும் இக்காலப் பகுதியினராவர். இவர்கள் அனைவரும் சித்தர்களே. சம்பிரதாய சித்தர் வரிசையில் காணப்படுவோருள் அறுவர் மட்டும் எல்லா வகையிலும் சிறப்பானவர்கள்; 15ஆம் நூற்றாண்டுக்கு உரியவர்கள். அவர்களோடு ஏறுதிச் சித்தர் காளைச் சித்தர் என்ற இருவரையும் அங்குச் சேர்த்திருக்கிறோம்; இவர்கள் பாடல் அச்சில் வந்தனவாகத் தெரியவில்லை.

## சிவ வாக்கியர்

நெற்றி நிறையத் திருநீறு அணிந்து மணிக்கணக்காகச் சிவ வாக்கியர் பாடலைப் பாடிக் கொண்டு வீடு வீடாய் அமுதுபடி யாசித்து வரும் பண்டாரங்களைக் காணாத ஊரோ நகரமோ தமிழ் நாட்டில் இல்லை.

நட்ட கல்லைச் சுற்றி வந்து நாலு புட்பம் சாத்தியே
சுற்றி வந்து மொணமொ ணென்று சொல்லு மந்த்ர மேதடா
நட்ட கல்லு பேசுமோ நாத னுள்ளி ருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?

என்ற பாட்டைக் கேளாதோர் இரார். மிகவும் புரட்சிகரமான பாடல் என்று இதைக் கருதுவதுமுண்டு.

சிவ வாக்கியர் தமிழ் நாட்டில் வாழ்ந்த யோக சித்தர்களுள் ஒருவர். **பதினெண் சித்தர்** ஞானக் கோவை என்ற தொகுப்பு இவருடைய பாடல்களையே முதலாவதாக

வைத்தெண்ணுகிறது. அத் தொகுப்பினுள் இப் பாடல்கள் 520 காணப்படுகின்றன. இவற்றுள் கடைசிப் பாடலே மேற்குறித்த பாடல். இச் சித்தருடைய இயற் பெயர் இன்ன தென்று விளங்கவில்லை. முதற் பாடலில் தாம் செய்யும் நூல் சிவவாக்கியம் என்று இவர் கூறுவதால், இவருக்கும் அதே பெயர் நிலைத்து விட்டது போலும்.

அரியதோர் நமச்சிவாயம் ஆதியந்தமானதும்
    ஆறிரண்டு நூறுதேவர் அன்றுரைத்த மந்திரம்
அரியதோர் எழுத்தைஉன்னிச் சொல்லு வேன்சிவாக்கியம்
    தோஷதோஷ பாவமாயை தூரதூர ஓடவே.

அரியதோர் எழுத்து-சுழி எழுத்தாகிய ஓங்காரம்.

சிவ வாக்கியரைக் குறித்த வரலாறு எதுவும் தெரிய வில்லை. பொதுவாக இவர் பாடல்களின் தன்மையைக் கொண்டு தான் காலத்தை நிர்ணயிக்க முடியும் என்று பெரியோர் கருதுகின்றனர். இவருடைய பாடலில் வட சொற்கள் அதிகம். பேச்சு நடையும் மரூஉ மொழியும் மிகுதி. சில இடங்களில் எதுகையைக் கவனிக்க மாட்டார். சந்த ஓட்டமே பிரதானமாய்க் கருதுவார். ஆதலால் இவர் காலம் இன்னது என்று திட்டமாய் வரையறை செய்யாமல் பொதுவாக இடைக் காலம் என்று மட்டுமே குறிப்பிட முடியும் என்று ஆன்றோர் இதுவரை கூறியும் வந்திருக் கிறார்கள். ஆனால் சிவ வாக்கியர் காலத்தை ஓரளவு திட்ட மாக அறிவதற்குச் சில சான்றுகள் நமக்குக் கிடைக் கின்றன.

பட்டினத்தார் ஒரு சிவவாக்கிய தேவரைக் குறிப்பிடு கின்றார். 11 ஆம் திருமுறையில் 28 ஆம் பிரபந்தமாகிய திருவிடைமருதூர் மும்மணிக் கோவையின் 28 ஆம் பாட்டில் உள்ள (32-33) வரிகள் பின் வருவன:

அத்தகு செல்வத் தவமதித் தருளிய
சித்த மார் சிவ வாக்கிய தேவரும்—

"மிகுந்த தகுதியுடைய பெருஞ் செல்வத்தைப் புறக் கணித்தருளிய சித்தம் பொருந்திய சிவ வாக்கிய தேவர்" என்பது இதன் கருத்தாகும். இங்கு ஆசிரியர் பட்டினத்தார், முறையே அடியார் மூவரும் மாணிக்க வாசகரும் சிவ வாக்கிய தேவரும் வரகுண தேவரும் ஆகிய அறுவரின் புகழைக் கூறியிருக்கிறார். 11ஆம் திருமுறையைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பிகள் 10-11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்பது அறிஞர் கருத்து. எனவே பட்டினத்தார் இவருக்கு முற்பட்டவர். இச்சிவவாக்கியர் 'பெரிய அன்பின் வரகுண தேவர்' என்று போற்றுகின்ற அடியவர் போலப் பெருஞ் சிறப்பு வாய்ந்த ஓர் செல்வராகவும் அடியாராகவும் மிகவும் பிரசித்தி பெற்று வாழ்ந்தவர் என்று மட்டுமே நாம் கருதலாம். பட்டினத்தார் இங்குப் பாடுகின்ற சமயாசாரியர் நால்வரும் திருமுறை பாடியவர்கள். அவர்களோடு ஒருங்கு வைத்து எண்ணப்படுகின்ற வரகுண தேவர் அடியவரேயன்றி நூல் செய்தவர் அல்லர். அங்ஙனமே இங்குக் குறிப்பிடும் சிவ வாக்கிய தேவரும் சிறப்பு வாய்ந்த அடியவரேயன்றிப் பாடல் எதுவும் பாடினாரிலர் என்று நாம் கொள்ள வேண்டும். ஏனெனில், இங்கு நாம் கருதுகின்ற சிவ வாக்கியம் பாடிய சிவவாக்கியர், காலத்தால் மிகவும் பிற்பட்டவர் என்று காண்போம். ஆகவே இப்போது நாம் இங்கு, சிவ வாக்கியர் என்ற பெயரால் பெரியோர் இருவர் இருந்தனர், ஒருவர் சிவ வாக்கிய தேவர் என்று பெயர் பெற்ற செல்வராய் 10 ஆம் நூற்றாண்டிக்கு முன்னே வாழ்ந்தார் என்றும், மற்றவர் சிவ வாக்கியர் என்ற பெயரோடு சிவ வாக்கியம் பாடிப் பின்னே 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்றும் வரையறை செய்து கொள்ளவேண்டும்.

பழமையாக ஒரு கதை வைணவ நூலாசிரியர் கூறுவார்கள். ஏழு வயது வரையில் பிரம்பறுப்பவன் வீட்டிலே வளர்ந்த தெய்வக் குழந்தையான திருமழிசை கடவுளை

அறிய வேண்டி உலகாயதம் பௌத்தம் முதலான புறச் சமயங்களிலும்மாயாவாதம்போன்ற சமயங்களிலும் புகுந்து பார்த்துப் பின் இவற்றைக் குற்றம் என்று தள்ளிச் சைவத்தில் சேர்ந்து சிவவாக்கியர் என்ற பெயர் புனைந்து பசுபதியைத் தியானித்து வருமளவில், பேயாழ்வார் இவரோடு வாது செய்து வென்று வைணவராக்கினார் என்பர். திருமழிசையாழ்வார் காலத்தால் மிகவும் முற்பட்டவர். இத்தகைய கதைகளை நாம் அதிகம் ஆராய வேண்டியதில்லை. சைவத் துவேஷம் கொண்ட ஒரு பண்டை வைணவர் இப்படி ஒரு கதை கட்டி விட்டார். சிவ வாக்கியர் என்பவர் மேலான பரம சைவ ஆசிரியர் என்று இவர் நினைத்திருந்தார் போலும். இது பற்றியே இப்படி ஒரு கதையைச் சிவ வாக்கியர் மீது ஏற்றினார். இந்த நினைவு மிகவும் பிழைபட்டது என்று நாம் அறிவோம். அன்றியும், திருமழிசையார் பாடலும் எழு சீர்ச் சந்த விருத்தம்; சிவவாக்கியர் பாடலும் எழுசீர்ச் சந்த விருத்தம்; இந்த ஒற்றுமையால் சந்த விருத்தம் பாடிய சிவவாக்கியர் மதம் மாறியும் சந்த விருத்தமே பாடுவார் என்று இவர் எண்ணிவிட்டார். இக்கதை ஒதுக்க வேண்டியதே அன்றி, ஆராய்ச்சிக்குப் பொருந்துவது அன்று.

இனி, ஆராய்ச்சித் துறைக்கு நாம் வருவோமானால், இரண்டு ஆசிரியர் சிவவாக்கியர் பாடலைக் குறிப்பிடுவதைக் காண்கின்றோம். ஒருவர் தத்துவ ராயர்; மற்றவர் சிவஞான வள்ளல். இருவரும் 15 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர்கள்.

தத்துவராயர் 4 பாடல்களை சிவ வாக்கியம் என்று குறிப்பிடுகிறார். அச்சிட்ட பெருந்திரட்டுப் பதிப்பில் அருமையுரைத்தல் என்ற அதிகாரத்தில் 3 பாடல்களும் முத்திக்கேது என்ற பிரிவில் ஒரு பாட்டும் காணப்படுகின்றன. அவை பின்வருவன:

புல்லையாதி தாவரம் புகன்றகோடி யாயிரம்
மெல்லவே பிறந்திறந் திளைத்து வீடும் ஏறினல்
எல்லையில் அனந்தகோடி யோனி ஏறி இங்ஙனே
நல்லயோனி மானுடத்தை வந்துநண்ணும் நன்மையால்.

பிறந்த தாவரத்தினிற் பிழைத்தல் எங்ஙன் என்றிடில்
சிறந்ததேவர் சித்தர்பத்தர் சேய்பசுக்கள் அந்தணர்
துறந்துமேனி யோர்கள் துய்த்தல் சூழ்தல் மேய்தல் சேர்தலால்
உறைந்த தாவ ரத்தைவிட் டுடம்படைந்த யோனியாம்.

என்ற தாவரத்தினின்ற யோனிஎங்ஙன் என்றிடில்
நன்றுதீதெனுங் குணங்கள் நாளும்வந்து நண்ணலால்
தின்றல்கோறல் சேர்தல் தேசம் ஏவல்செய்ய யோனியும்
மன்றல் மாலைஅன்ன மானுடத்தை வந்து பற்றுமே.

இருப்பு நெஞ்ச வஞ்சகத் திசைந்து நின்ற ஈசனைப்
பொருப்பினும் புனலினும் புரண்டு தேடும் மூடர்கள்
கருப்புகுந்த காலமே கலந்து நின்ற அண்ணலைக்
குருப்பிரானெ டன்றி மற்றுக் கூடலாவ தில்லையே.

*இவை அச்சிட்ட சிவ வாக்கியர் பாடல் என்ற நூலில் காணப்படவில்லை. காணப்படாமைக்குக் காரணம் இரு வகையா யிருக்கலாம். ஒன்று, பாடல்களைத் தொகுத்த போது இவை கிடைக்கப் பெருமை. இரண்டு உண்மையா கவே இவை சிவ வாக்கியர் பாடியனவாக இல்லாமல் பிறர் பாடி அப் பெயரிட்டமை. இப்பாடல்களைப் பொறுத்தவரை யில் பிந்தியதே உண்மை. பெருந்திரட்டுத் தொகுத்தவ ரான தத்துவராயர் அளவிறந்த புலமையும் ஆற்றலும் படைத்தவர். தம்முடைய வேதாந்தக் கருத்துக்குத் தேவையான பாடல்களை வேண்டிய இடங்களில் எல்லாம் பாடிச் சேர்த்துப் பண்டைய நூல்களின் பெயரையே வைத்துக் கொண்டார். திருவாசகம் சிவப்பிரகாசம் தத் துவப் பிரகாசம் தத்துவ விளக்கம் மெய்ஞ்ஞான விளக்கம் போன்ற பெயரில் இவர் எடுத்துக் காட்டும் பாடல்கள் இக் கூற்றுக்கு உதாரணங்களாகும்.*

மேலும், முதல் மூன்று பாடல்களைக் காணும்போது ஒரு நிலை தெளிவாகிறது. அருமையுரைத்தல் என்ற பெருந்திரட்டதிகாரத்தில் முதல் பாட்டு ஆசிரியர் கூற்றாக உள்ளது. 'ஈசன் திருவடியைப் பெறுவதற்கு அருமையை முறையாகக் கூறுவேன் கேளுங்கள்' என்கிறார். இப் பாடல் மெய்ம்மொழிச் சரிதை என்ற தலைப்பிடப் பட்டுள்ளது. அடுத்து, இங்குக் காட்டிய சிவ வாக்கியம் என்ற தலைப்பிலுள்ள முதல் மூன்று பாடல்கள், ஆன்மா வானது புல் முதலான பிறவிகளில் பிறந்து நல்வினையால் மானுடப் பிறவி எடுக்கும், தாவரத்துக்கு நல்வினை ஏதெனில் துறவோர் துய்த்தல் முதலியன என்று உரைக் கின்றன. எனவே இங்கு, பெருந்திரட்டுத் தொகுப் பாசிரியர் குறித்த அதிகாரத்தில் ஒரு தலைப்பை எடுத்துக் கொண்டு தொடர்பாக அதை மாணக்கருக்கு விளக்கிக் கூறிக்கொண்டு செல்கிறார். இந்த அமைப்பு சிவ வாக்கியத் திற்குச் சிறிதும் பொருந்தாது. ஆதலால் இவ்வாசிரியர் சிவ வாக்கியத்தின் சந்தத்தை யொட்டிச் சில பாடல்கள் தம் கருத்துக்கொவ்வுமாறு பாடி அதில் மூடர்கள் என்பது போன்ற சில சொற்களையும் பெய்து வைத்து அதற்குச் சிவ வாக்கியம் என்று தலைப்புக் கொடுத்துவிட்டார் என்று நாம் கொள்வதே பொருந்துவதாகும். சிவ வாக்கியம் என்பது ஒரு நூலின் பெயர் என்று எண்ணமல், ஒரு யாப்பு வகையின் பெயர் என்று தத்துவராயர் கருதிவிட்டாரோ என்று கூட நாம் ஐயுற வேண்டியிருக்கிறது. ஆனல் தத்துவ ராயர் பெரும் புலவர்; இவ்வாறு கருதமாட்டார்.

எனினும், இதிலும் ஒருண்மை புலப்படுகின்றது. தத் துவ ராயர் காலத்தில் சிவவாக்கியம் எல்லோரும் அறிந் திருந்த சிறப்பான ஒரு சாத்திர நூல். அப் பெயரையும் சேர்த்துக் கொண்டால் தான் தம் சாத்திரத் தொகுப்பு பூர்த்தியடையும் என்று அவர் நினைத்தார். ஆகவே சில பாடல்கள் எழுதிச் சிவ வாக்கியம் என்று பெயரிட்டுக்

கொண்டார். எங்ஙனமாயினும், தத்துவராயர் காலமாகிய 15 ஆம் நூற்றாண்டின் இறுதிக்கு முன்னே சிவ வாக்கியம் பலரும் அறிந்த நூலாயிருந்தது என்பது தெளிவு.

இனி, வள்ளலார் சாத்திரத்தில் 378 குறட்பாக்களா லான சித்தாந்த தரிசனம் என்ற பகுதியில் முதற்கண் ணுள்ள பாயிரப் பகுதியில் சிவஞான வள்ளல் சிவ வாக் கிய தேவரைக் குறிப்பிடுகிறார்:

**சிவவாக்கிய தேவர் திருமொழியைக் கொண்டே**
**அவவாக் கியத்தை அடுவாம். (8)**

இப் பகுதியில் இவர் கூறும் பாடல்கள் சம்பந்தர் திருப் பாசுரம், அப்பர் நின்ற திருத்தாண்டகம், வாழ்வாவது மாயம் என்ற சுந்தரர் உரை, சிவ புராணத் தகவல், சிவ வாக்கிய தேவர் திருமொழி, திருமூலர் மாலை, மெய்கண்டான் நூல் என்பன. இவ்வரிசையால் இவர் சிவவாக்கியரிடத்துக் கொண்டிருந்த பெருமதிப்புப் புலப்படும். இவ்வள்ளல் காலம் 15ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி. எனவே, சிவ வாக்கியர் இப் பகுதிக்கு முற்பட்டவர் என்பதும் தெளிவா கின்றது.

வள்ளலார் சாத்திரம் வேறு இரண்டிடங்களில் சீவாக்கர் என்று சிவவாக்கியரைக் குறிப்பிடுகிறது. ஓரிடத் தில் (கர்ணாமிர்தம் 39) பத்தியில் கோழையாகிய நான் பட்டினத்தடிகள் போல் துறக்கவில்லை: 'பராபர நிலையைக் கண்டாங்கு அற்ற சீவாக்கரல்லேன், அன்பில் கண்ணப் பனல்லேன், குற்றம் செய் மூர்க்கனல்லேன்' என்கிறார். வள்ளலார், சுருதி சார விளக்க அடியார் வணக்கத்தில், "ஒப்பாரும் இலை என்ற சீவாக்க ருரை போற்றி" என் கிறார். இவற்றால், இறை நிலையை உணர்ந்த மாத்திரத்தில் சிவ வாக்கியர் பற்றுக்களைக் களைந்து துறவியானார் என்று நாம் அறியலாம்.

மேலும், சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு உரை எழுதிய மறைஞான சம்பந்தர் 298 ஆம் பாடலில் உரை

எழுதும் போது உதாரணமாக, பஞ்சாக்கர தரிசனம் என்று பெயரிட்டு, சிவவாக்கியம் 90 ஆம் பாடலை மேற்கோள் காட்டுகிறார்.

**நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்ச்**
**சிவ்விரண்டு தோளதாய்ச் சிறந்தவவ்வு வாயதாய்**
**யவ்வுமேன் முடியதாய் எழுத்துநின்ற நேர்மையைச்**
**செவ்வ ஞெத்து நின்றதே சிவாய அஞ்செழுத்துமே.**

எனவே, சிவ வாக்கியமானது மறைஞான சம்பந்தர் காலமாகிய 16 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பது தெளிவு. இக் கருத்தும் முற்கொண்ட முடிவுகளுக்குத் துணை செய்யும்..

இனி, சிவ வாக்கியர் பாடல் என்று வழங்கும் பாடல்களினுட் புகுந்து பார்த்தால், அச்சிட்ட நூலில் திருமால் வணக்கமாகவும் ராமநாம செபமாகவும் பல பாடல்கள் காணப்படுகின்றன. தமிழில் வேதாந்தக் கருத்துக்களும் இலக்கியமும் பெருகிய 15 ஆம் நூற்றாண்டுக்குப் பின் அரனும் அரியும் அபேதம் என்ற கொள்கையோடு இடைச் செருகலாகச் சேர்க்கப் பட்டுள்ளன என்றே இப்பாடல்களைக் கருத வேண்டும். ஏனெனின், சைவ மார்க்கத்தில் சிறப்பான ஆசாரியர் என்று வைணவர்கள் தவறாக வேனும் கருதும்படி இருந்த சிவ வாக்கியர், தம் பாடலில் ராம நாம செபம் செய்திருக்க மாட்டார். சிவனும் திருமாலும் ஒன்றே என்ற கருத்துப்பட அமைந்த பாடல்களை மட்டும் அவர் பாடியிருத்தல் கூடும்.

சிவ வாக்கியர் பாடல்களில் பொதுவாய் அக்காலத்தில் பலரிடம் வழங்கிய 'மாதரைப் பழித்தல்' என்ற கருத்துக் காணப்படவில்லை என்பது அவருக்குரிய சிறப்பு; சிறந்த இல்லற வாழ்க்கை உடையவராய் அவர் இருந்திருப்பார்.

இனி, திருமுறைக் காலத்தின் பின்வந்தவர் சிவ வாக்கியர் என்பதற்குப் பாடல்களில் சில சான்றுகள் உள்ளன.

திருமுறைத் தொடர்கள் பலவும் சிவ வாக்கியர் பாடலுள் அப்படியே பயில்கின்றன. 'புலனைந்தும் பொறி கலங்கி,' 'மையிலங்கு நற் கண்ணி பங்கனே' என்ற தேவார திருவாசகத் தொடர்களைக் காண்க.

சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்தி ரமும் குலமும் கொண்டென் செய்வீர்
பாத்தி ரம்சிவம் என்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளும் மாற்பேறரே

என்ற அப்பர் திருக்குறுந்தொகைப் பாடலானது,

சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாத பட்டரே
வேர்த்திரைப்பு வந்தபோது வேதம்வந் துதவுமோ
மாத்திரைப் போதும்முளே அறிந்துதொக்க வல்லிரே
சாத்திரப்பை நோய்களேது சத்திமுத்தி சித்தரே

என்ற பாடலுக்கு அடிப்படை. சாத்திரச் சழக்கரே என்றும் மற்றோரிடத்தில் கூறுகிறார் (250). "செத்திடம் பிறந்திடம் எங்ஙனமென் றறிகிலீர்" என்று இவர் கூறுவது (491) 'செத்திடமும் பிறந்திடமும்' என்ற திருவாசக அச்சோப்பத்து மிகைப் பாடலை நினைவூட்டுகிறது.

மூன்று மண்டலத்திலும் முட்டிநின்ற தூணிலும்
நான்ற பாம்பின் வாயிலும் நவின்றெழுந்த அட்சரம்

என்ற பாடல் (100)

மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்தி

என்ற அவ்வையார் விநாயகரகவல் கருத்தைக்கொண்டிருப்பது வெளிப்படை.

முறையாக குகன், ஐங்கரன், எம்பிரான், அம்மையை நாடுவதைக் குறிப்பிடுகிறார். திருவஞ்செழுத்து அகார உகாரங்கள் முதலியன பன்முறை சொல்லப் பெறுகின்றன. மௌன அஞ்செழுத்து (329) என இவர் கூறுவது, "கொடிக்கவி" கூறும் பேசா எழுத்தாகும்.

சிவஞானிக்கு அன்னதானம் செய்வதைக் கூறுகிறார் (325). இது "சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்" என்ற சித்தியார் பாடற் கருத்தைக் காட்டுவது. சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நால்வகை நெறியில் நின்றாரும் முறையே சாலோக சாமீப சாரூப சாயுச்சிய நிலைகளை அடையலாம் என்று ஒரு பாடல் (447) கூறுகிறது. சித்தாந்த சாத்திரக் கருத்துக்களான நான்கு பாதங்கள், யோக நெறி, வாசியை நடத்தல் என்ற யோகக் கருத்து முதலாயின பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. எனவே, சிவ வாக்கியர் மெய்கண்ட சாத்திர காலமாகிய 13-14 ஆம் நூற்றாண்டுக்குப் பிறபட்டவர் என்பது தெளிவு.

பாடல்களின் யாப்பைப் பற்றியும் ஒரு வார்த்தை கூற லாம். பாடல்கள் யாவும் பொதுவாக ஏழு ஈரசைச் சீர்கள் கொண்ட சந்த விருத்தம். நான்கடி விருத்தங்கள் ஆயினும் சில பாடல்கள் எழு சீரடி இரண்டு ஓரடியாகி இதுபோல் நான்கு அடி கொண்ட பதினான்கு சீர்விருத்தங்களா யுள்ளன. பாடல்கள் 1-2, 29-30 என்பன எடுத்துக் காட் டாகும். (இவை இடைச் செருகலாயிருக்கவும் கூடும்.)

சிவ வாக்கியர் பாடலில் குலாமர் என்ற சொல் காணப் படுகிறது (35):

கோயிலாவ தேதடா குணங்களாவ தேதடா
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே
ஆவதும் அழிவதும் இல்லை இல்லை இல்லையே.

குலாம் இடுபவர் குலாமர். குலாம் இடுதல், அடிமைத் தொழில் புரிதல், அடிமையாயிருத்தல்; இங்கு, போலிச் சடங்குகளுக்கு அடிமையாயிருத்தல். தமிழ் நாட்டில் முகம் மதியர் ஆதிக்கம் ஆட்சித் துறையில் ஏற்பட்ட காலத்தில் அவர்களுடைய சொற்கள் பல தமிழில் புகுந்தன. அவ்வாறு புகுந்த சொற்களில் இதுவும் ஒன்று. "கொடுக்க அறியாது

இறக்கும் குலாமருக்கு என் சொல்வேன்" என்று பட்டினத்தார் பாடுகின்றார். இச் சொல்லும், இது போன்ற சலாம் முதலான சொற்களும், தமிழில் முதன் முதலில் வழங்கத் தொடங்கிய காலம் கி. பி. 1350-1450. சிவ வாக்கியர் இச் சொல்லை ஆளுவதால் அவர் காலமும் இதே காலமாகும். 14 ஆம் நூற்றாண்டின் பிற்பாதி என்ற கருத்துக்கு இது ஆதரவு தருகிறது.

இவ்வாறு சிவ வாக்கியர் பாடல்களை நாம் நன்கு ஆராயும் போது, பின்வரும் செய்திகள் மேலும் புலனாகின்றன. பல காலத்தில் பலர் பாடிய பாடல்கள் இவருடைய பாடல்களில் புகுந்து விட்ட போதிலும் கூட, சிவ வாக்கியர் என்ற ஒருவர் இருந்து மெய்ஞ்ஞானப் பாடல்களைப் பாடினார் என்பது உண்மை. இவர் சைவ சமயாசாரியர்களுக்கும் சந்தானாசாரியர்களுக்கும் பின்னால் வாழ்ந்தார். விநாயகரகவல் பாடிய அவ்வையாருக்கும் பிற்பட்டு, 14 ஆம் நூற்றாண்டின் இறுதி 15 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகிய காலத்தில் வாழ்ந்தார். தம்முடைய பற்றற்ற வாழ்க்கை, உபதேச மொழிகள், மெய்ஞ்ஞான நாட்டம் ஆகியவற்றால் அடுத்த நூற்றாண்டில் சிவஞானிகளால் பெரிதும் போற்றப்பெற்றார்.

சிவ வாக்கியர் பொதுவாக, போலிகளைக் கண்டித்தவர். ஆண்டவனை உள்ளத்தில் உணர்ந்து ஒழுகாதவரையில், புறப் பூசனைகள் வெறும் வேடம், ஒரு பயனும் தரா என்பது இவருடைய உபதேசம். இதுபற்றி இவர் உருவ வழிபாட்டை வெறுப்பவர் என்று சொல்வதுமுண்டு. ஆயினும், இவர் பாடல்கள் சிவ பரம்பொருளையும் திருவைந்தெழுத்தையும் போற்றுவனவாயுள்ளன. சைவத்தைப் பெரிதும் போற்றிக் கூறுகிறார். தில்லை காசி என்ற தலங்கள் இவர் பாடலில் கூறப்பட்டுள்ளன. யமபயம் வேண்டாம் என்பது இவர் கருத்து. இவர் சாதி பேதங்களைக் கடந்தவர். வினையினால் பிறவி வருகிறது; ஆண்டவன் குருவாகி வந்து

அருள் செய்ய, மெய்ஞ்ஞானம் பிறந்து பற்று நீங்கு கிறது. நீங்கவே, ஆன்மாவில் ஞானமயமாக விளங்கும் பதியைக் கண்டு அவனோடு ஆன்மா ஒன்றுகிறது என்பது இவர் கொள்கை என்று கூறலாம்.

திருவுமாய்ச் சிவனுமாய்த் தெளிந்துளோர்கள் சிந்தையில்
மருவிலே எழுந்து வீசும் வாசனைய தாகுவன்
கருவிலே விழுந்தெழுந்த கன்ம வாத னையெலாம்
பருதிமுன் னிருளதாம் பறியுமங்கு பாருமே (455)

என்ற பாடல் சிவவாக்கியர் கருத்தை நன்குணர்த்துகிறது. இது திருவாசகம் அதிசயப்பத்தில் கண்ட பாடற் கருத்தைக் கொண்டிருக்கிறது:

உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்றவர் பெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர் சொல் தெளியாமே
அத்த னண்டுதன் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டாமே.

இவ்வாறு சிவவாக்கியர், பல சித்தர்களும் சிவஞானிகளும் சமயத் தலைவர்களும் வாழ்ந்திருந்த காலத்தில் உடன் வாழ்ந்து, அரிய ஞானப் பாடல் பல பாடிய சித்தரும் ஞானியும் ஆவர். நுட்பமான கருத்துக்களைப் பாமரர் மொழியிலேயே இவர் பாடினர். இது பற்றியே முறையாகச் சைவ சித்தாந்தம் பயின்றவர்கள் இவர் நூலைப் பயின்றதில்லை; இவர் வேதாந்தி என்றும் கூடக் கூறிவிட்டார்கள். ஆனால் மேற்கூறியவற்றால் இவர் சைவ சமய சந்தான ஆசாரியரின் மரபிலே வந்த சிறந்த சைவ சித்தாந்தியே என்பதும், 14-15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பதும் தெளிவாகும்.

சிவவாக்கியர் பெயரால் வைத்திய நூல்களும் வழங்குகின்றன. ஒன்று, 'சிவவாக்கியர் நாடி பரீட்சை முப்பத்து மூன்று' என்பது. இது சிவவாக்கியர் பாடல்களை யொத்த சந்தத்தில், நாலடியும் எட்டடியும் உடைய முப்பத்து மூன்று பாடல்கள் கொண்டது. சந்தம் காரணமாகவே இதைச் சிவவாக்கியர் பெயரோடு பிணைக்கிருர்கள் போலும். நாம் கருதும் சித்தர் இந்நூலுடன் தொடர்புடையவரல்லர் என்றே கருதுகிறோம். பின்வருவது இதிலுள்ள ஒரு மாதிரிப் பாட்டு :

வாதமான தேவனே ஆதியாக நின்றவன்
வாதமான தேவனே வையகம் மறைத்தவன்
வாதமான தேவனே மறுதொழில் பகுத்தவன்
வாதமான தேவனே வண்மை கண்டு கூறுமே.

சிவவாக்கியர் பாடல் என்று கூறத்தக்க சில பாடல்கள் திருமூலர் பாடலாக ஏடுகளில் எழுதுவோரால் பிழைபட எழுதியிருக்கவும் காண்கிறோம். 103 பாடல் கிடைத்தவுடன் அத்தொகுப்புக்குத் 'திருமூலர் நூற்று மூன்று' என்று பெயர் வைத்திருக்கிருர்கள். இவற்றுட் பெரும்பாலன சிவவாக்கியர் பாடலே.

[பதிப்பு : தனியாகவும் பதினெண் சித்தர் ஞானக்கோவையாகவும் வந்த பதிப்புக்கள் பல. வடிவேலு முதலியார் உரைப் பதிப்பும் உண்டு—1953. நல்ல பதிப்பு இனித்தான் வரவேண்டும்.]

## அவ்வையார்

அவ்வை என்ற சொல் அம்மை என்ற பொருள் உடையது; அவ்வம்மை என்பது அவ்வை என்ருகியிருக்கலாம். அம்மையின் திரிபு அவ்வை எனலுமொன்று. "அவ்வைக்கு மூத்த மாமன்" என்று சீவக சிந்தாமணி கூறும். அம்மை என்ற பொருளோடு இருந்த பொதுச் சொல், காலப் போக்கில் பல்லோருடைய போற்றுதலுக்கும்

வணக்கத்துக்கும் உரிய அம்மையாக வாழ்ந்த ஓர் அம்மை யாருக்கே உரிய சிறப்புப் பெயராக மாறி, அவ்வையார் என்று சிறப்பை யுணர்த்தும் ஆர் விகுதியும் பெற்றது. இது பின் வந்தோரால் ஔவையார் என்று எழுதவும் பெறு கிறது. ஆனால் பெயரின் திருத்தமான வடிவம் அவ்வை யார் என்பதேயாகும்.

தமிழ் நாட்டில் அவ்வையார் என்ற பெயரால் சுட்டப் பெற்ற தனிச்சிறப்புடைய பெண்பால் புலவர்கள் பலர் இருந்திருக்க வேண்டும். இவர்களுடைய இயற்பெயர் இன்னதென்று அறியக்கூடவில்லை. அம்மையார் என்பது இலக்கிய உலகத்தில் காரைக்கால் அம்மை ஒருவரையே குறிக்கும். அவரது இயற்பெயர் புனிதவதி என்று வரலாற்று முறையாக நாம் அறிந்துங்கூட, இப் பெயரை வழங்காமல், ஊர் பெயரைச் சார்த்தியே இன்றும் அவரைக் குறிப்பிடுகிறோம். அவ்வையார் என்ற பெயரைப் பொறுத்த வரையில், ஊரும் தெரிந்திலது.

அவ்வையார் பிறப்பைப் பற்றி வழங்கும் கதை பழமை யானது. பகவன் என்ற அந்தண இளைஞன் ஆதி என்ற புலைப்பெண்ணைக் காதலித்தான். மணத்தின் பின் பிறக்கும் பிள்ளைகளைத் தன் விருப்பப்படி ஆதி எதுவும் செய்யலாம் என்று அவள் விதித்த நிபந்தனையின்படி அவன் அவளை மணம் செய்து கொண்டான். இருவருக்கும் பிறந்த மக்கள் எழுவர். எழுவருள் மூத்தவர் அவ்வையார்; ஏனையோர் உப்பை, அதிகமான், உறுவை, கபிலர், வள்ளி, திருவள்ளு வர் என்போர். ஆதியானவள் தான் பெற்ற பிள்ளைகளை முன் நிபந்தனையின்படி, அவ்வவ்விடத்திலேயே விட்டகன் றாள். பிறந்த குழந்தை ஒவ்வொன்றும் பெற்ற தாயைத் தேற்றும் பொருட்டு ஒரு வெண்பாப் பாடி இறைவன் தன்னைக் காப்பான் என்று தாய்க்கு அறிவுறுத்திற்று என் பது கதை. இதன்படி அவ்வையார் பாடிய பாடல் பின் வருவதாகும்:

இட்டமுடன் என்தலையில் இன்னபடி என்றெழுதி
விட்டசிவ னும்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரம்அவ னுக்கன்றாய்
நெஞ்சமே அஞ்சாதே நீ.

"நரப்புக் கருவியோர் நண்ணிடும் சேரியில்-பாணர் அகத்தில் அவ்வை வளர்ந்தனள்" என்று கபிலர் அகவல் கூறும். பாணர் குடியில் வளர்ந்த அவ்வை, மணப்பருவம் வந்தபோது மணம்செய்துகொள்ள விரும்பாமல் சிவபெரு மானை வேண்டி முதுமைக்கோலம் பெற்றாள் என்பது ஒரு வரலாறு. சங்க காலத்திருந்த தகடூர் வள்ளலாகிய அதிக மான் தந்த நெல்லிக் கனியை உண்டு இவர் பல நூற்றாண்டு கள் இறவாது உயிர் வாழ்ந்தார் என்பர். அவ்வையார் பெயரோடு சார்த்தி வழங்கும் இக்கதைகளும் இவை போன்ற வேறு பல கதைகளும் சுவையுடைய கதைகள்; எனினும், உண்மை வரலாற்றுக்கு இவை ஆதாரமாகா.

சங்க காலம் எனக் கருதும் கி. மு. 300 - கி. பி. 200 ஆகிய கால எல்லைக்குள் முதல் அவ்வையார் வாழ்ந்து பாடிய பாடல்கள் 59, குறுந்தொகை நற்றிணை அகநானூறு புறநானூறு ஆகிய தொகை நூல்களில் கிடைக்கின்றன. இவர் உண்மையாகவே அக்காலத்து வாழ்ந்தவர்; அதிகமான் நெடுமான் அஞ்சி என்ற வள்ளலுடன் தொடர்பு கொண்டு நெடுங்காலம் வாழ்ந்திருந்தவர் என்பது உண்மையே.

பிற்காலத்தில் தோன்றிய அவ்வையாரும் பலர். சுந்தர மூர்த்தி, கம்பர், ஒட்டக்கூத்தர் முதலிய சரித்திரப் புலவர் காலத்தில் இவர்கள் வாழ்ந்தனர் என்பது கதைகள் மூலம் அறியும் செய்தி. செய்திக்கு ஆதாரமாகப் பல தனிப் பாடல்கள் மிக்க கற்பனையும் கவிதைச் சுவையும் பொருந் தச் செய்யப் பெற்றுள்ளன. எனவே, இவை யாவும் உண்மை என்றே எல்லோரும் நம்புகிறார்கள். எனினும், வரலாற்றுக்கு இவை துணை செய்யமாட்டா.

ஆயினும், சொற்பொருளாராய்ச்சியின் துணைகொண்டு பல கதைகளையும் நாம் கருதினால் மற்றோர் அவ்வையார் கி. பி. 14 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தார் என்றும் அவ்வை குறள், (ஞானக்குறள்), விநாயகரகவல் என வழங்கும் இரு சாத்திர-தோத்திர நூல்களையும் இவரே செய்தார் என்றும் முடிவு செய்யலாம்.

நாம் கருதுகின்ற அவ்வையார், கருவிலே திருவுடைய வராய் ஞான நாட்டமே கொண்டு வாழ்ந்தார். மெய்கண்ட சாத்திரங்கள் தோன்றிய காலத்தையடுத்துத் தமிழ்நாட்டில் ஒரு பெரிய பக்தி வெள்ளம்-இறை நினைவு என்ற பேராறு பெருக்கெடுத்து ஓடியது. அக்காலத்துத் தோன்றிய புலவர்கள் பலர் தாங்களும் இவ்வெள்ள மயமாகவே ஆயினர். அவ்வையாரும் இந்த நிலைக்கு விலக்கல்லர். பல காலத்திருந்த பல அவ்வையார் சரித்திரங்களோடு பிணைத்துள்ள செய்திகளையும் பாடல்களையும் சீர்தூக்கி ஆராய்ந்தால் நாம் கருதும் அவ்வைக்கு உரியனவாக மூன்று தனிப் பாடல்களைத் தேர்ந்துகொள்ளலாம். அவற்றின் வரலாறுகள் மட்டும் நாம் குறிப்பிடும் அவ்வையாரோடு தொடர்பு கொண்டனவாய்க் கருதலாம்.

இவற்றுள், ஈதலறம் என்ற ஒரு பாடலை அடுத்துப் பார்ப்போம்; வேறிரண்டு பாடல்களை மட்டும் இங்குக் குறிப்பிட்டுச் செல்வோம். அவ்வையார் தம்மை மதியாத சங்கப் புலவர்களை நோக்கித் தம்முடைய ஐந்துவிரல்களைக் குவித்தும் மூடியும் கொஞ்சம் திறந்தும் சுட்டு விரலொன்றை மட்டும் நீட்டியும் சில குறிகளைக் காட்டி, 'இவற்றிற்குப் பொருள் என்ன?' என்று வினவினர். அவர்கள் அவர் கருத்து அறியாதவர்களாய், ஒரு பெண்ணின் நிலையை வருணித்து ஒரு வெண்பாச் சொல்லினர். அது கேட்ட அவ்வையார், "நீங்கள் சொல்லியது தவறு" என்று, அவர்கள் மனம் புழுங்கி வெட்கம் அடையும்படி,

ஐய மிடுமின் அறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவேனும் அன்னம் இட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே என்றும் உணரவல் லீரேல்
அருவினைகள் ஐந்தும் அறும்.

என்னும் வெண்பாவால் தாம் கருதிய பொருளை வெளியிட்டார்.

ஒருவர் ஊண், கல்வி, வீரம், காட்சி என்பவற்றுக்கு இலக்கணம் கேட்டபோது அவ்வையார் பின்வரும் பாட்டைப் பாடினுர் :

ஒன்ருகக் காண்பதே காட்சி; புலனைந்தும்
வென்ருன்தன் வீரமே வீரமாம்—என்றும்தான்
சாவாமற் கற்பதே கல்வி; தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே ஊண்.

உலக வாழ்க்கையில் சுதந்திரமாக இருந்த அவ்வையார் ஆன்ம சுதந்திரத்திற்காக இப்பாடல் பாடினுர் என்பது பெரிதும் ஏற்கக்கூடியதே.

அவ்வை என்ற பெயரைச் சூழ்ந்து வழங்கும் கதைகளுள் இவை மட்டும் நாம் கருதும் காலத்தில் வாழ்ந்த அவ்வையின் இயல்புக்குப் பொருந்துவனவாகலாம்.

### அவ்வை குறள்

தமிழ்நாட்டில் ஆன்ம நெறியில் ஈடுபட்டோர் அனைவரும் நெடுங்காலமாகப் பயில்கின்ற ஒரு சிறு நூல். வீட்டு நெறிப்பால் எனவும் இது பெயர்பெறும். அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களையும் முப்பால் என்ற மறுபெயருடைய திருக்குறளில் திருவள்ளுவர் பாடி முடித்து, நான்காவது உறுதிப் பொருளாகிய வீட்டைப் பாடாதுவிட்டார்; ஆகவே அவரது தமக்கையாராகிய அவ்வையார் வீட்டுப்பாலைக் குறட்பாவினுலே பாடிச் சேர்த்தார் என்று பெரியோர் சொல்வர். முந்தியது திருக்குறள் ஆனமையால் இந்நூல் ஞானக்குறள் என்று பெயர்

பெற்றது. இவ்வழக்காறு சுவையுடையதாயினும், வரலாற்றுணர்ச்சிக்குப் பொருந்தாது.

அவ்வை குறள் 31 அதிகாரங்களையும் திருக்குறள் போல் அதிகாரத்துக்குப் பத்துப் பாடலாக 310 பாடல்களையும் கொண்டது. வீட்டு நெறிப்பால் திருவருட்பால் தன்பால் என்ற மூன்று பகுப்புக்களை உடையது. இவற்றின் அதிகாரத் தொகை முறையே 10, 10, 11.

**முத்திக் கவ்வையார்சொல் முந்நூற்றுப் பத்தும்உன்**
**சித்தத்தே வைத்துத் தெளி**

என்ற பாடல் அவ்வை குறளின் சிறப்புணர்த்தும். முத்திக்குரியதென்று கூறிய இந்நூலை யோக நூல் என்று சொல்வதுமுண்டு. நாடிதாரணை வாயுதாரணை அங்கிதாரணை முதலான இந்நூற் பகுதிகள் யோக நெறியை உரைப்பதால், இக்கருத்தும் பொருந்துவதாகும்.

அச்சிட்ட அவ்வை குறள் பதிப்புக்களில் இரண்டு பாடல்கள் அவையடக்கம் என்ற தலைப்புடன் காணப்படுகின்றன.

**நல்லார் பிறர்குற்றம் நாடார்; நலம்தெரிந்து**
**கல்லார் பிறர்குற்றம் காண்பரோ?—அல்லாத**
**என்போல்வார் என்னை இகழ்வரோ? என்கவிக்குப்**
**பின்பாரோ காண்பார் பிழை?**

**ஈதல்அறம் தீவினைவிட் டீட்டல் பொருள் எஞ்ஞான்றும்**
**காதல் இருவர் கருத்தொருமித்து—ஆதரவு**
**பட்டதே இன்பம் பரனைநினைந் திம் மூன்றும்**
**விட்டதே பேரின்ப வீடு.**

அவ்வையார் தனிப்பாடலாக இவற்றைப் பாடினாரென்பது வரலாறு. 'தமது தம்பியார் இயற்றிய திருக்குறளில் இல்லாததும் சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையதுமாகிய வீட்டின் உண்மையை விளக்க வேண்டி, முதலில் அப்புருஷார்த்தம் நான்கினையும் சுருக்கி ஈதலறம் என்ற வெண்பாவால் விளக்கி, பின்னர் அவ்வீட்டின்

உண்மையை 310 குறள் வெண்பாவாற் பாடி முடித்து அதற்கு ஞானக்குறள் என்று பெயர் தந்தார்.' இவ்வாறு பாடிய தனிப்பாடலை, பின் வந்தோர் குறளில் எடுத்து அமைத்துக் கொண்டார்களென்று தோற்றுகிறது.

இந்நூலின் காலத்தை அறிவதற்கு நூலகத்துள்ள சில குறிப்புக்கள் நமக்குத் துணைசெய்கின்றன. முதலாவது, நூல் அமைந்துள்ள யாப்பாகிய குறட்பா. திருவள்ளுவர் செய்த திருக்குறளையடுத்துக் குறட்பாவினால் இயன்ற தனி நூல்கள் மிகச் சிலவே. பண்டைய நூல்களில், அருங்கலச் செப்பு ஒன்று மட்டுமே குறட்பாவினால் ஆனது. இது சைன நூல். கி. பி. 1305 இல் உமாபதி சிவாசாரியர் செய்த சித்தாந்த சாத்திரமாகிய திருவருட்பயன் குறட் பாவால் ஆனது. சிறப்பான பொருட் பொலிவும் எளி மையும் கொண்ட சாத்திரமாகிய இச்சிறு நூல் (100 பாடல்), பின்னர் இதை யொட்டிப் பலர் சாத்திர நூல்கள் செய்வ தற்கு வழிகாட்டியாய் அமைந்தது. இம் முன் மாதிரியை யொட்டி எழுந்த நூல்கள் யாவும் சாத்திர நூல்கள்: அவ்வை குறள், வள்ளலார் சாத்திரத்தின் பல பகுதிகள், மறைஞான சம்பந்தர் செய்த சைவசமயநெறி முத்திநிலை பரமோபதேசம் இறைவனூற்பயன் பரமத திமிரபானு பதி பசுபாசத் தொகை என்பன, நித்திய கன்மநெறி, திரு மெய்ஞ்ஞானப் பயன் முதலான பல நூல்கள் குறிப்பிடத் தக்கவை. இவற்றுள் அவ்வை சிவஞான வள்ளலார் தவிர மற்றையோர் நூல்கள் 15 ஆம் நூற்றாண்டின் பின்வந்தவை.

திருவருட்பயன் ஒரு புதிய சம்பிரதாயத்தைத் தோற்றுவித்திருக்கிறது. அதாவது, சமயக்கருத்துக்களை மனத்தில் இருத்தத் துணைபுரிவன குறட்பாக்கள், எழுத் துச் செட்டாய்ப் பொருட் செறிவோடு கருத்தை வெளியிட இவை உதவுவன என்ற மரபு. இந்நிலையோடு ஆராயின் அவ்வை குறள் என்பது உமாபதியார் காலத்துக்குப் பின் எழுந்தது என்பது எளிதில் ஒப்புக்கொள்ளக் கூடியது.

*இந்நூலானது திருமுறைத் தொடர்களை மிகவாக எடுத்தாளுகிறது; இதில் வியப்பில்லை. தேவார திருவாசகங்களால் அல்லவா சைவ வாழ்வு? மற்றும், இதனுள் மெய்கண்ட சாத்திரத் தொடர்கள் அப்படியப்படியே காணப்படுகின்றன. நூற் கருத்துக்களும் அவ்வண்ணமே. எடுத்துக்காட்டாக ஒரு பாடலைக் குறிப்பிடலாம். உமாபதியார் பாடிய கொடிக்கவி 4 ஆம் பாடல்:*

அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும்—நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

*பேசும் எழுத்து பேசா எழுத்து என்பன திருவைந்தெழுத்தின் சூக்குமப் பொருளை உணர்த்துவன; முறையே வகரமும் சிகரமும் (ஊமை எழுத்தோடு பேசும் எழுத்துறில்-ஆமையகத்தினில் அஞ்சும் அடங்கிடும் என்பது திருமந்திரம் 2158). இக்கருத்து அவ்வை குறள் 269ஆம் பாடலில் அப்படியே எடுத்தமைக்கப் பெற்றுள்ளது:*

பேசா எழுத்துடன் பேசும் எழுத்துறில்
ஆசான் பரனந்தி யாம்.

*இந்த ஒற்றுமையை நோக்கினால் அவ்வை குறள் கொடிக்கவிக்குப் பின் வந்தது என்பது நன்கு தெளிவாகும்.*

*இனி, அவ்வை குறளின் மேல் எல்லைக்கு ஒரு வரம்பு உண்டு. மதுரைச் சிவப்பிரகாசர் சிவப்பிரகாசத்துக்கு ஒரு பேருரை எழுதினார். எழுதிய காலம் சகாத்தம் 1410 என நாம் அறிவோம் (கி. பி. 1488). சிவப்பிரகாசம் 80ஆம் பாடல் உரையில், "அப்படியாக உண்மையை அறியப் படாது என்பதற்குப் பிரமாணம் அவ்வையார்:*

நல்லன நூல்பல கற்பினும் காண்பரிதே
எல்லையிலாத சிவம். (206)

*என்பது கண்டு கொள்க" என்று எழுதுகிறார். இதனால் அவ்வை குறள் 1488க்கு முற்பட்டது என்பது தெளிவு.*

அன்றியும், இவ்வுரைகாரர் நெல்லில் உள்ள முளை தவிடு உமி என்பவற்றைப்பற்றி எழுதும்போது, "வீட்டு நெறிப் பாலினும்,

**ஆணவம் பிண்டி அருமாயை தான்உமி**
**காமியம் மூக்கென்று காண்**

என வருவதும் கண்டுகொள்க" என்று எழுதுகிருர். (இப் பாடல் அவ்வை குறளில் காணப்பட்டிலது.)

இதுகாறும் கூறியவற்ருல் அவ்வை குறளானது 1300-25 இல் வாழ்ந்த உமாபதி சிவாசாரியருக்கும் 1488 இல் பேருரை எழுதிய மதுரைச் சிவப்பிரகாசருக்கும் இடையில் தோன்றிய ஒரு சாத்திர நூல் என்பது தெளிவு. சிறப்பான பண்டைய நூல்களை மட்டுமே காட்டுவது இச் சிவப்பிரகாசர் கொண்ட நெறியாதலால், இக்குறள் உமா பதியாரை அடுத்துத்தோன்றி, சிவப்பிரகாசர் தம் காலத்தே சிறிது பழமை பெற்ற பிரமாண நூலாயிற்றென்று கருத லாம்; ஆகவே, 1350 ஆக இருத்தல் கூடும்.

**விநாயகர் அகவல்**

அவ்வையார் பாடிய மற்ருெரு தோத்திர-சாத்திர நூல் விநாயகர் அகவல். இதுபற்றிப் பழமையான ஒரு வரலாறு பின்வருமாறு வழங்குகிறது :

"சுந்தரமூர்த்தி நாயனருடனே கயிலாயத்துக்குப் பரம சிவனுடைய சந்நிதானத்தில் ஆதியுலா அரங்கேற்ற எழுந் தருளும் சேரமான் பெருமாள்நாயனர் அவ்வையாரை அழை யாமல் வந்துவிட்டோமே என்று நினைத்தார். அது, இச் 'சீதக்களப' என்கிற அகவலைக் கொண்டு விநாயகரைப் பூசித்துக்கொண்டிருந்த அவ்வையாருக்குத் தெரிந்து, தாமும் அவர்களுடனே கயிலாயத்திற்குப் போகவேண்டு மென்கிற விருப்பங்கொண்டு துரிதமாகப் பூசை செய்தார். விநாயகர், 'அவ்வையே, நீ கிரமப்படி பூசை செய். அவர் களுக்கு முன்னதாகவே நீ போய்க் கயிலாயம் சேரும்படி

செய்வோம்' என, அவ்வையார் அவ்வாறே பூசைசெய்து முடித்தார். உடனே விநாயகக்கடவுள் தமது துதிக்கையா லெடுத்துவிடக் கயிலாயத் தடைந்தனர். பின்பு வந்து சேர்ந்த சேரமான் பெருமாள் நாயனாரும் அவ்வையாரைக் கண்டு அதிசயப்பட்டார்.'' அச்சமயத்தில் அவ்வையார் சொன்ன கட்டளைக் கலித்துறை :

மதுர மொழிநல் லுமையாள் புதல்வன் மலர்ப்பதத்தை
முதிர நினைய வல்லார்க்கரி தோமுகில் போல்முழங்கி
அதிர நடந்திடும் யானையுந் தேரும் அதன்பின்வரும்
குதிரையுங் காதங் கிழவியும் காதம் குலமன்னனே.

இந்தக் கவி சாதாரண வரலாற்றாராய்ச்சிக்குப் பொருந்துவ தன்று. அன்றியும், வரலாற்றுச் செய்தி ஒன்றையும் விடாது குறிப்பிடும் பெரிய புராண ஆசிரியர் இவ்விரு நாயன்மார் வரலாற்றிலும் இத்தகையதொரு செய்தியை உரைக்க வில்லை.

ஆயினும், இங்குக் கூறிய சீதக்களப என்ற விநாயக ரகவல் இன்று வழக்கில் உள்ளது; 72 அகவற்பா வரிகள் கொண்ட இச்சிறு நூலைச் சைவ மக்கள் இன்று நாள் தோறும் பாராயணம் செய்வதை நியமமாகக் கொண்டிருக் கிறார்கள். இது தோன்றிய நாளாக விநாயக சதுர்த்தி யன்று மக்கள் விநாயகரை முறையாகப் பூசித்து அவர் திருமுன் இப்பாடலை ஓதி வருகிறார்கள். இது விநாயக மூர்த்தியைப் பரம்பொருளாய்க் கொண்டு அப்பெருமான் திருவடியை அடைவதற்கான யோக நெறியைக் கூறு கிறது. ''விநாயகப் பெருமானே, உன் வடிவு முழுமையும் காட்சி தந்தாய். ஐந்தெழுத்தைப் புகட்டிக் குருவாய் வந்து திருவடி தீட்சை செய்து, இரு வினைகளை அறுத்து, யோக நெறியில் என்னைச் செலுத்தி, என்னை அறிவித்து, அருள் வழிகாட்டி, தொண்டர் குழாத்துடன் கூட்டி, தத்துவ நிலை யைத் தந்து, எனை ஆண்டாய், உன் கழலே சரண்'' என்பது பாடலின் பொருளாகும். இங்குக் கூறியுள்ள சமயக் கருத் துக்கள் யாவும் சித்தாந்த சமயக் கருத்துக்கள்; இவை

மெய்கண்ட சாத்திரங்களின் மூலம் உருவாகிய கருத்துக் களே. சாத்திரத் தொடர்பின்றேல் கருத்துக்கள் இவ் வுருவம் பெற்றிரா. ஆதலால் இந்நூல் அச்சாத்திர காலத் துக்குப் பின் வந்ததே யாகும்.

இனி, இவ்வகவலின் மேல் எல்லைக்கு ஒரு வரையறை யும் கிடைக்கிறது. சிவஞான வள்ளல் செய்த 20 சிறு நூல் கள் அடங்கிய தொகுப்பு வள்ளலார் சாத்திரம் என்ற பெயர் உடையது. இதன் இறுதி 7 நூல்கள் செய்யுளும் உரைநடையுமாயுள்ளன. இவற்றுள் 14ஆவது நூல் விநாயகரகவல் வரிகள் பலவற்றை மேற்கோள் காட்டு கிறது. சிவஞானவள்ளல் காலம் 1475-1500 என்பது அவர் வரலாற்று ஆராய்ச்சிக் குறிப்பினுல் தெளிவாகும். எனவே, அவ்வை பாடிய விநாயகரகவல் அக்காலத்துக்கு முந்திய நூல் என்பது தெளிவு.

ஆதலால், குறள் பாடிய அவ்வையாரே இவ்விநாயக ரகவலையும் பாடினுர் என்று சொல்வதில் இடையூறில்லை. குறளின் காலமாகிய 1350 இதற்கும் பொருந்துவதாகும். இதனுற் பெறுவது, அவ்வை என்ற பெயர் தரித்திருந்த மூதாட்டியாருள் ஒருவர், 14ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் சாத்திர அறிவில் வல்ல புலவராய் இருந்து, அவ்வை ஞானக்குறள் விநாயகரகவல் என்ற இரு நூல் களையும் பாடினுர் என்பது.

அவ்வை பற்றி வழங்கும் கதைகள் எண்ணற்றன. இவை யாவும் கி. பி. முதல் நூற்றுண்டு முதல் 14ஆம் நூற்றுண்டுவரை வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த பல் வேறு அவ்வையார் (மக்களின் அன்புக்கும் மரியாதைக்கும் பாத்திரமாயிருந்த பல்வேறு மூதாட்டியர் வாழ்க்கை) பற்றி எழுந்த கதைகளாகும். இவற்றுள் உண்மைச் சம்பவங் களும் இருக்கும், தனிப் பாடலைக் கண்டு பின் வந்தோர் புனைந்த கற்பனைச் சம்பவங்களும் இருக்கும். இவை யாவும் ஒருவருக்கே ஏற்றிக் கூறுதல் பொருந்தாது.

ஹரதத்த சிவாசாரியர் வரலாற்ரேடு தொடர்புடைய ஒரு கதையும் இங்குக் கருதத் தக்கது. இவர் 14ஆம் நூற்ருண்டில் கஞ்சனூரில் வாழ்ந்த ஒரு பெரியார். வைணவ அந்தண மரபில் பிறந்து சிவ பரத்துவத்தை நிலேநாட்டிப் பல அற்புதங்களைச் செய்தார் என்பது இவர் சரித்திரம். இவருடைய மரணகாலத்தில் கயிலாயத்திலிருந்து ஒரு தெய்வ விமானம் வந்து இவரை ஏற்றிக்கொண்டு கயிலாயம் சென்றது. அவ்விதம் இவர் சென்றபோது இவர் தம் அந்தணர் வீதியில் இருந்த பதினன்குவீட்டு அந்தணர்களையும் குடும்பத்தோடு விமானத்தில் ஏற்றிக்கொண்டு சென்ருர். ஆனல் பதினன்காம் வீட்டில் இருந்த ஒரு கிழவி மட்டும் விமானத்தில் ஏருமல், "நான் தினந்தோறும் நம் கற்பக விநாயகப் பெருமானுக்கு மோதக நிவேதனம் செய்து வருகிறேன். இன்று இந்நேரம் நிவேதனத்துக்கான மோதகம் அடுப்பில் வெந்துகொண்டிருக்கிறது. அது வெந்து பெருமானுக்கு நிவேதித்த பிறகுதான் நான் வர முடியும். அவசரமாயிருந்தால் நீங்கள் மட்டும் போகலாம். நான் இப்போது வரவில்லே' என்று சொல்லி அனுப்பிவிட்டாள். விமானம் போய்விட்டது. கிழவி மோதகம் வெந்ததும் எடுத்துக்கொண்டு கோயிலுக்குப் புறப்பட்டாள். அவளுடைய மெய்யன்புக்கு மகிழ்ந்த பெருமான், அவளுக்குத் திருவருள் செய்ய எண்ணி, கோயிலுக்குத் தென்புறமாக அவள் வரும் வழியில் எழுந்தருளிவந்து அவள் தந்த மோதகத்தை நைவேத்தியம் கொண்டருளினர். கயிலாயம் செல்ல வேண்டும் என்ற அவளுடைய விருப்பத்தையும் உணர்ந்து தம் துதிக்கையால் அவளைத் தூக்கி மற்றவர்களுக்கு முன்னதாகச் சேரும்படி கயிலாயத்தில் விட்டார். இது நடந்த தினம் தை மாதம் சுக்கில பஞ்சமி திதி. இன்னும் இவ்வூரார் கற்பக விநாயகருக்கு இத்தினத்தில் மோதக நைவேத்தியம் செய்து வருகிருர்கள். கற்பக விநாயகர் ஆலயமும் தென்புறம் கோயிலுக்குச் செல்லும் வழியில் தனியே உள்ளது.

அவ்வையார் வரலாறும் இக்கிழவி வரலாறும் ஒன்றே என்று கருதத் தடையில்லை. நம் அவ்வையார் கஞ்சனூரில் வாழ்ந்தாரா? அவர் அந்தணர் குலமா?—என்பன முடிவு சொல்ல முடியாது. ஆயினும், இக்கிழவி 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹரதத்தர் காலத்தில் வாழ்ந்தார் என்பதனால், 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து விநாயகரகவலை அவ்வையார் பாடினார் என்று நாம் இங்குச் செய்கிற முடிவுக்கு இக்கதையும் துணைசெய்கிறது.

## பட்டினத்தார்

தமிழ் நாட்டில் பிச்சை எடுப்போர்கூட சில பக்தருடைய அருட்பாசுரங்களைப் பாடிப் பிச்சை எடுத்து வருகின்றார்கள். இந்தப் பக்தர்கள், பட்டினத்தார், சில சித்தர்கள், அருணகிரிநாதர், தாயுமானவர் என்போர். இவர்களில் பட்டினத்தார் தலையாயவர்.

பட்டினத்தார் என்று கூறும்போது, தமிழறிஞர்கள் பட்டினத்தார் இருவரை ஒப்புக்கொள்வார்கள். முதல் பட்டினத்தார், நம்பியாண்டார் நம்பியால் குறிப்பிடப்பட்டவர்; நம்பி காலம் பத்தாம் நூற்றாண்டின் இறுதி. இவர் பாடிய பாடல்களில் ஐந்து பிரபந்தங்கள் பதினொராவது சைவத் திருமுறையுள் தொகுக்கப் பெற்றுள்ளன. அவை கோயில் நான்மணி மாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபது என்பன. இந் நூல்கள், சொல்லழகும் பொருட் சுவையும் நிரம்பிப் பக்திச் சுவை நிறைந்து சைவ சாத்திர விளக்கங்களைக் கொண்டு, அடியவரும் புலவரும் போற்றுகின்ற இலக்கியங்களாய் அமைந்துள்ளன.

இந்தப் பிரபந்தங்களில் இப் பட்டினத்தார் வரகுண பாண்டியனைக் குறிப்பிடுகிறார். அப்பாண்டியன் காலம் கி. பி. 9ஆம் நூற்றாண்டாகும். ஆதலால் இப்பட்டினத்தார்

9 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னும் நம்பியாண்டார் நம்பியின் காலமாகிய 10ஆம் நூற்றாண்டின் இறுதிக்கு முன்னும், அதாவது 10ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், வாழ்ந்தவராகிறார்.

இப் பிரபந்தங்கள் அல்லாமல், பட்டினத்தடிகள் பெயரால் "பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல் திரட்டு" என்ற ஒரு பாடல் தொகுதி வழக்கத்தில் உள்ளது. இப் பாடல்களைப் பாடியவர் முற்கூறிய பட்டினத்தார் அல்லர் என்றும், இவை பட்டினத்தார் என்ற பெயரோடு சில நூற்றாண்டுகளின் பின்னர் வாழ்ந்த மற்றொரு பட்டினத்தார் பாடியவை என்றும் அறிஞர் கருதுகின்றனர். கருதுவதற்குக் காரணம் இப்பாடல்களின் எளிய நடையும் வழக்குச் சொற்களின் மிகுதியும்; இவற்றைப் பின்னர் ஆராயலாம். இங்கு, பட்டினத்துப் பிள்ளையார் வரலாற்றை முதலாவதாகக் கருதுவோம்.

பட்டினத்துப் பிள்ளையார் சரித்திரம் மூவரால் எழுதப் பெற்றிருக்கிறது. பிற்காலத்துப் பெரியார் ஒருவர் முதன் முதலில் பட்டினத்துப் பிள்ளையார் புராணம் என்ற ஒரு நூல் எழுதினார். இதன் பின்னர் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த புலவரான தொழுவூர் வேலாயுத முதலியார் திருவெண்காட்டடிகள் சரித்திரம் என ஒரு வசனநூல் எழுதி வெளியிட்டார். இந்த இரண்டுமே பட்டினத்தார் வரலாற்றுக்கு ஆதாரங்கள். இவற்றின் பின்னர் தண்டபாணி சுவாமிகள் தாம் பாடிய புலவர் புராணத்தில் பல புதிய கதைகளையும் சேர்த்துப் பட்டினத்தார் சரித்திரமாகப் பாடிவைத்தார்.

இக் கதைகளை அறியப்புகுமுன் ஒரு செய்தி நினைவில் இருக்கவேண்டும். பட்டினத்தார் சரித்திரம் என்று வழங்குவதெல்லாம் முற்காலப் பட்டினத்தாரைச் சேருமா, பிற்காலத்துப் பட்டினத்தாரைச் சேருமா? அல்லது இருவருக்கும் உரிய கதைகளா-என்பதொன்றும் துணிந்து

சொல்ல முடியாமல் இருக்கிறது. ஆகவே, இனிக் கூறப் போகும் சரித்திரங்கள் தொடர்பான ஒரே சரித்திரமாய் இருப்பினும், இவ்விருவருக்குமுரிய கதைகள் கொஞ்சம் கொஞ்சம் சேர்ந்து, ஒருவேளை வேறு கதைகளும் கலந்து, இந்த உருவம் பெற்றிருக்கின்றன என்று நாம் உணர்தல் வேண்டும்.

பட்டினத்தார் புராணம் பாடியவர் பெயரோ காலமோ தெரியவில்லை. இது பூம்புகார்ச் சருக்கம், ஆட்கொண்ட சருக்கம், துறவறச் சருக்கம் என்ற மூன்று சருக்கங்களை உடையது. திருவெண்காடர் புகார் நகரில் வணிகர் மரபில் தோன்றியவர். பட்டினத்துப் பிள்ளை என்பது அவர் குடிப் பெயர். திருவெண்காட்டில் வாழ்ந்தார். பக்தி நிரம்பியவர். எண்ணற்ற மரக்கலங்கள் அவருக்குச் செல்வத்தைக் கொணர்ந்து குவித்தன. அந் நாளில் திருவிடைமருதூரில் இருந்த சிவ சருமர் என்ற சிவ வேதியர் மணம் முடிக்கப் பொருளின்றி வருந்தி இருந்தார். இறைவன் ஓர் இளம் பிள்ளையாக அவர் வசம் வந்து தம்மை விலைக்கு விற்றுப் பொன் பெற்று மணம் செய்து கொள்ளுமாறு பணித்தார். அப் பிள்ளையைத் திருவெண்காடர் ஆயிரம் பொன் கொடுத்து விலைக்குப் பெற்றுச் சென்றார். சென்று இப் பிள்ளையைச் சொந்தப் பிள்ளையாகவே கருதி வளர்த்து வந்தார். மருதவாணர் என்ற அப் பிள்ளையும் இறைவன் திருவுரு ஆதலால், திருவெண்காடர் இல்லத்தில் அனேக அற்புதங்களை நிகழ்த்தினர். அவர் செய்த அற்புதங்களைக் கண்ட திருவெண்காடர் அவரை இறைவன் வடிவமே என்று கருதி மிக்க பணிவோடு நடந்து வந்தார். அவர் திருவெண்காடருக்கு உலக வாழ்க்கையின் பற்றை ஒழிப்பதற்காகச் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. ஆகவே ஒரு நாள் மருதவாணர் காதற்ற ஊசியைச் சரட்டோடு சேர்த்து ஒரு பட்டுத் துணியில் பொதிந்து அழகான பெட்டியில் வைத்து முத்திரையிட்டு, திருவெண்காடரிடம்

கொடுக்கும்படி தம் தாயாகிய இவர் மனைவியிடம் தந்து மறைந்தார். மருதவாணரைக் காணாத திருவெண்காடர் அவர் தந்த பெட்டியைப் பெற்றுத் திறந்து பார்த்து, அதி லுள்ள காதற்ற ஊசியும் சரடும் கண்டு, அப்போதே தம் மிடத்தில் பரஞானம் விளங்கப் பெற்று அனைத்தையும் துறந்தார். இவரிடம் அமைச்சராயிருந்த சேந்தனார் எவ் வளவோ சொல்லியும் பயனில்லை. துறந்து கோவணாண்டி யான பட்டினத்தார் சுடுகாட்டில் சாம்பர்க் குவியலின் மீத மர்ந்திருக்க, அந்நாட்டரசன் இவரைக் கண்டு பணிந்து, "இத்துறவடைந்து நீர் பெற்றது என்ன?" என்று கேட்க வும், இவர், "நீ நிற்க யாம் இருக்க" என்று எளிதாய் மறு மொழி கூறினார். சேந்தனார் வந்து வணங்கித் தமக்கு என்ன கட்டளை என்று கேட்க, அடிகள் "உன் மனம் போல் செய்க" என்று கூறினார்.

பின்னர் இவர் பல இடங்களில் பிச்சையேற்று உண்டு வரும் நாளில், இவர் செய்கை தங்களுக்கு அவமானம் தரு கிறது என்று கருதிய உறவினர் சிலர் இவரை கொல்லக் கருதி நஞ்சூட்டிய நெய்யப்பம் ஒன்றை இவர் தமக்கை மூலம் இவரிடம் உண்ணக் கொடுத்தனர். உண்மை உணர்ந்த அடிகள் 'தன்வினை தன்னைச் சுடும் ஓட்டப்பம் வீட்டைச் சுடும்' என்று சொல்லி அப்பத்தைக் கூரையில் செருகவே, வீடும் ஊரும் பற்றி எரிந்தன.

சில நாள் சென்று இவர் தாயார் காலமானபோது இவர் அங்கு வந்து தாய் உடலை மயானத்தில் கிடத்தித் தம் பாடலாலேயே உடல் தகனம் ஆகும்படி செய்தார். பின்னர் அங்குப் பலருக்கும் உபதேசம் செய்து இருந்து விட்டுத் திருவிடைமருதூர் அடைந்தார். அங்கு, சிவபெரு மானே தம் தாகத்துக்கு நீர் கொண்டு வந்து தரப் பெற்றார். சிவபெருமான் திருவடி தம் மார்பிலே தீண்டவும் பெற்றார். பின்னர் மதுரையை அடைந்து எம்பெருமானை வணங்கி மீண்டும் திருவெண்காடு அடைந்தார்.

[இந்த இடத்தில் அடிகள் வாழ்க்கையில் திருவிசைப்பா திருப்பல்லாண்டு பாடிய சேந்தனர் வரலாறு தொடர்கிறது. இவ் வரலாறு பிரசித்தமானது. நாம் இங்குக் கருதும் பட்டினத்தார் வாழ்க்கையில் இது இடம் பெறுது.]

பின்னர் இவர் சிதம்பரம் அடைந்து பல பாடல்கள் பாடி வணங்கி, தில்லை நகர் பாதிரிப் புலியூர் அதிகை வெண்ணெய் நல்லூர் அண்ணுமலை பணிந்து, காஞ்சி அடைந்து அங்குப் பல நாள் பல பாடல்கள் பாடி வழிபட்டு இருக்கும் நாளில், ஒரு நாள் நள்ளிரவில் ஒரு வீட்டு வாயிலை அடைந்து பிச்சை கேட்கவே, வீட்டுக்குடையவன் இவரைக் கள்ளனென்று கருதி நையப் புடைத்தான். பார்த்த அயல் வீட்டவன் இவரைக் கண்டு அடிகளாயிற்றே என்று உணர்ந்து இவரைப் பணியுமாறு அவனுக்கு உபதேசித்தான். பின்னர் இவர் ஆலங்காடு காளத்தி வணங்கி, ஒற்றியூர் அடைந்து வழிபட்டுக் கொண்டிருந்த சமயம், ஒரு நாள் கடற்கரை மணற்குவியலில் விளையாடிய சிறுவரோடு தாமும் விளையாடிய போது, ஒரு மணற் கூண்டில் புதைந்து சிவலிங்க வடிவமாக முளைத்தார். அவ்வூரினரும், காவிரிப்பூம்பட்டினம் வரையுள்ள பிற ஊரினரும், இச் செய்தி கேட்டு ஆச்சரியமடைந்து, இவர் திருமேனிக்கு ஆலயம் எடுத்துப் பூசை முதலியன குறைவற நடத்தி வந்தனர்.

திருவெண்காட்டடிகள் சரித்திரம் பின்வருமாறு கூறும். இவர் தந்தை சிவநேசர், தாய் ஞானகலை யம்மை. இளமையில் தந்தை இறக்கவே தாய் நன்முறையில் பிள்ளையைப் பேணி வந்தார். ஒரு நாள் இளம் பிள்ளையாகிய திருவெண்காடர் சிவ பூசை செய்ய எண்ணிய போது, திருவிடைமருதூரில் இருந்த சிவவேதியர் வந்து இவருக்குத் தீட்சை செய்து பூசை செய்ய ஆன்மார்த்த லிங்கத்தையும் அளித்தார். குருவுக்குத் தட்சிணை கொடுக்கப் பொருளின்றி

இவர் வருந்திய போது இறைவனருளால் அளவற்ற செல்வம் பெற்றுக் குரு தட்சிணை கொடுத்தார். பின் சிவ கலையம்மை என்பவரை மணந்தார்.

அந்நாள் சிவபிரான் திருவிடைமருதூரில் சிவ பக்திச் செல்வராய் வறுமையுற்றிருந்த சிவசருமர் சுசீலை என்ற இருவரிடமும் ஒரு தெய்வக் குழந்தையாகத் தோன்றி, தம்மைக் கொண்டு போய் திருவெண்காடரிடம் பொருளுக்கு விற்று வறுமைப் பிணியை போக்கிக் கொள்ளு மாறு கட்டளையிட்டார். அவ்வாறே தம்மிடம் வந்த குழந் தையைத் திருவெண்காடர் பெற்று மருதவாணர் என்ற பெயரிட்டு வளர்த்து வந்தார். குழந்தைப் பருவத்தில் மருத வாணரிடம் தெய்வத் தன்மை விளங்கிற்று. தீவாந்தர வியாபாரம் எல்லாம் செய்து கப்பலில் வறட்டிகள் நிரப்பி அவற்றின் மூலம் மாணிக்கம் வெளிப்படச் செய்து திருவெண் காடருக்குப் பெரும் செல்வம் வருமாறு செய்தார். திருவெண் காடருடைய பக்குவம் முதலியவை நோக்கி, ஒரு பெட்டியில் 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என் றெழுதிய ஓலை நறுக்கும் காதற்ற ஊசியும் வைத்துத் திருவெண்காடரிடம் தருமாறு கொடுத்து மறைந்து விட் டார். பிள்ளை காணாது தேடிய திருவெண்காடர், அப் பெட்டியைப் பெற்றுத் திறந்து பார்த்தவுடனேயே உண்மை ஞானம் கைவரப் பெற்று, அக்கணமே பாரனைத்தும் பொய் யென்று துறந்தார். மெய்ஞ்ஞான உணர்ச்சி மிகுந்த பாடல்கள் அவரிடமிருந்து மழை வெள்ளம் போலப் பிர வாகம் எடுத்து வரத் தொடங்கின.

> வாதுற்ற திண்புயர் அண்ணு மலையர் மலர்ப்பதத்தைப்
> போதுற்ற போதும் புகலுநெஞ்சே இந்தப் பூதலத்தில்
> தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்
> காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே

என்பது முதலான பாடல்கள் பாடினர். இவருடைய உத்தரவின்படி செல்வத்தைத் தருமம் செய்த சேந்தனை

*அரசன் சிறை செய்து பின்னர் இவர் பெருமை உணர்ந்தான். சில நாளில் இவருடைய தாய் இறந்தபோது, இவர்*

**முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே**
**அந்திபக லாச்சிவனை ஆதரித்துத்—தொந்தி**
**சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ**
**எரியத் தழல்மூட்டு வேன்**

*என்பது முதலான பாடல்கள் பாடித் தாய் உடலை ஞானக்கினியால் தகனம் செய்தார். பின்னர் திருவிடைமருதூரில் தங்கி அங்கிருந்து பல தலங்களும் சென்று தரிசித்தார். அக்காலத்தில் இவர் பாடிய பாடல்களும் நிகழ்த்திய அற்புதங்களும் மிகப் பல. இவரிடம் அருள் பெற்ற ஒரு வாலிபன் மணமான பின் தெய்வ கதியாய் இறந்தது அறிந்து இவர் பாடிய பாடல் ஒன்று மிகவும் உருக்கமானது:*

**வடிவந் தானும் வாலிபம்: மகளுந் தாயும் மாமியும்**
**படிகொண்டாரு மூரிலே பழிகொண்டாடல் நீதியோ?**
**குடிவந்தானும் ஏழையோ? குயவன்தானுங் கூழையோ**
**நடுநின்றானும் வீணனோ நகரஞ் சூறை யானதே!**

*இவர் உஞ்சேனை மாகாளம் என்ற ஊரை அடைந்தபோது அங்கு நிகழ்ந்த செய்திகளைப் பத்திரகிரியார் வரலாற்றில் காணலாம். அங்கிருந்து மீண்டும் இவர் திருவிடைமருதூரில் தங்கிப் பின் திருவெண்காடு அடைந்து பின்னும் பல தலங்கள் சுற்றிக் காஞ்சி அடைந்து காமாட்சி அம்மையார் கொடுத்த உணவை உண்டு பின்னர்த் திருவொற்றியூர் அடைந்தார். நகரம் குறுகிய உடனே,*

**கண்டங் கரியதாம் கண்மூன் றுடையதாம்**
**அண்டத்தைப் போல அழகியதாம்—தொண்டர்**
**உடலுருகத் தித்திக்கும் ஓங்கு புகழ் ஒற்றிக்**
**கடலருகே நிற்கும் கரும்பு**

*என்ற வெண்பாப் பாடிப் பேரானந்த உணர்வு பெற்று, பின்னர் எதிர்ப்பட்ட சராசரம் முழுமையும் குருலிங்க சங்கமமாகக் கண்டு, மனம் கரைந்து உருகி,*

வாவியெல்லாம் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு
காவனங்க ளெல்லாம் கணநாதர்—பூவுலகில்
ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர்
ஓதுந் திருவொற்றி யூர்

*என்ற பாடலைப் பாடினார். திருவீதியை அடைந்து உள்ளத்தில் எழுந்த அன்பு மிகுதியால்,*

ஓடுவிழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்கு
இடுமருந்து யான்அறிந்து கொண்டேன்—கடுஅருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவிற்
போவார் அடியிற் பொடி.

சுடப்படு வாரறியார் புரமூன்றையுஞ் சுட்ட பிரான்
திடப்படு மாமதில் தென்னொற்றியூரன் தெருப்பரப்பில்
நடப்பவர் பொற்பாதம் நம்தலைமேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மனமே விதியேட்டைக் கிழிப்பதுவே

*என்ற பாடல்களைப் பாடிப் பரவச நிலையை அடைந்தார். பின் தெளிந்து அங்கிருந்து பல பாடல்கள் பாடி, கடற்கரை சென்று பசு மேய்த்த சிறுவர்களோடு பல நாள் விளையாடி இருந்து, ஒரு தடவை அவர்கள் தம்மை மணலிலே புதைத்த பொழுது, தம் உருக்கரந்து சிவலிங்க வடிவமாக முளைத்து நின்றார்.*

*தண்டபாணி சுவாமிகள் செய்த புலவர் புராணத்தில் பின்னும் சில செய்திகள் காணப்படும். திருவெண்காடர் பாணர் குலத்தவரால் மந்திரோபதேசம் செய்யப்பெற்றார். பின்னர் புதல்வன் இல்லாதிருந்து திருவிடைமருதூர் வேதியரிடம் புதல்வனை வாங்கிக்கொண்டார். அப்பிள்ளை அபார லாபம் சம்பாதித்துத் தந்தும், ஒருமுறை பொருளையெல்லாம் போக்கி விட்டமையால் அவரைச் சிறையிலடைத்தார்.*

பிள்ளையோ திருவெண்காடர் மனைவியான சிவகலையம்மை யாரிடம் மட்டும் தமது தெய்வக் கோலத்தைக் காட்டி மறைந்தார். பிள்ளை யிழந்த தாயும் சில நாளில் கால மானுள். ஆனுல் திருவெண்காடருக்குச் செல்வ மயக்கம் நீங்கவில்லை. ஒருமுறை அவர் கப்பலேறிப் பொருள் தேடச் சென்றிருந்தபோது குருவாகிய பாணர் தம் மனைவியிடம் காதற்ற ஊசிகளைக் காட்டி, "போங்கால் இவை கூட வாரா" என்றொரு சீட்டெழுதி வைத்துத் திருவெண்காட ரிடம் தரும்படி தம் மனைவியிடம் கொடுத்துச் சிவபத மடைந்தார். வந்த திருவெண்காடர் ஊசிகளையும் சீட்டை யும் கண்டு உடனே மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்ருர்.

பின்னர் சிவதல யாத்திரைசெய்து வரும்போது சிவ பிரான் ஆசாரியனுருவோடு தோன்றி இவர் கையில் ஒரு பேய்க்கரும்பைக் கொடுத்து, "இது எந்தத் தலத்தில் தித் திக்குமோ அதுவே உனக்கு இறப்பும் பிறப்புமில்லாச் சிவ கதி அளிக்கும் தலம்" என்று சொல்லி மறைந்தார். கரும்பு சிறிதும் வாடாமல் உலராமல் இருந்தது. எல்லாத் தலங்களி லும் கசந்த இக்கரும்பு, ஒற்றியூரில் தித்தித்தது கண்டு, அதுவே தாம் முத்தியடையும் தலம் என்று உணர்ந்து, அங்குக் கடற்கரையில் இவர் சிவலிங்கத் திருமேனியானுர்.

பட்டினத்தார் உருவப் படங்களில் அவர் கையில் ஒரு கரும்பு காணப்படும். "கண்டங்கரியதாம்" என்று திரு வொற்றியூரில் அவர் பாடிய வெண்பாவில் "ஒற்றியூர்க் கடலருகே நிற்கும் கரும்பு" என்று சிவபெருமானை அவர் கரும்பாக உருவகித்தமையை உணராது, பிற்காலத்தில் இப் பேய்க் கரும்பு கதை கட்டி விடப்பட்டதாகும்.

இவ்வரலாறுகளுள் சேந்தனுர்பற்றிய செய்திகளை நாம் விரித்துச் சொல்லவில்லை. காரணம், இச்சேந்தனுர் திரு விசைப்பாவும் தில்லைத் திருப்பல்லாண்டும் பாடியவர்

என்று கருதப்படுகிறார். தொடக்கத்தில் கூறியவாறு பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்து பதினோராந் திருமுறைப் பிரபந்தங்கள் பாடிய முதற்பட்டினத்தாருக்குச் சம காலத்தவர். நாம் இங்குக் கருதும் காலப் பகுதிக்குப் புறம்பானவர்; நெடுநாள் முந்தியவர்.

பட்டினத்தார் வாழ்க்கையோடு தொடர்புடைய மற்றொரு பெரியார் பத்திரகிரியார். இவர் வரலாறு இதன் பின் தனியே கூறப்பெற்றுள்ளது. இவர் காலம் ஏறக்குறைய 1400 ஆகலாம் என்பதை அங்குக் காண்போம். ஆகவே இப்பட்டினத்தார் காலமும் அதுவேயாகும். இப்பட்டினத்தார் பின்வந்தவர் அல்லது இரண்டாம் பட்டினத்தார் என்று நாம் கூறலாம்.

பட்டினத்தார் பாடியனவாக அவர் புராணம் கூறும் முதற் குறிப்புடைய பல பாடல்கள் இன்று கிடைக்கவில்லை. 'தங்களைக்கேட்டும் பிறிந்திலம்', 'அருள் கூர்', 'வையமுய்ய', 'பன்னக வாடகப் பொற்பாதம்' என்பன அப்பாடல்கள். அன்றியும் 'மெய் நாட்டோர்' என்ற முதற் குறிப்பைக் கொண்ட பாட்டை முதலாகவுடைய மாலையொன்று அவர் செய்ததாகப் புராணம்கூறும். இதுவும் இன்னும் கிடைக்கவில்லை. இவை யாவும் புராணகாலத்திலேயே மறைந்தன போலும்.

**பாடல் திரட்டு:** பதினோராந் திருமுறைப் பிரபந்தங்கள் முதற்பட்டினத்தார் செய்தவை. அவற்றை இங்கு ஆராயவேண்டியதில்லை. மற்று, பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு இரண்டாம் பட்டினத்தார் செய்தது; இத்திரட்டு இங்கு ஆராய்வதற்குரியது.

பாடல் தொகுதியுள் பலவகைப் பாடல்கள் உள்ளன. கோயில்திருவகவல் என்ற பெயரில் இங்கு மூன்று அகவற் பாக்கள் உள்ளன. இவை முறையே 47, 38, 52 அடிகளை உடையன. முதல் அகவல் பிறவியைப் பழித்து, 'செம்பொன்

அம்பலவனை நினைமின் மனனே' என்று உபதேசிப்பது. இரண்டாவது யாக்கையைப் பழித்து, 'பெருமானே, இவ் யாக்கை நிலையற்றது. எனக்கு உனது ஆனந்தத் தாண்டவம் காட்டி ஆட்கொள்க' என்று வேண்டுவது. மூன்ருவது அகவல், 'இறைவனே, இவ்வளவு மாசு பொதிந்த உடலைவிட்டு என்னுயிர் பிரிந்துவரும் காலத்து நான் உனக்கு அடைக்கலம்' எனக் கூறுவது.

நான்காவது அகவல், கச்சித்திருவகவல் எனப் பெயர் பெறும். "மக்களே, போக வாழ்வை விடுங்கள். பச்சிலையிடினும் பத்தர்க் கிரங்கி மெச்சிச் சிவபத வீடருள்பவனை இணையடி இறைஞ்சுமின்" என்று அறிவுறுத்துவது. இதற்கடுத்த பகுதி திருவேகம்பமாலை. கச்சி ஏகாம்பரநாதரைப் பாடல் தோறும் 'கச்சி ஏகம்பனே' என்று விளித்துத் துதிக்கும் 40 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் கொண்டது. யாவும் மிக்க எளிமையான பாடல்கள்; எனினும் சிறப்பான பொருள் பொதிந்தவை.

இவற்றின் பின்னர், தில்லை வெண்காடு செங்கோடு ஒற்றியூர் இடைமருது கழுக்குன்றம் காளத்தி கயிலாயம் மதுரை ஆரூர் காஞ்சி கச்சிக்காரோணம் இரும்பையூர் ஐயாறு குற்ருலம் முதலிய தலங்களைப்பற்றிய பாடல்கள் உள்ளன. இவை கட்டளைக் கலித்துறை, விருத்தம் வெண்பா முதலான பலவகைப் பாக்கள். பொது என்ற தலைப்பில் பல பாடல்களும், தாயாருக்குத் தகனம் செய்த போது பாடிய பாடல்களும் உள்ளன. மொத்தம் 150 பாடல்கள். இப்பாடல்கள் அனைத்திலும் இவர் உலக வாழ்க்கையின் நிலையாமை, அடியவர் சிறப்பு, பக்தியின் சாதனை, அருளின் அனுபவம், போலிக் கிரியைகளின் பழிப்பு, உண்மையான அன்பின் உயர்வு ஆகியவற்றை மிகச் சிறப்பாகப்பாடியிருக்கிருர். இப்பாடல்கள் திருமுறைகளின் பிழிவு என்று சொல்வது மிகையாகாது. சிறந்த கருத்துக்கள், எளிய கற்பனை, சொற்பொருள் அடுக்கு, நன்கு உணரத்தக்க

உவமை உருவகம் முதலியவற்ருல் இப்பாடல்கள் கற்போர் மனத்திலும் கல்லாதோர் நாவிலும் எளிதில் நின்று நிலவுகின்றன. சாத்திரங்களின் நுண் பொருளும், பதி, பசு, பாச உண்மைகளும், முடிவான நிலேயும், மிகவும் எளிமையாக இங்குச் சொல்லப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாட்டும் ஒரு மாணிக்கம்போல் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் சிறப்பு என்ருலும் தில்லே காளத்திபற்றிய பாடல்கள் மிகவும் சிறப்பு. உள்ளத்தில் இறைவன் உறைகின்ற முறையை உணர்ந்த பெருமிதம் பாடல்கள் தோறும் காணப்படும். காதற்ற ஊசியை மூன்று பாடல்களில் குறிப்பிடுகிருர். சிறப்பாக இரண்டொரு பாடல்களேயேனும் இங்குக் குறிப்பிட முடியும். இவர் உலகுக்குச் செய்கிற உபதேசம்:

ஒன்றென்றிரு தெய்வம்; உண்டென்றிரு; உயர்செல்வ மெல்லாம்
அன்றென்றிரு; பசித்தோர் முகம்பார்; நல் லறமும்நட்பும்
நன்றென்றிரு; நடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென்றிரு; மனமே, உனக்கே உப தேசமிதே.

போலிக்கிரியைகளேப்பற்றிய பழிப்பு:

எட்டுத்திசையும் பதினாறு கோணமும் எங்குமொன்ருய்
முட்டித் ததும்பி முளேத்தோங்கும் சோதியை மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர்; கருத்தில்வையார்
பட்டப் பகலே இரவென்று கூறிடும் பாதகரே.

உண்மை ஞானம் தெளிந்தவர் தோற்றம்:

பேய் போல் திரிந்து பிணம் போற்கிடந்து இட்ட பிச்சை யெலாம்
நாய் போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கையரைத்
தாய் போல் கருதித் தமர்போல் அனேவர்க்குந் தாழ்மை சொல்லிச்
சேய்போலிருப்பர் கண்டீர்; உண்மைஞானந் தெளிந்தவரே.

**கண்ணுதல் இருக்குமிடம் :**

**சொல்லினும், சொல்லின் முடிவிலும், வேதச் சுருதியிலும்,**
**அல்லிலும், மாசற்ற ஆகாயந்தன்னிலும், ஆய்ந்து**
**விட்டோர்**
**இல்லினும், அன்ப ரிடத்திலும், ஈசர் இருக்கு மிடம்;**
**கல்லிலும் செம்பிலு மோ இருப்பான்? எங்கள் கண்ணுதலே**

இப்பாடலைக் கேட்டு இதன் நயம் உணராமல் பட்டினத்தார் உருவ வழிபாட்டைக் கண்டிப்பவர் எனத் தவருகப் பிரசாரம் செய்வோரும் உளர். பொதுவாக இத்தனிப் பாடல்களே 'பட்டினத்துப் பிள்ளையார் பாடல்திரட்டு' என்று பழமையாக அச்சிட்டு வழங்கும் தொகுப்பில் காணப்படும். இவை இரண்டாம் பட்டினத்தார் பாடியவை என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வர்.

ஆனல் அனேகர் வேறு பல பகுதிகளையும் பட்டினத்தார் பாடல்கள் என்று சேர்த்து அச்சிட்டிருக்கிருர்கள். அப்பகுதிகள் பின்வருவன : முதல்வன் முறையீடு, அருட் புலம்பல், இறந்தகாலத்திரங்கல். இவை முறையே 72, 117, 17 கண்ணிகள் கொண்டவை. அருட்புலம்பலின் கடைசிக் கண்ணியில் இது ஒப்பாரி என்றே ஆசிரியர் சொல்லுகிருர். அடுத்து, நெஞ்சொடு புலம்பல் 37 கலி விருத்தம்; பல பழமொழிகள் இதனுள் பயில்கின்றன. பூரணமாலை, பூரணமே என்று முடிகிற 102 கண்ணிகள். இறுதிக் கண்ணி பலன் கூறுகிறது :

**பூரண மாலைதனைப் புத்தியுடன் ஓதினர்க்குத்**
**தாரணியில் ஞானம் தழைப்பாய் பூரணமே.**

நெஞ்சொடு மகிழ்தல் 31 கண்ணிகள். இவற்றை யடுத்து, உடற்கூற்று வண்ணம் என்ற ஒரு சந்தக் குழிப்பு பட்டினத்தார் பாடியதென்றே வழங்கி வருகிறது.

முதல்வன் முறையீடு கன்னிவனநாதரை முன்னிலை யாக்கி முறையிடுகிறது. அருட்புலம்பல் திருவருட் செயலை

விரித்துரைக்கிறது. இறந்த காலத் திரங்கல் சென்ற காலத்தில் தாம் எவ்வாறு நெறியல்லா நெறிபற்றிக் கெட்டார் என்பது கூறுகிறது. நெஞ்சொடு புலம்பல் நெஞ்சத்தையே முன்னிலையாக்கி அதன் இழிவைக் கூறுகிறது. பூரணமாலை பூரணப் பொருளாகிய கடவுளை முன்னிலைப்படுத்தி யோக நெறி ஞான நெறிகளைச் சாங்கமாக உரைக்கிறது. நெஞ்சொடு மகிழ்தல் நல்வழிப்பட்ட நெஞ்சின் நிலையைப் புகழ்ந்துரைப்பது. உடற்கூற்று வண்ணம் உயிரானது தாயுதரத்தில் கருவாய் மானிட வடிவம் பெற்றுப் பிறப்பது முதல் இறப்பதுவரை பெறும் பல்வகை அனுபவங்களையும் கூறுவது.

பாடல் திரட்டு அல்லாமல் இங்குத் தனியே குறிப்பிட்ட இப் பகுதியில் மிகப் பலவான கொச்சைச் சொற்களும் உலக வழக்குச் சொற்களும் காணப்படுகின்றன. மாங்கிசம் ஒப்பாரி வங்கிசம் கலங்குறண்டா என்பன போன்ற சொற் பிரயோகங்கள் மிகப் பல. இவற்றையும் இப்பாடல்களின் பொதுவான கருத்தோட்டத்தையும் ஊன்றி ஆராயும்போது, இவை இரண்டாம் பட்டினத்தார் பாடியன அல்ல என்றே முடிவு செய்யவேண்டும். இவை பின்வந்தோர் பாடிச் சேர்த்தவை. பத்திரகிரியார் திருப்புலம்பல் என ஒன்று பாடியிருக்கவே, அப்பாடல்போன்ற புலம்பல் முதலான பெயர் வரும் இப் பாடல்களைக் கண்ட பிற்காலத்தார் இவை பட்டினத்தார் பங்கில் இருக்கட்டும் என்று இவர் தலையில் ஏற்றி விட்டார்கள் என்று கருதத் தோன்றுகிறது. ஆகவே முதல் இரு பட்டினத்தாருமல்லாமல் பின்னும் பல பாடல்களைப் பாடியவரொருவர் இருந்தார். அவர் இன்னாரென்று தெரியவில்லை. ஆகவே மூன்றாவது பட்டினத்தார் என்று பெயர் சொல்வதும் பிழையாகாது. காலம் மிகவும் பிற்பட்டது.

சித்தர் கோவையில் பட்டினத்தார் ஞானம் 100 என்று முதல் நூறு வெண்பாக்கள் அந்தாதித் தொடையாக

உள்ளன. பாட்டு முருகன் காப்பு. அடுத்தது நெஞ்சொடு புலம்பல் என்பதைப் பெயர் சுட்டிக் குறிப்பிடுகிறது. நூல் முழுமையும் சித்தாந்தக் கருத்துக்கள். சித்தர் பாணியில் பாடப்பெற்றுள்ளன. ஆயினும் இவை இரண்டாம் பட்டினத்தாரின் வாக்கு என்று துணிந்து சொல்ல இயலவில்லை. நெஞ்சில் தைக்கும்படி நேர்முகமாய்க் கருத்தை உணர்த்துகின்ற பட்டினத்தாருடைய தெளிவும் வேகமும் இவற்றில் சிறிதும் காணப்படவில்லை. மேலும், சித்தர் ஞானக்கோவையில் மிக்க பிற்காலத்தார் பலர் பாடித் தொகுத்து வைத்த பல பாடல்களும் நூல்களும் காணப்படுவது நன்கறிந்த செய்தி. இவைபோல, பட்டினத்தார் ஞானமும் பிற்காலத்தார் பாடல் என்றே கருதவேண்டும்.

இதுகாறும் கூறியவற்றுல் பின்வரும் செய்திகள் விளக்கமாகும். பட்டினத்தார் என்ற பெயரில் பல பெரியார் இருந்தனர். ஒருவர் பத்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர்; பதினோரந் திருமுறைப் பிரபந்தங்கள் ஐந்தும் பாடியவர். இரண்டாமவர் 14ஆம் நூற்றுண்டின் கடைசியில் வாழ்ந்து பல பாடல்கள் பாடினர். இவருடைய காலமே சித்தர்கள் பலரும் வாழ்ந்த காலம்; சிவ வாக்கியர், ஞானமார்க்கப் பாடல் பாடிய அவ்வையார், வேறு பல சித்தர்கள் இக்காலத்தில் வாழ்ந்தார்கள். சித்தர் ஞானக் கோவை என்ற நூலும் இவரை ஒரு சித்தராக வைத்து இவர் பாடல்களையும் சித்தர் பாடல்களோடு சேர்த்துக் கூறும். எனவே, இப் பட்டினத்தார் சித்தர் வரிசைக்குரியவர் என்ற கருத்தும் பொருள் உடையது. இவ்விரு பட்டினத்தாருக்கும் உரியன அல்லாத வேறு பல பாடல்கள் பிற்காலத்தில் தோன்றி (மூன்றும்) பட்டினத்தார் பெயராலேயே வழங்குகின்றன.

## பத்திரகிரியார்

பத்திரகிரி என்ற பெரியார் வரலாறு பட்டினத்தார் வரலாற்றேடு பிணைந்துள்ளது. தமிழ் நாடு நன்கறிந்த

பட்டினத்தார் காதற்ற ஊசியைக் கண்டு அக்கணமே பாரனைத்தும் பொய்யென உணர்ந்து, தம் வாழ்க்கையைத் துறந்து உடுத்த கோவணத்தோடு நாடெங்கும் சுற்றி, கொங்கு நாடு கடந்து துளுவ நாடு அடைந்து அங்குள்ள உஞ்சேனை மாகாளம் என்ற ஊரின் புறத்தேயுள்ள கணபதி ஆலய மொன்றில் தங்கியிருந்தார். அச் சமயம் அவ்வூரை ஆண்ட அரசன் பத்திரகிரி. அவனுடைய அரண்மனையில் சில கள்வர் புகுந்து அணிகலன்களைக் கவர்ந்து ஓடினர். ஓடிய வழியில் ஒரு கணபதி கோயில் இருந்தது. தாங்கள் திருடப் போகுமுன் அவர்கள் இப் பிள்ளையாரை வணங்கி, தங்களுக்குப் பொருள் கிடைத்தால் இவருக்கும் ஒரு பங்கு தருவதாகப் பிரார்த்தித்துக் கொண்டு போயிருந்தமையால், அதன்படி இப்போது இங்கு வந்து ஒரு மாணிக்க மாலையைப் பிள்ளையார் கழுத்தில் எறிந்துவிட்டுப் போயினர். அவர்கள் எறிந்த மாலையானது பிள்ளையார் கழுத்தில் விழவில்லை; அந்த இருளில் பிள்ளை யார் உருவத்தின் பின்னே நிட்டை கூடி இருந்த சிவயோகி யாராகிய பட்டினத்தார் கழுத்தில் விழுந்தது. அவர் இதை அறியார்.

திருடரைத் தேடிவந்த அரண்மனைக் காவலர் இக் கோயிலில் திருடர் ஒளிந்திருப்பாரோ என்று எண்ணிப் பார்த்தபோது, கழுத்தில் மாணிக்கமாலையோடு இருந்த பட்டினத்தாரைக் கண்டனர். இவரது மௌன நிலையைக் கண்டு அவர்கள் உண்மை உணராது, திருடன் இவனே, இவ்வாறு பொய்யாக நடிக்கிறான் என்று முடிவு செய்து, பிற திருடர்களைக் காட்டுமாறு அவரைக் கேட்டு அடித்துத் துன்புறுத்தினர். காவலனொருவன் அரசனிடம் ஓடிச் சென்று மாலையைக் காட்டி, "இத்திருடனைத் தக்கபடி ஒறுத்தால் களவு போன பிற பொருள்களும் அகப்படும்" என்று கூறினான். அவன் கூற்றை அரசன் நம்பினான். அக் காலத்தில் களவுக்குக் கழு வேற்றுதலே தண்டனை

யாதலால் இத் திருடனுக்கும் அவ்விதமே செய்யுமாறு அரசன் பணித்தான். அவ்வாறே அவர்கள் செய்ய முற்பட்டனர். தம்மைக் கழுவில் ஏற்றியதும் பட்டினத்தார் நிட்டை கலைந்து உணர்வு பெற்றார். நிலைமை யுணர்ந்து,

என்செய லாவது யாதொன்று மில்லை, இனித்தெய்வமே
உன்செய லேஎன் றுணரப்பெற் றேன், இந்த ஊனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை, பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோ, இங்ஙனே வந்து மூண்டதுவே?

என்ற ஒரு பாடல் பாடி, "படு உடலே படு" என்று சொன்னார். அக்கணமே கழுமரம் தீப்பற்றி எரிந்தது. செய்தி கேட்ட அரசன் தான் பெரிதும் பாதகம் செய்து விட்டதை யுணர்ந்து ஓடிவந்து தீக்கொழுந்தின் அருகு நின்ற தவக் கொழுந்தாகிய அடிகளைக் கண்டான். கண்டவுடன் அவருடைய திருக் கண் நோக்கால் பக்குவமடைந்து அவர் திருவடியில் வீழ்ந்து, "அடிகளே, அடியேன் அறியாது செய்த பெரும் பிழையைப் பொறுத்து ஆட்கொள்ள வேண்டும்" என்று வேண்டினன். அவனுடைய பக்குவத்தைக் கண்ட பட்டினத்தார் அரசனைத் திருவிடை மருதூர் செல்லுமாறு பணித்தார். திருவிடை மருதூர்ப் பெருமானாகிய மருதவாணர் தமக்குப் பிள்ளையாகச் சில காலம் வந்திருந்தமையால், பட்டினத்தாருக்கு அங்கு ஈடுபாடு மிகுதி.

அக்கட்டளையின்படியே, பத்திரகிரியாரும் தம் அரசை அக்கணமே துறந்து தவக்கோலம் பூண்டு பல நாள் யாத்திரை செய்து திருவிடை மருதூர் அடைந்தார். அடிகளும் அதே சமயம் பல யாத்திரைகளை முடித்து அங்கு வந்து கீழ்க் கோபுர வாயிலில் தங்கினார். பத்திரகிரியும் பிச்சை ஏற்று வந்து குரு நிவேதனம் செய்து சேடத்தைத் தாம் உண்டு, குருவின் திருக்குறிப்பின்படி சிவயோக நிலையில் மேலைக்கோபுர வாயிலில் இருந்தார்.

பத்திரகிரியாரின் பக்குவகாலம் நெருங்கி வந்தது. ஒரு நாள் அவர் தம் குருவின் பரிகலச் சேடம் உண்ணுகையில்,

விதி வசத்தால் ஒரு நாய்க்குட்டி பசியோடு அவரிடம் வாலைக் குழைத்து நின்றது. அது கண்டு இரங்கி அவர் தாம் உண்ட பிரசாதத்தில் ஒரு பகுதி அதற்கு அளித்தார். இதன் பின் அந் நாய்க்குட்டி அவரை விட்டுப் பிரியாது, தினமும் அவரிடம் பிரசாதம் உண்டு கூடவே இருந்து வந்தது.

இந் நாய்க்குட்டி முற்பிறப்பில் ஒரு தூர்த்தை யாயிருந்து தாலும் தன் சோர நாயகனும் உண்ட உணவுச் சேடத்தைக் குரு ஆணைவழி ஒழுகிய ஒரு சிவஞானி கையில் பிட்சையாகக் கொடுக்க, அதனை அவர் பெற்றுக் குருப் பிரீதியாக்கிப் பின் உண்டு பசி தீர்ந்து சென்றார். இப் பாவச்செய்கையால் அவள் அப்பிறப்பில் பல கொடுந் துன் பங்களை அடைந்து, மறு பிறப்பில் நாயாய்ப் பிறந்து, எப்படி யும் ஞானியின் பசி தணித்த புண்ணியத்தால், பத்திரகிரியா ருடைய உச்சிட்டத்தை உண்டு வாழ்ந்திருந்தாள்.

இந்த நிலையில், இந்த நாய்க்கும் பத்திரகிரியாருக்கும் இருவினை ஒப்பு நேர்ந்திருந்தமையால், சிவபெருமான் இவர்களுக்கு முத்தியளிக்கத் திருவுளங் கொண்டார். ஒரு சித்த வேடத்தோடு பட்டினத்தார் முன்பு சென்று "என் பசி தீர்க்க வேண்டும்" என்று வேண்டினார். பட்டினத் தார் பத்திரகிரியாரின் நிலையை ஞானத்தால் உணர்ந்து, "ஐயா, நான் இந்தக் கோவணத்தையே பாரமாகக் கருது கின்றவன். மேற்குக் கோபுரவாயிலில் ஒரு சமுசாரி இருக் கிறான். அவன் உனக்கு அன்னமிடுவான், அங்குப் போ" என்று கூறினார். அப்படியே அச்சித்தர் பத்திரகிரியார் முன் சென்று, பட்டினத்தார் உரைத்ததைக் கூறி அன்னம் வேண்டினார். பத்திரகிரியார் கேட்டு மிகுந்த அச்சம் எய்தி, நிகழ்ந்தவற்றைக் குறிப்பினால் உணர்ந்து, "இந்தப் பிச்சை ஓடும் இந்த நாய்க்குட்டியும் அல்லவா என்னைச் சமுசாரி என்று குருநாதர் கூறும்படிச் செய்தன?" என்று கூறிக் கோபத்தோடு ஓட்டை நாய்மீது விட்டெறிந்தார்.

ஓடும் உடைந்து தூளாயிற்று. நாயும் இறந்தது. பத்திர கிரியார் நிகழ்ந்தது உணர்ந்து, முத்தி ஒன்றே விருப்புடையவராகி, திருப்புலம்பல் என்ற பாடல்களைப் பாடி அங்கேயே சிவயோகம் எய்தி இருந்தார்.

அந்த நாய்க்குட்டியானது காசிராஜன் மகளாகப் பிறந்து வளர்ந்து மங்கைப் பருவமடைந்தது. அரசன் அவளுக்கு மணம் செய்விக்க முற்பட்ட போது அவள், "தந்தையே, என்னை இப்போது மணத்தில் ஈடுபடுத்த வேண்டாம். எனது குருநாதர் திருவிடை மருதூர் மேலைக் கோபுர வாயிலில் இருக்கிறார். அவரிடம் என்னை அழைத்துச் செல்வீராக" என்று வேண்டினாள். அரசனும் அதிசயித்து அவ்வாறே அழைத்துச் சென்று பத்திரகிரியாரின் முன்பு விட்டான். பத்திரகிரியார் கண் விழித்துப் பார்த்து இப் பெண்ணை நோக்கலும் இப்பெண், "குருநாதனே, அடிநாய் மீண்டும் திருவடியை நாடி வந்தது" என்று கூறினாள். நிகழ்ந்ததை அருள் நோக்கால் உணர்ந்தார் பத்திர கிரியார். அப் பெண்ணை அழைத்துக் கொண்டு கீழைக் கோபுர வாயிலில் இருந்த பட்டினத்தார் முன் சென்று, "பெருமானே, தம்முடைய பிரசாத சேடம் உண்ட நாய்க்கும் இப் பிறவி நோய் வரலாமா?" என்று விண்ணப்பம் செய்தார். கேட்ட பட்டினத்தார், இறைவன் திருவருளை எண்ணியிருக்க, அவ்விடத்து ஒரு பெரும் சோதி தோன்றியது. அச் சோதியில் பத்திரகிரியாரும் அப் பெண்ணும் கலந்து மறைய, சோதியும் மறைந்தது.

இதுவே சம்பிரதாயமாக வழங்கி வரும் பத்திரகிரியார் வரலாறு. இதிலுள்ள அற்புதங்கள் ஒரு புறமிருந்தாலும், பத்திரகிரி என்ற ஓர் அரசர் இருந்து பட்டினத்தடிகள் திருநோக்கால் உலகனைத்தையும் ஒரே கணத்தில் துறந்து பின் திருப்புலம்பல் பாடல்கள் பாடி உரிய காலத்தில் முத்தி அடைந்தார் என்பது உண்மை.

**ஒட்டுடன் பற்றின்றி உலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ ?**

*என்று இவரைத் தாயுமானவர் பாராட்டுகிருர்.*

*வள்ளலார் சாத்திரத்தில் சிவ ஞான வள்ளல் இவர் பெயரைக் குறிப்பிடுகிருர். வள்ளலார் காலம் பதினைந்தாம் நூற்ருண்டின் இறுதி. ஆகையால் பத்திரகிரியாரின் காலம், இதற்குச் சற்று முந்திய காலம், பதினன்கின் முடிவு என்று கருதலாம்.*

*" துறவாவது பற்றறத் துறத்தல். கன்மத்தை நீங்கலாவதெப்படி? பட்டினத்தார் பத்திரகிரி சுகர் வாமதேவர் சடபரதர் முதலாயினேர் பற்றற நிற்றல் போல."*

*பத்திரகிரியாரின் பெயரை முதன் முதலாகக் கண்ணுடைய வள்ளல் குறிப்பிட்டுப் பாடுகிருர் (ஒழிவிலொடுக்கம் 167) :*

**பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி
விட்டு விட மாட்டார் வெறு வீணர்**

*என்பது காண்க. வள்ளல் காலம் 1425 என்ருல், பத்திரகிரியார் காலம் 1400 எனக் கொள்வதில் இழுக்கில்லை. மேலும் 16 ஆம் நூற்ருண்டில் சிவஞான சித்தியாருக்கு உரை எழுதிய மறைஞான தேசிகரும் பத்திரகிரியாரைக் குறிப்பிடுகிருர். ஆகவே பத்திரகிரி, காலத்தால் இவருக்கு முந்தியவராகிருர். எல்லா வகையாலும் மேற்குறித்த கால நிர்ணயம் பொருந்துவதாகும்.*

**திருப்புலம்பல் :** *பத்திரகிரியார் 235 கண்ணிகள் கொண்ட ஒரு சிறு நூல் பாடியிருக்கிருர். இதன் கண்ணி ஒவ்வொன்றும் எக்காலம் என்று முடிவது. இந் நூல் திருப்புலம்பல் என்றும் மெய்ஞ்ஞானப் புலம்பல் என்றும் பெயர் பெறும். பிரமன் விஷ்ணு ருத்ரன் மகேசுவரன் ஆகிய கருத்து, பாருக்குள்ள பஞ்ச வர்ணங்கள், ஆன்மா கருவிகளோடு அவத்தைகளில் புகுதல், ஐந்தெழுத்து,*

குண்டலினியோகம், பிறவி வகைகள், பாற்பசு என்ற திருமந்திரக் கருத்து, அட்டாங்க யோகம், புழு, குளவி உருக் கொள்வது ஊமன் கண்ட கனு, திருச்சிலம்பின் ஓசை ஆகிய கருத்துக்கள் இந்நூலில் காணப்படுகின்றன. யாவும் சித்தாந்த சாத்திரத் தொடர்கள், கருத்துக்கள். ஆகவே இந்நூல் சித்தாந்த சாத்திரங்களுக்குப் பிற்பட்டதென்று கருதுவது பொருந்தும்.

மேலும், சிறப்பான மற்றோர் ஒற்றுமை இந்நூலில் காணப்படுதல் இங்குக் கருதத் தக்கது. இதன் 178 ஆம் கண்ணி பின்வருவது :

**எவரெவர்கள் எப்படிக் கண்டு எந்தப்படி நினைத்தார்**
**அவரவர்க்குத் தான் அப்படி ஆவதுவும் எக்காலம்.**

இக் கருத்தும் சொற்களும் தத்துவப் பிரகாசம் 137ஆம் பாடலில் ஞானத்தில் கிரியை என்ற பகுதியில், பூசையை முடித்தவிடத்து வேண்டுகோளாகக் கூறும் இடத்துக் காணப்படுகின்றன :

**தேவனே எவரெவர் எப்படிச் சிந்தித்தார்**
**சிந்தித்த இடத்தந்த வடிவாகை திடமே.**

பத்திரகிரியார் தம் பாடல் கருத்தையும் சொற்களையும் தத்துவப் பிரகாசத்திலிருந்து எடுத்துக் கொண்டார் என்று இது தெளிவாக உணர்த்துகிறது. இதனால் இப் பெரியவர் மெய்கண்ட ஞான பரம்பரையில் வந்த ஆசாரியரொருவரிடம் உபதேசம் பெற்றிருந்தார் என்று கருதுவதும் பொருந்தும். தத்துவப் பிரகாசம் செய்த தத்துவப் பிரகாசர் காலம் கி. பி. 1350-75 எனக் காண்கிறோம். ஆகவே இவர் காலம் சற்றே பின்னுக இருத்தல் பொருந்தக் கூடியதே. 14 நூற்றாண்டு இறுதி என்று முன் கருதியது பல வகையாலும் ஏற்புடையது.

பாமர மக்கள் இந்நூலை நன்கு கற்றுப் பாடி வந்திருக்கிறார்கள். அக்காரணம் பற்றி இதனுள் நூலுக்குப் பொருந்தாத பாடல்கள் பல இடைச் செருகலாகப் பிற்காலங்களில்

*சேர்க்கப் பெற்று வந்தன போலும். அக்கால இயல்பை யொட்டி, மாதரைப் பழித்தல் என்ற கருத்துப்படக் காணப்படும் பாடல்கள் இத்தகையனவாகலாம். இவை யாவும் இடைச் செருகலே.*

*பல பாடல்கள் கவிதைச் சுவை ததும்புவன. எடுத்துக் காட்டாகச் சில பாடல்களைக் கீழே தருகிறோம்:*

**ஆங்கார முள்ளடக்கி, ஐம்புலனைச் சுட்டறுத்துத்**
**தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்?**

**பேய்போல் திரிந்து, பிணம்போற் கிடந்துபெண்ணைத்**
**தாய்போல் நினைத்துத் தவமுடிப்ப தெக்காலம்?**

**மன்னுயிரைக் கொன்று வதைத்துண் டுழலாமல்**
**தன்னுயிர்போல் எண்ணித் தவமுடிப்ப தெக்காலம்?**

**அவவேடம் பூண்டிங்கு அலைந்து திரியாமல்,**
**சிவவேடம் பூண்டு சிறந்திருப்ப தெக்காலம்?**

**ஆகம் மிகவுருக, அன்புருக, என்புருக**
**போக அனுபூதி பொருந்துவது மெக்காலம்?**

---

*[பத்திரகிரியாரும் சித்தருள் ஒருவர் என்பதற்குப் பதினெண் சித்தர் ஞானக் கோவையன்றி வேறு ஆதாரம் தெரியவில்லை. தேவ கணங்கள் பதினெட்டு என்ற வரலாறு பதினெண் சித்தர் என்ற வரலாறு எழக் காரணமாயிற்றுப் போலும். பட்டினத்தார் பத்திரகிரி யார் பாடல்கள், மகாதேவ யோகி உரை யோடு, ஐந்தாம் பதிப்பு 1929 இல் அச்சாயின. சித்தர் ஞானக் கோவையானது, பெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்களால் பாடல்கள் செப்பம் செய்யப் பெற்று 1947 இல் பதிப்பிக்கப் பெற்றது. இங்கு முன்னுள்ள நூல்கள் யாவும் திருத்தமாக உள்ளன; ஆனால் ஆராய்ச்சி முறையில் அமையவில்லை.]*

## அத்தியாயம் 13

# பிற ஆசிரியர்

### முன்னுரை

இதுகாறும் ஆராய்ந்த தலைப்புக்களில் பெயர் குறிப்பிடாத ஆசிரியர்களையும் அவர்கள் செய்த நூல்களையும் இங்கு ஆராய்வோம்.

ஒப்பிலாமணிப் புலவர் என்ற பெயருடைய புலவரொருவர் இருந்தார் என அறிகிறோம். இரட்டையரால் வசைபாடப்பெற்ற சம்பந்தாண்டான் என ஒரு புலவன் இந் நூற்றாண்டின் இறுதியிலும், அடுத்த நூற்றாண்டில் அருணகிரிநாதர் வரலாற்றில் தொடர்புடையவனாகவும் வாழ்ந்தான் எனக் கதைகள் கூறுகின்றன. முந்தைய புலவர் வரலாற்றை இங்கும், பிந்திய புலவன் வரலாற்றை அடுத்த நூற்றாண்டுச் சரிதத்திலும் ஆராய்வோம்.

இலக்கியம் இலக்கணம் சமயம் அன்றிப் பிற துறைகளிலும் நூல்கள் தோன்றியிருந்தன. சோதிடத்துறையில் போசராசர் சரசோதிமாலை என்ற ஒரு நூல் செய்திருந்தார். வைத்தியத் துறையில் பலவான நூல்கள் தோன்றின என்று கருத இடமுண்டு. இவற்றின் விளக்கம் திட்டமாகத் தெரியவில்லை.

இனி, பொதுவாக இலக்கிய வரலாற்றில், சாசன வாயிலாகப் பல புலவர் பெயர்களும் நூல்களும் தெரிய வருகின்றன. பதினான்காம் நூற்றாண்டுக்கு முன்னும், இதற்குப் பின்னும் இத்தகைய வரலாறுகள் தெரிகின்றன. ஆனால் இந்த நூற்றாண்டில் இவ்வாறு எவ்வரலாறும் இப்போது தெரிந்திலது.

## ஒப்பிலாமணிப் புலவர்

தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுட் சிந்தாமணி முத லிய திரட்டு நூல்கள் ஒப்பிலாமணிப் புலவர் என்று ஒருவரைக் குறிப்பிடும். 18 ஆம் நூற்றாண்டில் சிவரகசியம் பாடிய ஒப்பிலாமணி தேசிகரினும் இவர் வேறுவர். குமணன் வரலாற்றில் கண்ட 'ஆடு நனி மறந்த கோடுயர் அடுப்பில்' என்ற புறநானூற்று 164 ஆம் பாடல் குறைந்தும் திரிந்தும் 'ஆடெரி படர்ந்த கோடுயர் அடுப்பில்' என்று வந்ததாய்ப் புலப்படுதலால் இவரைக் குமணன் காலத்தவர் என்று சொல்லுவதற்கு இடமில்லை என்றும், வேறு இவர் செய்த நூல் எதுவுமில்லை என்றும் தனிச்செய்யுட் சிந்தாமணி பதிப்பித்த கந்தசாமிக் கவிராயர் எழுதியிருக்கிறார். இவ் ஒப்பிலாமணி 14 ஆம் நூற்றாண்டு என்பது சோமசுந்தர தேசிகர் குறிப்பு. இவர் பாடல்கள் என 21 பாடல்களைக் கவிராயர் காட்டி இருக்கிறார். இவற்றுள் பெரும்பாலான பாடல்கள் இவர் பாடல்கள் அல்ல. எனினும், வேறு வகையில் கிடைக்கின்ற ஒரு குறிப்பு இக்காலத்தில் இப் பெயர் கொண்ட புலவர் இருந்தது உண்மை என்று புலப் படுத்துகிறது.

சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ் முத்தப் பருவத்தில் [47] 'தமிழொப்பிலாமணிக்குப், பெருகும் புகழ் நன்மருகனெனும் பேரும் தையல்பாகமுனி-பின்னே யுதிக்க முன்னுதித்த பெருமானென்னும் பேரும் உளம், உருகும் உலகந் துதித்தேத்தி உரைக்க இசைந்தாய்' என்று காணப்படுகிறது. இங்கு, 'தமிழ் ஒப்பிலாமணி' என்று கூறுவதனால் இவர் தமிழ்ப் புலவர் என்று கருதுகிறோம். இவருடைய மருகர் சத்திய ஞானி. சத்திய ஞானியின் காலம் 1400-1450 என்று குறிப்பிட்டு இருக்கிறோம். ஆகவே, இவ் ஒப்பிலாமணியின் காலம் இதற்குச் சற்று முன்னாக இருக்கலாம்; அதாவது 1375-1425. தேசிகர்

கூற்றும் இதனால் பொருந்துவதாகும். இவரே தனிப்பாடல் குறிப்பிடும் புலவருமாவார்.

இவர் பாடியதாகக் காட்டிய பாடல்களில் பின் வருவது ஒரு பாடல்:

வாழ்நிலைசேர் பொன்னுலகம் வண்களந்தைக் கோபுரத்தின்
ஏழ்நிலைமேல் ஏறிடினும் ஏறலாம்—பாழ்மனமே
அன்புன்னைக் காட்ட அரனறிவ தேயருமை
தென்புன்னைக் காட்டனடி சேர்.

களந்தைக் கோபுரத்தை இப்பாட்டு சுட்டுகிறது. களந்தையிலிருந்த ஞானப்பிரகாசர் என்பவர் சத்திய ஞானியின் சீடர்களுள் ஒருவர். எனவே, ஒப்பிலாமணி சத்திய ஞானி இருவருக்கும் களந்தை தொடர்புடைய ஊர் என்று கூறுவது பொருந்தும். ஆதலால் இப்பாடல் இவர் பாடியது என்று கொள்ள இடமுண்டு. வேறு இவர் வாழ்க்கை வரலாறு எதுவும் தெரியவில்லை.

## சரசோதிமாலை செய்த போசராசர்

சரசோதி மாலை என்ற ஒரு சோதிட நூலைப் போசராசர் சகம் 1232 இல் (கி. பி. 1310) செய்தார் என்று பின் வரும் பாடலால் அறிகிறோம்.

உரைத்த சகவருடம் உறும் ஆயிரத் திருநூற்
றொருநாலெட் டினில் வரு வசந்தந் தன்னில்
தரித்திடுவை காசிபுதன் பனையி ஞளில்
தம்பைவளர் பராக்கிரம வாகு பூபன்
இருத்தவையில் சரசோதி மாலை ஈராறு
ஏய்படலம் நூற்றெண்பான் முப்பான் நான்காம்
விருத்தம்அரங் கேற்றினனல் போச ராச
விஞ்சைமறை வேதியனும் புலவ ரேறே.

தம்பையில் வாழ்ந்த பராக்கிரம பாகு என்ற அரசன் சபையில் சகம் 1232 இல் போசராசன் என்ற வேதியப்

புலவன் சரசுவதிமாலை என்ற நூலை அரங்கேற்றினன் என்று இப்பாடல் கூறுகிறது. சிங்கள அரசர் பலர் பராக்கிரம பாகு என்ற பெயரோடிருந்தனர். இப்பாடல் கூறும் பராக்கிரம பூபன் இவருள் ஒருவன் போலும். தம்பை என்ற ஊர்ப்பெயர் தெளிவாகவில்லை. இந்நூல் பன்னிரு படலங்களுடையது. யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரிய சக்கரவர்த்தி என்பான் கி. பி. 1288 இல் சிங்கள அரசன் தலைநகரான அனுராதபுரத்தைக் கைப்பற்றி அதன் பொக்கிஷங்களையும் கவர்ந்து சென்றனன் என்றும், 1290 இல் சிங்களம் ஆண்ட பராக்கிரம பாகு அவனுடன் சமாதானம் செய்து கொண்டு இழந்த ஊர்களைத் திரும்பப் பெற்றனன் என்றும் கூறுவர். (மு. இராகவையங்கார், பெருந்தொகை ப. 602.)

இந்நூல் யாழ்ப்பாணத்து இராமலிங்கையரால் சென்ற நூற்றாண்டில் பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. இவரே சோதிடர்; சந்தான தீபிகை என்ற சோதிட நூல் செய்தவர்.

பிற்சேர்க்கை—1

*[முதன் முதலாக 14–15 ஆகிய இரு நூற்றுண்டு களின் வரலாறும் ஒருங்கு சேர்த்து ஒரே தொகுப் பாக எம்மால் எழுதப்பெற்றது. பின்னல், 11, 12, 13 ஆகிய நூற்றுண்டுகளின் வரலாறுகளும் தனித் தனியே எழுதி முடித்தோம். அப்போது, 14–15 வர லாறுகளையும் தனியே பிரித்து அச்சிடுதல் நல மெனத் தோன்றியது. அவ்வாறு பிரித்தெழுதிய போது, காவை - அம்பலநாதத் தம்பிரான் வர லாறும் கந்தாடை–மன்னப்பையங்கார் வரலாறும் தவறுதலாக 14 ஆம் நூற்றுண்டு வரலாற்றில் சேர்க்காமல் விடப்பட்டன. நூல் முடியும் தருணத் தில் இது தெரிய வந்தமையால், இவற்றை உரிய இடத்தில் சேர்க்கமுடியாமல், பிற்சேர்க்கை-1 எனச் சேர்த்திருக்கிறேம். நூலை வாசிக்கும் அன்பர்கள் இப்பகுதிகளை முறையே* **அத்தியாயம்-7 : சைவ இலக்கியம்-3, அத்தியாயம்-9 : வைணவ இலக் கியம்** *என்பவற்றின் தொடர்ச்சியாகச் சேர்த்து வாசிப்பார்களாக.]*

## சைவ இலக்கியம்-3 : தொடர்ச்சி

## காவை - அம்பலநாதத் தம்பிரான்

இப்பெரியார் சிறந்த அனுபூதிமானுகவும் ஞானுசிரிய ராகவும் 14 ஆம் நூற்றுண்டில் விளங்கினர். இவர் பழுதை கட்டி–சம்பந்த முனிவரின் மாணுக்கருள் ஒருவர். இவர் பாண்டிநாட்டில் திருப்பரங்குன்றத்தைச் சார்ந்த காவனூர் என்ற ஊரில் செல்வந்தரான கார்காத்த வேளா ளர் குலத்தில் பிறந்தார் என்று கருதக்கூடும். இளமை யில் தாம் கல்வி கேள்விகளில் வல்லவராகியதோடு, தம்மையடுத்த பாவலரை ஆதரித்தும் வந்தார். பின்னர்

சீகாழியடைந்து, அங்கு ஞானசாரியராக விளங்கிய சம்பந்த முனிவரிடம் உபதேசம் பெற்று, அவர் சமாதி யடைந்தபின் சீகாழியை நீங்கித் தம்மூர் சென்று அங்கு பல மாணுக்கருக்கு ஞானேபதேசம் செய்துகொண்டு, துறவியாக மிக்க புகழுடன் விளங்கினர் என்று அறிகிரும். அம்பலநாதர் – அம்பலவாணர் என்றும் வழங்கப்பெறுகிருர். இவர் பாடிய சைவச் சிறுநூல்கள் பல; அவற்றுள் ஒன்ருன பிராசாத அகவலின் தொடக்க வரிகள் இவர் வரலாற்றைச் சிறிது கூறும்:

துய்ய முத்தமிழ்சேர் வையைமா நதியும்
குன்றம் எறிந்த வென்றி வேலன்
போற்றி வானவர்தொழ வீற்றினி திருக்கும்
மன்றலஞ் சோலைக் குன்ற நன்ஞடும்
பூவலர் வாவிக் காவையம் பதியும்
வளந்திகழ் திசையுடன் விளங்க வந்தோன்
அம்புவி புகழ்திரு அம்பல நாதன்
சிவனரு ளால்அருள் திருமந் திரத்தைத்
தவநெறி யொழுகுந் தக்கோர்க் குரைத்தனன்.

குன்றநன்ஞடு என்றமையால் பரங்குன்று என்பர். மேலும், இவர் துறவுபூண்டு தம்பிராஞகி, சிவஞான பரம்பரையை வளர்த்த செய்தி மதுரைச் சிவப்பிரகாசர் செய்த உரையால் நன்கு விளங்குகிறது: “ இந்த வியாக்கியானம் செய்தது மெய்கண்ட சந்ததியில் காவை அம்பலநாதத் தம்பிரான் திருவடி மரபில் ஆசாரியரில் மதுரையில் ஞானப்பிரகாசத் தம்பிராஞர் திருவடியடியாரில் மதுரைச் சிவப்பிரகாசன் செய்த வியாக்கியானம் என அறிக”. இதஞல் இவருக்குப் பல சீடர்கள் இருந்தார்கள், ஆசாரியராய் விளங்கிஞர்கள், அவர்களுள் ஒருவர் பரம்பரையில் மதுரை ஞானப்பிரகாசத் தம்பிரான் வந்தார் என்று அறிகிருேம். இவருடைய நூல்களாலும், இவர் சீடர் பரம்பரையில் வந்த உரைகளாலும், இவர்கள் அனைவரும் சிறந்த ஞாஞசிரியர்களாய் வாழ்ந்தார்கள்

என்று அறிகிறோம். இவ் அம்பலநாதர் செய்த நூல்களைச் சிறிது கூறுவோம்.

### சிவப்பிரகாசக் கொளு

சிவப்பிரகாச உரை எழுதும்போது மதுரைச் சிவப் பிரகாசர் பின்வருமாறு கூறுகிறார்: "காவை-அம்பல நாதத் தம்பிரானார் இந்நூலின் கருத்தாகச் செய்தருளின குறள் வெண்பா நூறும் இந்நூலிற் பாட்டுக்கள் தோறும் பகுத்துச்சேர்த்து...". குறள் என்று இவர் கூறுவது, கொளு. ஒவ்வொரு பாடலின் கருத்து இன்னது என்று எடுத்துக் கூறுவது; திருக்கோவையாருக்கு அமைந்த கொளுப்போல, சிவப்பிரகாசத்துக்கும் அம்பலநாதத் தம்பிரான் பாடல்தோறும் ஒரு கொளு எழுதியிருக்கிறார். இதன் தொகை 100. சிவப்பிரகாச உரைச்சிறப்புப் பாயிரத் துள்ளும் இது "அம்பலவன் தந்த குறளால்" என்று சிறப்பிக்கப்பெற்றுள்ளது.

சிவப்பிரகாசத்தையடுத்த இரு நூற்றாண்டுகளில் அந் நூலுக்குக் கருத்தும் விளக்கமும் உரையும் கூறப் பலர் பெருமுயற்சி செய்திருக்கிறார்கள். இவ்வாசிரியர் கொளு உரைத்ததோடு நூலைப் பல தலைப்புக்களுள் பாகுபடுத்தி, ஒவ்வொரு தலைப்புக்கும் இத்தனைப் பாடல் என்று வரையறைசெய்து ஒரு கலிவெண்பாப் பாடியிருக்கிறார். இவர் செய்த வரையறைகளே பின்வந்த உரையாசிரியர்களுக்கு வழிகாட்டியிருக்கின்றன. இக் கலி வெண்பா 15 கண்ணிகளை உடையது. இதன் இறுதி வரிகள் ஆசிரியர் பெயரையும் அவர் சம்பந்த முனிவரின் மாணக்கர் என்பதையும் உரைக்கும்:

> வந்தளித்த சம்பந்த மாமுனிவன்–எந்தை பதம்
> சென்னியின்மேல் வைத்துச் சிவப்பிரகா சக்கருத்தை
> அன்ன வயற்காவை அம்பலவன்–நன்னயத்தால்
> சொன்னான் எழுபிறப்பும் தொல்லை வினை யும்தீர
> மன்னாக மத்தை மதித்து.

## பிராசாத அகவல்

இது 159 அடிகள் கொண்ட ஒரு நீண்ட ஆசிரியப்பா. தமிழில் பிராசாத யோகநெறியைத் தனி நூலாகக் கூறுகின்ற சிறுநூல். பிராசாதம், சித்தியாரில் மிகச் சுருக்கமாகவும், பின் தத்துவப் பிரகாசத்தில் சற்றே விரிவாகவும் கூறப்பட்டுள்ளது. யோக மார்க்கத்தில் பயில்கின்ற சாதகன், பிராண வாயுவை உள் முகமாகத் திருப்பிக் கலைகளைத் தரிசித்துக் கொண்டே போகிறான். இக்கலைகள் பதினாறு[1] என்பது சாத்திரம்; சோடச கலாப் பிராசாதம் என்பது வழக்கு. கலைகளின் பெயர், ஒளி, வடிவம், இடம், அளவு, தேவதை, குணம், தத்துவம், இவற்றின் சோதனை, மாத்திரை என்பவற்றைக் கூறுவது பிராசாத இலக்கணம். ப்ரா-சிவஞானம், சா-கதி, தா–தருவது; சிவஞான கதியாகிய முத்திப் பேற்றைத் தருவது என்பது பிராசாதம் என்னும் சொல்லின் பொருள்.

பிராசாத அகவலின் பின்வந்த யோகநூல்கள், கால முறைப்படி, பிராசாத தீபம், பிராசாதமாலை, பிராசாத விருத்தம், பிராசாத விளக்கம்[2]; இத்தனையும் சேர்ந்தும் இந்த யோகநெறி பூரணமாய் விளக்கம்பெறவில்லை. காரணம், சொல்லால் யோகத்தை விளக்கிக் கூறமுடியாது, இது அனுபவத்தால் அறியத்தக்கது என்பதே.

இவ் வகவலுக்கு இவ்வாசிரியரின் மாணாக்கரான மதுரை ஞானப்பிரகாசர் சிறப்பான ஓர் உரை செய்திருக்கிறார். இவ்வுரை இல்லாவிட்டால், அவ்வகவல் கூறும் யோகநெறி சிறிதும் விளங்காது. இவ்வுரையுள் இவர் அனேக மேற்கோள் பாடல்களைத் தந்திருக்கிறார். இவை எந்த நூலில் உள்ளன என்பது தெரியவில்லை.

---

1. சைவ மடங்களில் பதினாறொடுக்கம் என்ற கட்டிடப்பகுதி இருப்பதாகவும், அங்கு, பக்குவமடைந்த தம்பிரான் முறையே பதினாறு கலைகளையும் ஒடுக்கி ஆண்டவனுடைய திருவடியில் ஆன்மாவைக் கொண்டுபோய்ச் சேர்க்கும் பயிற்சி செய்வர் என்றும் கூறுவர்.

2. பிராசாத விளக்கம் வெள்ளியம்பல வாணர் செய்தது போலும்; நூல் கிடைக்கவில்லை.

[பதிப்பு: மூலம் மட்டும், செந்தமிழ்ப் பத்திரிகை 1935. மூலமும் உரையும், சோமசுந்தர தேசிகர் பதிப்பு, சித்தாந்தம் 1935. இதில் உரையாசிரியர் பெயர் குறிப்பிடவில்லை.]

**சத்தி நிபாத அகவல்**

சத்தி நிபாதம் என்ற தொடரின் பொருள் திருவருள் பதிதல். பக்குவமான ஆன்மாவிடத்துத் திருவருள் பதியவே, அவன் பாசங்களைத் துறந்து, உண்மைக் குருவை நாடிச் செல்கிறுன். நாலுவகைச் சத்தி நிபாதம் என்று சிவப்பிரகாசம் கூறுகின்றது. பின்னர் இதைச் சற்று விரித்துக் கூறிய நூல் சம்பந்த முனிவர் செய்த சிவானந்த மாலை; அதன் பின்னர் அவர் மாணுக்கரான அம்பலநாதத் தம்பிரானே இச்சாத்திரப் பொருளை விரித்துத் தனி நூலாக உணர்த்துகிறுர்.

இவ்வகவல் 76 அடிகள் உடையது. இது மந்தம் முதலான நான்கு நிலைகளில் ஒவ்வொரு நிலையிலும் பொருளை இரு பிரிவாகக் கூறுகிறது. முதற் பிரிவு, சத்தி நிபாதம் ஏற்படும் முறைமை. இரண்டாம் பிரிவு முத்தி அருளும் முறைமை. முதல் பிரிவில் நால்வகைச் சத்தி நிபாத நிலையிலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு மார்க்கங்களிலும் ஆன்மாவானது எவ்வாறு நிற்கும் என்பதைக் கூறுகிறது. நூலாசிரியர் சிவானந்த மாலை செய்த ஆசிரியரின் மாணுக்கரானமையால், அந்நூற் கருத்துக்களையே இங்கு விரிவு படுத்தியிருக்கிறுர். சாத்திரக் கருத்துக்கள் காலமுறையில் எவ்வாறு பல பிரிவாகி வளர்ந்து வந்தன என்பதற்கு இந் நூல் சிறந்த எடுத்துக்காட்டு.

**உரூப சொரூப அகவல்**

இது ஆசிரியப்பாவில் 104 வரிகளையுடைய சிறுநூல். தசகாரியங்களைக் கூறும்போது, தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி என்ற மூன்றில் முதலாவதாகிய ரூபம் என்பதை உருவம், சொரூபம், சுபாவம், விசேடம்,

வியாத்தி, வியாபகம், குணம், வன்னம் என எட்டாக்கி, தரிசனம் சுத்தி என்ற இரண்டையும் சேர்த்துப் பத்தாகக் கணக்கிட்டுரைப்பது ஒரு மரபு. இந்த மரபை யொட்டித் தத்துவப்பிரகாசரே முப்பொருள்களையும் பலவேறு கூறு களாகப் பாகுபடுத்தி இம்முறையில் தசகாரியம்; (அல்லது தசக்கிரமம்) கூறுகின்றார். அடுத்து இந்த அகவல், பதி பசு பாசம் என்ற மூன்று பொருளுக்கும் உருவம் சொரூபம் முதலான பத்தையும் கூறுகின்றது. பின் வரும் தத்துவப் பிரகாச உரை மேற்கோள் வெண்பா இப்பத்துப் பிரிவுகளை நிரல்படச் சொல்லும்:

மேவுருவ சொரூப சுபாவம் விசேடம் வியாத்தி
தாவுவியா பகங்குணமே வன்னந்தான்—ஓவுந்
தெரிசனஞ் சுத்தியெனச் சேர்பவை பத்தும்
அருள்பசுபா சங்கட்கும் ஆம்.

இந்நூல் பதி பசு என்ற இரண்டுக்கும் பின் பாசத்தை ஆணவம், திரோதம், சுத்தமாயை, அசுத்த மாயை, கன்மம், மாயேயம் எனப் பிரித்துக் கூறுகிறது.

களங்கமில் பதி பசு பாசக் கருத்தினை
இவ்வகை தெரிய இயம்பிய தேசிகன்
காரணி பொழில் திகழ் காவை அம் பலவன்
ஏரணி சித்தி உயிர்க்கு எய்துதல் எடுத்தே

என்ற இந்நூலின் இறுதி வரிகளால், நூலாசிரியர் காவை அம்பலவன் என்ற தேசிகன் என்பது தெளிவா கின்றது. அடுத்த நூற்றாண்டில் குருஞான சம்பந்தர் பாடிய திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் என்ற சிறு நூலும் இவ்விளக்கம் பற்றியே எழுந்தது. தசக் கிரமம் அல்லது பத்துத் தன்மைகளின் பெயர் இங்குக் கூறிய மூன்று நூல்களிலும் சற்றே வேறுபட்டிருக்கும்.

[பதி, பசு, ஆணவம், கன்மம், மாயை என்ற மெய்ப் பொருள் ஐந்தின் தசக்கிரமக் கட்டளை என்ற ஒரு சிறு வசன நூல் சித்தாந்தம் 1940 தொகுதி 13இல் எம்மால்

வெளியிடப்பட்டது. இது ஒவ்வொரு தன்மைக்கும் சாத்திர மேற்கோளை எடுத்துக் காட்டுவது. இதன் காலம் 17 ஆம் நூற்றுண்டு.]

ஓர் ஏட்டில் கிடைக்கும் குறிப்பினுல், இக் காவை அம்பலவாணர் பரம்பரை தனியே அதே பெயரோடு நெடுங்காலம் நிலவி யிருந்ததென்று அறிகிருேம். வையாபுரிப் பிள்ளையவர்கள் சென்னை பல்கலைக்கழகம் மூலமாகப் பதிப்பித்த சிறுபஞ்சமூலம் பழைய உரைப் பகுதி ஏடொன்றின் இறுதியில், "திருவெண்ணெய் நல்லூர் தென்காசி காவை அம்பலவாண மெய்கண்ட தேசிகன் பாதமே துணை" என்று எழுதப்பட்டுள்ளது. (சிறு பஞ்ச மூலம் முகவுரை பக்கம் 61.) இதனுல் நாம் பின்வருமாறு கருதலாம். இக் காவை அம்பலவாணர் தனி ஞான மரபொன்றை ஏற்படுத்தியிருந்தார்; இதற்கு மூலமான காவை அம்பல நாதர் சரிதமே இது வரை சொல்லப்பட்டது. பின்வந்த ஒரு காவை அம்பலவாணர், காவை வடமலையப்ப பிள்ளையன் காலத்தில் வாழ்ந்து முக்கூடற் பள்ளில் பாராட்டப் பெற்றுர். 'பாவலர்க்குபகாரி காவை அம்பலவாணன் பலகிளையும் தழைக்கவே கூவாய் குயிலே' என்பது பாட்டு. (காலம் 17 நூ.) இவர் பிள்ளையனுக்கு உறவினர் போலும்.

மற்றெருருவர் சிறுபஞ்ச மூலம் ஏடெழுதிய காலத்துக்குச் சற்று முன் வாழ்ந்தார் போலும். இவ்வேடு "சங்கரநயினுர் கோயில் திருமூல பண்டாரத்தின் குமாரன் சிற்றம்பலவன் எழுதிப் படித்த ஏடு. காலம் கொல்லம் 895 விகாரி வருடம், சித்திரை மாதம்"–கி. பி. 1720. இவர் வாழ்த்துகின்ற காவை அம்பலவாணர், தம் பரம்பரையை நினைவூட்டுமாறு, மெய்கண்ட தேசிகரையும், அவர் ஊராகிய திருவெண்ணெய் நல்லூரையும், தம் பெயரோடு இணைத்துக்கொண்டு மேற்காட்டியவாறு வழங்கப் பெற்றுர் எனக் கருதுகிருேம். இவர் தென்காசியில் வாழ்ந்திருந்தார். இவர் மூன்றுமவர். இவரே குமரகுருபரரின் மாணுக்கரான வெள்ளியம்பலவாணத்

தம்பிரான் சீடராய், 1700க்குப் பின் வாழ்ந்து திருவருட் பயன் உதாரணக் கலித்துறை செய்தவராகலாம்.

## வைணவ இலக்கியம் : தொடர்ச்சி

# கந்தாடை - மன்னப்பையங்கார்

கந்தாடையப்பன்[1] என்றும் இவர் பெயர் வழங்குவதுண்டு. இவர் வயலூர் என்ற ஊரினர். இரு மொழியும் வல்லவர். வேதாந்ததேசிகர் பரமபதம் அடைந்த காலை இவர் இளம் பிள்ளையாக இருந்து அவருடைய கருணைக்குப் பாத்திரமாகி அவர் புதல்வரான நயினாராசாரியரை ஆசிரயித்து வாழ்ந்திருந்தார். இவர் வேதாந்த தேசிகர் மீது ஒரு வெண்பா அந்தாதி பாடினார். இது தேசிகர் நூற்றந்தாதி என வழங்கும். தேசிகரிடத்து இவர் மிகுந்த ஈடுபாடு உடையவர். இவர் பாடல்களையும் வடகலையார் மிகவும் போற்றி வருகின்றனர். இவ்வந்தாதியுள் 26ஆம் பாடல் இன்றும் அத்திகிரி அருளாளன் திருமஞ்சன கட்டியத்தில் சேர்த்துச் சேவிக்கப்படுகிற தென்பர் :

> தேவர் முனிவர்களும் சித்தர்களும் பத்தர்களும்
> பூவின் மழைபொழிந்து போற்றியே—தாவி
> உலகளந்த மாலை உணர்ந்துகக்கும் தூப்புல்
> குலகுருவே எங்கள் குரு

என்பது அப்பாடல். இச்சிறப்பு இவ்வாசிரியர் தேசிகருக்குப்பின் அவர் புதல்வருக்கு நேர் மாணாக்கராய் வந்தார் என்ற கருத்துக்குப் பொருந்துவதாகும். மேலும், இவ்வாசிரியர் 96ஆம் பாடலில் தம் குருவாகிய நயினாராசாரியர் என்று பெயர் பெற்ற வரதராசரையே குறிப்பிடுகிறார் :

> இன்றென்றன் பாக்கியமோ ஏரார் வரதகுரு
> நன்றான தொல்லருளோ நாரணன்தன்—குன்றாத
> நன்னினைவோ நானின்று வாதிசிங்கன் நல்லடியை
> மன்னுமனம் பெற்ற விதம்

---

1. கந்தாடை என்பது, வாதூல கோத்திரத்துக்குரிய அறுவகைக் கோத்திரத்தாரும் தரித்துக்கொள்ளும் பொதுப்பட்டம்.

என்பது காண்க. (வாதிசிங்கர் - தேசிகர்.) எனவே, வேதாந்த தேசிகர் 1369 இல் பரமபதம் அடைந்ததாக நாம் அறிவதால், இவர் காலம் இதற்குச் சற்றுப்பின், அதாவது 14ஆம் நூற்றாண்டின் இறுதி எனக்கொள்ளுதல் பொருத்தமாகும்.

இந்நூல் பலமுறை அச்சிடப்பட்டுள்ளது. பிற்காலத்தவர் இந்நூலை மிகவும் போற்றி யிருக்கின்றனர் என்பது இந்நூலுக்கு ஏற்பட்டுள்ள இரண்டு தனியன்களால் நன்கு விளங்கும் :

பழவினைகள் தாமகலப் பரவாதி சிங்கத்தின்
கழலிணையைத் தன்னெஞ்சிற் கழலாமே எந்நாளும்
தொழுதெழு மன் னப்பங்கார் தூயமலர்த் தாளிணையே
தொழுதெழுநீ நன்னெஞ்சே தொல்வினைகள் தொடராவே.

எந்தைமன் னப்பங்கார் என்றைக்கும் தன்நாமம்
சிந்தைதனில் வைத்திடவே செல்வஞ்சேர்—தந்தையொடு
தாயாகிக் காப்பரிந்தத் தாரணியி லுள்ளோரை
வாயார வாழ்த்து நலம்.

பிற்சேர்க்கை—2

## சில குறிப்புக்கள்

பின்னே பக்கம் குறிப்பிட்ட இடத்துள்ள வரலாறு கள்பற்றி இங்குத் தரப்பட்டுள்ள குறிப்புக்களையும் உரிய இடத்தில் சேர்த்து வாசித்துக்கொள்க.

**பக்கம் 20. வில்லிபுத்தூரர் வரலாறு :** இவர் வைணவ அந்தணர் பரம்பரையாதலால், இவர்தம் பெற்றோர் வில்லிபுத்தூர்க்கோன் என்று வழங்கிய பெரியாழ்வார் மீது தங்களுக்கு இருந்த பக்தி காரணமாக இவருக்கு வில்லிபுத்தூரர் என்றே பெயரிட்டிருக்கலாம்.

**பக்கம் 29-30. வில்லிபுத்தூரர் சிவபிரானைப் போற்றிக் கூறுதல் :** எம்பிரான், எனையாளுடைய மாதவன், புள்ளு டைக்கொடியோர் இருவரும் காணுப் புனிதன், ஆசறு கடவுளோர்க்கும் அருமறை தமக்கு மெட்டாத் தேசிகன் என்ற தொடர்கள் காண்க. இவர் திருமாலடியார் என் பது மறுக்க முடியாதது. ஆயினும் சமயக் காழ்ப்பின்றி, கதைப் போக்குக்குப் பொருந்தவே ஆங்காங்கு பாடிச் செல்கின்ருர். இதனுல் இவரது பெரும் புலமை பின்னும் சிறப்படைகிறது. சமயக் காழ்ப்புடையவர் என்று கூறு கின்ற கதைகள் யாவும் பின்வந்த போலிக் கதைகளே யாகும்.

இவரது பாரதம் 50 சருக்கங்களாக உள்ளது. சில சருக்கங்கள் தவிரப் பெரும்பான்மையானவற்றில், ஒரு காப்புச்செய்யுள் திருமால் வணக்கமாகவும், புகழாகவும் பாடியிருக்கிருர். இவ்வாறுள்ளவை 36 பாடல்கள். இவ ருடைய திருமால் பக்தியை இவை நன்கு காட்டுவன. இங்ஙனமே இவர் நூல் எங்கும் தம் தமிழ்ப்பற்றை நன்கு புலப்படுத்திச் செல்லவும் காணலாம். தற் சிறப்புப் பாயிரப்பகுதியின் இரண்டாம் பாடலாகிய வாழ்த்துச் செய்யுளைக் காண்க.

ஏழ்பெருங்கடல் மாநில மெங்கும்நல் லறமே
சூழ்க; வண்தமிழ் ஓங்குக; தேங்குக சுருதி;
வீழ்க பைம்புயல்: விளங்குக வளங்கெழு மனுநூல்;
வாழ்க அன்புடை அடியவர் மன்னுமா தவமே.

'வண்தமிழ் ஓங்குக' என்று இவர் வாழ்த்துவது குறிப்பிடத்தக்கது. இப்படியே ஐந்தாம் பாடலில், "தென் சொலால் உரை செய்தபின் செழுஞ்சுவை இல்லாப், புன் சொலாயினும் பொறுத்தருள் புரிவரே புலவோர்" என்று மீண்டும் தமிழைப்போற்றுகிறார். சேர சோழ பாண்டியர் மூவரையும் நன்கு போற்றிக் கூறினும், இவர் சோழரையே அதிகம் பாராட்டிக் கூறியுள்ளார்.

வில்லிபுத்தூரரையும், அருணகிரிநாதரையும் இணைத்துக் கதைகள் பல வழங்கினாலும், ஒருவருடைய பாடல்களில் பிறரைச்சுட்டிய குறிப்புக்கள் காணப்படவில்லை. எனினும், அருச்சுனன் தீர்த்த யாத்திரை செய்தபோது திருவண்ணாமலை சென்று பணிந்தான் என்று கூறவந்த வில்லியார், "உண்மை கற்றார் தொழும் அருணாசலம் அன்போடு கைதொழுதான்" (தீர்த்த யாத்திரைச் சருக்கம் 15) என்று பாடுகிறார். இங்கு அண்ணாமலையில் தொழுதவர் அருணகிரிநாதராதலின், "உண்மை கற்றார்" என்ற தொடர் அருணகிரிநாதரைக் குறித்தல்கூடும் என்று அறிஞர் கருதுவர்.[1]

பக்கம் 32. வில்லிபுத்தூரர் - கந்தரந்தாதியுரை: வில்லிபுத்தூரர் கந்தரந்தாதிக்கு உரைகூறி வந்தார் என்ற செய்தி அருணகிரிநாதர் வரலாற்றில் சொல்லப்பட்டுள்ளது. கந்தரந்தாதி யமகத்தில் அமைந்தது. இதன் உரையொன்று 1879 முதல் பல பதிப்புக்கள் அச்சிட்டு வழங்குகிறது. வில்லிபுத்தூரர் செய்த உரை என்று முகப்பேட்டில் காணப்படுகிறது. வில்லிபுத்தூரர் அருணகிரிநாதர் கதைகள் நம்பத் தகுந்தனவல்ல என்று நாம்

1. ச. கு. கணபதி ஐயர், வில்லிபாரதத் திறவுகோல்.

கருதும்போது, இவ்வுரைபற்றிச் சொல்வது அவசிய மில்லை. மேலும், உரை தெளிவாயும் பொருத்தமாயும் இருந்தபோதிலும்,அதன் போக்கு வில்லிபுத்தூரர் போன்ற பெருங்கவிஞருக்கு ஒத்ததாயில்லை. ஆதலால் இவ்வுரை இக்கவிஞர் செய்ததாயிருக்க முடியாது.

பக்கம் 37. இரட்டையர் கவிதைச் சிறப்பு: *திருவா மாத்தூர்ப் புராணத்தில்,*

தங்கமும் மணியும் இடைக்கிடைக் கொண்டு
 துணைநிகர் தபதியாற் சமைத்த
சிங்கமா முகப்புத் தண்டிகை ஏறித்
 திரியினும் சித்தியில் புலவோர்
பங்கனும் குருடன் தானுமா நிகழ் அப்
 பாவலர் பதத்துகள் புரையார்

என்று கூறியிருப்பதனாலும் அறியலாம்.

பக்கம் 51, 182, 194. பழுதைகட்டி: *சிற்றம்பலநாடி* கள் பழுதை கட்டி என்று வழங்கப்பெற்றதன் காரணம் இங்குச் சொல்லப்பட்டது. இவர் மாணாக்கரான சம்பந்த முனிவரும், அவர் மாணாக்கர் பரம்பரையில் பின்னால் 16 ஆம் நூற்றாண்டில் வந்த திருவாரூர் செட்டித்தெரு-ஞானப்பிரகாசரும், பழுதைகட்டி என்றே வழங்கப் பெற்றார்கள்,

பக்கம் 97. நவநீதப் பாட்டியலின் ஆசிரியர் பெயர் கூறும் பாயிரப் பாடல்:

ஈட்டிய எண்ணெண் கலையோ டியலிசை நாடகமும்
காட்டிய போதக் குறுமுனி யாதிக் கலைஞர்கண்ட
பாட்டிய லானவை யெல்லாம் தொகுத்தான் பயன்பெறவே
நாட்டிய வேதத் தவன்நவ நாட்டு நவநீதனே.

பக்கம் 149. சிவப்பிரகாசம்: பதி இலக்கணம் கூறும் பாடல் பின்வருவது :

பலகலைஆ கமம்வேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சம்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருவின்றிக் குணம்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகில் உயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலஅரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதத் சிவமென்பர் தெளிந்து ளோரே.

பக்கம் 150. விஞு வெண்பா: பின்வரும் இரு வெண் பாக்களும் இந்நூல் தொடக்கத்தில் சில ஏட்டுப் பிரதி களில் காணப்படுகின்றன :

உன்னை ஒழிந்து செயலில்லை உன்றனக்கும்
என்னை ஒழிந்து செயலில்லை—மன்னவனே
மின்துன்று வேணியாய் மெய்கண்டா நானடிமை
என்கின்ற தெவ்வாறு இயம்பு.

அஞதியில் நீ என்னை அகலா திருக்க
அஞதியில்எற் காணவமுண் டானது—அஞதியனே
சுத்தாதொல் வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்டா
எத்தால் அடியேற் கியம்பு.

போற்றிப் பஃருெடை: பின்வரும் வெண்பா இந்நூல் இறுதியில் காணப்படுகிறது :

போற்றிப் பஃருெடைநூல் போதமருள் செய்துமலம்
மாற்றிஉயிர்க் கின்பளித்த மன்னவனைத்—தேற்றுமருள்
வல்லபமே பெற்றகொற்ற வன்குடியான் தாள்நினைந்து
தொல்வினையற் றுற்ரேம் சுகம்.

பக்கம் 194. பண்டாரம்: ‘பண்டாரம் பல் கணக்கு கண்காணி’ என்பது சிறுபஞ்சமூலம் 38. ‘கந்தமுதல் ஆடையாபரணம், பண்டாரத்தே எனக்குப் பணித்தருள வேண்டும்’ என்ற சுந்தரர் தேவாரமும் (46·5) காண்க.

பக்கம் 260-1. மெய்ம் மொழித் தேவர் : வடமொழி யில் பத்ததி நூல்கள் செய்தோரிடையே, அந்தண

ஆசிரியர் சிவம் என்றும், க்ஷத்திரிய ஆசாரியர் தேவர் என்றும் பெயர் பெறுவர் என சித்தாந்த சாராவலி கூறும்.

**பக்கம் 358. சிவவாக்கியர் :**

சிவ வாக்கியர் பாடலில் பாய்ச்சலூர் சில இடங்களில் குறிப்பிடப்பெறுகிறது. (355–371.) இதுபற்றிய விளக்கம் தெரிந்திலது. பத்துப்பாடல்கள் கொண்ட ஒரு பதிகம் நாடோடிப் பாடலாக வழங்குவதுண்டு. இதன் காலம் 15ஆம் நூற்றுண்டு என்று கருதலாம். பாய்ச்சலூர் என்ற கிராமத்தில் (திருப்பாச்சிலாச்சிராமம்) வாழ்ந்த ஒரு தாழ்ந்த சாதிப்பெண் தன்னை ஒரு பார்ப்பனசாதி இளைஞன் காதலித்தபோது, அவ்விளைஞனையும் தன்னையும் கண்டித்துத் துன்புறுத்த வந்த பார்ப்பன குலத்தாரை நோக்கி அவள் பாடியதாக இப்பதிகம் அமைந்துள்ளது, கபிலர் அகவலும் இதுவும் சமகாலத்தில் அல்லது ஒன்றுக்குப்பின் ஒன்றுய்த் தோன்றின என்று நாம் கருதக் கூடும். ஒருகால், இவ்வரலாறு முந்தியதாகிய 14 ஆம் நூற்றுண்டில் உண்மையாகவே நிகழ்ந்திருந்து, அதன் எதிரொலி, பெரும்புரட்சிக்காரராகிய சிவவாக்கியர் பாடலில் இவ்வாறு குறிப்பாக வருகிறதோ என்று ஐயுறவும் இடமுண்டு. தலை மன்னுர், கருவூர் என்ற ஊர்ப்பெயர்கள் 370 ஆம் பாடலில் வருகின்றன; குழூஉக் குறியாக வருவன போலும்.

மேலும் நூலுள் பல பாடல்கள் இரண்டுமுறை வருகின்றன. சில மூன்று முறையும் வருகின்றன. சில எழுத்துமாற்றம் மட்டுமே பெற்று வருவன. இவ்வாறு வருவன யாவும் களைதற்குரியன.

பிற்சேர்க்கை—3

# ஆதார நூல்கள்

நூலகத்து ஆங்காங்குக் குறித்துள்ளபடி பழைய பதிப்புக்கள் இவ்வரலாறு எழுதுவதற்கு உதவியிருக்கின்றன. சில நூல்கள் பின்னே கூறப்படுகின்றன.

அத்தியாயம் 1: வில்லிபுத்தூரர் பாரதம், மதுரைத் தமிழ்ச் சங்கம் சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் பதிப்பு; 1926. திருவாமாத்தூர்க் கலம்பகம் சிவப்பிரகாச பண்டிதர் 1883. தில்லைக் கலம்பகம், முருகேச முதலியார் 1897. ஏகாம்பர நாதர் உலா, ஆலால சுந்தரம் பிள்ளை 1900. மூவர் அம்மானை, குஜிலிப் பதிப்பு; காசிமடத்துப் பதிப்பு.

2. கந்தபுராணம்; காசிமடத்துப் பதிப்பு, 1952-53. மெய்கண்ட சாத்திர உரைப் பதிப்பு, சைவ சித்தாந்த மகாசமாஜம், 1934.

3. களவியற் காரிகை, ச. வையாபுரிப்பிள்ளை, 1930. நவநீதப்பாட்டியல், ச. வையாபுரிப்பிள்ளை, மயிலை தமிழ்ச் சங்கம் 1943; பழைய உரைகளுடன் கூடிய பதிப்பு, சா. கலியாண சுந்தரமையர், அடையாறு கலா க்ஷேத்திரம், 1944; பாட்டியற் கொத்து, சென்ன கேசவலு நாயுடு பதிப்பு 1908. உரிச்சொல் நிகண்டு, சிவன் பிள்ளை, 1890. தமிழகராதி வரலாறு, ஆங்கிலம், ச. வையாபுரிப் பிள்ளை 1936.

4. நன்னூல் மயிலைநாதர் உரை, டாக்டர் சாமிநாதையர் பதிப்பு. நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரைப்பதிப்புகள். சீவக சிந்தாமணி உரைப்பதிப்பு 1922. சாமிநாதையர் பத்துப்பாட்டு உரைப்பதிப்பு 1931, தொல்காப்பியப் பொருளதிகார அகராதி, நாகமணி முதலியார், 1935.

5. மெய்கண்ட சாத்திரம், சைவ சித்தாந்த மகா சமாஜம் முதற் பதிப்பு 1934; இரண்டாம் பதிப்பு, 1940.

சதமணிக் கோவை, திருவாவடுதுறை 1949. உமாபதியார் அருள் முறைத் திரட்டு, மா. வே. நெல்லையப்ப பிள்ளை உரையுடன் 1939. பௌஷ்கராகமம், அம்பலவாண நாவலர் பதிப்பு 1925. சதரத்ன சங்கிரகம், பஞ்சானன சாஸ்திரி பதிப்பு கல்கத்தா, 1944. கோயிற் புராணம், நாவலர் பதிப்பு. ஞான சாத்திர பஞ்சகம், தருமபுரம் 1934 ஞான பூசாவிதி உரையுடன், திருவாவடுதுறை, 1942. செப்பறை கனக சபைநாதன் உலா, 1953, செப்பறை உலா 1958–புன்னைவனநாதர் முதலியார் பதிப்பு. பெரிய புராணப் பதிப்பு, சமாஜம்.

6. சிற்றம்பல நாடிகள் சாத்திரக் கொத்து, சண்முகம் பிள்ளை பதிப்பு; திருவாவடுதுறைப் பதிப்பு. சிற்றம்பல நாடி கட்டளை 1942, சித்தாந்தம் இதழ். ப. 188–9 பார்க்க.

7. தத்துவப் பிரகாசம், கந்தப் பிள்ளை பதிப்பு 1893; மு. அருணாசலம் பதிப்பு 1965. துகளறு போதக் கட்டளை–பக்கம் 211 பார்க்க. சிவானந்த மாலை, ரிப்பன் அச்சுக் கூடம் 1910. தத்துவ விளக்கம் சித்தாந்தம் 1959.

8. திருவாசகம் காழித் தாண்டவராயர் உரை 1954. அகத்தியர் தேவாரத் திரட்டு, பல பதிப்புக்கள். திருநெறி விளக்கம், சித்தாந்தம் 1959. தேவிகாலோத்தரம், முத்தைய பிள்ளை உரை 1923. சர்வ ஞானோத்தரம் மூலம் 1904. முத்தைய பிள்ளை உரை 1923. தேவிகாலோத்தரத் திரட்டு ரமணாசிரமப் பதிப்பு 1924. ஞானாவரண விளக்கம் தருமபுரம்.

9. குருபரம்பரை பன்னீராயிரப்படி. குருபரம்பரை ஆறாயிரப்படி, 1878. குருபரம்பரை மூவாயிரப்படி, பழ நடை விளக்கம், 1895. தேசிகப் பிரபந்தம், சேட்டலூர் நரசிம்மாசாரியர் பதிப்பு, 1913. ஸ்ரீ வைஷ்ணவம், அரங்க நாத முதலியார் 1937. பெரிய திருமுடியடைவு–நாலாயிரப் பிரபந்தப் பதிப்பு, பார்த்தசாரதி ஐயங்கார் 1929. ஆழ்வார் ஆசாரியர் அபிதான விளக்கம், 1934. பகவத் கீதை வெண்பா, வாணி விலாசம் அச்சுக் கூடம், 1906.

10. திருநூற்றந்தாதி, ரா. ராகவையங்கார் பதிப்பு. மேருமந்தர புராணம், அ. சக்கரவர்த்தி நயினார் பதிப்பு, சீவசம்போதனை பூரணசந்திர சாஸ்திரியார் பதிப்பு, 1957. காவிய காலம், வையாபுரிப் பிள்ளை 1957. ப. 321 பார்க்க.

11. கப்பல் கோவை, சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு 1957. மதுரைக் கோவை, வையாபுரிப் பிள்ளை பதிப்பு. திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம், ஐயரவர்கள்.

12. பதினெண் சித்தர் ஞானக் கோவை: இரத்தின நாயகர் கம்பெனிப் பதிப்பு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு, 1947. பக்கம் 358, 391 பார்க்க.

13. தனிச் செய்யுட் சிந்தாமணி, கருப்பையாப் பாவலர் பதிப்பு; கந்தசாமிக் கவிராயர் பதிப்பு. சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ், தஞ்சைச் சரசுவதி மகால் வெளியீடு.

பிற நூல்கள். தமிழ் நாவலர் சரிதை, கனகசுந்தரம் பிள்ளை பதிப்பு 1920, தனிப்பாடல் திரட்டு, பழைய பதிப்பு இரண்டுபாகம். தனிச்செய்யுட் சிந்தாமணி, கருப்பையாப் பாவலர் 1904; மு. ரா. கந்தசாமிக் கவிராயர் பதிப்பு, 1908. தண்டபாணி சுவாமிகள், புலவர் புராணம் 1910. டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பித்த நூல்களி லுள்ள குறிப்புக்கள். மு. ராகவையங்கார், பெருந் தொகை 1937; ஆராய்ச்சித்தொகுதி 1940; சாசன தமிழ்க் கவி சரிதம். தி. வ. சதாசிவ பண்டாரத்தார், சோழர் வர லாறு பாகம் I. 1952: பாகம் II 1953. பூரண லிங்கம் பிள்ளை, தமிழ் இலக்கிய பாலபாடம், (ஆங்கிலம்) 1904; தமிழ் இலக்கிய வரலாறு (ஆங்கிலம்) 1929. கா. சுப்பிர மணிய பிள்ளை, 1930. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 13, 14, 15 நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாறு. ச. வையாபுரிப் பிள்ளை ஆங்கில நூல், 1956. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், ஆங்கில நூல், 1965.

# ஆசிரியர் பெயர்—கால அட்டவணை

இவ் வகராதியுள், ஆசிரியர் பெயர், செய்த முக்கியமான நூல், காலம் ஆகியவை தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும், இதனுள் அகராதி வரிசையிலேயே உரிய இடங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. உடன் காலத்தவராகத் தெரிந்த அரசர், வள்ளல், பிற புலவர் பெயர்களும் தனியே குறிப்பிடப்பட்டுள்ளன.

| எண் 1 | ஆசிரியர் 2 | நூல் 3 | உடன் காலத்தவர் 4 | காலம் 5 | பக்கம் 6 |
|---|---|---|---|---|---|
| 1 | அம்பலநாதத் தம்பிரான், காவை | பிராசாத அகவல், உருப சொருப அகவல், சிவப்பிர காசக்கொளு முதலியன | | 1375-1400 | 396 |
| 2 | அருள் நமசிவாயர் | ஞானதீட்சாவிதி, ஞான பூசைத் திருவிருத்தம், போசனவிதி முதலியன | உமாபதிசிவம் | 1300-1330 | 160 |
| 3 | அவ்வையார் | விநாயகரகவல், ஞானக்குறள் | | 1850 | 358 |
| 4 | அவிரோதிநாதர் | திருநூற்றந்தாதி | | 1875 | 299 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 5 | அழகியமணவாளப் பெருமாள் நாயனுர் | ஆசார்ய ஹ்ருதயம் | பிள்ளைலோகாசாரியர் | 1266-1320 | 286 |
| 6 | இரட்டைப் புலவர் | தில்லைக்கலம்பகம், ஏகாம்பரநாதர் உலா, திருவாமாத்தூர்க் கலம்பகம் | சம்புவராயன், வரபதி ஆட்கொண்டான் | 1375-1400 | 35 |
| 7 | உமாபதி சிவாசாரியர் | சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலான பல | | 1300-1325 | 148 |
| 8 | கங்கை மெய்கண்டார், காழி | | | 1310-1340 | 177 |
| 9 | கச்சியப்பசிவாசாரியர் | கந்தபுராணம் | கருமாணிக்கன் | 1400 | 63 |
| 10 | —கப்பல் கோவையாசிரியர் | | | 1350 | 323 |
| 11 | —களவியற்காரிகையாசிரியர் | | | 1350-1375 | 90 |
| 12 | காங்கேயர் | உரிச்சொல் நிகண்டு | | 1375-1400 | 102 |
| 13 | —காலோத்தர ஆசிரியர் | தேவி காலோத்தரம் சர்வஞானோத்தரம் | | 1375-1400 | 251 |
| 14 | குறுமுனியடிகள் | அகத்தியர் தேவாரத்திரட்டு | சிவாலய முனிவர் | 1350-1375 | 234 |
| 15 | சங்கரநாரணர், நிம்பை | மதுரைக்கோவை | | 1350 | 328 |
| 16 | சம்பந்த சரணலயர் | தத்துவ விளக்கம் | | 1275-1400 | 227 |
| 17 | சம்பந்த முனிவர் | சிவானந்தமாலை | | 1350-1375 | 214 |
| 18 | சித்தர் சிவப்பிரகாசர் | | | 1350-1375 | 167 |
| 19 | சிவவாக்கியர் | பாடல் திரட்டு | | 1350-1400 | 346 |
| 20 | சிற்றம்பல நாடிகள் | துகளறுபோதம் | | 1325-1350 | 178 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 21 | —சைனராமாயண ஆசிரியர் | | | 1300-1325 | 296 |
| 22 | தத்துவநாதர், சீகாழி | உண்மை நெறிவிளக்கம் | சம்பந்த முனிவர் | 1350-1375 | 200 |
| 23 | தத்துவப்பிரகாசர், சீகாழி | தத்துவப்பிரகாசம் | | 1350-1375 | 204 |
| 24 | திருவாய்மொழிப்பிள்ளை | திருவாய்மொழி உரை | | 1300-1405 | 293 |
| 25 | தேவேந்திர முனிவர் | சீவசம்போதனை | | 1375-1400 | 308 |
| 26 | தொல்காப்பியத் தேவர் | திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம் | இரட்டையர் | 1350-1375 | 335 |
| 27 | நச்சினார்க்கினியர் | தொல்காப்பியம், பத்துப் பாட்டு, சிந்தாமணி, கலித் தொகை உரை | | 1375 | 115 |
| 28 | நமசிவாய தேசிகர் | | | | 168 |
| 29 | நயினாராசாரியர் | பிள்ளையந்தாதி | | 1316-1375 | 282 |
| 30 | நவநீதநடர் | நவநீதப்பாட்டியல் | | 1400 | 96 |
| 31 | பட்டினத்தார் | பாடல்திரட்டு | பத்திரகிரி | 1400 | 370 |
| 32 | பத்திரகிரியார் | அருட்புலம்பல் | | 1400 | 384 |
| 33 | பரமமுனிவர் | சித்தாந்தசாரம், தத்துவப்பிர காசவுரை | | 1375-1400 | 221 |
| 34 | —பல்சந்தமாலை யாசிரியர் | | | 1350 | 330 |
| 35 | பிள்ளைலோகாசாரியர் | ஸ்ரீவசனபூஷணம் | பராக்கிரம பாகு | 1264-1369 | 278 |
| 36 | போசராசர் | சரசோதிமாலை | | 1310 | 394 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 37 | மயிலைநாதர் | நன்னூல் உரை | | 1325 | 112 |
| 38 | மறைஞானசம்பந்தர் | சதமணிக்கோவை | உமாபதி | 1300 | 130 |
| 39 | மன்னப்பையங்கார் | தேசிகர் நூற்றந்தாதி | நயினாராசாரியர் | 1350–1425 | 403 |
| 40 | — | மெய்ஞ்ஞான விளக்கம் | | 1400 | 243 |
| 41 | மெய்ம்மொழித் தேவர் | மெய்ம்மொழிச் சரிதை | | 1400 | 259 |
| 42 | வரந்தருவார் | பாரதச் சிறப்புப்பாயிரம் | வில்லிபுத்தூரர் | 1400 | 38 |
| 43 | —வரையறுத்த பாட்டியலாசிரியர் | | சம்பந்தமுனிவர் | 1375–1400 | 100 |
| 44 | வாதி கேசரி அழகிய மணவாளப் பெருமாள் | பகவத் கீதை வெண்பா | | 1315 | 289 |
| 45 | வாமனமுனிவர் | மேருமந்தர புராணம் நீலகேசிவிருத்தி | | 1375–1400 | 303 |
| 46 | வில்லிபுத்தூரர் | பாரதம் | வக்கபாகை வரபதி ஆட்கொண்டான் | 1375–1400 | 20 |
| 47 | விளாஞ்சோலைப் பிள்ளை | சப்தகாதை | | 1325–1375 | 292 |
| 48 | வேதாந்த தேசிகர் | தேசிகப்பிரபந்தம் | வித்தியாரண்யர் | 1268–1370 | 266 |
| 49 | ஒப்பிலாமணிப் புலவர் | தனிப்பாடல் | | 1375–1425 | 393 |
| 50 | சிவாலய முனிவர் | தேவாரத்திரட்டு | குறுமுனி | 1375–1400 | 235 |

# ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

இங்கு ஒவ்வொரு கால் நூற்றுண்டாக எடுத்து அக்காலத்தில் வாழ்ந்திருக்கக் கூடிய இலக்கிய, இலக்கண, உரையாசிரியர்கள், சைவ ஆசிரியர்கள், வைணவ ஆசிரியர்கள், ஏனையோர் என்று பிரித்தும் தொகுத்தும் முறைப்படுத்திக் காட்டியிருக்கிறேம். ஒரு காலப் பகுதியைக் குறிப்பிட்டால் சந்தர்ப்பம் நோக்கி அதற்கு முன்னும் பின்னும்கூட அவ்வாசிரியர் வாழ்ந்தார் எனக் கருதல் வேண்டும்.

| காலம் | இலக்கியம் இலக்கணம் உரை | சைவம் | வைணவம் | பிற |
|---|---|---|---|---|
| 1300 | | மறைஞானசம்பந்தர் | வேதாந்த தேசிகர்<br>பிள்ளைலோகாசாரியர் | |
| 1300-25 | மயிலைநாதர் | உமாபதிசிவம்<br>அருள்நமசிவாயர் | அழகியமணவாளப் பெருமாள் நாயனர் | சைனராமாயணம்<br>போசராசர் |
| 1325-50 | கப்பல்கோவை<br>திம்பை-சங்கரநாரணர்<br>பல்சந்தமாலை | சிவார்ச்சனுபோதம்<br>கங்கைமெய்கண்டார்<br>சிற்றம்பலநாடி<br>சிவவாக்கியர் | வாதிகேசரி<br>திருவாய்மொழிப்பிள்ளை<br>விளாஞ்சோலைப் பிள்ளை | |

| | | | | |
|---|---|---|---|---|
| 1850-75 | அவ்வையார்<br>களவியற்காரிகை<br>தொல்காப்பியத்தேவர் | சம்பந்தமுனிவர்<br>தத்துவநாதர்<br>தத்துவப்பிரகாசர் | நயினாராசாரியர் | |
| 1375 | இரட்டைப்புலவர் | | | |
| 1375-1400 | வில்லிபுத்தூரர்<br>வரந்தருவார்<br>காங்கேயர்<br>நச்சினார்க்கினியர் | சம்பந்தசரணாலயர்<br>அம்பலநாதத்தம்பிரான்<br>பரமமுனிவர்<br>காலோத்தர ஆசிரியர் | | அவிரோதிநாதர்<br>வாமனமுனிவர்<br>தேவேந்திர முனிவர் |
| 1400 | நவநீத நடர்<br>வரையறுத்த<br>பாட்டியல்<br>கச்சியப்பசிவாசாரியர் | குறுமுனியடிகள்<br>சிவாலயமுனிவர்<br>பட்டினத்தார்<br>பத்திரகிரி<br>மெய்ம்மொழித்தேவர்<br>மெய்ஞ்ஞான விளக்கம் | மணவாள மாமுனி<br>கந்தாடை—மன்னப்பய்யங்கார் | |

# பரம்பரை விளக்க அட்டவணை

இலக்கிய ஆராய்ச்சியே செய்துகொண்டுவந்த தமிழ் அறிஞர், இலக்கிய வரலாற்றினுட் புகுந்ததில்லை; இன்னும் குறிப்பாக, சமய இலக்கிய வரலாற்றினுட் புகுந்தோர், அரியரினும் அரியர், ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள் தருமபுரம் வழியாகத் தாம் பரிசோதித்த சிறு நூல்களில் பல செய்திகள் கூறியிருக்கிறார்கள். அவருக்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. எனினும், அவை யாவும் வரலாற்றுக் கண்கொண்டு கண்டன அல்ல. உண்மைச் செய்திகளும், புனைந்துரைகளும் ஆதாரமற்றவைகளும் அவற்றில் காணப்படும். ஆனால் உண்மையாகவே சமய நூல்களை வரலாற்றுக் கண் கொண்டு ஆராய்ந்தவர்கள் ச. அனவரத விநாயகம் பிள்ளையும் ச. சோமசுந்தர தேசிகருமே. சைவ சமய இலக்கிய வரலாற்று ஆராய்ச்சிக்கு இவ்விருவரும் எழுதியுள்ள குறிப்புக்கள் பெருந்துணை செய்வன.

சித்தாந்த முதல் நூல் செய்த மெய்கண்டார் காலம் 1232 ஐ ஒட்டியது என்பது ஆராய்ச்சியாளர் பலரும் கொண்டுள்ள முடிவு; ஆனால் இதுவும் பெரிதும் ஐயப்பாட்டுக்கு இடமானது; காலத்தால் இவர் பின்னும் ஒரு நூற்றாண்டு முற்பட்டிருத்தலும் கூடும். இது பற்றிப் பூரணத் தெளிவு இன்னும் ஏற்படவில்லை. 14-15 நூற்றாண்டுகளின் சமய இலக்கிய வரலாறானது உமாபதி சிவாசாரியரோடு தொடங்குகிறது. இப்பகுதியில் ஆறு சமய பரம்பரைகளின் வரலாறு நன்கு விளக்கமாகின்றது.

1. காஞ்சி ஞானப்பிரகாசர் ஆதீனபரம்பரை: இதன் தோற்றுவாயையே இக்காலப்பகுதியில் காண்கிறோம். இதனுள் நூல்கள் தோன்றவில்லை. 16 ஆம் நூற்றாண்டில்

தான் இதன் வழிவந்த சீடர் சிலர் இலக்கிய இலக்கணம் செய்திருக்கிறார்கள் ; சமய இலக்கியம் செய்யவில்லை (அட்டவணை 3).

2. காவை அம்பலநாதத் தம்பிரான் பரம்பரை : இதன் வழியே பல சமய இலக்கியங்கள் தோன்றி யிருக்கின்றன. இவ்வழியில் வந்தவரே கண்கட்டி மறைஞான சம்பந்தர், 16ஆம் நூற்றாண்டினர் ; தம்பிரான் பரம்பரையில் ஒரு பிரிவு, மதுரையில் பேருரையாசிரியரான சிவப்பிரகாசர் வழியாக 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை நிலவியமை தெரிகிறது (அட்டவணை 4).

3. வள்ளல் பரம்பரை : கண்ணுடைய வள்ளலோடு தொடக்கமான இப்பரம்பரையினர் வரலாறு ஐந்து தலைமுறைகள் வரை நன்கு தெரிகிறது ; இவர்கள் சமயநூல் செய்தவர்கள். 20 ஆம் நூற்றாண்டில் இப்பரம்பரை அழிந்துபோய்விட்டது (அட்டவணை 5).

4. திருவாவடுதுறை ஆதீன பரம்பரை : அருள் நமசிவாயர் வழியே 16 ஆம் நூற்றாண்டில் உபதேசம் பெற்று வளர்ந்த இப்பரம்பரை, 16 ஆம் நூற்றாண்டிலோ அதற்கு நூறு ஆண்டுகள் முன்னே தனிச்சமய பரம்பரையாக வளர்ந்து, திருவாவடுதுறையைத் தலைமையிடமாகக் கொண்டது. மூவலூர் நமசிவாய மூர்த்தி தொடக்கமாக இது பெருகி, இன்றுவரை சமயத்துறை, இலக்கியத் துறை, ஆலய நிர்வாகம் ஆகியவற்றை வளர்த்து, தொடர்ந்து இன்றும் நிலவி வருகிறது (அட்டவணை 6).

5. தருமபுரம் ஆதீன பரம்பரை : மச்சுச்செட்டியாராயிருந்த அருள் நமசிவாயர் வழியே வளர்ந்த மற்றொரு பரம்பரை, தருமபுரம் குருஞானசம்பந்தர் பரம்பரையாகும். 16 ஆம் நூற்றாண்டில் இந்த ஆசாரியர் மாயூரத்துக்கடுத்த தருமபுரத்தில் மடம் அமைத்துத் தம் ஞான பரம்பரையை வளர்த்தார். இப்பரம்பரை, காஞ்சி ஞானப்பிரகாசர் மடம்போல, சிற்றம்பல நாடிகள் வழிவந்தது. இது பெருகி முன் கூறிய மூன்று துறைகளிலும் வளர்ந்திருக்கிறது (அட்டவணை 7).

6. செப்பறை மட வரலாறு: உமாபதியுடன் ஒரு சாலை மாணுக்கராயிருந்த மச்சுச்செட்டியார் (பின்னால் அருள் நமசிவாய தேசிகர் ஆனவர்) என்னும் மச்சுறை வணிகயோகி தொடங்கி ஓர் ஆசாரிய பரம்பரை, வளர்ந்திருந்தது. அவ்யோகியிடம் உபதேசம் பெற்ற திருவையாறு சந்திரசேகரர், பின் திருவையாறு சாமிநாத தேசிகர் என்ற பிராமண குல ஆசாரியர் வழியே, பின்னர் 14 ஆசாரியர் தலைமை பூண்டிருந்திருக்கிருர்கள். இவர்கள் அனைவரும் வேளாளர்; இல்லறத்தார்; 17 ஆம் நூற்ருண்டில் இம்மரபினரான ஒரு தேசிகர் இரு உலாப் பிரபந்தங்கள் பாடினுர். (செப்பறை – கனகசபை நாதன் உலா 1953; செப்பறை உலா 1958; புன்னைவனநாத முதலியார் பதிப்புப் பார்க்க.)

7. துழாவூர் ஆதீனம்: பாண்டி நாட்டின் கண்ணுள்ள துழாவூரில் ஓர் ஆதீனம் நிலவிற்றுப்போலும். கமலை ஞானப்பிரகாசரின் மாணுக்கராய் இருந்து, சேது புராணமும் திருப்பரங்கிரிப் புராணமும் பாடி, சித்தியாருக்கும் திருவருட் பயனுக்கும் உரை எழுதிய சிறந்த ஆசிரியரான நிரம்ப அழகிய தேசிகர் என்பவர் இவ்வாதீனத்தார். இவர் இவ்வாதீனத்தில் தம்பிரானே அன்றி ஆசாரியரோ விளங்கவில்லை. இவரிடம் இருமாணுக்கர் கல்வி கற்றுப் புலவராகித் துறவுபூண்டிருந்து, புராணம் பாடினுர்கள் என்று அறிகிருேம். திருவாவடுதுறையில் பட்டமேற்று மிக்க ஆடம்பரமும் பிரசித்தியும் பெற்று இந்த நூற்ருண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்த அம்பலவாணதேசிகர் துழாவூரினர் ஆவர்.

8. கமலை ஞானப்பிரகாசரின் மாணுக்கர்: குருஞான சம்பந்தருக்கும் நிரம்ப அழகிய தேசிகருக்கும் குருவாயிருந்த கமலை ஞானப்பிரகாசர் முதலிய அனைவரும் 16 ஆம் நூற்ருண்டினராவர். நாம் கருதும் நூற்ருண்டு வரலாற்றுக்கு இவர் வரலாறு வேண்டுவதில்லை; எனினும், வரலாற்றுணர்ச்சி நிறைவு பெறுவதற்காக இவர்கள் வரலாற்றையும் அட்டவணையையும் இங்கு ஒருசேரத்

தொகுத்துத் தருகிறோம். கமலை ஞானப்பிரகாசர் இல்லறத்தார். அவருக்கு இங்குக் காட்டிய மாணாக்கரேயன்றிப் பின்னும் பலர் இருந்திருக்கவும் கூடும் (அட்டவணை 8).

இங்குக் காட்டிய பரம்பரைகளில் 4, 5, 7 மூன்றும் 16 ஆம் நூற்றாண்டில் விளக்கம் பெற்றனவாகும்.

பின்னே காட்டிய அட்டவணைகளில் இயன்ற வரையில் காலமும், அவரவர் இயற்றிய நூல்களும் சொல்லப் பட்டுள்ளன. காலம் என்பது, ஆயுட்காலமன்று; ஆசாரிய பதவிக்காலம் அல்லது வியாபக காலம் என்று கொள்ளத்தக்கது.

இங்கு, சிற்றம்பல நாடிகளிடம் பயின்ற மாணாக்கர் பட்டியல் முதல் அட்டவணையாகவும், அவருடைய மாணாக்கருள் ஒருவராகிய சம்பந்த முனிவரிடம் பயின்ற மாணாக்கர் பட்டியல் இரண்டாம் அட்டவணையாகவும் தரப்பட்டுள்ளன. பிற அட்டவணைகள் குறித்த விளக்கம் மேலே தரப்பட்டுள்ளது. இவற்றுள் துழாவூர் ஆதீனம் பற்றிய விளக்கம் கிடைக்கவில்லை. மேலும் இரு செய்திகள் குறிப்பிடத்தக்கன. இன்றுள்ள திருப்பனந்தாள் காசி மடம் என்பது, 17ஆம் நூற்றாண்டில் தருமபுரம் தலைவரிடம் உபதேசம் பெற்ற குமரகுருபரர் மூலமாக வளர்ந்தது. சொர்க்கபுரம் மடம் என்பது, 18 ஆம் நூற்றாண்டில் தாயுமானவருக்குச் சமகாலமாகிய அழகிய சிற்றம்பல தேசிகர் என்பவர் தருமபுரம் தலைவரிடம் உபதேசம் பெற்றுத் தோற்றுவித்தது. மிகச் சமீபகாலத்தில் சொர்க்கபுரம் நசித்துவிட்டது. திருவாவடுதுறையில் தலைவராயிருந்த நமசிவாய தேசிகரிடம் உபதேசம்பெற்ற ஒரு சித்தர் சிவப்பிரகாசர் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது, இன்றைய துறையூர் வீரசைவ சிவப்பிரகாசராதீனம்.

பரம்பரை விளக்க அட்டவணை

## 1. சிற்றம்பல நாடிகளின் மாணாக்கர்

### காழி-பழுதைகட்டிச் சிற்றம்பல நாடிகள் 1325 - 50
துகளறு போதம் முதலிய நூல்கள்

- *காழி - பழுதை கட்டிச் சம்பந்த முனிவர்* 1350-75 **சிவானந்த மாலை**
  - *சம்பந்த சரணலயர் முதலிய பலர்*
- *சீகாழி- தத்துவநாதர்* 1350-75 **உண்மை நெறி விளக்கம் இருபா இருபது உரை**
- *சீகாழி- தத்துவப் பிரகாசர்* 1350-75 **தத்துவப் பிரகாசம் துகளறு போதக் கட்டளை**
  - *பரம முனிவர்* 1375-1400 **தத்துவப்பிரகாச உரை சித்தாந்த சாரம்**
- *காஞ்சி ஞானப் பிரகாசர்* 1350
  - *கண்ணப்பர்* 1350
    - *காஞ்சி ஞானப் பிரகாசர்* 1350-75
      *ஞானப் பிரகாசர் மடம்*
- *மழபாடிப் பண்டாரம்* 1350
- *ஏனைய 60 சீடர்* 1350

# 2. சம்பந்த முனிவரின் மாணுக்கர்

**குறுமுனி அடிகள்**
*(பொதிகை முனிவர்-அகத்தியர்)*
1350–75
*தேவாரத் திரட்டு*

|

**சிவாலய முனிவர்**
*தேவாரத்திரட்டு பெற்றவர்*
1375–1400

---

**காழி-பழுதைகட்டிச் சம்பந்த முனிவர் 1350–75**
**சிவானந்தமாலை**

- *சம்பந்த சரணலயர்* 1375–1400 — (and சிவாலய முனிவர்)
  - *திருநெறி விளக்க* **ஆசிரியர்** 1400–25 **திருநெறி விளக்கம்**
- *கண்ணுடைய வள்ளல்* 1400–25
  - *வள்ளல் பரம்பரை*
- *காவை அம்பலநாதத் தம்பிரான்* 1375–1400
  - xxxxxxxxxxxxxx
    - *சத்தியஞான பண்டாரம்* 1425–1450 (நூல்செய்யவில்லை)
- *சிவபுரம் ஞானப் பிரகாசர்*
  - **சிவபுரம்** *தத்துவப் பிரகாசர்*
    - **செட்டித்தெரு** *ஞானப் பிரகாசர்*
      - **கமலை** *ஞானப் பிரகாசர்*
- *வரையறுத்த பாட்டிய லாசிரியர்* 1375–1400 **வரையறுத்த பாட்டியல்**

# 3. காஞ்சி-ஞானப்பிரகாசர் ஆதீன பரம்பரை

## காழி - சிற்றம்பல நாடிகள் 1325-50

துகளறு போதம் முதலிய பல நூல்கள்



## 4. காவை-அம்பலநாதத் தம்பிரான் பரம்பரை



# 5. கண்ணுடைய வள்ளல் பரம்பரை

பழுதை கட்டி - சம்பந்த முனிவர் 1350 - 75

|

சம்பந்த சரணையர் 1375 - 1400

**தத்துவ விளக்கம்**

(கொள்கை மாறிக் **கண்ணுடைய வள்ளல்**

எனப் பெயர் வைத்துக்கொண்டார்)

1400 - 1425

**ஒழிவிலொடுக்கம்** முதலான பல

|

சுயம்பிரகாச வள்ளல்
1400-25
(நூல் செய்யவில்லை)

|

சிவஞான வள்ளல்
1425-50
**வள்ளலார் சாத்திரம்**

|

சட்டைநாத வள்ளல்
1450-75
**சதாசிவ ரூபம்**

|

மாணுக்கர் 1475-1500
**சதாசிவரூப உரை**

|

வரலாறு
தெரியவில்லை

பிராசாத தீபம் செய்த
மாணுக்கர்
1400-25
**பிராசாத தீபம்**

# 6. திருவாவடுதுறை ஆதீன பரம்பரை



# 7. தருமபுர ஆதீன பரம்பரை

**கடந்தை - மறைஞான சம்பந்தர்**

**சதமணிக் கோவை**



## 8. கமலை ஞானப்பிரகாசரின் மாணாக்கர்

**கமலை ஞானப்பிரகாசர் 1525-75**

**சிவபூசையகவல், மழபாடிப்புராணம்**



# மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பகராதி

# பொருள் அகராதி

# சிறப்புப் பெயர் அகராதி

இவ்வகராதியுள், நூற்பெயர், ஆசிரியர் பெயர், இடப் பெயர் ஆகிய பெயர்கள் மட்டுமே தொகுக்கப் பெற்றுள்ளன, எண்-பக்க எண்.



இலக்கிய வரலாற்று நூலில்
இலக்கிய இலக்கன ஆராய்ச்சி மட்டுமே
கொள்ள வேண்டும்,
சமய சாத்திரங்களை விலக்க வேண்டும்
என்று கருதுவோரும் உளர்.
சுருங்கிய ஆராய்ச்சிக்கு
இது ஒருகால் பொருந்துவதாகும்.
விரிந்த நூற்பரப்பைக் கருதும்போது,
எல்லா நூல்களையும்
கொள்ளவே வேண்டியிருக்கின்றது.
அன்றியும்,
தமிழ் இலக்கியத்திலும்,
இதுபோல்
வடமொழி இலக்கியத்திலும்,
சமய நூல், இலக்கிய நூல் என்ற பாகுபாடு
இருபதாம் நூற்றாண்டு வரை இல்லை;
எல்லாமே இலக்கியமாய்க்
கருதப்பெற்று வந்திருக்கின்றன.
ஆதலால்
இவ்வாராய்ச்சி நூலில்
இயன்றவரை
எல்லாமே கொள்ளப்பட்டுள்ளன.



The PARKAR